அன்சாரி நினைவுத் தொடர்பதிப்புகள்


தமிழில்;H.நாஸிர்அலி உமரி M.A.,

இம்ரான் N.ஹுஸைன்.


# குர்ஆனில் ஜெருசலம்

ஜெருசலத்தின் தலைவிதி குறித்த ஒரு குர்ஆனியக் கண்ணோட்டம்.




ஒரு நாள் ஒரு வருடத்தைப்போல்






ஒரு நாள் ஒரு மாதத்தைப்போல்






ஒரு நாள் ஒரு வாரத்தைப்போல்

# அன்சாரி நினைவுத் தொடர்பதிப்புகள்

மேன்மைதங்கிய இஸ்லாமிய அறிஞர், தத்துவவாதி, சூஃபித் தலைவர், மௌலானா டாக்டர் முஹம்மது ஃபஜ்லுர் ரஹ்மான் அன்சாரி (1914-1974) அவர்களை கண்ணியப்படுத்துவதற்காக அன்சாரி நினைவுப் பதிப்புத் தொடர்கள் ஆரம்பிக்கப்பட்டன. இது மௌலானா அவர்களின் 25வது நினைவு நாளில் ஆரம்பிக்கப்பட்டது.

மௌலானா அன்சாரி அவர்கள் ஒரு இஸ்லாமிய அறிஞர், ஆசிரியர், ஆன்மீகக் குரு, கடவுளில்லா உலகமாகிப் போன சூழலில் இஸ்லாத்தின் தூய நோக்கத்தைக் காப்பாற்றும் போராட்டத்திலேயே தன் வாழ்வைக் கழித்தார். அந்த நோக்கத்திற்குப் பணியாற்றுவதற்காக 1950 முதல் 1970வரை உலகம் முழுவதும் பல தடவை இஸ்லாமியப் பிரச்சாரத்திற்காகப் பயணம் செய்திருக்கிறார். 1947இல் பாகிஸ்தான் பிரிந்தபோது இந்தியாவிலிருந்து பாகிஸ்தான் வந்த அவர் தனது புதிய கராச்சி வீட்டிலிருந்து கிளம்பி மேற்கத்திய நாடுகளுக்குப் பயணம் மேற்கொண்டார். பிறகு கிழக்கத்திய நாடுகளுக்குப் பயணம் செய்து வீடு திரும்பினார்.

அவரது வாழ்க்கையின் நோக்கம் தெளிவானதாகவும், புனித மானதாகவும் இருந்தது. இஸ்லாத்தை ஒரு நாட்டை ஆளும் மார்க்கமாகவும், சமூக-பொருளாதார, அரசியல் அமைப்பாகவும் மீட் டெடுப்பதே செய்யப்பட வேண்டிய முக்கியப் பணியாகக் கருதினார். அப்படி மீட்டெடுப்பதற்கு ஒவ்வொரு தனி மனிதனும் தனது நம்பிக்கையை முதலில் மீட்டெடுத்தால் தவிர சாத்தியமாகாது. மேலும் முஸ்லிமின் நம்பிக்கை தான், இன்று நவீனமயமான, அபாயமான தாக்குதலின் இலக்காக இருக்கிறது, வரலாற்றில் முன்னெப்போதும் தொடுக்கப்படாத தாக்குதல் இதுவாகும். முதலில் அந்தத் தாக்குதல் பிரிட்டனால் தொடுக்கப்பட்டது, பிறகு அமெரிக்கா, பிறகு இஸ்ரேல். ஒவ்வொரு தாக்குதலிலும் முக்கிய கதாபாத்திரமாக இருந்தது யூதர் கள் போர்வையிலிருந்த ஐரோப்பியர்கள் தான்.

அல்லாஹுத்தஆலாவின் மீதுள்ள நம்பிக்கைக்குப் புத்துயிர் அளிப்பதற்கான போராட்டத்திலேயே அவர் வாழ்க்கையைச் செலவழித்தார்.

இஸ்லாத்தின் தரப்பில் அறிவுசார்ந்த போராட்டத்தில் வெல்வதற்காக மௌலானா தம்முடைய அபாரமான நுண்ணறிவையும், சிறந்த கல்வியையும் பயன்படுத்தினார். மேலும் அவரைச் சந்திக்க வருபவர்களின் உள்ளங்களைக் கவர்ந்திழுப்பதற்கு ஆன்மிகத்தின் வசீகரத்தையும், ஈர்ப்பையும் பயன்படுத்தினார். (கிழக்கிலும் மேற்கிலும் அதிக எண்ணிக்கையில்) அவருடைய சத்தியத்தை நோக்கிய உழைப்பின் விளைவாக முஸ்லிம்கள் இஸ்லாத்தின் மீது கொண்டிருந்த நம்பிக்கையையும், உறுதியையும் மீட்டார்கள். ஆயிரக்கணக்கானோர் அவருடைய ஆன்மிகச் சீடர்களாயினர், மேலும் பலர் அவரின் பிரச்சாரத்தால் இஸ்லாத்தைத் தழுவினர்.

இந்தியாவிலுள்ள அலிகர் முஸ்லிம் பல்கலைக் கழகத்தில் தத்துவத்தையும், மார்க்கத்தையும் படித்துப் பட்டம் பெற்றார். இஸ்லாமியத் தத்துவ ஆன்மிகச் சிந்தனையை இஸ்லாமிய அறிஞர் டாக்டர் மகாகவி அல்லாமா இக்பால் அவர்களிடம் பெற்றார். டாக்டர் இக்பால் இஸ்லாமிய மார்க்கச் சிந்தனையின் மறுகட்டமைப்பு என்ற தலைசிறந்த நூலை எழுதியவர். மௌலானா அவர்களின் மாபெரும் உழைப்பு “குர்ஆனின் அடிப்படைகளும், இஸ்லாமிய சமுதாயத்தின் கட்டமைப்பும்” என்ற நூலாகும். அந்த நூலே டாக்டர் இக்பால் எழுதிய “இஸ்லாமிய மார்க்கச் சிந்தனையின் மறுகட்டமைப்பு” என்ற நூலுக்கு பதில் கூறுவதாக அமைந்தது.

மௌலானா அன்சாரி அவர்கள், இஸ்லாமிய அறிஞர், சூஃபி ஷைகு, அப்துல் அலீம் சித்திக் அவர்களிடம் ஆன்மிகப் பயிற்சி பெற்றார். ஷைகு சித்திக் அவர்கள் இஸ்லாமியப் பிரச்சாரம் செய்துகொண்டே சுற்றி அலைந்தார். எல்லாவற்றையும் விட மேலாக மௌலானா அன்சாரி அவர்கள், டாக்டர் இக்பாலிடமும், அப்துல் அலீம் சித்திக் கியிடமும் சூஃபி ஞானத்தைக் கற்றுத் தம் மாணவர்களுக்குப் போதித்தார்.

சூஃபி ஞானம் என்பது உண்மையைத் (இஸ்லாமிய மார்க்கத்தைத்) தழுவிய பிறகு உணரப்பட்டு, வாழ்வில் உண்மையாளராகவும், அல்லாஹ்விடம் முழு அர்ப்பணிப்போடும் வாழ்வது. இறுதியில் அது உள்ளத்தில் நுழைவதாகும். (இஸ்லாம் ஈமானாக உள்ளத்தில் வளரும்).

அல்லாஹுத்தஆலா கூறுவதாக ஹதீஸ்குத்ஸியில் நபி(ஸல்) கூறுகிறார்கள்.

**"என் வானங்களும் பூமியும் என்னை வாங்குவதற்கு மிகச் சிறியதாகும், ஆனால் ஒரு இறைவிசுவாசியின் உள்ளம் என்னை வாங்கிக்கொள்ளும்"**

இந்த ஹதீஸ் உள்ளத்தினுள் உண்மை கட்டாயம் நுழைந்தாக வேண்டும் என்பதைத் தெளிவாக்குகிறது.

உள்ளத்தில் உண்மை நுழையும்போது தெய்விக ஒளியும் (நூருல்லாஹ்) நுழையும். மேலும் அந்த ஒளி, இறைவிசுவாசியின் கிரகிக்கும் ஆற்றலை வளர்த்துப் பொருட்களின் புறத்தோற்றங்களுக் கப்பால் கடந்து அக இருப்பில் மெய்நிலை காண வழிவகுக்கிறது. உள்ளத்தில் நுழைந்த உண்மை, வளர்ச்சியின் நிலையை எட்டும்போது இறைவிசுவாசி அகப்பார்வையாலும், புறப்பார்வையாலும் பார்க்க ஆரம்பிப்பார். (தஜ்ஜால்-போலி மஸீஹ் புறக்கண் என்ற ஒற்றைக் கண்ணால் மட்டுமே பார்ப்பான்) ஒரு இறைவிசுவாசி ஜிஹாத் ஃபில்லாஹ் அல்லாஹுக்காக உழைக்க முன் வருவாரானால் ஈமான் என்ற நிலையிலிருந்து இஹ்சான் என்ற நிலைக்கு அருளப்பட்டவராவார். மேலும் இதுதான் தஸவ்வுஃப் என்றும் அறியப்படுகிறது.

உண்மை விசுவாசியின் கூர்ந்துணரும் அக ஒளியால் மட்டுமே அல்லாஹ்வின் அத்தாட்சிகளை அறிந்துகொள்ள முடியும். இவ்விதம் மட்டுமே உலகைச் சரியாகப் படிக்க முடியும். இந்நிலையிலிருந்துதான் உலகைப் புரிந்து கொள்ளவே முடியும். அப்படி அறிந்து கொண்டவர்கள் நாம் இப்போது உலக அழிவுக்குமுன் தோன்றும் குழப்பமான காலத்தில் தான் வாழ்கிறோம் என்பதை புரிந்து கொள்வார்கள்.

மௌலானா தம் வாழ்வின் கடைசிப் பத்து வருடங்களை (1964 -1974) அலீமிய்யா கல்வி நிறுவனத்தை உருவாக்க அர்ப்பணித்தார். அங்கு புதிய தலைமுறை இஸ்லாமிய அறிஞர்களைப் பயிற்றுவிப்பதற்குப் பாடுபட்டார். ஆன்மிக ரீதியிலும், அறிவுப்பூர்வமாகவும் குர்ஆனையும், ஹதீஸையும் நவீன காலத்திற்கேற்றாற்போல் விளங்கிக்கொள்வதும், திகைப்பூட்டுகின்ற சவால்களை எதிர்கொள்வதுமே அங்குப் பயிற்சியாக போதிக்கப்பட்டது. அந்தப் பயிற்சிப்பட்டறையில் உருவான இஸ்லா

மிய அறிஞர்களில் சிலர்: டாக்டர் வாஃபி முஹம்மது, டாக்டர் அபுல் ஃபள்ல் முஹ்ஸின் இப்றாஹீம், சித்தீக் அஹ்மது நாஸிர், அலீ முஸ்தபா, முஹம்மது அலீகான், பஷீர் அஹ்மது கீனோ, ரவூஃப் ஜமான், முஹம்மது சாஃபீ, இம்ரான் N.ஹுஸைன் ஆகியோராவர். மேலும் பலர் அலீமிய்யா இஸ்லாமியக் கல்வி நிறுவனத்தில் பட்டம் பெற்றிருக்கின்றனர். அன்சாரி நினைவுத் தொடர் பதிப்புகளில் கீழ் வரும் எட்டு நூல்கள் இடம் பெறுகின்றன, அங்குக் கல்வி கற்ற மாணவர்களில் ஒருவர்தான் அந்நூல்களை எழுதியவர்.

- **குர்ஆனில் ஜெருசலம்**
- **இப்ராஹீம் நபியின் மார்க்கமும், இஸ்ரேல் தேசமும்**
- **இஸ்லாத்தில் வட்டி தடை செய்யப்பட்டதன் முக்கியத்துவம்**
- **குர்ஆனிலும், ஹதீஸிலும் தடை செய்யப்பட்ட வட்டி**
- **இஸ்லாத்தில் கனவுகள்- உண்மையையும், இதயத்தையும் காணும் சாளரம்**
- **கிலாஃபத், ஹிஜாஸ் சவூதி வஹ்ஹாபி தேசம்**
- **ரமளான் மாத நோன்பின் முக்கியத்துவமும், மிஃராஜ் விளக்கமும்**
- **ஒரே ஜமாத், ஒரே தலைவர், குழப்பச் சூழலில் முஸ்லிம் சமுதாயத்தின் ஒருங்கிணைப்பு**

மேற்கூறப்பட்ட நூல்களின் வரிசை மௌலானா அன்சாரி அவர்கள் விதைத்த வித்துக்களில் உருவான சில கனிகளே. அவை இன்றைய உலகின் உண்மை நிலையைப் புரிந்துகொள்ள எடுக்கப்பட்ட முயற்சி களேயாகும். அவை இன்றைய உலகின் நிலையைத் துல்லியமாக விளக் குவதுடன் இதற்கு முன்பு எழுந்திராத சவால்களைத் தக்க முறையில் எதிர்கொள்கின்றன.

இப்படைப்புகள் எப்பொழுதும் விமர்சனத்திற்கும் ஆய்வுக்கும் உட்பட்டவைதான்.

அல்லாஹுத்தஆலா இறைநம்பிக்கையாளர்களுக்கு ஒரு இணைப்பை வழங்கியுள்ளான். அந்த இணைப்பின் மூலம் அல்லாஹ் அவர்களுக்கு அருளிய ஆத்ம ஞானத்தைப் பெறுகிற ஆற்றல் உடையவர்களாகிறார்கள். அந்த இணைப்பு என்பது நல்ல கனவும், அகப்பார்வையுமாகும். நபி(ஸல்) அவர்களின் மரணத்திற்குப்பின் அல்லாஹ்வின் புறத்திலிருந்து வரும் நுபுவ்வத் என்னும் தூதுச் செய்தியில் மீதமிருப்பது கனவு மட்டும்தான் என்பது நபிமொழியாகும்.

## அன்சாரி நினைவுத் தொடர்பதிப்புகள்

அன்சாரி நினைவுத் தொடர் பதிப்புகளின் வரிசையில் கைவிடப்பட்ட அறிவியலில் ஒரு கிளையாக இருக்கின்ற கனவுகளின் விளக்கம் பற்றி இஸ்லாத்தில் கனவுகள் என்ற தலைப்பில் ஒரு நூலும் உள்ளது.

தற்கால முக்கியத்துவம் வாய்ந்த நூல்களான குர்ஆனில் வட்டியின் தடை இப்றாஹீம் நபியின் மார்க்கமும் இஸ்ரேல் தேசமும் போன்ற நூல்களை எழுதுவதற்கு ஆத்ம ஞானம் இன்றியமையாதது. அந்தப் பதிப்பு வரிசையில் இந்நூல்கள் மிகுந்த கவனத்தைப் பெறுகின்றன.

கடைசிக் காலத்தின் ஆன்மிகத்தை அடையாளப்படுத்த கீழ்வரும் இரண்டு தளங்களில் பரீட்சார்த்தமான ஆய்வு செய்ய வேண்டும். முதலாவது, நவீன வட்டியை அடிப்படையாகக் கொண்ட பொருளாதாரமும், ஷிர்க் என்று அறியப்படுகிற மதச்சார்பற்ற அரசியலும் இஸ்லாத்திற்கு சவாலானவை என்பதைப் புரிந்து சரியான முறையில் அவற்றை எதிர்கொள்கின்ற ஆற்றலை உருவாக்கும் ஆய்வு. இரண்டாவது, சமகால உலக அரசியலில் நிகழ்ந்த வினோதமான, துரதிஷ்டமான ஒரு நிகழ்வைப் புரிந்து அதற்கு தக்க பதிலடி கொடுக்கும் ஆற்றலை உருவாக்கும் ஆய்வு. அந்த நிகழ்வு என்பது பைத்துல்முகத்தஸுக்கு யூதர்கள் திரும்பியதும், இஸ்ரேல் தேசம் அமைக்கப்பட்டதுமாகும். ஆன்மிக ஒளி பெற்ற இஸ்லாமிய அறிஞர்கள் வட்டிக்கு எதிராகவும், ஷிர்கிற்கு எதிராகவும் இடைவிடாமல் போராடிக்கொண்டே இருப்பது அவசியமாகும்.

மனிதகுல சமய வரலாற்றில், வெளியேற்றப்பட்டு இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப்பின் யூதர்கள் பைத்துல் முகத்தஸில் நுழைந்திருப்பது மிக வினோதமானதும், புரிந்து கொள்ள முடியாததுமாகும். ஜெரூசலத்தின் தலைவிதியை நிர்ணயிப்பதிலும், பைத்துல்முகத்தஸின் வரலாற்றை மீள்பார்வை செய்வதிலும் குர்ஆனின் வழிகாட்டுதலைப் பெறுவதற்கு இப்ராஹீம் நபியின் மார்க்கமும், இஸ்ரேல் தேசமும் என்ற நூல் விட்ட இடத்திலிருந்து குர்ஆனில் ஜெரூசலம் எனும் இந்நூல் தொடங்குகிறது.

குர்ஆனில் ஜெரூசலம் என்ற நூல் மிக முக்கியமாக பைத்துல் முகத்தஸை அறிந்து கொள்ளவும், அதன் எதிர்காலத்தை நிர்ணயிக்கவும் முயற்சிக்கிறது. பைத்துல் முகத்தஸின் சர்ச்சை நாடகத்தில் இன்றும் சம்பந்தப்பட்டிருக்கின்ற அரசியல் பொருளாதாரத்தின் ஒரு நூற்றாண்டுக்கு மேலான வரலாற்றின் ஆழ்ந்த புரிதல் இந்நூலை

நேர்மையான தகவல்களின் அடிப்படையில் செய்யப்பட்ட துல்லியமான வரலாற்று ஆய்வு இஸ்லாத்திற்கெதிராக இழைக்கப்பட்ட மாபெரும் துரோகத்தைத் தோலுரித்துக் காட்டுகிறது. இந்தத் துரோகக் குற்றத்தை இழைத்தவர்கள் சவூதி வஹ்ஹாபிகள். கிலாஃபத்தின் அழிவிற்குப் பங்காற்றி, கிலாஃபத் புத்துயிர் பெற்று விடாமல் பார்த்துக்கொள்பவர்கள். பைத்துல்முகத்தஸில் இருக்கும் மதச்சார்பற்ற இஸ்ரேல் தேசத்திற்கும், இஸ்லாமியத் தலைமை பீடத்தில் இருக்கும் மதச்சார்பற்ற சவூதி வஹ்ஹாபி தேசத்திற்கும் மிகுந்த ஒற்றுமை உண்டு. இரண்டு தேசங்கள் உருவானதிலும் பிரிட்டனின் தலையீடு இருந்தது. இரண்டு தேசங்களும் முதலில் பிரிட்டன், பிறகு அமெரிக்காவின் பாதுகாப்பினால் உயிர் பிழைத்துக் கொண்டிருக்கின்றன. நவீன உலகின் இஸ்ரேல் யூதர்களை ஏமாற்றி அவர்களை அழிவின் பாதையில் அழைத்துச் செல்லும் ஆள் மாறாட்டக்காரன். அதே போல சவூதி முஸ்லிம்களை ஏமாற்றக் கூடிய ஏமாற்றுப் பேர்வழியுமாகும். இமாம் மஹ்தி தோன்றும்போது (இஸ்ரேல், சவூதி) இரண்டு தேசங்களின் முடிவும் ஒரே மாதிரியாகத் தானிருக்கும். அதாவது இரண்டு தேசங்களும் அழிக்கப்பட்டு வரலாற்றுக் குப்பையாக மாறிவிடும். கிலாஃபத் அழிவின் வரலாற்றோடும், சவூதி வஹ்ஹாபிகளால் நடத்தப்பட்ட பெரும் துரோகச் செயலோடும் சம்பந்தப்பட்டிருக்கின்ற இந்தக் கண்ணோட்டத்தை நவீன கால (சலஃபி) முஸ்லிம்கள் ஏற்றுக்கொள்கின்றனர்.

மௌலானா அன்சாரி அவர்கள் அவருடைய ஆசான் மௌலானா சித்தீக்கி அவர்களை கண்ணியப்படுத்தும் விதம் பாகிஸ்தானில் அலீமிய்யா இஸ்லாமிய நிறுவனத்தை உருவாக்கினார்கள். அந்தத் தூய பாரம்பரியத்தைப் பின்பற்றி அன்சாரி நினைவுத் தொடர் பதிப்புகள் தன் பணிவான சேவையை முன்வைத்துள்ளது.

# பொருளடக்கம்

அகண்ட இஸ்ரேல் என்னும் யூதக் கனவு பற்றியும், அதை முன் வைத்த யூதக் காய்நகர்த்தல் உத்திகளையும் விரிவாக ஆராய்கிறார்.

அடுத்த உலக வல்லரசு இந்தியாவா சீனாவா என்ற விவாதம் நடக்கும் சூழ்நிலையில், அல்ல, அல்ல அடுத்த வல்லரசு இஸ்ரேல் தான்! என்று உரத்துக் கூறுகிறார்.

மஸீஹுத் தஜ்ஜால், யஃஜூஜ் மஃஜூஜ் பற்றியெல்லாம் நமக்கும் தெரியும், படித்திருக்கிறோம். உலக முடிவுநாளின் போது வெளிப்படும் கூட்டம் என்பதாக நினைக்கிறோம். ஆனால் இந் நூலாசிரியர், இன்றைய உலகம் யஃஜூஜ்-மஃஜூஜ் பிடியில்தான் சிக்கிக் கிடக்கிறது என்று காட்டுகிறார். அரூப தஜ்ஜால் வெளிப் பட்டுவிட்டான் என்றும் சான்று காட்டுகிறார்.

மீர்ஸா குலாம் அகமது காதியானியின் நுபூவ்வத் தஅவா வெறும் பித்தலாட்டமே அன்றி வேறன்று என்பதை நிறுவுகிறார். பல்லி முற்றினால் உடும்பு, உடும்பு முற்றினால் முதலை என்பார்கள். அது போன்ற தஅவாதான். ஒரு கணிசமான மக்கள் அந்த மாயையில் வீழ்ந்தது இரங்கத்தக்கதுதான்.

இந்தக் காலத்தின் நிலையை உணர்ந்து வழிகாட்டும் பொறுப்பு ஆலிம்களுக்கு உள்ளது என்பதை வலியுறுத்துகிறார். கால நிலையை உணராத வழிகாட்டுதல் பயன்படாது அல்லவா?

மொத்தத்தில், வழக்கமாக நாம் படிக்கும் நூல்களிலிருந்து வேறுபட்ட நூல். நூலாசிரியரின் முடிவை மறுப்பவர்களும் கூட அவர் எழுப்பும் வாதத்தைப் புறக்கணிப்பது எளிதன்று. நூலைப் படித்து முடிக் கும்போது, உலகை ஒரு முறை சுற்றிவந்த உணர்வு தோன்றுகிறது. நபி இபுறாஹீம் (அலை) காலம் தொடங்கி வரலாற்றை ஒரு முறை அலசிவிடுகிறார். இது பெரிய அனுபவம்.

இந்நூல் படிக்கப் படவேண்டும் பரவலாக!

**அன்புடன்**

புலவர் ப மு அன்வர்

02.09.2012

கோலாலம்பூர்

# முன்னுரை-இரண்டாம் பதிப்பு

குர்ஆனில் ஜெரூசலம் எனும் நூல் முதற்பதிப்பு வெளியிடப்பட்டு ஒன்பது மாதங்களுக்குப்பின் இரண்டாம்பதிப்பு வெளியீடு காணுகிறது. எனது நூல்களிலேயே இந்நூல் சிறந்த விற்பனைச் சாதனையைப் படைத்திருக்கிறது. எல்லாப் புகழும் நன்றியும் அல்லாஹ்வுக்கே உரித் தாகுக! மலேசியா கோலாலும்பூர் சர்வதேச இஸ்லாமியப் பண்பாட்டுக் கலாச்சாரத் துறையின் சூடானியப் பேராசிரியர் டாக்டர் மாலிக் பத்ரி அவர்களின் மதிப்புரையும் இரண்டாவது பதிப்பில் சேர்க்கப்பட்டுள்ளது. அவர் முஸ்லிம் உளவியலாளர்களின் இக்கட்டான நிலை எனும் அறிவுப்பூர்வமான நூலின் ஆசிரியர் என அறியப்படுபவர்.

இந்நூலின் ஏழாவது அத்தியாயத்தில் (ஜெரூசலத்திலிருந்து மக்காவை நோக்கித் திரும்புதல்) நபி (ஸல்) அவர்கள் மதீனாவில் யூதர்களுக்கு மத்தியில் வந்தபின் ஜெரூசலம் இருக்கும்திசை நோக்கித் தொழுதார்கள், தவ்ராத்தில் கூறப்பட்ட விதிமுறைகளின் அடிப்படையில் யூதர்கள் நோன்பு நோற்ற நாள்களிலேயே நோன் பும் நோற்றார்கள் என்று குறிப்பிட்டிருந்தோம். மேலும் தாம் இப்ராஹீம் நபியின் அல்லாஹ்வுடைய தூதர் என்பதை யூதர்களுக்குப் பதிய வைப்பதற்காக இவ்வாறு நபி (ஸல்) செய்தார்கள் என்றும் குறிப்பிட்டிருந்தோம். இரண்டாவது பதிப்பில் ரஜ்ம் (கல்லெறிந்து கொல்வது) பற்றிய ஒரு விஷயத்தையும் இணைத்திருக்கின்றோம். (காண்க அத்தியாயம்-7) குர்ஆனில் ஜெரூசலம் எனும் பெரிய தலைப்பினுள் ரஜ்ம் (கல்லெறிந்து கொல்வது) உடைய தலைப்பு, ஆழ்ந்து வாசிப்பவர்களுக்கு ஜினா-விபச்சாரத்தின் தண்டனை விஷயத் தில் புரிந்துகொள்வதன் முக்கியத்துவத்தை வழங்குகிறது.

ஈராக்கைத் தாக்கி, ஆப்கானிஸ்தான் பாகிஸ்தான் பாணியில் அமெரிக்காவால் நடத்தப்படுகிற ஒரு பொம்மை அரசாங்கத்தை ஏற் படுத்துகிற அமெரிக்காவின் முயற்சி நடந்துகொண்டிருக்கும் போது இந்த இரண்டாம் பதிப்பு அச்சுக்குச் செல்கிறது. ஈராக்கைத் தாக்குவதற்குப் பின்னிய வலைக்குப் பின்னால் உள்ள தந்திரங்களை குர்ஆனில் ஜெரூசலம் நூல் விளக்குகிறது. பைபிளில் வரையறுக்கப் பட்ட புனித பூமியின் எல்லையை (எகிப்தின் நதியிலிருந்து யூஃப்ரடீஸ்

நதி வரை) பெரிய அகண்ட நிலப்பரப்பாக ஆக்குவதே அதிகார போதையுடைய இஸ்ரேலின் ஆசையாக இருப்பதையும், அதற்காக ஒரு பெரிய யுத்தத்திற்குத் தயாராகி வருவதையும் இந்நூலின் முதலாவது அத்தியாயத்தில் உணர்த்தியுள்ளோம். வலுச்சண்டை என்று தெரியும் வண்ணம் யுத்தத்தின் வழிமுறைகளை உருவாக்க மாட்டார்கள். (ஏமாற்றுவதில் பல முனைவர் பட்டங்களைப் பெறும் அளவு திறமையாளர்கள்) ஈராக் மீது அமெரிக்காவின் தாக்குதலுக்குக் கூறப்படும் காரணங்களில் ஒன்று, அரபு மக்கள் திரளை வீதிக்கு வரவழைத்து, பெரும் ஆர்பாட்டங்களைச் செய்ய வைத்து, அமெரிக்க ஆதரவு அரசாங்கத்தை வீழ்த்தி இஸ்லாமிய ஆதரவு, அமெரிக்க எதிர்ப்பு அரசை நிறுவுவதாகும். பிறகு அந்த இஸ்லாமிய அரசு இஸ்ரேல் தேசத்திற்கு பெரும் அச்சுறுத்தலாக இருப்பதாக ஒரு தோற்றத்தை ஏற்படுத்துகிற ஒரு விஷமப் பிரச்சாரம் அரங்கேறும். எகிப்து நதி முதல் யூஃப்ரடீஸ் நதி வரையுள்ள நிலப்பரப்பில் யூத அதிகாரத்தை நிலைநாட்ட யூதர்கள் மின்னல் வேகத்தில் யுத்த களத்தில் குதிப்பார்கள். இரண்டாம் பதிப்பின் இந்நூலில் இப்பொழுது நாம் குறிப்பிடுகிறோம் அதாவது எகிப்து நதி முதல் என்று எல்லை வகுத்ததன் ரகசியம் சூயஸ் கால்வாயை யூத அதிகாரத்திற்குள் கொண்டு வருவதாகும். யூஃப்ரடீஸ் நதிவரை என்று எல்லை வகுத்தது வளைகுடா எண்ணெயை யூதக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவதாகும். அமெரிக்க டாலர் முன் கூட்டியே கணிக்கப் பட்டபடி வீழ்ச்சியடைந்ததோடு அமெரிக்கப் பொருளாதாரம் இறுதியில் உலகின் வல்லரசு என்ற பட்டத்தை இஸ்ரேல் தேசத்திற்கு தாரை வார்க்கும். ஈஸா நபி (அலை) இறங்கி வரும் சமயத்தில்தான் யூதர்கள் அந்தப் பட்டத்தை அடைவார்கள்.

இந்நூலின் வெளியீடும், என் சொற்பொழிவுகளும் இந்த விஷயத்தில் முன்கூட்டியே கணிக்கிற ஆற்றலை ஏற்படுத்திவிட்டன. கடந்த 14 ஆண்டுகள் இடைவிடாத இஸ்லாமியப் பிரச்சாரப் பணி செய்திருந்தும் சமீபத்தில் ஒரு தீவுத் தேசத்தில் இஸ்லாமிய சொற்பொழிவு ஆற்ற நான் அனுமதிக்கப்படவில்லை.

ஆனால் குர்ஆனில் ஜெருசலம் நூலின் விமர்சனங்களில் மிகவும் வருந்தத்தக்கது இஸ்லாமிய (உலமா) மார்க்க அறிஞர்களின் விமர்சனமாகும். ஈஸா நபி (அலை) தஜ்ஜாலைக் கொன்ற நிலைமைக்குப் பிறகு தான் யஃஜூஜ், மஃஜூஜ் வெளியாவார்கள் என்ற

வாதத்தின் அடிப்படையில் மேலோட்டமாகவே இந்நூலை நிராகரித்து விட்டார்கள். மேலும் அவர்கள் வேண்டுமென்றே இன்றைய உலகம் யஃஜூஜ், மஃஜூஜ் உடைய அமைப்பில்தான் இருக்கிறது என்பதை ஏற்க மறுக்கிறார்கள். யஃஜூஜ், மஃஜூஜ் வெளியாவதற்கு ஈஸா நபி (அலை) வர வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். அவர்கள் தவறான கருத்தில் இருக்கிறார்கள் என்பது வருத்தமளிக்கிறது. அந்தக் கருத்து இன்றைய உலக நிலையைப் புரிந்துகொள்கின்ற ஆற்றலை இழக்கிற அபாயமானதாகும். இன்றைய வினோத உலகில் வேகமாகவும், துரதிஷ்டமாகவும் வெளிப்படுகின்ற நிகழ்ச்சிகளை எதிர்கொள்கின்ற ஆற்றலையும் அது இழக்கச்செய்யும். அதனால் நாம் வாழ்ந்துகொண்டிருக்கும் காலத்தின் திணறடிக்கும் சவால் களை முறையாக எதிர்கொள்ள முடியாதவர்களாகிவிடுவார்கள்.

இந்நூல் அச்சுக்குச் செல்லும் நேரத்தில் இந்நூலின் அரபு மொழி பெயர்ப்பு நிறைவடையும் தருவாயில் இருக்கிறது. போஸ்னிய மொழி பெயர்ப்பு செய்யப்பட்டுவிட்டது. உருது, மலாய் மொழிபெயர்ப்புகள் செய்யப்படுகின்றன. ஃபிரென்ச், ஹவ்சா ஆகிய மொழிபெயர்ப்பிற்கான ஆயத்தம் நடந்துகொண்டிருக்கின்றது. முஸ்லிம்கள் பேசுகின்ற அனைத்து மொழிகளிலும் மொழியாக் கம் செய்யப்படவேண்டும் என்ற என் பிரார்த்தனை அங்கீகரிக்கப் பட்டிருப்பதாகவே நான் கருதுகிறேன். எல்லாப் புகழும் அல்லாஹ் வுக்கே! அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் யாருமில்லை.

**இம்ரான் என் ஹுஸைன்**
**கோலாலும்பூர்**
**டிஸம்பர், 2002 (ரமளான்)**

# முன்னுரை - முதற்பதிப்பு

செப்டம்பர் 2000 இல் ஜெரூசலம் மஸ்ஜிதுல் அக்ஸாவில் ஏரியல் ஷெரோனின் திட்டமிட்ட நுழைவு, இஸ்ரேலிய அடக்குமுறையின் ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடங்கி, அதை எதிர்க்கின்ற முஸ்லிம் வீரர்களை உருவாக்கியது மட்டுமல்ல, மாறாக சூரா அல்கஹ்ஃபும் நவீன காலமும் என்ற நூலை எழுதிக்கொண்டிருந்த என்னை அதைக் கைவிட வைத்து அதற்குப் பதிலாக குர்ஆனில் ஜெரூசலம் என்ற இந்நூலை எழுதவைத்தது.

ஒரு வருடம் கழித்து நான் அமெரிக்காவில் இருந்தபோது (புது வசிப்பிடத்தைத் தேடிக்கொண்டிருக்கிறேன்) இந்நூல் நிறைவடையும் தருவாயில் அமெரிக்காவில் செப்டம்பர் 11 தீவிரவாதத் தாக்குதல் நடை பெற்றது. அமெரிக்கத் தீவிரவாதத் தாக்குதலை முற்றிலும் அறியாத, இஸ்லாத்தை நிலைநாட்டத் துணிந்த ஆப்கானிய முஸ்லிம்கள் மீது வெட்கங்கெட்ட, கோழைத்தனமான அமெரிக்காவின் தாக்குதலை சொல்லெண்ணாத் துயரத்தோடு பார்த்துக் கொண்டிருந்தபோது, கோலாலும்பூரில் புனித ரமளானில் இந்நூல் நிறைவடைந்தது.

நம்முடைய நல்ல தருணம், இந்தத் தீவிரவாதத் தாக்குதல் உலக மக்களின் முழுக்கவனத்தை ஈர்க்கும் மிகச் சரியான நேரத்தில் குர்ஆனில் ஜெரூசலம் நூல் பொதுமக்களின் வாசிப்பைப் பெற்றுக்கொண்டிருக்கிறது. இந்நூலை யூதரோ, கிருஸ்துவரோ விளங்கி, நூலின் கருத்துகளை ஏற்றுக் கொண்டு, முஹம்மது நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் உண்மைத் தூதர் என்றும், திருக்குர்ஆனை இறைவேதம் என்றும் பிரகடனப்படுத்துவார் என்று தோன்றவில்லை. அதே போல காதியானியும், ஒரு காதியானியாக இருந்து கொண்டே இந்நூலின் அடிப்படை வாதங்களையும், நூலின் முடிவையும் ஏற்றுக்கொள்வதும் இயலாததாகும். அப்படி இந்நூலின் கருத்தை ஏற்றுக்கொண்டால் இது பற்றி குலாம் அஹ்மதுடைய கூற்று முற்றிலும் பொய் என்பது தெளிவாகிவிடும்.

சமீபத்தில் வெளியீடு கண்ட ஷைகு சஃபர் அல்ஹவாலி எழுதிய ரஜபின் எழுச்சி தொடக்கம் மட்டும்தானா? எனும் நூல் இந்நூலின் துணை நூலாகும். வாசகர்கள் அந்த நூலை இணையத்தில் வாசிக் கலாம். (http://www.islam.com/books/intifadha.htm)

## முன்னுரை - முதற்பதிப்பு

இப்ராஹீம் நபியின் மார்க்கமும், இஸ்ரேல் தேசமும்எனும் நூல் இந்நூலை வாசிக்கும் வாசகர்களுக்கு மிகப்பெரும் துணை செய்யும். இந்நூலின் கருத்துகளுக்கு வலுச்சேர்ப்பதற்கு குர்ஆனிலிருந்தும், தவ்ராத்திலிருந்தும் எடுக்கப்பட்ட மேற்கோள்கள் ஏராளமாக இந்நூலில் இடம் பெற்றிருக்கின்றன.

அரபு மொழியில் இருந்தால்தான் குர்ஆன் வசனங்கள் உரிய அந்தஸ்த்தைப் பெறும் என்பதை புறக்கணிக்காமல், அனைத்து குர்ஆன் மேற்கோள் வசனங்களும் அரபியிலேயே இடம்பெறச் செய்திருக்கிறோம்.

இந்நூலில் கூறப்பட்டுள்ள நவீன இஸ்ரேல் சம்பந்தப்பட்ட பெரும்பான்மைச் செய்திகள் ஜெருசலம் போஸ்ட் எனும் நாளிதழிலிருந்து எடுக்கப்பட்டவை. கூறப்பட்ட செய்தியின் சாரம்சம் மட்டுமே கவனிக்கத்தக்கது. நிகழ்வின் காலங்கள் மாறுபட்டிருக்கலாம்.

டாக்டர் இஸ்மாயீல் ராஜி ஃபாரூக்கி அவர்களின் இஸ்லாமும் இஸ்ரேலிய பிரச்சனையும் என்ற முக்கிய நூலிலிருந்து சில பத்திகள் இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ளன. அந்த மகத்தான அறிஞரும், அவரின் அப்புத்தகமும் உரிய கவனத்தைப் பெறுவதற்கு உதவும் என்ற எண்ணத்தில் அவை எடுத்தாளப்பட்டிருக்கின்றன.

ஆங்கிலத்தில் எங்கெல்லாம் இஸ்ரேல் எனும் வார்த்தை பயன்படுத்தப்படுகிறதோ, அங்கு இஸ்ரேல் தேசம் என்ற அர்த்தத்திலேயே பயன்படுகிறது. இருப்பினும் நாம் இஸ்ரேல் எனும் வார்த்தையை குர்ஆனில் கூறப்படுகிற பனூ இஸ்ராயீல் இஸ்ரவேலர்கள் என்ற அர்த்தத்திலேயே பயன்படுத்துகிறோம். ஆங்கிலத்தில் பனூ இஸ்ராயீல் என்பதற்கு இஸ்ராயீல் என்று பயன்படுத்தப்படுகிறது.

அனைத்துக் குர்ஆன் வசன மேற்கோள்களும் முதலில் அத்தியாய எண் பிறகு வசன எண் என்ற விதத்தில் ஆளப்பட்டுள்ளன.

(உ-ம்) முதல் அத்தியாயத்தின் இரண்டாவது வசனம் மேற்கோளாக ஆளப்படுவது பின்வருமாறு விளக்கப்படும்.

**(அல்குர்ஆன், 1:2)**

## குர்ஆனில் ஜெருசலம்

பெயர் குறிப்பிட விரும்பாத இரண்டு மலேசிய சகோதரர்களுக்கு நன்றிக்கடன் பட்டிருக்கிறேன். இந்நூல் எழுதவும் ஆரம்ப கட்ட அச்சு வேலைகளுக்கும் அவர்களின் உதவி அவசியமாக இருந்தது. சுலைமான் துஃப்போர்ட், முஹம்மது ஆலம்கீர், சபீனா வாடனபே ஆகியோர் கையெழுத்துப் பிரதியில் பிழை திருத்துவதற்கு உதவியதுடன் பல பயனுள்ள யோசனைகளை கூறினர். கோலாலும்பூர் போயன்ஸ் கிராஃபிக்ஸின் ஹபீபுர்ரஹமான் அட்டைப் படத்தை வடிவமைத்தார். அல்லாஹுதஆலா அவர்களின் அன்பான உதவிக்கு நற்கூலி வழங்குவானாக! ஆமீன்!

அல்லாஹ்வின் மன்னிப்பு, வழிகாட்டல், பாதுகாப்பு, கருணை ஆகியவற்றுக்காகப் பிரார்த்தனை செய்கிறேன். சத்தியத்திற்கான இந்த அடக்கமான பணியை ஏற்று அருள் செய்யுமாறும், இந்நூலின் கருத்துகளால் அச்சமடைந்திருப்பவர்களை விட்டும் இந்நூலைக் காப்பாற்றுமாறும் அல்லாஹ்விடம் வேண்டுகிறேன். ஆமீன்!

எனக்கு இஸ்லாத்தைக் கற்றுக்கொடுத்த என் மதிப்பிற்குரிய ஆசிரியர் மௌலானா அன்சாரி (ரஹ்) அவர்களுக்கு அல்லாஹ் அருள் செய்வானாக! இஸ்லாத்தை நேசிக்கக் கற்றுத்தந்த என் அருமைப் பெற்றோர்களுக்கும் அல்லாஹ் அருள் செய்வானாக! தூய இஸ்லாத்தின் இந்தப் பணிக்காக உண்மையாகவும், அரவணைப் போடும், அன்பாகவும், உறுதியோடும் எனக்குத் துணை நின்ற என் அன்பு மனைவி ஏஞ்சலாவுக்கும் அல்லாஹ் அருள் செய்வானாக!

**இம்ரான் N.ஹுஸைன்**
**கோலாலும்பூர்.**
**ஜூன், 2002.**

# முதலாம் பாகம்

## அத்தியாயம் I

### அறிமுகம்

قَدْ جَاءَكُمْ بَصَائِرُ مِنْ رَبِّكُمْ فَمَنْ أَبْصَرَ فَلِنَفْسِهِ وَمَنْ عَمِيَ فَعَلَيْهَا وَمَا أَنَا عَلَيْكُمْ بِحَفِيظٍ ﴿١٠٤﴾

உங்கள் இறைவனிடமிருந்து (சத்தியத்திற்குரிய அனேக) ஆதாரங்கள் உங்களிடம் வந்திருக்கின்றன. யார் (அவற்றைக் கவனித்துப்) பார்க்கிறாரோ (அது) அவருக்கே நன்று. (அவற்றை யார் பார்க்காது) கண்ணை மூடிக்கொள்கிறாரோ (அது) அவருக்கே கேடாகும். (நபியே! நீர் அவர்களை நோக்கி) நான் உங்களை காப்போன் அல்ல (என்று கூறுவீராக)

**(அல்குர்ஆன், 6:104)**

**ஜெருசலத்தின் தலைவிதி உட்பட அனைத்து விஷயங்களையும் திருக்குர்ஆன் விவரிக்கிறது.**

அனைத்து விஷயங்களையும் விளக்கிக் கூறுவதுதான் தன் முதற் பணி எனத் திருக்குர்ஆனே பறைசாற்றுகிறது.

وَنَزَّلْنَا عَلَيْكَ الْكِتَابَ تِبْيَانًا لِكُلِّ شَيْءٍ وَهُدًى وَرَحْمَةً وَبُشْرَىٰ لِلْمُسْلِمِينَ ﴿٨٩﴾

........... (நபியே!)ஒவ்வொரு விஷயத்தையும் தெளிவாக விவரிக்கக் கூடிய இவ்வேதத்தை நாம்தாம் உம்மீது அருளியிருக்கின்றோம். இது நேரான வழியாகவும், அருளாகவும் இருப்பதுடன் (எனக்கு) முற்றிலும் வழிபடுவோருக்கு ஒரு நன்மாராயமாகவும் இருக்கின்றது.

**(அல்குர்ஆன்.16:89)**

குர்ஆன் எல்லாவற்றையும் விளக்கும் என்று பறைசாற்றுவதால் மனிதகுல வரலாற்றில் நடந்த மிகவும் மர்மமான விளக்க முடியாத நிகழ்வுகளுக்கெல்லாம் விளக்கம் கூறுகின்ற ஆற்றல் பெற்றிருக்க வேண்டும் என்ற கருத்து உருவாகின்றது. கீழ்வரும் பல விஷயங்களைக் கண்ட பின்பும் ஒரு நிகழ்வு இன்றும் சாத்தியமாகிக் கொண்டிருக்கிறது.

▶ 1917-18இல் பைத்துல்முகத்தலை விடுவிக்கின்ற விஷயத்தில் கடவுளில்லாத உலகை உருவாக்கும் ஐரோப்பாவின் இறுதி வெற்றி. சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் சிலுவைப் போர்களுடன் ஆரம்பிக்கப்பட்ட ஐரோப்பிய கிருஸ்துவர்களின் உறுதியான போராட்டத்திற்குப்பின் அது (பைத்துல்முகத்தஸ்) விடுதலை அடைந்து கொண்டிருக்கிறது.

**[ஏன் மதச்சார்பற்ற கடவுளில்லாத ஐரோப்பா, ஆயிரம் ஆண்டுகள் பைத்துல்முகத்தலைப் பிடிக்கிற ஆசையோடிருந்த ஐரோப்பிய கிருஸ்துவர்களின் முயற்சிக்கு தொடர்ந்து ஆதரவளிக்கிறது? ஆயிரம் ஆண்டுகள் முன்பே கிருஸ்துவத்தைத் தழுவிய ஐரோப்பிய கிருஸ்துவர்கள் பைத்துல் முகத்தலைப் பிடிக்கிற ஆசையில் ஏன் இவ்வளவு அழுத்தமாக இருக்கிறார்கள்?]**

▶ அல்லாஹுத்தஆலாவால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் அழிக்கப்பட்ட புராதன இஸ்ரேல் தேசத்தை மீட்டெடுப்பதில் ஐரோப்பிய யூதர்களின் வெற்றி - அதே மதச்சார்பற்ற கடவுளில்லா ஐரோப்பாவின் ஆக்கப்பூர்வமான உதவியால்தான் இந்த வெற்றி சாத்தியப்பட்டிருக்கிறது.

**[இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தாவூது, சுலைமான் ஆகிய நபிமார்களால் நிர்மாணிக்கப்பட்ட சமயச்சார்புள்ள தேசத்தை ஐரோப்பிய யூதர்களின் உதவியுடன் மீட்டுக்கொடுக்க மதச்சார்பற்ற ஐரோப்பா ஏன் ஆசை கொள்கிறது? இஸ்ரேல் தேசத்தை மீட்டெடுக்க ஐரோப்பிய யூதர்கள் மட்டுமே ஏன் ஆர்வம் கொள்கிறார்கள்?]**

▶ அல்லாஹுத்தஆலாவால் பைத்துல்முகத்தஸிலிருந்து வெளியேற்றப்பட்டு இரண்டாயிரம் ஆண்டுகள் வினோதமாக உலகின் பல பாகங்களிலும் இனக்குழுவாக வாழ்ந்த இஸ்ரேலிய யூதர்கள் (ஐரோப்பிய யூதர்கள் அல்லாதவர்கள்) பைத்துல்முகத்தஸுக்குத் திரும்ப முடியாமல் தவித்துக்கொண்டிருந்த போது ஐரோப்பிய யூதர்கள்தான் திரும்பக் கொண்டுவந்தார்கள். பிறகு அவர்கள் வெகு இலகுவாக பைத்துல்முகத்தஸில் குடியமர்ந்து கொண்டார்கள்.

**[ஐரோப்பியர்கள் ஏன் யூத மதத்தைத் தழுவி, பைத்துல் முகத்தலை அடைகிற ஆசையை வளர்த்துக்கொண்டு பல தந்திரங்கள் செய்து இஸ்ரேலிய யூதர்களை பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பக் கொண்டுவர வேண்டும்?]**

# அறிமுகம்

வினோதமாகவும், உளறலாகவும் உலக மக்களுக்குத் தோன்றுகிற இந்த அனைத்து விஷயங்களும் யூத மதத்தை உண்மைப்படுத்தும் சமயக் கண்ணோட்டமாக யூதர்களுக்குத் தோன்றுகிறது. காரணம், அல்லாஹ்வால் யூதர்களுக்கு வழங்கப்பட்ட (மஸீஹ் என்று அறியப் படுகின்ற) ஒரு தூதர் அனுப்பப்படுவார் என்பது நிறைவேறுவதாக நம்புகிறார்கள். மேலே உள்ள அனைத்தையும், இன்னும் அதிகமாகவும் யூதர்களுக்கு வழங்குவார் என்றும் நம்புகிறார்கள்.

குர்ஆன் இந்த வினோத நிகழ்வுகளுக்கு மட்டும் விளக்கமளிக்க வில்லை, மாறாக ஜெரூசலத்தின் தலைவிதியையும் நிர்ணயிப்பதாக இந்நூல் கூறுகிறது. உண்மை என்று வாதிடுகிற யூதர்களின் பொய்யை வெளிப்படுத்துகிற, மேலும் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் கொண்டு வந்ததுதான் உண்மை என்பதை உறுதிப்படுத்துகிற ஆதாரங்களைக் குர்ஆன் கூறுகிறது. வரலாற்றில் என்றும் அனுபவித்திருக்காத தெய்வீக தண்டனையால் யூதர்கள் தண்டிக்கப்படுவார்கள் என்பதுதான் ஜெரூசலத்தின் தலைவிதியாகும்.

ஜெரூசலம், பைத்துல்முகத்தஸ் பற்றிய குர்ஆனின் முன்னறி விப்பின்படி கடைசிக் காலத்திற்கு நாட்கள் நெருங்கிக்கொண்டே வரும் போது உலகின் பல பாகங்களிலிலும் சிதறடிக்கப்பட்ட யூத இனக்குழுக்கள் அவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட பைத்துல்முகத் தஸுக்குத் திரும்பி வருவார்கள் என்பது உறுதியாகப் புலப்படுகிறது. (குர்ஆனில் அல்லாஹ் இக்கருத்தைக்கூறுகிறான், **17:104**) அந்த தெய்விக வாக்கு நிறைவேறிவிட்டது. யூதர்கள் பைத்துல்முகத் தஸுத் திரும்பி உரிமை கொண்டாடுகிறார்கள். அவர்களின் இந்த வெற்றி அவர்கள் உருவாக்கிய இஸ்ரேல் தேசம் சமயச்சட்டங்கள் பேணப்படும் நாடு என்று நம்பச்செய்திக்கிறது. அப்படியெல்லாம் மதச்சட்டங்கள் உடையது அல்ல என்று குர்ஆன் விவரிக்கிறது. மாறாக வரலாற்றில் என்றும் கண்டிராத மிகப்பெரும் ஏமாற்றத்தால் பீடிக்கப்பட்டிருக்கிறார்கள். வரலாற்றில் எந்த மக்களும் அனுபவிக் காத பெரும் இறைத்தண்டனையை அவர்கள் பெற இருக்கிற கால கட்டம் இதுவாகும். யூதர்களுக்கு இறைத்தண்டனை வருவதற்கு முன்னால் பைத்துல்முகத்தஸில், ஏன் உலகத்தில் இப்பொழுது என்ன வெல்லாம் நடந்து கொண்டிருக்கின்றனவோ அவையெல்லாம் நடக்கும். இந்நூல் அவற்றில் சிலவற்றை விளக்குகிறது.

பைத்துல்முகத்தஸோடு சம்பந்தப்பட்ட வரலாற்று நிகழ்வுகளில் இஸ்லாத்தின் கண்ணோட்டம் வித்தியாசமானது என்பதை விளக்குவது தான் இந்நூலின் அடிப்படை நோக்கம். இஸ்ரேல் தேசத்தின் நேரம் மிக வேகமாக குறைந்துகொண்டிருக்கிறது. கலீலீ ஆறு விரைவில் வற்றப் போகிறது! ஈஸா நபி (அலை) திரும்பி வரப்போகிறார்! ஈஸா நபியின் திரும்புதல் என்பது இஸ்ரேல் தேசத்தின் அழிவை உறுதிப்படுத்தும்.

(காண்க பிறசேர்க்கை-1, கலீலீ ஆற்றில் தற்போதைய நீர் மட்டம் பற்றிய நாளிதழ் செய்தி. மேலும் இபுறாஹீம் நபியின் மார்க்கமும், இஸ்ரேல் தேசமும் என்ற நமது நூலைக் காண்க)

முஸ்லிம்களிடமுள்ள அதே உண்மைதான் யூதர்களிடமும் உள்ளது. ஆனால் அதை அவர்கள் சிதைத்து விட்டார்கள். சிதைக்கப்படாத உண்மையாக குர்ஆன் வந்தபோது அதை ஏற்றுக் கொள்வதற்கும், நபி (ஸல்) அவர்களை இறுதித் தூதராக அங்கீகரிப்பதற்கும் அவர் களுக்கு மதீனாவில் (ஹிஜ்ரத்திற்குப் பின்) நீண்ட கால அவகாசம் இருந்தது. ஆனால் அதை அவர்கள் பிடிவாதமாக மறுத்துவிட்டார்கள். அல்லாஹுதஆலா கிப்லாவின் திசையை மாற்றியபோது (காண்க, **அல்குர்ஆன் 2:141-145**) வாய்ப்பு அவர்களை விட்டும் சென்றுவிட்டது. தீர்மானிக்கப்பட்ட விதியின் பிடியிலிருந்து தப்பிப்பதற்குக் கால அவகாசம் கடந்துவிட்டது. வரலாற்றில் வெளிப்பட இருக்கிற மற்ற எந்த நிகழ்வையும்விட ஜெரூசத்தின் முன்னறிவிப்பும், இஸ்ரேல் தேசம் எதிர்நோக்க இருக்கிற அதன் விதியும் இஸ்லாம் உண்மையானது என்பதை நிரூபிக்கும்.

மூஸா நபி (அலை) அவர்களைத் தூதராக அனுப்பிய அல்லாஹ் தான் தன்னையும் அனுப்பினான், மூஸா நபிக்கு தவ்ராத்தை வழங்கிய அல்லாஹ் தான் குர்ஆனையும் வழங்கினான் என்பதை யூதர்களுக்கு போதிப்பதற்காகத் தான் நபி (ஸல்) பதினேழு மாத காலம் ஜெரூலசத்தை நோக்கித் தொழுதார்கள். அல்லாஹ்விடம் மன்னிப் பைப் பெறுவதற்கு ஒரே வழி நபி (ஸல்)அவர்கள்தான் (காண்க, **அல்குர்ஆன் 7:157**) ஆனால் அவர்கள் பிடிவாதமாக நபி (ஸல்) அவர்களை மறுத்துவிட்டார்கள். தற்போது காலம் கடந்து விட்டது.

# குர்ஆனில் ஜெருசலம் - முஸ்லிம்களின் கடமைகள்

இந்நூலை முழுமையாக வாசித்த முஸ்லிம்கள் செய்ய வேண்டியவை என்ன?

முதலில் மக்கா, மதீனா முஸ்லிம்கள் உள்ளத்தில் நெருக்கமாக இருப்பது போல ஜெருசலமும், பைத்துல்முகத்தஸும் நெருக்கமாக இருக்க வேண்டும். மதச்சார்பற்ற வெறுக்கப்பட்ட யூதர்களின் இஸ்ரேல் தேசத்திடமிருந்து பைத்துல்முகத்தஸை விடுவிக்க நடக்கும் போராட்டம் முஸ்லிம்களின் எல்லாப் பிரச்சனைகளை விடவும் முதன்மையானதாக இருக்க வேண்டும். ஒரு யூதன் பாலஸ்தீனிய முஸ்லிம்களையும் யூதர்களையும் அடக்குவதற்கு அமெரிக்காவை, ஐரோப்பாவை, ரஷ்யாவை விட்டு வெளியேறி இஸ்ரேலியப் படையில் சேர்ந்து பங்காற்றுகின்றான் என்றால் அதே போல முஸ்லிம்களும் உலகில் எங்கு வாழ்ந்தாலும் அதை விட்டு வெளியேறி பைத்துல்முகத்தஸில் அடக்குமுறையை எதிர்க்கப் பங்காற்றும் சுதந்திரம் வேண்டும். அந்தச் சுதந்திரம் ஒரு முஸ்லிமுக்கு மறுக்கப்பட்டு தீவிரவாதி என்று கைது செய்யப்படுவதை, அச்சுறுத்தினால் அதைப் புறக்கணித்து அந்தப் போராட்டத்திற்குத் தடையாக இருக்கிற அனைத்தையும் எதிர்க்க வேண்டும். அல்லாஹ்வுக்காக முஸ்லிம்கள் அனைத்தையும் கொடுத்து, கடவுளில்லா உலகை எதிர்க்க வேண்டும்! உண்மையில் இன்றைய உலகில் குறைந்தபட்ச ஈமானுடைய உணர்வு என்ன வென்றால் பைத்துல்முகத்தஸில் அடக்கு முறைக்கெதிரான போராட்டத்தில் முஸ்லிம்கள் பங்கெடுக்க ஆசைப்படுவதுதான். முஸ்லிம்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். எப்படியும் இஸ்ரேல் தேசம் முஸ்லிம் படையால் அழிக்கப்படும். முஸ்லிம்கள் அந்தப் படையில் தாங்களும் வீரர்களாக பங்காற்றும் உணர்வை வெளிப்படையாக அறிவித்தவுடனேயே மிரட்டப்படுவார்கள், அவர்களை வாய் மூடச் செய்வதற்காகக் கைது செய்யப்படுவார்கள் என்றும் அச்சுறுத்தப்படுவார்கள். வேறு யாரும் போராட்டத்தில் கலந்து கொண்டால் அவர்களுக்கும் இதே கதிதான் என்று உதாரணம் காட்டப்படுவார்கள். மிரட்டலும், சட்ட நடவடிக்கையும் அமெரிக்காவில் முன்னரே தொடங்கி விட்டது. அதைத் தொடர்ந்து உலகின் பல பாகங்களிலும் அது நடை முறையாக்கப்பட்டிருக்கிறது. இஸ்ரேல் உலகின் வல்லரசானால் நிலைமை இன்னும் தீவிரமாகும்.

இரண்டாவது, முஸ்லிம் உலகின் பொருளாதாரமும், மற்ற வளங்களும் முக்கியமாக பைத்துல்முகத்தஸை அடக்குமுறையிலிருந்து விடுவிப்பதற்கான உதவிக்குத் திருப்பி விடப்பட வேண்டும். அதே வேளை காஷ்மீர், கோசோவா, செசன்யா, ஆகிய இடங்களில் நடக்கும் போராட்டங்களும் முஸ்லிம்களின் உள்ளங்களில் இடம் பிடிப்பவைதான் என்றாலும் பைத்துல்முகத்தஸ் போராட்டங்களில் உள்ளது போல வெற்றிக்கு இறை உத்திரவாதம் மற்ற போராட்டங் களுக்கு இல்லை. அவைகள் சமமாக முடியாது. உண்மையில் பைத்துல்முகத்தஸை விடுவிக்கும் போராட்டத்தின் வெற்றி, மற்ற இடங்களில் அடக்குமுறைக்கெதிரான முஸ்லிம்களின் போராட்டங் களில் நியாயமான தாக்கத்தை ஏற்படுத்தும்.

மூன்றாவது அனைத்திலும் மிக முக்கியமானது. முஸ்லிம்கள் (ஆண்களும், பெண்களும்) ஜெருலசத்தின் முன்னறிவிப்பு சம்பந்தப்பட்ட குர்ஆனின் செய்திகளையும், வழிகாட்டுதல்களையும் படித்து, பிறருக் கும் எடுத்துக் கூற வேண்டும். அப்படிப்பட்ட குர்ஆனின் விளக்கங் களையும், வழிகாட்டுதல்களையும் இந்நூல் சுட்டிக்காட்டி எடுத்து வழங்குகிற பணிவான முயற்சியை மேற்கொள்கிறது.

## சியோனிஸத்தின் யூத தந்திரம்

இஸ்ரேலுக்குப் பதிலாக இஸ்ரேலைச் சுற்றியுள்ள அரபு முஸ்லிம்களைக் கட்டுப்படுத்தும், ஊழலில் கைதேர்ந்த ஓர் ஆதிக்க சக்தி மூலம் இஸ்ரேலின் அண்டை நாட்டு ராஜதந்திர சூழலைக் கட்டுப்படுத்த முயற்சிப்பதுதான் சியோனிஸ யூத தந்திரோபாயம். அந்த ஆதிக்க சக்தி தன்னை பலமாகவும், வளமாகவும், முதன்மை யாகவும் வைத்துக்கொள்ளும் பொருட்டு இஸ்ரேலுடன் நட்புறவைப் பேண நிர்பந்தப்படுத்தப்படுகிறது. முஸ்லிம்களை இஸ்ரேலுக்கு அடி பணிவதற்கோ, அல்லது யூதர்களுக்கு பாதிப்பில்லாத எதிர்ப்பை மட்டும் காட்டுவதற்கோ கொடுமை செய்ய வேண்டும் என்று யூதர்கள் அந்த ஆதிக்க சக்திக்கு அழுத்தம் கொடுக்கிறார்கள். பூமியில் இஸ்ரேல் தன் ஆதிக்கப் பிடியை இறுக்கி, அரபு முஸ்லிம் மக்கள் கொதித்தெழும்போது இந்த ஆதிக்கச் சக்தி நிர்பந்தத்திற்குள்ளாகிறது. அப்போது உயிர் பிழைப்பதற்காக போலியான இஸ்ரேல் எதிர்ப்புப் பதாகை ஏந்துகிறது. அந்த யூத-அரப் தந்திரம் இன்று ஒரு உச்சத்தை அடைந்திருக்கிறது.

ஆனால் அதில் தீமையும், சதியும்தான் இருக்கிறது. இபுராஹீம் நபியின் மார்க்கத்தின் தார்மீக அறத்தைக் கைவிட்டவர்களின் தந்திரமாகவே இருக்கிறது. நட்புறவை உருவாக்கியிருக்கிற அரபு இனக்குழுவை ஒரு நாள் கழற்றி விடுவதுதான் யூத தந்திரத்தின் எதார்த்தமாகும். உண்மையில் அந்த அரபு இனக்குழுவைக் கைவிடுகிற வேலை ஏற்கெனவே ஆரம்பித்து விட்டது. இஸ்ரேல் அரபு முஸ்லிம்களுடன் போர் செய்யத் தயாராகிக்கொண்டிருக்கிறது என்று எழுதுவதுகூட இஸ்ரேல் தேசத்தின் எல்லை விரிவடைந்து கொண்டே செல்கிறது என்பதாகவே அமையும். அப்போது இஸ்ரேல் வல்லரசாகி முழுவதையும் ஆட்சி செய்யும் (அதாவது அமெரிக்க வல்லரசை அகற்றி விட்டு).

அல்லாஹ்வையும், இறைநம்பிக்கையாளர்களையும் எதிர்க்கின்ற, யூதர்களின் அனைத்து சதித்திட்டங்களையும் முறியடிக்கும் வண்ணம் அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்.

وَمَكَرُوا وَمَكَرَ اللَّهُ وَاللَّهُ خَيْرُ الْمَاكِرِينَ ﴿٥٤﴾

அவர்கள் (யூதர்கள்) சதி செய்கிறார்கள். அல்லாஹ்வும் சதி செய்கிறான், அல்லாஹ் சதி செய்பவர்களில் மிகைத்தவன் .

**(அல்குர்ஆன். 3:54)**

இஸ்ரேல் ஆதரவாளரான யாசர் அரஃபாத்தையும் அவரது மதச் சார்பற்ற பாலஸ்தீன விடுதலை இயக்கத்தையும் அமைதி உடன்படிக் கையில் உறுப்பியம் பெறவைத்தது பைத்துல்முகத்தஸில் அவர்களின் தீய தந்திரம் அரங்கேறியதாகும். அந்தத் தந்திரம் கடவுளில்லா அமெரிக்காவின் நேச நாடுகளான எகிப்து, ஜோர்டான், துருக்கி ஆகிய நாடுகளில் வெற்றிகரமாகப் பலித்தது. ஆனால் பைத்துல் முகத்தஸிலும், சிரியாவிலும் எமனிலும் தந்திரம் பலிக்கவில்லை.

இந்நூலை வாசிப்பவர்கள் நபி (ஸல்) அவர்களின் கீழ்க்காணும் துஆவைச் சிந்தனை செய்யலாம்.

இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: யா அல்லாஹ்! எங்கள் ஷாம் தேசத்தின் மீதும் எமன் தேசத்தின் மீதும் அருள் செய் வாயாக! என்று நபி (ஸல்) பிரார்த்தனை செய்தார்கள். எங்கள் நஜ்து தேசம் (சவூதி ஆட்சியாளர்களின் பூர்வீகமாக இருக்கிற நஜ்து சவூதி அரேபியாவின் ஒரு பகுதி) என்று மக்கள் கேட்டனர். யா அல்லாஹ்!

எங்கள் ஷாம் (தேசத்தின்) மீதும், எமன் (தேசத்தின்) மீதும் அருள் செய்வாயாக! என்று பிரார்த்தனை செய்தார்கள். எங்கள் நஜ்தின் மீதும் என்று மக்கள் கூறினார்கள். அப்போது அங்கு பூகம்பங்களும், துன்பங்களும் ஏற்படும், மேலும் அங்கிருந்து (நஜ்து) ஷைத்தானின் தலையின் ஓரம் வெளிப்படும் என்று நபி (ஸல்) கூறினார்கள்.

(ஸஹீஹ் புகாரி)

இஸ்ரேல் தேசம் உருவாகி 50 ஆண்டுகள் ஆகிவிட்டன. ஆனால் அவர்களால் முடியாதது எதுவுமில்லை என்று நம்மை நம்பவைத்தது போல அது ஒரு சாதனை அல்ல. உண்மையில் கடவுளில்லா உலகை உருவாக்கும் யூத அமைப்பு மலையளவு பொய்களைக் கூறி ஏமாற்றி விட்டது. அந்தப் பொய்களில் ஒன்றுதான் மக்களில்லாத பூமி, பூமி இல்லாத மக்களுக்காக என்ற சொற்றொடர். (பைத்துல்முகத்தஸ்) மனிதர்கள் இல்லா பூமி என்றால் இப்பொழுது கற்களை வீசி தற்காப்புச் செய்து கொண்டிருப்பவர்கள் யார்? என்று நாம் கேட்கலாம்.

அரபிகள் மனிதர்களாக இல்லாமல் முன்னாள் இஸ்ரேல் பிரதமர் ஷமிர் கூறியது போல பூச்சிகளாக இருந்திருந்தால் 2000 ஆண்டுகளுக்கு மேலாக யூதர்களை அவர்களுக்கு மத்தியில் வாழ அனுமதித்திருக்க மாட்டார்கள். அரபிகள் 2000 ஆண்டுகளுக்கு மேலாக அரபு மண்ணில் அவர்களோடு வாழ்ந்த யூதர்களின் உயிர் களுக்கும் உடைமைகளுக்கும் உத்திரவாதம் தந்தார்கள். உலகின் மற்ற மக்களெல்லாம் யூதர்களை நுழைய விடாமல் கதவை அடைத்துக் கொண்ட போதும், அப்படியே நுழைய விட்டாலும் சேரிகளில் வெறுப்புடன் அனுமதித்த நேரத்தில் இபுராஹீம் நபியின் மார்க்கப் பற்று சிறிதளவாவது இருந்ததால்தான் அவர்களை அரபிகள் வாழ அனுமதித்தார்கள். அந்த சிறிதளவு சத்திய சிந்தனைதான் அவர் களுக்கு விருந்தோம்பலைக் கற்றுக்கொடுத்தது. இன்றுவரை அந்த விருந்தோம்பல் அரபிகளிடம் இருக்கிறது. அதே இபுராஹீம் நபியின் மார்க்கம் பூச்சிகள் என்று கருதுகிற அரபிகளுக்கு நன்றி செலுத்த யூதர்களுக்குக் கற்றுக்கொடுத்திருக்க வேண்டுமே!

யூத மதத்தில் யூதர்கள்தான் பைத்துல்முகத்தஸுக்கு உரிய வர்கள், நிரந்தரமானவர்கள், நிபந்தனை விதிக்கப்படாதவர்கள் என்று கூறப்பட்டிருப்பதாக (சியோனிஸம்) இஸ்ரேல் வளர்ச்சிக் கழகம் வாதிடுகிறது.

## அறிமுகம்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் அல்லாஹ்வால் அழிக்கப் பட்ட இஸ்ரேல் தேசத்தின் மீட்சி, யூத மதம் உண்மையானது என்று நிரூபிக்கிறது. உங்கள் காலடி எங்கெல்லாம் படுகிறதோ அது உங்க ளுடையது என்று தவ்ராத்தில் கூறப்படவில்லையா?

இஸ்ரேல் உதயமாகி 50 ஆண்டுகளாக விரிவடைந்து கொண்டே செல்கின்ற, கடுந்துயரை ஏற்படுத்துகின்ற ஒவ்வொரு நகர்வையும் உலகம் வியப்போடு பார்த்துக்கொண்டிருக்கிறது. இஸ்ரேலின் விரிவாக்கம் இன்னும் முடிந்தபாடில்லை. மேலோட்டமாக இஸ்ரேல் நெருக்கடியான நிலப்பரப்பில் அமைந்திருப்பதைப் போலத் தோன்றினாலும், உண்மை நிலை என்னவெனில் இந்நூல் பிரசுரமாகிக்கொண்டிருக்கும் இவ்வேளையில் (ஜெனீன் அகதி முகாமை அழித்து, அதிகமான அரபிகளைக் கொன்ற பின்) இஸ்ரேல் தனது எல்லைகளை தீவிரமாக விரிவாக்கம் செய்யும் ஒரு மகா யுத்தத்திற்குத் தயாராகிக் கொண்டிருக்கிறது. அதாவது எகிப்து நதி (சூயஸ் கால்வாயைக் கைப்பற்றுவது) முதல் யூஃப்ரடீஸ் நதி வரை. (வளைகுடா எண்ணெயைக் கைப்பற்றுவது, ஈரானைத் தவிர, ஜப்பானும், மற்ற உலக நாடுகளும் வளைகுடா எண்ணெயைக் கைப்பற்றுவதில் அடங்கும்) மிகுந்த கவனத்துடன் துல்லியமாகத் திட்டமிடப்பட்ட அந்த யுத்தம் உலகில் அமெரிக்காவை அகற்றிவிட்டு இஸ்ரேல் வல்லரசு என்ற பட்டத்தை சூட்டிக்கொள்ள வழிவகுக்கும். இஸ்ரேல் தேசத்தை மீட்டெடுத்ததில் யூதர்களின் வெற்றியும், இஸ்ரேல் எல்லைகளின் விரிவாக்கமும், பைத்துல்முகத்தஸில் யூதர்களின் ஆதிக்கமும் பைபிளின் கண்ணோட்டத்தில் யூதமதம் உண்மைதான் என்பதை நிரூபிக்கிறது.

இது ஈஸா நபி திரும்பி வராமல் எப்படி சாத்தியமானது என்பது தான் நம்முடைய கேள்வி? இது போலி ஈஸா (மஸீஹ் தஜ்ஜால்) மூலமாகத்தான் சாத்தியப்பட்டிருக்கிறது என்பதே அதற்கு விடையாகும். பைபிளிய இஸ்ரேலை மீட்டெடுத்த வெளிப்படையான வெற்றி, ஈஸா நபி (அலை) அவர்களும் முஹம்மது நபி (ஸல்) அவர்களும் ஏமாற்றக் கூடியவர்கள் என்ற யூதர்களின் வாதத்தையும் நிரூபிக்கக் கூடியதாக இருக்கிறது. ஆனால் இஸ்ரேல் தேசம் உரு வாக, யூத மதம், அழிவுற்ற, நவீன மேற்கத்திய, ஒரு புதிய வழியில் பயணம் செய்ய வேண்டியிருக்கிறது. கடவுளில்லா மேற்குலகம் தன்னை இணையில்லா (நீர், நிலம், ஆகாயம் என அனைத்தையும் கட்டுப்படுத்தும்) ஆதிக்க சக்தியாக உலக அரங்கில் நிறுவியுள்ளது.

யஃஜூஜ், மஃஜூஜுக்கு வழி திறக்கப்பட்டால் அவர்கள் ஒவ்வொரு மேட்டிலிருந்தும் (ஜலம் பாய்ந்தோடுவது போல) வழிந்து (உலகின் பல பாகங்களிலும்) பரவி விடுவார்கள்.

**(அல்குர்ஆன், 21:96)**

எல்லா வலிமையும் கொண்ட, கடவுளில்லா மேற்கின் திடமான உதவியின்றி யூத தேசம் இந்த ஐம்பது ஆண்டுகள் தாக்குப் பிடிப்பது என்பது இயலாத காரியம். உண்மையில், மேற்குல நாகரிகம் என்பது யஃஜூஜ், மஃஜூஜால் உருவாக்கப்பட்டு, தாங்கிப் பிடிக்கப்பட்டுக் கொண்டிருக்கிற ஒன்றாகும்.

இஸ்ரேல் தேசத்தை ஆதரிக்கிற யூதர்கள் பைபிளில் கூறப்பட்ட யூத தேசத்தை மீட்டெடுத்ததாகவே வாதிடுகிறார்கள். அப்பாவி பாலஸ்தீன கிருஸ்துவ-முஸ்லிம்களின் மீது அவிழ்த்துவிடப்படும் அடக்குமுறையையும், மிகப் பெரும் அநியாயத்தையும் வசதியாக புறந்தள்ளி விடுகிறார்கள். அவர்கள் செய்த குற்றம் பைத்துல்முகத்தஸில் வாழ நேர்ந்ததாகும். அந்த அடக்குமுறையும், அநியாயமும் இவ்வைம்பது ஆண்டுகளாக அதிகமாகிக் கொண்டே வந்திருக்கிறது. அந்த யூதர்களிடம் நம் கேள்வி இது தான்!

கடவுளில்லாத, அழிவுற்ற, அநியாயமான, இனவெறிகொண்ட, அடக்குமுறைக்கு துணை போவதுதான் யூத மதம் உண்மையானது என்பதற்கு ஆதாரமா? கடவுளில்லாத வாகனத்தில் ஏறி பயணித்துவிட்டு இபுராஹீம் நபியின் கடவுள் மீது நம்பிக்கை வைத்திருக்கிறோம் என்று யாராவது கூற முடியுமா?

பாலஸ்தீன மக்களை நாங்கள் அவர்கள் வீடுகளை விட்டும் விரட்டவில்லை, அவர்களேதான் சென்று விட்டார்கள் என்று யூதர்கள் கூறுகிறார்கள். சரி, அப்படியென்றால் ஏன் யூதர்கள் அவர்களின் வீடுகளை பாதுகாத்து விட்டு வைக்கவில்லை? அவர்கள் வீடுகளுக்கு திரும்ப வரும்படி ஏன் அழைக்கவில்லை? உண்மை நிலை என்னவெனில் 50 ஆண்டுகளாக பாலஸ்தீனர்கள் வீடு திரும்பும் உரிமையை பிடிவாதமாக யூதர்கள் மறுத்து விட்டார்கள். பைத்துல்முகத்தஸில் போரில்லாமல் இஸ்ரேலும், பாலஸ்தீன கிருஸ்துவ முஸ்லிம்களும் சமமான இடங்களைப் பெற்றுக்கொள்ள இன்னும் 50 ஆண்டுகாலம் ஆகலாம் என யூதர்கள் கூறுவதுதான் மிகவும் வியப்பிற்குரியது. அது குதிரைக்கொம்பாகும். மிக வேகமாக சென்று

கொண்டிருக்கும் வரலாற்றுப் பாதையில் இதற்கு எந்தத் தொடர்பும் இல்லை. இஸ்ரேலின் கொடிய அடக்குமுறை தினமும் தீவிரமாகிக் கொண்டே இருக்கிறது. உலகின் வல்லரசாகும்போது இஸ்ரேல் போலியான மகிழ்ச்சியின் உச்சிக்குச் செல்லும். இருப்பினும் யூத இஸ்ரேல் தேசத்தின் ஏமாற்றத்திற்கு ஒரு முடிவு ஆரம்பித்து விட்டதை இந்நூல் பறை சாற்றுகிறது! யூதர்கள் இப்பொழுது இருக்கும் ஆபத்தான நிலைக்கு சியோனிஸத்தைக் குற்றம் சாட்டக்கூடாது. சியோனிஸம் (இஸ்ரேல் வளர்ச்சிக்கழகம்) செய்ததெல்லாம் பைபிளில் செருகப்பட்ட ஒவ்வொரு தனிப்பொய்யையும் மலையளவு பொய்களாக அலங்கரித்துக் காட்டியது தான்.

## குர்ஆனில் ஜெரூசலம் என்று குறிப்பிடப்படவில்லை

லாஸ் ஏஞ்சல்ஸ் டைம்ஸில் ஜூலை 2000-இல் வெளியிடப்பட்ட டாக்டர் டேனியல் பைப் உடைய கட்டுரையில் இடம் பெற்ற ஜெரூசலம் என்பது முஸ்லிம்களைவிட யூதர்களுக்கே உரியது என்ற வாக்கியத்திற்கு பதில் சொல்வதற்காகவும் குர்ஆனில் ஜெரூசலம் எழுதப்பட்டது. ஜெரூசலம் என்று ஒரு தடவைகூட குறிப்பிடப் படாததால் ஜெரூசலத்திற்கு எந்த இஸ்லாமிய அந்தஸ்தும் இல்லை என கட்டுரையாளர் வாதிடுகிறார். டாக்டர் பைப் தன் கட்டுரையைப் பிரசுரித்ததிலிருந்து ஏராளமான தினசரி பத்தி எழுத்தாளர்களும் பைத்துல்முகத்தஸ் அரசியல் விமர்சகர்களும் அவரின் கருத்தைப் பொதுமக்களுக்குப் போட்டுக்காட்டிக் கொண்டே இருந்தார்கள். நம்மை பதில் எழுத வைத்த டாக்டர் பைப்பும், அவரது ஊடக நண்பர்களும் இந்நூலை எப்போதாவது வாசிப்பார்களேயானால் தங்கள் கருத்தை மாற்றிக்கொள்ளக் கூடும்.

உண்மையில் குர்ஆனுக்கும் இஸ்லாத்திற்கும் சவாலாக இருக்கின்ற இம்மாதிரி விமர்சனங்களுக்கு பதில் கூற முஸ்லிம்கள் கடமைப்பட்டுள்ளார்கள். பதில் குர்ஆனிலுள்ள சத்தியத்தின் பால் திரும்பக் கூடியதாக இருக்க வேண்டும். சத்தியம் அசத்தியத்தை எதிர் கொள்ளும் போது எப்போதும் அசத்தியம் தோற்றுப்போகும் என்று குர்ஆன் பறைசாற்றுகிறது. நிராகரிப்பாளர்களுக்கெதிரான போராட்டத்தில் குர்ஆனுடைய வழிகாட்டுதலைப் பின்பற்ற வேண்டும் என நம்பிக்கையாளர்கள் கட்டளையிடப்பட்டிருக்கிறார்கள்.

## குர்ஆனில் ஜெருசலம்

ஜெருசலம் பற்றியும் அதன் முன்னறிவிப்புப் பற்றியும் குர்ஆனும், ஹதீஸும் கூறியிருக்கின்றன என்று கூறி டாக்டர் டேனியல் பைப் போன்றவர்களை சமாதானப்படுத்துவது நமது நோக்கமல்ல. மாறாக குர்ஆனிலும் ஹதீஸிலும் உள்ள செய்திகளைக் கூறி விளக்கமும், வியாக்கியானமும் செய்வதுதான் நமது நோக்கமாகும். குர்ஆனில் ஜெருசலம் நூலை டாக்டர் டேனியல் பைப் ஏற்றுக்கொள்வது பற்றிய கவலையின்றி, இஸ்ரேல், இஸ்லாம் பற்றிய பிரச்சனைகளைப் புரிந்து கொள்வதற்கு இந்நூலில் கூறப்பட்ட விஷயங்கள் அடிப்படையாகும். அதுதான் இந்நூலின் முக்கியமான நோக்கமாகும்.

## ஜெருசலம் - இன்றைய உலகைப் புரிந்து கொள்ளும் வழி

ஜெருசலத்தில் வேகமாக அரங்கேறி வரும் பயங்கரமான நாடகங்களுக்கு பதில் சொல்ல வேண்டிய முஸ்லிம்களுக்கு இந்நூலின் கருத்துகள் எவ்வளவு அவசியமானவை என்பது இப்பொழுது தெளிவாகின்றன. லண்டன் ஆய்வு திட்டமிடல் மையத்தின் ஸ்தாபகர் டாக்டர் சலீம் சித்தீக்கி இந்நூல் ஆசிரியரை வரலாற்று நிகழ்வுகளைப் புரிந்து கொள்வதற்கு திறவுகோலாக இருக்கிற ஜெருசலத்தை விவரிப்பதற்கு துல்லியமான ஒரு நூல் எழுதும்படி 1974 ஆம் ஆண்டிலேயே வற்புறுத்தினார். அல்ஹம்துலில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ் வுக்கே) அந்தக் காரியம் 27 ஆண்டுகளுக்குப் பிறகு இப்போது நிறைவேறியுள்ளது. ஜெருசலத்தின் விஷயத்தில் நுழையாமல் யாரும் நவீன உலகைச் சரியாகப் புரிந்து கொள்ளமுடியாது என் பதை இந்நூலில் இடம் பெற்றுள்ள குர்ஆனியக் கண்ணோட்டம் தெளிவாக்குகிறது. யூத இஸ்ரேலிய தேசத்திற்கு இடமளித்து அதை ஆரத்தழுவி, அமைதி மேற்கொள்ளும் பணியை இஸ்லாம் முன்னின்று நடத்த வேண்டும் என நவீன மேற்குலகம் விரும்புகிறது. மேற்குலகின் தந்திர நோக்கத்தை முறியடிக்க திருக்குர்ஆனையும் நபி (ஸல்) அவர்களின் ஹதீஸையும் அடிப்படையாகக் கொண்ட பதிலை இந்நூல் முன்வைக்கிறது. நபி (ஸல்) அவர்களை உண்மையாகப் பின் பற்றுபவர்களுக்கும் இஸ்ரேல் தேசத்திற்குமிடையில் எதிர்காலத்தில் எப்போதும் அமைதி ஏற்படாது என்று இந்நூல் கூறுகிறது. உண்மையான முஹம்மது நபியின் தொண்டர்கள் எப்போதும் அடக்குமுறை இஸ்ரேல் மீது வெற்றிகொள்ளக் கூடியவர்களாகவும் இஸ்ரேலிய அடக்குமுறையிலிருந்து பைத்துல்முகத்தஸை விடுவிப்பவர்களாகவும் இருப்பார்கள். மறுபக்கம் இஸ்லாத்தை ஏமாற்றிக் கடவுளில்லா

## அறிமுகம்

இஸ்லாமிய எதிரிகளின் கூடாரத்தில் தஞ்சம் புகுந்த முஸ்லிம்கள் எப்போதும் இஸ்ரேல் தேசத்திற்கு இடமளிப்பதற்கும், யூத தேசத்திடம் ஆட்சியை ஒப்படைப்பதற்கும் வழி தேடிக்கொண்டிருப்பார்கள். கல்வி நிலையங்கள், குறிப்பாக பல்கலைக்கழகங்கள், உயர் கல்விக்கூடங்களில் இஸ்லாமிய மார்க்கம் போதிக்கப்பட்டு அதன் பலனை (எதிர்மறையாகவோ, நேர்மறையாகவோ) உணர்வதைவிட வேறு வழி எதுவும் கிடையாது. எப்பொழுது மாணவனுடைய மனம் இஸ்லாமியக் கல்வியின்பால் ஈர்க்கப்படுகிறதோ அப்போது திருக்குர்ஆன் உறுதியான அடித்தளமாகிவிடும். குர்ஆனில் அலசப்பட்ட கருத்துகளில் மிக முக்கியமானதும் இன்றைய இஸ்லாமிய கல்வி நிறுவனங்களில் போதிக்கப்பட வேண்டியதும் குர்ஆனில் ஜெரூசலம் என்ற பாடம்தான். இஸ்ரேல் தேசத்திற்கு இடமளிக்கும் வண்ணம் (ஈமானை) நம்பிக்கையைத் தளர்த்த நிர்பந்திக்கும் கடவுளில்லா உல கின் தாக்குதலுக்கு குர்ஆனில் ஜெரூசலம் என்ற பாடத்தில் பெற்ற விஷயத்தின் மூலம்தான் பதிலடி கொடுக்க முடியும். (இஸ்மாயீல் ராஜி ஃபாரூக்கியின் நூலிலிருந்து, பக்கம் 19) ஜெரூசலம் பற்றியும் அதன் முன்னறிவிப்பு சம்பந்தப்பட்ட குர்ஆனிய வழிகாட்டுதலை முஸ்லிம் அறிஞர்களுக்கு வழங்குகிற பணிவான உழைப்பை இந்நூல் மேற்கொள்கிறது. முஸ்லிம் ஆசிரியர்களும் கல்வி நிலையங்களும் ஜெரூசலம் விஷயத்தில் நடுநிலைப் போக்கைக் கடைபிடிக்க அனு மதிக்கக் கூடாது.

## குர்ஆனில் ஜெருசலம்நூலில் யூதர்கள், கிருஸ்துவர்கள்

இறுதியாக குர்ஆனில் ஜெருசலம் என்னும் விஷயம் முஸ்லிம்களுக்கு அவசியமானது எனும் நிலையில் குர்ஆனுடைய கருத்துகள் யூதர்களையும், கிருஸ்துவர்களையும் சென்றடைய நாம் விரும்பினோம். காலம் கடந்து இறுதிக் காலம் நெருங்கி வருவதால் இந்நூலில் குர்ஆனும் ஹதீஸும் சுட்டிக்காட்டுகின்ற விஷயத்திற்கு (யஃஜூஜ், மஃஜூஜ், தஜ்ஜால், ஈஸா நபி இறங்கி வருவது ஆகியவற்றுக்கு) பதில் சொல்வது யூத அறிஞர்களுக்கு மிகவும் கஷ்டமாகிக்கொண்டிருக்கிறது. குர்ஆன் உண்மையானது என் பதை நிரூபிக்கிற ஆதாரங்கள் அதிகமாகிக் கொண்டு வருகிறன.

இக்கருத்துகளை முஸ்லிம்கள் யூத கிருஸ்துவர்களுக்குக் கற்றுக் கொடுக்கக் கடமைப்பட்டுள்ளனர். இந்நூலில் அவ்வேலையை நாம் செய்திருக்கிறோம். ஷைகு சஃபர் அல்ஹவாலியின் சினத்தின் நாள்-ரஜபின் புரட்சி ஆரம்பம் மட்டும்தானா? என்னும் நூல் இந்நூலை முழுமைப் படுத்துகிறது. மேலும் குர்ஆன், பைபிளின் முன்னறிவிப்புகளின் சாதக பாதகங்களை வாசகர்கள் தாங்களாகவே ஆய்வு செய்யவும் வழிவகுக்கும்.

இந்நூல் இரு வித்தியாசமான யூதர்களை அடையாளம் காட்டுகிறது. ஒன்று, இபுராஹீம் நபியோடு தங்கள் வழித்தொடரை ஏற்படுத்திக்கொண்ட இஸ்ரேலிய யூதர்கள், செமிட்டியர்கள், அவர் களின் இன உறவு அரபிகளுடன் இணையும். மற்றது, நீலநிறலக் கண் களும் வெளிறிய தங்க நிற தலைமுடியும்கொண்ட ஐரோப்பியர்கள், ஒரு காலத்தில் யூத மதத்தில் சேர்ந்திருக்கிறார்கள். அவர்களுக்கு இபுராஹீம் நபியோடு எந்த வம்சாவளி தொடர்பும் கிடையாது. இந்நூலாசிரியரின் கருத்துப்படி (உண்மையை அல்லாஹ்தான் அறிவான்) யஃஜூஜ், மஃஜூஜ் உடைய வேர் இந்த ஐரோப்பிய யூதர் களின் கிளைகளில் எங்கேயோதான் இருக்க வேண்டும். யஃஜூஜ், மஃஜூஜ்கள் கிருஸ்துவ ஐரோப்பிய நாகரிகத்தைக் கடவுளில்லா நாகரிகமாக மாற்றினார்கள். யஃஜூஜ், மஃஜூஜ்கள்தான் சியோனிஸ த்தையும் இஸ்ரேல் தேசத்தையும் நிறுவினார்கள். இந்நூலின் முதல் பகுதியின் 10-ஆவது அத்தியாயம் இஸ்லாத்தில் யஃஜூஜ், மஃஜூஜ் பற்றிய விஷயத்தைச் சுருக்கமாக விளக்க முயல்கிறது. அடுத்து வரும் நம்முடைய சூரா அல்கஹ்ஃபும் நவீன காலமும் எனும் நூலில் இத்தலைப்பில் ஆழ்ந்த தெளிவான விளக்கங்களை வழங்க உள்ளோம். (இன்ஷா அல்லாஹ்)

இந்நூல், மேற்கத்தியர்களையும், கிருஸ்துவர்களையும், யூதர்களையும், ஒரு சில முஸ்லிம்களையும் மன ரீதியாக உலுக்கியிருக்கும் என்பதை மறுப்பதற்கில்லை. ஆனால் இப்படிப்பட்ட பாதிப்பை அடையச் செய்வதற்காக நாம் இந்நூலை எழுதவில்லை என்பதைத் தெளிவு படுத்துகிறோம். இன்றைய உலகில் அக எதார்த்தம் என்பது புறத் தோற்றத்தை விட முற்றிலும் மாறுபட்டிருக்கிறது, மக்கள் அந்தப் புறத்தோற்றத்தின் அடிப்படையில்தான் முடிவு எடுக்கிறார்கள். அகம், புறம் ஆகிய இரு பார்வைகளின் மூலம் உணர்பவர்களுக்கும், புறக்கண் எனும் ஒற்றைக் கண்ணால் பார்ப்பவர்களுக்கும் (ஏனெனில் அகக் குருடானதனால்) மலையளவு வித்தியாசம் இருக்கின்றது. குர்ஆனின் புரிதல்படி இன்றைய உலகத்தின் உள்ளமை என்பது, எதை வைத்து மக்கள் தீர்ப்புச் செய்கின்றார்களோ அந்த புறத்தோற்றத்தை விட்டும் முற்றிலும் வேறானது. அகம், புறம் என்ற இரு கண்களைக் கொண்டு காண்பவர்களுக்கும் புறக்கண் என்ற ஒற்றைக்கண் கொண்டு (ஏனெனில் அகக்குருடர்கள்) மட்டும் காண்பவர்களுக்கும் மலையளவு வித்தியாசம் உள்ளது. நபி (ஸல்) தஜ்ஜாலுக்கு ஒரு கண்தான் எனக் கூறியபோது அல்லாஹ் ஒரு கண் உடையவன் அல்ல என முன்னெச்சரிக்கையுடன் கூறினார்கள். மேலும் தஜ்ஜாலு டைய காலத்தில் வெளித்தோற்றமும் உள்ளமையும் ஒன்றுக்கொன்று முரண்பட்டதாக இருக்கும் எனவும் எச்சரித்தார்கள். நபி (ஸல்) அவர்களை உண்மையாக பின்பற்றுபவர்களைத் தவிர யாரும் அகப் பார்வையால் கண்டு இறுதி காலத்தின் எதார்த்தத்தைப் புரிந்து கொள்ள முடியாது.

## விளக்கமும், வியாக்கியானமும்

குர்ஆனுக்கு விளக்கம் நேரடியாகக் குர்ஆனில் சில இடங்களிலோ, ஹதீஸின் விளக்கங்களிலோ கிடைக்காதபோது நாமாகவே அவ்வசனங்களுக்கு விளக்கமளித்துள்ளோம். நமது தலைப்பிற்குக் குர்ஆன் விளக்கத்தைக் குறிப்பதற்காக நாம் இவ்வாறு செய்திருக்கிறோம். இப்படி நாம் தெளிவுரை வழங்கும்போது சிலர் அதை மறுக்கிறார்கள். அவர்களும் எந்த விளக்கத்தையும் கூறாமல் குர்ஆன் வசங்களின் மேலோட்டமான அர்த்தம் மட்டும் போதும் என்கிறார்கள். இன்னும் சிலர் தங்களுடைய விளக்கத்தைத் தவிர மற்றவற்றை மறுக்கிறார்கள். நம்முடைய விளக்கத்தை மறுப்பவர்கள்

பைத்துல் முகத்தஸுக்கு யூதர்கள் திரும்புவது பற்றி குர்ஆன் கூறும் வசனத்திற்கு விளக்கமளிக்க வேண்டும். இரண்டாவது, இதுபோல குர்ஆன் வசனங்களுக்கு நாம் விளக்கமளிக்க முயலும்போது புராதன குர்ஆன் விரிவுரையாளர்கள் செய்தது போலவே அல்லாஹ் மிக அறிந்தவன் எனும் சொற்றொடருடன்தான் எழுதுகிறோம்.

## ஜெருசலமும், குர்ஆன் உண்மை என்பதும்

இன்றைய உலகை விளங்குவதற்கு (இபுராஹீம் நபியின்) அல்லாஹ்வால் அருளப்பட்ட வசனங்களை நாடுவது நாகரிகமல்லாத தாகி விட்டது. என்றாலும் இஸ்ரேல்தேசம் உதயமானபோது இவ்வாறு செய்யப்பட்டது. ஐரோப்பிய யூதர்கள் தவ்ராத்தை மேற்கோள் காட்டி இஸ்ரேல் தேசத்தை மீட்டெடுப்பதற்கு பைத்துல்முகத்தஸை அடைகிற உரிமை தங்களுக்கு இறைவனால் வழங்கப்பட்டது என்று வாதிட்டார்கள். (முதலில் அந்த பூமி நபியாகவும், அரசராகவும் இருந்த தாவூத் (அலை) அவர்களால் நிர்மாணிக்கப்பட்டது. இஸ்ரேல் பூமிக்கு பைபிள்தான் வேதநூல் என முதல் இஸ்ரேலிய பிரதமர் டேவிட் பென்குரியன் வெளிப்படையாக அறிவித்தார்.

எனவே இஸ்ரேல் தேசம் நிறுவப்பட்டது சம்பந்தமாக குர்ஆனிலுள்ள வசனங்களை எடுத்துக்கூறுவது நமக்குக் கடமையாகிறது. இது யாருக்கு எவ்வளவு சிரமமானதாக இருந்தாலும் சரி, நம்முடைய அவ்வுரிமையை யாரும் தடுக்கக் கூடாது. சிலருக்கு நாம் (குர்ஆன் வசனங்களை) மேற்கோள் காட்டுவது முதல் தடவை கேள்விப்படுவதாக இருக்கலாம். வரலாறு தனது கடைசிக் கட்டத்தை வெளிப்படுத்துவதாலும், உலகத்தையும் ஜெருசலத்தையும் துல்லியமாக விளக்குகின்ற ஆற்றலை குர்ஆன் தொடர்ந்து வெளிப்படுத்துவதாலும் குர்ஆன் உண்மையானது என்பது நிரூபணமாகிறது. மற்றனைத்தையும் விட குர்ஆன் உண்மை யானது என்பதைத் தான் இந்நூல் முன்னிறுத்துகிறது. இதைப் பற்றிக் குர்ஆனே ஃபுஸ்ஸிலத் எனும் அத்தியாயத்தில் கீழ்வருமாறு கூறுகிறது.

سَنُرِيهِمْ آيَاتِنَا فِي الْآفَاقِ وَفِي أَنْفُسِهِمْ حَتَّىٰ يَتَبَيَّنَ لَهُمْ أَنَّهُ الْحَقُّ ۗ أَوَلَمْ يَكْفِ بِرَبِّكَ أَنَّهُ عَلَىٰ كُلِّ شَيْءٍ شَهِيدٌ ﴿٥٣﴾ أَلَا إِنَّهُمْ فِي مِرْيَةٍ مِنْ لِقَاءِ رَبِّهِمْ ۗ أَلَا إِنَّهُ بِكُلِّ شَيْءٍ مُحِيطٌ ﴿٥٤﴾

நிச்சயமாக (குர்ஆனாகிய) இது, உண்மையானது தான் என்று அவர்களுக்குத் தெளிவாகும் வரையில், நம்முடைய அத்தாட்சிகளை (உலகத்தின்) பல பாகங்களிலும், அவர்களுக்குள்ளாகவும் அதிசீக் கிரத்தில் நாம் அவர்களுக்குக் காண்பிப்போம். (நபியே!) உமது இறைவன் நிச்சயமாக யாவையும் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பது உமக்கு திருப்தியளிக்கவில்லையா?

நிச்சயமாக அவர்கள் தங்கள் இறைவனைச் சந்திப்பதைப் பற்றியும் சந்தேகத்தில் இருக்கின்றார்களென்பதை (நபியே, நீர்) அறிந்து கொள்ளும். நிச்சயமாக அவன் சகல விஷயங்களையும் (தன் ஞானத்தால்) சூழ்ந்து (அறிந்து) கொண்டுமிருக்கிறான் என்பதையும் அறிந்து கொள்ளும்.

**(அல் குர்ஆன்,41:53-54)**

முஸ்லிம்களுக்கும், கிருஸ்துவர்களுக்கும், யூதர்களுக்கும் புனித மாக விளங்குகிற ஜெரூசலம் நகரம் வரலாற்றின் கடைசியில் ஒரு முக்கிய அங்கம் வகிக்கிறது. இஸ்லாம், கிருஸ்துவம், யூதம் ஆகியவை இதை ஏற்றுக்கொள்கின்றன. வரலாற்றின் கடைசிக் காலத்தில்தான் நாம் வாழ்கிறோம் என்பதற்கு ஆன்மிக ஞானம் (அகம், புறம் ஆகிய இரு கண்களால் காண்பவர்களுக்கு) உள்ளவர்களின் பார்வையில் தென்படுகிற ஏராளமான அத்தாட்சிகள் இருக்கின்றன. இந்தக் கடைசிக் காலம் எது வரை செல்லும்? முடிவு எப்போது வரும்? அல்லாஹுசுப்ஹானஹுவத்தஆலாவைத் தவிர யாரும் அறிய மாட்டார்.

ஜெரூசலம் தனது எதிர்காலப் பயணத்தைத் தொடங்கிவிட்ட தால் இது பற்றிய குர்ஆனுடைய கருத்துகள் மீண்டும் மீண்டும் கூறப்படுவது முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது. இந்நூல் ஜெரூசலத் தின் பயணம் பற்றி விவரிக்கிறது. வரலாற்றின் கடைசிக் காலத்தில் ஜெரூசலத்தின் பாத்திரம் என்ன என்பதை முடிந்த அளவு ஆன்மீக ரீதியாக விளக்குவது அவசியமாகும். ஜெரூசலத்தின் நிலையை இப்படி விளக்கிக் கூறுவதன் மூலம்தான் கண்டறிய முடியும். நமது நோக்கம் பொதுவாசகர்களை நோக்கியே இருக்கிறது. குர்ஆனிலும் ஹதீஸிலும் ஜெரூசலம், பைத்துல்முகத்தஸ் பற்றிய கருத்துகளை பொதுவாசகன் தெரிந்து வைத்திருப்பது அவசியம். ஏனென்றால் ஒவ்வொரு சமயத்தாரும் ஜெரூசலம்தான் அவர்கள் உண்மையில் இருப்பதையும் மற்றவர்கள் தவற்றில் இருப்பதையும் நிர்ணயிக்கிறது என்று நம்புகிறார்கள்.

சுருங்கக் கூறின், ஜெருசலம்தான் மஸீஹ் (ஈஸா நபி) இறங்கி வருவதை உறுதிப்படுத்தும் என்று யூதர்கள் நம்புகிறார்கள். மஸீஹ் வந்தபின் யூதர்களின் பொற்காலத்தை மீட்டெடுப்பார், ஜெருசத்திலிருந்து உலகை ஆள்வார், இது யூதர்கள்தான் உண்மையானவர்கள், மற்றவர்கள் தவறில் இருக்கிறார்கள் என்பதை உணர்த்துவதாக உள்ளது. அதே போல கிருஸ்துவர்களும் ஈஸா நபி திரும்பி வந்து ஜெருசலத்திலிருந்து உலகை ஆள்வார், திரிஏகத்துவம், சிலுவையிலறைதல், புத்துயிர் பெறுதல் ஆகியவற்றை உண்மைப்படுத்தி மற்றவர்கள் தவறில் இருக்கிறார்கள் என்று உணர்த்துவார் என நம்புகிறார்கள். முஸ்லிம்களும் ஜெருசலத்தின் தலைவிதி இஸ்லாம் உண்மையானது என்று நிறுவி, தற்காலத்து கிருஸ்துவர்கள், யூதர்களின் கொள்கை தவறானது என நிரூபிக்கும் என்று நம்புகிறார்கள். இம்மூன்று கருத்தியல்களும் இபுராஹீம் நபியின் வழித்தோன்றல் நாங்கள்தான் என்று வாதிடுவதால் மூன்றுமே உண்மையாக இருக்க முடியாது.

இந்நூலின் குறிப்பிடப்பட்டுள்ள முஸ்லிம்களின் கண்ணோட்டம் என்னவெனில், ஈஸா நபி (அலை) ஒரு நாள் பூமியில் உயிருடன் திரும்பி வருவார்கள். ஜெருசலம் செல்வார்கள், உலகம் முழுவதையும் நீதமான ஆட்சியாளராக இருந்து ஆள்வார்கள். திருமணம் செய்து பிள்ளைகள் பெற்றெடுப்பார்கள், மரணிப்பார்கள், முஸ்லிம்கள் அவருக்குத் தொழுகை நடத்தி நபி (ஸல்) அடக்கம் செய்யப்பட்டிருக்கிற மதீனாவில் அவர்களுக்கருகில் அடக்கம் செய்யப்படுவார்கள். ஈஸா நபி (அலை) திரும்பி வந்ததும் சிலுவையை உடைப்பார்கள். அது (சிலுவையை வணங்கும்) கிருஸ்துவத்தின் முடிவாக இருக்கும். பிறகு பன்றியைக் கொல்வார்கள்.

அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்: எவன் கையில் என் உயிர் இருக்கிறதோ அவன் மீது ஆணையாக, மர்யமின் மகன் ஈஸா விரைவில் உங்களுக்கு மத்தியில் ஒரு நீதமான ஆட்சியாளராக இறங்கி வருவார். அவர் சிலுவையை உடைத்து, பன்றியைக் கொன்று ஜிஸ்யா (முஸ்லிம்கள் கட்டுப்பாட்டிலிருக்கும் யூதர்களும், கிருஸ்துவர்களும் செலுத்த வேண்டிய) வரியை ஒழிப்பார். மேலும் அப்போது ஏராளமான பணம் இருக்கும், தர்மத்தை வாங்க யாரும் இருக்க மாட்டார்கள். **(ஸஹீஹ் புகாரி)**

ஹதீஸின் கருத்துப் பின்னணியில் பன்றி என்பதற்கு அது மிருகம் என்று விளங்குவது பொருத்தமாக இருக்காது. அதற்குப் பகரமாக பன்றி என்ற வார்த்தைக்கு கடுஞ்சினம் என விளக்கம் கொள்ளலாம். ஈஸா நபி (அலை) திரும்பி வந்ததும் அவரால் கொல்லப்படுகின்ற பன்றிகள் யார்? யாரோடு ஈஸா நபி கோபமாக இருப்பார்கள்? அவரை சிலுவையில் அறைய முற்பட்டது யார்?

ஈஸா நபி (அலை) திரும்பி வரும் காலகட்டத்தை முஸ்லிம்கள் துல்லியமாக அறிந்து வைத்திருக்கிறார்கள். கலீலீ ஆறு நீர் குறைந்து கொண்டு வரும்போதும், அல்லது முற்றிலும் வற்றிவிடும்போதும் அது நிகழும்.

ஈஸா நபி இறங்கும் நேரத்தில் திமிஷ்கின் கிழக்குப் பக்க (கோபுரத்தின்) மினாரா மீது இளங்குங்கும நிறத்தில் இரு உடையில் இரு மலக்குமார்களின் இறக்கையில் கைகளை வைத்தவர்களாக இறங்கு வார்கள். அவர் தலையை தாழ்த்தும்போது வேர்வை முத்துகள் விழும். தலையை உயர்த்தும்போது முத்துப் போன்ற மணிகள் தூவப்படும். அவரின் உடல் வாசனையை நுகரும் (காஃபிர்கள்) இறை நிராகரிப்பாளர்கள் மரணிப்பார்கள். அவர் கண் எட்டும் தூரம் அளவு அவருடைய மூச்சு வியாபிக்கும். பிறகு தஜ்ஜாலைத் தேடுவார், லுத் வாசலில் அவனைப் பிடித்துக் கொல்வார். அல்லாஹ் பாதுகாத்த அந்தக் கூட்டத்தார் ஈஸா நபி முன் வருவார்கள், அவர் அவர்களின் முகங்களைத் துடைத்து சொர்க்கத்தில் அவர்களுடைய அந்தஸ்த்தை அவர்களுக்கு அறிவிப்பார். அல்லாஹ் கீழ்வரும் விஷயத்தை ஈஸா நபிக்குக் கூறுவான், என் அடியார்களில் அவர்களை எதிர்த்துப்போரிட முடியாத மக்களை வெளியாக்குவேன், இம்மக்களை பாதுகாப்பாக தூர்மலைக்கு அழைத்துச்செல்லுங்கள் என அறிவிப்பான். பிறகு அல்லாஹ் யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தை அனுப்புவான், அவர்கள் ஒவ்வொரு மேடுகளி லிருந்தும் இறங்குவார்கள். அவர்களில் முதல் பிரிவினர் திப்ரியஸைக் (கலீலீ கடல்) கடப்பார்கள், அதிலிருந்து அவர்கள் நீர் அருந்துவார்கள். அவர்களின் கடைசி பிரிவினர் கடந்து செல்லும்போது இங்கு ஒரு காலத்தில் தண்ணீர் இருந்தது என்று கூறுவார்கள் என நபி (ஸல்) கூறினார்கள்.

**(ஸஹீஹ் முஸ்லிம்)**

கலீலீ ஆறு (திப்ரீயஸ் ஏரி, கின்னரட் ஏரி என்றும் அழைக்கப் படுகிறது) வரலாற்றில் என்றுமில்லாத அளவு நீர் குறைந்துள்ளது.

ஏனென்றால் எவ்வளவு எடுக்க முடியுமோ அதை விட அதிகமான நீரை இஸ்ரேலின் ஐரோப்பிய யூத அரசாங்கம் எடுக்கிறது. பிறகு மிக சுலபம்! தண்ணீர் வற்றி குடிநீர் இல்லாமல் ஆகிவிட்டால் யூதர்கள் தங்களின் உச்சபட்ச தந்திரத்தைப் பயன்படுத்தி, பைத்துல்முகத் தஸுடைய ஆட்சியை யூதர்களிடம் ஒப்படைக்க அரபிகளை நிர்பந்திப்பார்கள். அப்படி ஒப்படைப்பது அல்லாஹுத்தஆலாவை விட்டுவிட்டு மஸீஹுத் தஜ்ஜாலை வழிபட்டதனால் ஏற்பட்ட விளைவாகும். இஸ்ரேல் அமைக்க இருக்கும் கடல் நீரை குடிநீராக்கும் திட்டத்திலிருந்து குடிநீரைப் பெறுவதற்காக இவ்வாறு ஒப்படைக்க அரபிகள் வேண்டப்படுவார்கள். அரபிகள் அந்நீரை வாங்க முடியாத அளவு ஏழைகளாக இருப்பார்கள்.

யூதர்களின் இறுதி அழிவுக்கு எண்ணப்படுகிற நாட்கள் என்பது கலீலீ ஆற்றில் நீர் மட்டத்தைக் கவனிப்பது ஆகும். அவர்கள் திட்டப்படி எந்தத் தருணத்திற்குக் காத்திருந்தார்களோ அந்த வெற்றியை அடைவார்கள். ஆனால் ஈஸா நபி (அலை) இறங்கி வந்து (அவர்மூலம்) அல்லாஹ் யூதர்களை அழிக்கும் தருணமும் அதுவாகத்தானிருக்கும். (கலீலீ ஏரியின் நீர் மட்ட அளவு சம்பந்தமான செய்திகளை பிற்சேர்க்கை-1 இல் காண்க)

## நூலின் கட்டமைப்பு

இந்நூல் குர்ஆனில் கூறப்பட்ட நகரம் என்பதற்கு ஜெரூசலம் தான் அர்த்தம் என்ற புதிரோடு தொடங்குகிறது. கடைசிக் காலத்தில் ஜெரூசலம் தான் முக்கிய அங்கம் வகிக்கும் என்று இஸ்லாம் கற்பிப்பதால் அந்தப் பெயர் தெளிவாகக் கூறப்படாமல் மறைமுகமாகப்பட்டிருக்கலாம்.

மூன்றாவது அத்தியாயம் பைத்துல்முகத்தஸ் பற்றிய குர்ஆன் வசனங்களை அறிமுகப்படுத்துகிறது.

நான்காவது அத்தியாயம் பைத்துல்முகத்தஸ் யூதர்களிடம் ஒப்படைக்கப்பட்டதைப் பறைசாற்றுகிறது. ஆனால் மீண்டும் அவர்கள் பைத்துல் முகத்தஸுக்குள் மறுக்கப்பட்ட, அல்லது விரட்டப்பட்ட நிலையையும் குர்ஆன் தெளிவாக்குகிறது. குறுகிய காலத்திற்குக் கிருஸ்துவர்கள் ஜெரூசலத்தையும், பைத்துல் முகத்தஸையும் கைப்பற்றிய நிகழ்வும் கிருஸ்துவர்கள் வரலாற்றில் உள்ளது.

ஐந்தாவது அத்தியாயத்தில் பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாகிறவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய தெய்வீக நிபந்தனைகள் கூறப்பட்டுள்ளன. யூதர்கள் அந்த நிபந்தனைகளை பல தடவை மீறியிருக்கிறார்கள். அவர்களின் (மஸீஹ்) பாதுகாப்பிற்காக வந்த ஈஸா நபியை எப்படி சிலுவையில் கொன்றார்கள் என்பதை எண்ணிப் பெருமைப்பட்டுக் கொண்டபோது அவர்களின் கடைசி அத்துமீறல் ஏற்பட்டது. பிறகு அவர்கள் பைத்துல்முகத்தஸை விட்டும் விரட்டப்பட்டார்கள். எப்பொழுதும் இதற்கு உரிமை கோரிக்கொண்டுவர தடை விதிக்கப்பட்டது. யஃஜூஜ், மஃஜூஜ் வெளியேறி வரும் சாத்தியம் உருவாகும் வரை இந்தத் தடை இருக்கும்.

ஆறாவது அத்தியாயத்தில் தெய்வீக ஒப்பந்தங்களை மீறிய காரணத்தால் யூதர்கள் பைத்துல்முகத்தஸிலிருந்து வெளியேற்றப்பட்டதன் குர்ஆன் வர்ணனைகள் விளக்கப்பட்டிருக்கின்றன. பைத்துல் முகத்தஸை அடைகின்ற நிபந்தனைகளை மீறிய காரணத்தால் யூதர்கள் மீண்டும் ஒரு முறை அல்லாஹ்வின் தண்டனைக்கு ஆளாவார்கள் என்பதை ஆறாவது அத்தியாயம் விளக்குகிறது.

மதச்சார்பற்ற இஸ்ரேல் தேசத்தின் பொருளாதாரமும், அரசியல் அமைப்பும் இபுராஹீம் நபியின் மார்க்கத்திற்கு முற்றிலும் விரோதமாக இருக்கின்ற உறுதியான ஆதாரங்களை இரண்டாம் பாகத்தின் முதல் இரண்டாவது அத்தியாயங்கள் கூறுகின்றன. இதனால்தான் பைத்துல்முகத்தஸைப் பெறுவதற்கான நிபந்தனைகளை மீறுகிறார்கள். வாசகர்கள் புரிந்து கொள்வதற்காக இவ்விரண்டு அத்தியாயங்களும் ஒரு தனிப்பகுதியாக ஆக்கப்பட்டிருக்கிறன. ஏழாவது அத்தியாயம் ஜெருசலத்திலிருந்து மக்காவுக்கு கிப்லா மாற்றப்பட்டதற்கான காரணங்களை விளக்குகிறது.

ஏழாவது அத்தியாயத்திற்குப்பின் முதல் பாகத்தின் அனைத்து அத்தியாயங்களும் ஜெரூசலத்தின் தலைவிதி குறித்த குர்ஆனியக் கண்ணோட்டங்களை விளக்குகின்றன. கடைசிக் காலம் வரும்போது யூதர்கள் அல்லாஹ்வின் அருளைப் பெறுவதிலிருந்து தூரமாகிப்போய் விடுவார்கள், அனைத்தையும்விட பெரிய தண்டனையைக் கொடுப்பதற்காக அல்லாஹ்வே அவர்களை பைத்துல்முகத்தஸுக்கு கொண்டுவருவான். யூதர்களின் இறுதி தண்டனை யார் மூலமெல்லாம் கடுமையாக்கப்படுமோ அவர்களையெல்லாம் அல்லாஹ் கொண்டுவருவான். தஜ்ஜால்,

யஃஜூஜ், மஃஜூஜ், அதிசயப் பிராணி தோன்றுவது ஆகியவைற்றை அல்லாஹ் தோன்றச்செய்வான்.

ஈஸா நபி இறங்கி வந்து தஜ்ஜாலைக் கொன்றுவிட்டு, யஃஜூஜ், மஃஜூஜ் அல்லாஹ்வால் அழிக்கப்படும்போது இறுதியான முடிவு காலம் ஏற்படும். அந்தக் காலகட்டத்தில் குராசானிலிருந்து ஒரு முஸ்லிம் படை (குராசானின் இதயமாக ஆப்கானிஸ்தானிருக்கிறது) அணிவகுக்கும். ஜெருசலத்தை அடையும்வரை யாராலும் அவர்களைத் தடுக்க முடியாது. அப்போது பைத்துல்முகத்தஸ் விடுவிக்கப்பட்டு உண்மையான இபுராஹீம் நபியின் மார்க்கம் பைத்துல்முகத்தஸில் ஆட்சி செய்யும் என நபி(ஸல்) கூறினார்கள்.

உண்மையான மஸீஹ் ஈஸா நபி(அலை) ஜெருசலத்திலிருந்து உலகம் முழுவதையும் ஆட்சி செய்வார்கள். யூதர்கள் எதை நம்புகிறார்களோ அது அப்படியே நடக்கும். ஆனால் அதில் அவர்கள் பங்கேற்க முடியாது. காரணம் அவர்கள் போலி மஸீஹ் தஜ்ஜாலால் ஏமாற்றப் பட்டவர்கள். அவனுடைய ஏமாற்று வலையில் சிக்கி அவனைப் பின்பற்றி விட்டார்கள்.

# ஜெரூசலத்தின் ரகசியம், குர்ஆனில் கூறப்பட்ட அந்த நகரம்

وَحَرَامٌ عَلَىٰ قَرْيَةٍ أَهْلَكْنَاهَا أَنَّهُمْ لَا يَرْجِعُونَ ﴿٩٥﴾ حَتَّىٰ إِذَا فُتِحَتْ يَأْجُوجُ وَمَأْجُوجُ
وَهُم مِّن كُلِّ حَدَبٍ يَنسِلُونَ ﴿٩٦﴾

எவ்வூரார்களை நாம் அழித்துவிட்டோமோ அவர்கள் (அவ்வூர் மக்கள்) நிச்சயமாக திரும்பவே மாட்டார்கள் என விதிக்கப்பட்டுள்ளது. யஃஜூஜ், மஃஜூஜுக்கு வழி திறக்கப்பட்டால் அவர்கள் ஒவ்வொரு மேட்டிலிருந்தும் (ஜலம் பாய்ந்தோடுவது போல) வழிந்து (உலகின் பல பாகங்களிலும்) பரவி விடுவார்கள்.

**(அல்குர்ஆன், 21:95-96)**

(யஃஜூஜ், மஃஜூஜ் வெளியேறிவிட்டால் உலகை தங்கள் கட்டுப்பாட்டில் வைத்து யஃஜூஜ், மஃஜூஜின் முறையில் ஆள்வார்கள்)

ஜெரூசலம் என்ற பெயர் குர்ஆனில் இடம் பெறவில்லை என்று கூறுவது புதிராகவும், வினோதமாகவும் இருக்கின்றது (அரபியில் குத்ஸ், பைத்துல்முகத்தஸ் என்பது அந்த நகரத்தைத்தான் குறிக்கின்றது) குர்ஆனில் கூறப்பட்டுள்ள நபிமார்களுக்கு பைத்துல்முகத்தஸுடன் தொடர்பு இருந்திருக்கின்றது. மக்கா, மதீனாவிலுள்ள அல்லாஹ்வின் இல்லங்களைத் தவிர்த்து பைத்துல்முகத்தஸிலும் அல்லாஹ்வின் தூதரால் கட்டப்பட்ட ஒரு அல்லாஹ்வின் இல்லமும் இருக்கின்றது. (மஸ்ஜிதுல்அக்ஸா) என குர்ஆனில் கூறப்பட்ட அல்லாஹ்வின் இல்லம் அங்கு இருப்பது மட்டுமல்ல, நபி (ஸல்) அவர்களின் இரவுப் பயணத்தின்போது மக்காவிலிருந்து ஜெரூசலத்திலுள்ள அந்த இறையில்லத்தின்பால் அழைத்துச் செல்லப்பட்டார்கள். அப்படி அழைத்துச் செல்லப்பட்டதன் ரகசியம், கடைசிக் காலத்தில் ஜெரூசலம் ஒரு முக்கிய பங்கு வகிக்கும் என்ற இஸ்லாமிய கருத்து அதில் அடங்கியிருப்பதாக இருக்கலாம். எனவே அந்நகரத்தின் பெயர், அதன் தலைவிதியோடு சேர்த்து ஒரு தெய்விக நோக்கத்திற்காக மறைக்கப்பட்டிருக்கலாம்.

அதற்குரிய தருணம் வரும்போதும், கடைசிக் காலத்தில் ஜெருசலம் தன் முக்கிய பங்கை ஆற்றுவதற்கு முன்னிலைப்படுத்தும்போதும் அதன் திரை விலகலாம்.

டாக்டர் இஸ்மாயீல் ஃபாருக்கி கூறுவது போல துரதிர்ஷ்டமாக இந்தத் தலைப்பில் எந்தப் பதிவும் எழுதப்படவில்லை. உண்மை நிலை என்னவெனில் சரியான நேரம் வந்து அதன் திரை விலகும்வரை யாரா லும் அதை எழுத முடியாது. இப்போது அதன் திரை விலகிவிட்டது என்ற அடிப்படையில்தான் இந்நூல் எழுதப்படுகிறது.

யூதர்கள் ஈஸா நபியை (மஸீஹ்) தங்களைக் காப்பாற்றுபவராக ஏற்க மறுத்து, அவரைத் தாங்கள் கொன்றதாகப் பெருமை கொள்ளும் போது (காண்க அல்குர்ஆன், 4:157) உண்மை மஸீஹ் வருவார் என்று எதிர்பார்க்க வேண்டியது இருக்கிறது (அவரோடு யூத மதத்தின் பொற்காலம் திரும்ப வரும்) அந்த பொற்காலம் திரும்புவதற்குக் கீழ்காணும் விஷயங்கள் தேவைப்படுவதாக நம்பினார்கள்.

- யூதர் அல்லாதவர்களின் கட்டுப்பாட்டிலிருந்து பைத்துல்முகத்தஸ் விடுவிக்கப்படுவது.
- விரட்டப்பட்ட இடத்திலிருந்து யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பி வந்து அதற்கு உரிமை கோருவது.
- இஸ்ரேல் தேசம் மீட்கப்படுவது.
- அந்த ஆலயம் (பள்ளிவாசல்) யூத வழிபாட்டிற்காக மீட்கப்படுவது.
- தாவூது, சுலைமான் (அலை) ஆகியோர் காலத்தில் இருந்தது போல உலகை ஆளுகின்ற தேசமாக இறுதியில் இஸ்ரேல் ஆவது.
- ஒரு யூத அரசர், அவர் மஸீஹ் ஆக இருந்து, அவர் தாவூது நபியின் அரியணையில் அமர்ந்து ஜெருசலத்திலிருந்து இஸ்ரேலின் ஆட்சியாளராக உலகை ஆள்வது.
- இறுதியில் அந்த ஆட்சி நிரந்தரமானதாக இருக்கும்.

இறுதி நாளின் பெரிய அடையாளங்களில் ஒன்றாக நபி (ஸல்) கூறினார்கள்: அல்லாஹ் யூதர்களுக்கெதிராக ஒருவனை அனுப்புவான், அவன் தன்னை மஸீஹ் என்று கூறிக்கொண்டு அவர்கள் நம்புகின்ற (யூத மதத்தின்) பொற்காலம் திரும்ப வந்து கொண்டிருப்பதாகக் கூறுவான். இப்படிப்பட்ட ஒரு விஷயத்தின் மூலம் அல்லாஹ் யூதர் களை ஏமாற்றுவான். ஆனால் அந்தப்போலி மஸீஹ் அவர்களை மிக துல்லியமாக ஏமாற்றி அல்லாஹ்வின் படைப்பினங்களில் யாரும்

அனுபவித்திராத இறைத் தண்டனையின்பால் அழைத்துச் செல்வான். அல்மஸீஹுத் தஜ்ஜால் (அல்லது தஜ்ஜால், கிருஸ்துவுக்கு எதிரானவர் என கிருஸ்துவர்கள் அறிந்திருக்கிற போலி மஸீஹ்) அல்லாஹ்வால் படைக்கப்படுவான், இறுதிக் காலத்தில் யூதர்களை ஏமாற்றி அவர்களை அழிவுக்குக் கொண்டுவரும் இந்தப் பணியை நிறைவேற்றுவதற்காக உலகில் வெளியாக்கப்படுவான்.

இப்பொழுது பின்வருபவற்றைக் கவனியுங்கள்.

- **1917 இல் பிரிட்டிஷ் ஜெனரல் அல்லன்பை ஜெருசலத்தை வெற்றி கொண்டபோது யூதர்கள் அல்லாதவர்களின் கட்டுப்பாட்டிலிருந்து (முஸ்லிம்களிடமிருந்து) பைத்துல்முகத்தஸ் விடுவிக்கப்பட்டது (யூதர்கள் எண்ணப்படி).**
- **இறைவனின் கட்டளைக்கிணங்க 2000 ஆண்டுகளாக வெளியேற்றப்பட்டிருந்த இஸ்ராயீல் யூதர்கள் பைத்துல்முகத்தஸை உரிமை கோரி திரும்ப வந்துவிட்டார்கள். இறுதி காலத்தில் இப்படி நடக்கும் என்று 1400 ஆண்டுகளுக்கு முன்பே குர்ஆன் கூறியது போலவே நடந்திருக்கிறது. அமெரிக்காவிலும் மற்ற இடங்களிலும் மீதமிருக்கும் கேகஸன் யூதர்கள் விரைவில் அங்கு வந்து சேர்வார்கள் போலத் தோன்றுகிறது.**
- **1948 இல் இஸ்ரேல் மீட்கப்பட்டது. புராதன இஸ்ராயீல் தேசம் இதுதான் என்று உரிமை கோருகிறது.**
- **அணு ஆயுதம், மற்றுமுள்ள விஷ ஆயுதங்களையும் நிறைய வைத்துக் கொண்டிருக்கும் இஸ்ரேல் அவற்றை பாலஸ்தீன (இன்திஃபாதா) அமைப்பின் மீது செயல்படுத்திப்பார்க்கத் திட்டமிட்டிருக்கிறது. (ஏரியல் ஷெரோனின் துணிச்சலான தூண்டுதலால்) மேலும் இஸ்ரேலைச் சுற்றி அமைந்திருக்கும் நிலப் பரப்புகளை ஆக்கிரமிப்பதற்காக, அமெரிக்கா, ஐரோப்பா, ஐ.நா. மற்றுமுள்ள உலக நாடுகளை எதிர்க்கின்ற ஒரு போரின் ஏற்பாட்டோடு நடத்தப்பட்ட செப்டம்பர் 11 அமெரிக்கத் தாக்குதல். அமெரிக்கா உட்பட உலக நாடுகளை எதிர்ப்பதன் வெற்றியுடனும், முன் அறியப்பட்ட அமெரிக்க டாலர், பொருளாதார வீழ்ச்சியுடனும், நடைபெற இருக்கும் அந்த இஸ்ரேல் போர், தவ்ராத்தில் வாக்களிக்கப்பட்ட (எகிப்து முதல் யூஃப்ரடீஸ் நதி வரை) நிலப் பரப்புகளை அடைய வழிவகுக்கும். ஐரோப்பிய இஸ்ரேல் இறுதியாக தன்னைச் சார்பிலிருந்து விடுவித்துக் கொள்ளும். முதலில் பிரிட்டனிடமிருந்து பிறகு அமெரிக்காவிடமிருந்து. இறுதியில்**

**ஐரோப்பிய யூதர்களின் தேசம் பிரிட்டனையும் அமெரிக்காவையும் மாற்றி உலகின் ராணுவ பொருளாதார வல்லரசாக உருவாகி உலகின் தலைவனாகத் தன்னைப் பிரகடனப்படுத்தி அந்த நாடுகள் அடைய நதையெல்லாம் அடைந்து உலகை ஆளும்.**

▶ முன்னறிவிக்கப்பட்டபடி மஸ்ஜிதுல் அக்ஸா இடிக்கப் பட்டு அந்த இடத்தில் யூதக்கோயில் நிர்மாணிக்கப்படும். மஸீஹ் இறைவனுக்காக ஒரு இல்லம் கட்டுவார் **(குரோனிக்கல், 17:11-15)** என்ற நாதன் எனும் இறைத்தூதரின் முன்னறிவிப்பு தற்பொழுது இருக்கும் பள்ளிவாசலை இடிப்பதற்கு யோசனை கூறுகிறது.

▶ சுலைமான் (அலை) காலத்தில் ஜெருசலத்திலிருந்து உலகை ஆண்ட பொற்காலம் திரும்ப வரும் என்பது சம்பந்தமான முன்னறிவிப்பை உண்மைப்படுத்தும் நிகழ்வுகள்தான் இவையனைத்தும் என்பது யூதர்களுக்கு பெருமிதத்தைக்கொடுக்கின்றது. இந்நூலின் கண்ணோட்டத்தில் மேலே கூறிய எந்த நிகழ்வும் தஜ்ஜால் (போலி மஸீஹ்) உடைய தலையீடு இல்லாமல் நடந்திருக்க முடியாது. எனவே மேலே கூறிய அனைத்தும் ஏமாற்று வேலையாகும். புனித இஸ்ரேல் தேசம் (முதலில் சுலைமான் நபியால் நிறுவப்பட்டது) உண்மையில் மீட்கப்படவில்லை. மாறாக அந்த உண்மையான இடத்தில் ஆள் மாறாட்டக்கார இஸ்ரேல்தான் இருக்கிறது. இப்பொழுது அந்தத் திரை விலகி விட்டது, மேலும் இறுதிக் காலகட்டம் வந்துவிட்டது, இனி யூதர்களுக்கு திரும்பும் இடமில்லை என்பதும் இந்நூலாசிரிய ருக்குத் தெளிவாகி விட்டது. அதனால்தான் இந்தக் காலத்தில் இந்நூல் எழுதுவது சாத்தியப்பட்டிருக்கிறதுபோலும். மேலே கூறிய அனைத்தையும் குர்ஆன் விளக்குகின்றது. ஆனால் அந்த விளக்கம் உடனடியாக பிரித்தறியக்கூடியதாக இல்லை. இவற்றில் பல விஷ யங்கள் இப்றாஹீம் நபியின் மார்க்கமும், இஸ்ரேல் தேசமும் என்ற நமது நூலில் விளக்கப்பட்டிருக்கின்றன.

திருக்குர்ஆன் ஜெருசலம் என்று பெயர் குறிப்பிடாமல் நகரம் என்று அடிக்கடி குறிப்பிடுகிறது. இறுதிக்கால கட்டத்தில் ஜெருசலம் முக்கியப் பங்காற்றப் போகிறது என்பதை சூசகமாக சுட்டிக்காட்டவே மூடலாகச் சொல்லப்பட்டதாகத் தோன்றுகிறது. உதாரணமாக, மூஸா நபி (அலை) அல்லாஹ்வின் அழைப்பின் பேரில் சினாய் மலைக்குச் சென்றிருந்தபோது இஸ்ராயீல் யூதர்கள் தங்கக் காளை மாட்டை வணங்கிய தருணத்தை அல்லாஹ் குறிப்பிடுகிறான்.

அவ்வாறு அல்லாஹ் அல்லாதவர்களை வணங்குவது ஷிர்க், அது அல்லாஹ்வின் தண்டனைக்கு உரியது என குர்ஆன் எச்சரிக்கிறது.

(பின்னர் இறைவன் மூஸாவை நோக்கிக்கூறினான்:)

إِنَّ الَّذِينَ اتَّخَذُوا الْعِجْلَ سَيَنَالُهُمْ غَضَبٌ مِنْ رَبِّهِمْ وَذِلَّةٌ فِي الْحَيَاةِ الدُّنْيَا وَكَذَٰلِكَ نَجْزِي الْمُفْتَرِينَ ﴿١٥٢﴾ وَالَّذِينَ عَمِلُوا السَّيِّئَاتِ ثُمَّ تَابُوا مِنْ بَعْدِهَا وَآمَنُوا إِنَّ رَبَّكَ مِنْ بَعْدِهَا لَغَفُورٌ رَحِيمٌ ﴿١٥٣﴾

எவர்கள் காளைக்கன்றை (த்தெய்வமாக) எடுத்துக்கொண்டார்களோ அவர்களை, நிச்சயமாக அவர்களுடைய இறைவனின் கோபமும் இழிவும் இவ்வுலக வாழ்க்கையிலேயே அதிசீக்கிரத்தில் வந்தடையும். பொய்யைக் கற்பனை செய்வோருக்கு, இவ்வாறே நாம் கூலி கொடுப்போம்.

(எனினும், இத்தகைய) தீமைகள் செய்து கொண்டிருந்தவர்களிலும் எவர்கள், அதன்பின் பச்சாத்தாபப்பட்டு, அதிலிருந்து விலகி, (உண்மை யாகவே) விசுவாசிக்கின்றார்களோ (அவர்களுடைய பாவத்தை) அதற்குப் பின்னர், நிச்சயமாக உம் இறைவன் மன்னித்துக் கிருபை செய்வோனாக இருக்கிறான்

**(அல்குர்ஆன்,7:152-153)**

யூதர்கள் சினாய் மலையிலிருந்த சூழ்நிலையில் பைத்துல் முகத்தஸில் நுழைய அனுமதிக்கப்படுவதற்கு முன் குர்ஆன் அந்நிகழ்ச்சியைத் தொடர்ச்சியாக விவரிக்கிறது.

وَقَطَّعْنَاهُمُ اثْنَتَيْ عَشْرَةَ أَسْبَاطًا أُمَمًا ۚ وَأَوْحَيْنَا إِلَىٰ مُوسَىٰ إِذِ اسْتَسْقَاهُ قَوْمُهُ أَنِ اضْرِبْ بِعَصَاكَ الْحَجَرَ ۖ فَانْبَجَسَتْ مِنْهُ اثْنَتَا عَشْرَةَ عَيْنًا ۖ قَدْ عَلِمَ كُلُّ أُنَاسٍ مَشْرَبَهُمْ ۚ وَظَلَّلْنَا عَلَيْهِمُ الْغَمَامَ وَأَنْزَلْنَا عَلَيْهِمُ الْمَنَّ وَالسَّلْوَىٰ ۖ كُلُوا مِنْ طَيِّبَاتِ مَا رَزَقْنَاكُمْ ۚ وَمَا ظَلَمُونَا وَلَٰكِنْ كَانُوا أَنْفُسَهُمْ يَظْلِمُونَ ﴿١٦٠﴾

மூஸாவுடைய மக்களைப் பன்னிரண்டு பிரிவுகளாக பிரித்தோம். மூஸாவிடம் அவருடைய மக்கள் குடிதண்ணீர் கேட்டபோது, நாம் (அவரை நோக்கி) உம்முடைய (கைத்) தடியைக்கொண்டு இக்கல்லை அடிப்பீராக! என்று அவருக்கு வஹீ அறிவித்தோம். (அவ்வாறு அவர் அடிக்கவே) அதிலிருந்து பன்னிரண்டு ஊற்றுக்கள் பீறிட்டோடின. (பன்னிரு கூட்டத்தாரில்) ஒவ்வொரு கூட்டத்தாரும் (அவற்றில்)

தாங்கள் அருந்தும் துறையை (க்குறிப்பாக) அறிந்துகொண்டனர். மேலும், அவர்கள் மீது மேகங்கள் நிழலிடும்படிச் செய்தோம். அவர்களுக்காக 'மன்னு சல்வா'வையும் இறக்கி வைத்து, உங்களுக்குக் கொடுக்கும் இந்த நல்ல ஆகாரங்களை (அன்றாடம்) புசித்து வாருங்கள். (அதிலொன்றையும் நாளைக்கென்று சேகரித்து வைக்காதீர்கள் என்றும் கூறினோம். அவ்வாறிருந்தும் அவர்கள் நமக்கு மாறு செய்தனர். இதனால்) அவர்கள் நமக்கொன்றும் தீங்கிழைத்து விடவில்லை. எனினும் அவர்கள் தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொண்டனர்

**(அல்குர்ஆன்,7:160)**

அதன்பிறகுதான் குர்ஆன் ஜெருசலம் பற்றிக் கூறும்போது நகரம் என்று நுட்பமாகக் கூறியிருக்கிறது.

وَإِذْ قِيلَ لَهُمُ اسْكُنُوا هَٰذِهِ الْقَرْيَةَ وَكُلُوا مِنْهَا حَيْثُ شِئْتُمْ وَقُولُوا حِطَّةٌ وَادْخُلُوا الْبَابَ سُجَّدًا نَّغْفِرْ لَكُمْ خَطِيئَاتِكُمْ ۚ سَنَزِيدُ الْمُحْسِنِينَ ﴿١٦١﴾

(மேலும் அவர்களை நோக்கி,) நீங்கள் இந்நகரில் வசித்திருங்கள். இதில் நீங்கள் விரும்பிய இடத்திலெல்லாம் (விரும்பிய பொருட்களைப்) புசித்துக்கொள்ளுங்கள். மேலும் ஹித்ததுன் (-எங்கள் பாவச்சுமை நீங்குக!) என்று கூறிக்கொண்டே அதன் வாயிலில் தலை குனிந்தவர்களாக நுழையுங்கள். நாம் உங்களுடைய குற்றங்களை மன்னித்து விடுவோம். நன்மை செய்வோருக்குப் பின்னும் அதிகமாகவே (நாம் நற்கூலி) கொடுப் போம் என்று அவர்களுக்குக் கூறப்பட்டது.

**(அல்குர்ஆன்,7:161)**

ஜெருசலத்தின் வருந்தத்தக்க துக்ககரமான நிகழ்ச்சி பற்றிய குறிப்பின்போதும் மற்றுமொருமுறை குர்ஆன் நகரம் எனக் குறிப்பிடுகின்றது.

وَحَرَامٌ عَلَىٰ قَرْيَةٍ أَهْلَكْنَاهَا أَنَّهُمْ لَا يَرْجِعُونَ ﴿٩٥﴾ حَتَّىٰ إِذَا فُتِحَتْ يَأْجُوجُ وَمَأْجُوجُ وَهُم مِّن كُلِّ حَدَبٍ يَنسِلُونَ ﴿٩٦﴾

எந்நகரங்களை நாம் அழித்துவிட்டோமோ அவர்கள் (அவ்வூர் மக்கள்) நிச்சயமாகத் திரும்பவே மாட்டார்கள் என்று விதிக்கப்பட்டுள்ளது. யஃஜூஜ், மஃஜூஜுக்கு வழி திறக்கப்பட்டால், அவர்கள் ஒவ்வொரு மேட்டிலிருந்தும் (ஜலம் பாய்ந்தோடுவது போல) வழிந்து (உலகின் பல பாகங்களிலும்) பரவி விடுவார்கள்.

**(அல்குர்ஆன், 21:95-96)**

அவர்கள் மேடுகளிலிருந்து இறங்கி ஒவ்வொரு திசையிலும் பரவிச் செல்லும்போது, உண்மையில் அவர்கள் உலகைத் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவந்து யஃஜூஜ், மஃஜூஜ் உடைய முறையில் உலகை ஆள்பவர்களாக ஆகிறார்கள். வசனத்தில் குறிப் பிடப்பட்ட நகரம் எது என்று தீர்மானமாகக் கண்டறிய யஜூஜ், மஃஜூஜ் பற்றி குர்ஆனிலும், நபிமொழிகளிலும் உள்ள அனைத்து தகவல்களையும் நாம் ஆய்வு செய்தோம். யஃஜூஜ், மஃஜூஜ் உடன் தொடர்புள்ள ஒரே ஒரு நகரமாக ஜெரூசலத்தைத்தான் நாம் கண்டறிந்தோம். (காண்க அத்தியாயம்-10) எனவே குர்ஆனில் குறிப்பிடப்பட்டுள்ள **(21:95)** அந்த நகரம் என்பது ஜெரூசலம்தான் என்ற முடிவுக்கு வந்தோம்.

ஜெரூசலம்தான் அந்த நகரம் என்று நாம் கண்டறிந்த பிறகு குர்ஆனில் அந்த நகரத்தின் பெயர் சொல்லப்படாமல் போடப்பட்ட திரை, யஃஜூஜ், மஃஜூஜ் இறுதியில் பூமியில் வெளியாகி ஒவ் வொரு திசையிலும் பரவிச் செல்லும்போது விலகும் என்பது தெளிவாகிவிட்டது. இஸ்ராயீல் யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பியிருப்பது, யஃஜூஜ், மஃஜூஜ் வெளியாகி ஒவ்வொரு மேடுகளிலிருந்தும் இறங்கி பூமியில் எல்லாத் திசையிலும் பரவி உலகின் ஆட்சியைத் தங்கள் கட்டுப்பாட்டில் கொண்டுவந்துவிட்டார் கள். என்பதை உறுதிப்படுத்துகிறது. இன்று உலகில் நடத்தப்பட்டுக் கொண்டிருக்கிற ஆட்சி முறை யஃஜூஜ், மஃஜூஜ் முறை ஆட்சி யாகும். உண்மையில் யூதர்கள் பைத்துல்முகத்தஸிற்குத் திரும்புவதை சாத்தியப்படுத்தியது யஃஜூஜ், மஃஜூஜ்கள் தான்.

யூதர்களின் பொற்காலத்தை அவர்களுக்குத் திரும்ப வழங் கிக் கொண்டிருப்பதாக அவர்களை சமாதானப்படுத்தும் மாபெரும் தஜ்ஜாலின் திட்டத்தை முழுமையாக நாம் இப்பொழுது எதிர் பார்க்கலாம். ஐரோப்பிய நாகரிகத்தை கிருஸ்துவிற்குப் பிறகு கடவுளில்லாத நாகரிகமாக உருமாற்றி நினைத்ததை அடைவதற்கான ஆற்றலை அதற்கு வழங்குவதற்காக (துல்கர்னைப் போல) பிரிட்டன் தீவிலிருந்து தஜ்ஜால் என்றைக்கு தீடீரென வெளிப்பட்டு வந்தானோ அன்றே மாபெரும் சதித் திட்டம் தொடங்கி விட்டதாகத் தோன்றுகிறது. அந்த மாபெரும் திட்டம் தான் சியோனிஸ அமைப்பை உருவாக்கியது. சியோனிஸம் பதிலுக்கு இஸ்ரேல் தேசத்தை உருவாக்கியது. இறுதியாக பைத்துல்முகத்தஸைச் சுற்றிலும் அமைந்திருக்கிற நிலப்பகுதிகள் மீது யூத ஆதிக்கத்தை ஏற்படுத்திக் கொடுக்கும் போலத்தெரிகிறது.

பிறகு அடுத்த நடவடிக்கையாக தஜ்ஜால் யூதர்களிடம் தன்னை உண்மையான மஸீஹ் (காப்பாற்ற வந்தவர்) ஆக ஏற்றுக்கொள்ளக் கூறுவான். அந்த நிலப்பரப்பில் மாபெரும் திட்டத்தின் மூளையாக இருப்பது பொருளாதாரத்தின் மீதும் தண்ணீர் மீதும் ஆதிக்கம் செலுத்துவதாகும். நபி (ஸல்) தஜ்ஜாலுக்கும் ரிபா (வட்டி) வுக்கும் இடையிலும், யஃஜூஜ், மஃஜூஜூக்கும் தண்ணீருக்கும் இடையிலும், உள்ள தொடர்புகளை விளக்கியிருக்கிறார்கள்.

இஸ்ராயீல் யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பவந்து விட்டார்கள். அந்தத் திரும்புதல் நவீன மேற்கத்திய நாகரிகம் இன்றி சாத்தியப்பட்டிருக்க முடியாது. (அதில் பிரிட்டன் குறிப்பிடத்தக்க அங்கம் வகித்திருக்கிறது) பிரிட்டன் தீவிலிருந்து திடீரென குதித்து வந்த தஜ்ஜாலால் மட்டும் இது நடந்து விடவில்லை, மாறாக ஐரோப்பிய நாகரிக நிலப்பகுதியில் அமைந்திருக்கும் யஃஜூஜ், மஃஜூஜ்களினாலும் தான்.

## ஜெரூசலத்திலிருந்து பைத்துல்முகத்தஸுக்கு

குர்ஆனில் அல்லாஹ் ஜெரூசலம் என்னும் பெயரைத் தெளிவாகக் குறிப்படாமல் சில இடங்களில் அதற்கு நிகராக பைத்துல் முகத்தஸ்-புனித பூமி என்று விளங்கக் கூடிய வார்த்தையை பயன்படுத்தி யிருக்கிறான். உதாரணத்திற்கு, யூதர்கள் பைத்துல்முகத்தஸில் இரு முறை குழப்பம் ஏற்படுத்துவார்கள் என்று கூறும் குர்ஆன் அங்கு அந்தப் பூமியில் என்று குர்ஆன் கூறுகிறது.

وَقَضَيْنَا إِلَىٰ بَنِي إِسْرَائِيلَ فِي الْكِتَابِ لَتُفْسِدُنَّ فِي الْأَرْضِ مَرَّتَيْنِ وَلَتَعْلُنَّ عُلُوًّا كَبِيرًا ﴿٤﴾

இஸ்ராயீலின் சந்ததிகளாகிய உங்களைப் பற்றி, (அல்லாஹ் கூறும்போது) நிச்சயமாக நீங்கள் இரண்டு தடவை அந்தப் பூமியில் விஷமம் செய்வீர்கள் என்றும் நிச்சயமாக நீங்கள் பெரும் அகம்பாவம் கொண்டு அக்கிரமம் செய்வீர்கள் என்றும் (உங்களுக்களித்த) வேதத் தில் நாம் வரைந்துள்ளோம்.

**(அல்குர்ஆன், 17:4)**

மேலும் பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாவதற்கான இறை நிபந்தனைகளைப் பற்றிக் கூறுகின்றபோதும் குர்ஆன் அந்தப் பூமி என மூடலாகத்தான் கூறுகிறது. பைத்துல்முகத்தஸ் எனத் தெளி வாகக் கூறவில்லை.

وَلَقَدْ كَتَبْنَا فِي الزَّبُورِ مِنْ بَعْدِ الذِّكْرِ أَنَّ الْأَرْضَ يَرِثُهَا عِبَادِيَ الصَّالِحُونَ ﴿١٠٥﴾

நிச்சயமாக நாம் ஜபூர் என்னும் வேதத்தில் நல்லுபதேசங்களுக்குப் பின்னர் எழுதியிருக்கிறோம்; நிச்சயமாக அந்தப் பூமியை என்னுடைய அடியார்களில், நல்ல நடத்தையுடையவர்கள்தாம் அனந்தரங் கொள்வார்கள் (வாரிசாவார்கள்) என்று.

**(அல்குர்ஆன்,21:105)**

உலக அழிவுநாள் நெருங்கும்போது அல்லாஹ் ஒரு அதிசய கால்நடையை வெளிப்படுத்துவான் என்று கூறும் குர்ஆன் அங்கும் அந்தப் பூமி என்று குறிப்பிடுகிறது.

وَإِذَا وَقَعَ الْقَوْلُ عَلَيْهِمْ أَخْرَجْنَا لَهُمْ دَابَّةً مِنَ الْأَرْضِ تُكَلِّمُهُمْ أَنَّ النَّاسَ كَانُوا بِآيَاتِنَا لَا يُوقِنُونَ ﴿٨٢﴾

(இறுதி நாளைப் பற்றிய) வாக்கு அவர்களை நெருங்கிய சமயத்தில், அவர்களுக்காகப் அந்த பூமியிலிருந்து ஒரு கால்நடையை நாம் வெளிப்படுத்துவோம். அது, நிச்சயமாக (எந்தெந்த) மனிதர்கள், நம்முடைய வசனங்களை விசுவாசங்கொள்ளவில்லை என்பதை அவர்களுக்குச் சொல்லிக்காட்டும்.

**(அல்குர்ஆன்,27:82)**

அந்தப் பூமியில் வெளியாக்கப்படும் கால்நடை என்பது யஃஜூஜ், மஃஜூஜ், தஜ்ஜால் ஆகியவை போல இறுதி நாளின் முக்கிய அடையாளங்களில் ஒன்றாகும். இங்குக் குறிப்பிடப்பட்டுள்ள அந்தப்பூமி என்பது பைத்துல்முகததஸைத் தவிர வேறொன்றுமில்லை. இந்த விஷயங்களை அல்லாஹ் எந்த மக்களிடம் கூறினான் என்பது இதற்கு முந்தைய வசனத்தில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

إِنَّ هَٰذَا الْقُرْآنَ يَقُصُّ عَلَىٰ بَنِي إِسْرَائِيلَ أَكْثَرَ الَّذِي هُمْ فِيهِ يَخْتَلِفُونَ

நிச்சயமாக இந்தக் குர்ஆன் இஸ்ராயீலின் சந்ததிகள் எவ்விஷயங்களில் வேறுபட்டு(த் தர்க்கித்து)க் கொண்டிருக்கிறார்களோ அவற்றில் பெரும்பாலானவற்றை, அவர்களுக்கு விவரித்துக் கூறுகிறது.

**(அல்குர்ஆன், 27:76)**

இவ்வாறு அல்லாஹ் யூதர்களுக்குத் தண்டனை கொடுக்க ஆரம்பிக்கும்போது பைத்துல்முகத்தஸில் ஒரு கால்நடையைக் கொண்டு

வருகிறான். அந்தக் கால்நடை என்பது நவீன யூத இஸ்ரேல் தேசத்தைத் தவிர வேறொன்றும் உடனடியாக நம் சிந்தனைக்குத் தோன்றவில்லை.

அத்தியாயம் 3

# குர்ஆனில் ஜெரூசலத்தின் வரலாற்றின் தொடக்கம்

**ஜெரூசலமும், நபிமார்களும்:**

وَنَجَّيْنَاهُ وَلُوطًا إِلَى الْأَرْضِ الَّتِي بَارَكْنَا فِيهَا لِلْعَالَمِينَ ﴿٧١﴾

நாம் அவரையும் (இபுராஹீமையும், அவருடைய சகோதரர் மகன்) லூத்தையும் காப்பாற்றி, அகில மக்கள் அனைவருக்கும் மிகப்பெரும் பாக்கியம் நிறைந்த பைத்துல்முகத்தஸ் என்னும்) ஊரளவில் கொண்டு வந்து சேர்த்தோம்.

**(அல்குர்ஆன், 21:71)**

## இபுராஹீம் நபி (அலை)

ஜெரூசலம் மற்றும் பைத்துல்முகத்தஸின் வரலாறு (உண்மையான வரலாறு, புனைக்கதை அல்ல) அல்லாஹ்வின் தூதர் இபுறாஹீம் நபி (அலை) அவர்களிலிருந்து தொடங்குகிறது. அவருடைய மக்களின் (இன்றைய இராக், அன்றைய மெசபடோமியாவிலுள்ள உர் இனம்) வழிபாட்டுத் தலத்திலுள்ள சிலைகளை உடைத்தார். சிலை வணக்கத்தின் போலித் தன்மையை மக்களுக்கு உணர வைப்பதற்காக நின்ற நிலையிலிருந்த ஒரு பெரிய சிலையை உடைக்காமல் விட்டு விட்டார்.

**(அல்குர்ஆன், 21:57-63)**

ஒரு வேளை இபுராஹீம் நபி திரும்பி வந்து இதுபோன்ற செயலில் ஈடுபட்டால், மதச்சார்பற்ற அரசாங்கங்களாலும், அவர்களால் உருவாக்கப்பட்ட இஸ்லாமிய அறிஞர்களாலும் தீவிரவாதம் என்று குற்றஞ்சாட்டப்படும். அவருக்கு அடைக்கலம் கொடுக்கும் நாட்டின்

மீது ஐ.நா.சபை பொருளாதாரத் தடை விதிக்கும். முஹம்மது நபி (ஸல்) அவர்கள் திரும்பிவந்து கஃபாவின் சிலைகளை உடைத்தாலும் நவீன மதச்சார்பற்ற அரசாங்கங்களும், அவர்களால் உருவாக்கப் பட்ட மார்க்க அறிஞர்களும் எந்த வேறுபாடுமின்றி அதேபோல பிரச்சாரம்தான் செய்வார்கள்.

உர் சமுதாயத்தினர், சிலைகள் உடைக்கப்பட்டதற்கும், அவர் களின் நம்பிக்கை கேலிக்குரியதாக ஆக்கப்பட்டதற்கும் ஆவேசப் பட்டார்கள். நெருப்புக் குண்டம் தயாரித்து அதில் இபுராஹீம் நபி (அலை) அவர்களை போட்டுத் தண்டித்தார்கள். அல்லாஹ் குளிர்ந்து அவரைத் தீங்கில்லாமல் காப்பாற்றும்படி நெருப்புக்குக் கட்டளையிட்டான்.

**(அல்குர்ஆன், 21:68-69)**

அதற்குப் பின் தான், நாம் இப்றாஹீமையும், லூத்தையும் பாக்கியம் பெற்ற பூமிக்குக் காப்பாற்றிக் கொண்டு வந்தோம் என்று அல்லாஹ் கூறுகிறான். அந்தப் பூமி பைத்துல்முகத்தஸ் ஆகும்.

முதன்முதலில் குர்ஆனில் பாக்கியம் நிறைந்த பூமி என்று அறிமுகப்படுத்தப்பட்டது இந்த வசனத்தின் மூலம்தான். (21:71) இதன் முக்கியத்துவம் என்ன? ஏன் மதிநுட்பம் நிறைந்த அல்லாஹ் பூமியில் ஒரு நிலப்பகுதியைத் தேர்ந்தெடுத்து புனிதமும் பாக்கியமும் நிறைந்த தாக்க வேண்டும்? இபுராஹீம் நபிக்கும் லூத் நபிக்கும் நாடு துறந்து செல்ல இந்த பூமியை ஏன் சுட்டிக்காட்டினான்? இவ்வனைத்து வினாக்களுக்கும் ஒரே பதில்தான் இருக்க முடியும். எல்லா மனிதர்களையும்விட மதிநுட்பம் வாய்ந்த அல்லாஹ், இபுராஹீம் நபியைத் தன் நண்பராக (கலீல்) ஆக்கிக்கொண்டான்

**(அல்குர்ஆன், 4:125).**

கடுமையான சோதனைகள் மூலம் அவரைச் சோதித்தான், அவர் அதில் வெற்றியும் பெற்றார். பிறகு அல்லாஹ் அவரை அனைத்து மனிதர்களுக்குமான மார்க்கத் தலைவராக ஆக்கினான்

**(அல்குர்ஆன், 2:124).**

இதிலிருந்து உலகில் உண்மை என்பது ஒன்றாகத்தான் இருக்க முடியும், அது இபுராஹீம் நபிக்குக் காட்டப்பட்ட மார்க்க மாகத்தான் இருக்க முடியும் என்றாகிறது. மற்றவையெல்லாம் போலி என்பதும் தெளிவாகிவிடும். இதை எந்த பாதிரியும் மறுக்க முடியாது!

இருப்பினும் இதை நாம் உறுதியாகக் கூறும்போது சில பாதிரிகள் நாம் இன்னும் மூடநம்பிக்கையில் இருப்பதாகக் கூறுகின்றனர்.

அல்லாஹ் ஒரு நிலப்பரப்பைத் தேந்தெடுத்து அதைப் புனிதப்படுத்தி அதை நோக்கி நாடுதுறந்துசெல்ல இபுராஹீம் நபிக்குக் கட்டளையிடுகிறான் என்றால், அதில் முக்கியத்துவம் இருக்கிறது என்று அர்த்தம், அந்நிலம் உண்மையை உரைத்துப் பார்க்கிற உரை கல்லாக செயலாற்ற வேண்டும் என்பது இறைநோக்கமாக இருக்கலாம். இபுராஹீம் நபியின் மார்க்கம்தான் அந்தப் புனித பூமியில் நிலைத்திருக்க முடியும், மற்றவை வெளியேற்றப்படும். வேறு வார்த்தைகளில் சொல்வதாக இருந்தால், அந்நிலத்தில் பொய்யைத் தகர்த்து உண்மை நிதர்சனமாக வெற்றிபெறும். அந்நிலத்தில் உண்மை வெற்றி பெறாமல் வரலாறு நிறைவடையாது. பக்தி, இறையச்சம், நேர்மை, அல்லாஹ்விடம் சரணாகதி அடைதல் ஆகியவையையே நாம் உண்மை என்று கூறுகிறோம். இப்றாஹீம் நபியின் மார்க்கமும் அதுதான். கிருஸ்துவம், யூதம், இஸ்லாம் ஆகிய மூன்றும் உண்மையாக இருக்க முடியுமா? ஜெரூசலம் ஏற்கெனவே அந்த வினாவுக்கு விடையளித்துக் கொண்டிருக்கிறது. உண்மை எது என நிரூபிப்பதுதான் ஜெரூசலத்தின் தலைவிதி. மேலும் இந்நூலில் முக்கியமாகச் சுட்டிக்காட்டப்படும் விஷயமும் அதுதான்.

இபுராஹீம் நபியும்,லூத் நபியும் பைத்துல்முகத்தஸுக்கு நாடு துறந்துசென்று அங்கு வசிக்குமாறு அல்லாஹ் கட்டளையிட்டதால் வேறு உத்தரவு வரும்வரை அவர்களும், அவர்களின் சந்ததியினரும் அந்த பூமியில்தான் வசிக்க வேண்டும் என்ற நிலையில் அது அவர்களின் பூமியாகிறது.

எந்த நிபந்தனையுமின்றியா பைத்துல்முகத்தஸில் வசிக்க அழைக்கப்பட்டார்கள்? என்ற கேள்வி கட்டாயம் எழுப்பப்பட வேண்டும். அவர்களின் சந்ததிகள், இபுராஹீம் நபியின் மார்க்கத்தை கைவிட்டு, நாத்திகர்களாகவும், விபச்சாரிகளாகவும், அடக்கு முறையாளர்களாகவும் மாறிவிட்ட பிறகும் அந்த அழைப்பு காலாவதியாகாமல் இருக்குமா? யூதர்கள் பைத்துல்முகத்தஸில் மதச்சார்பற்ற இஸ்ரேல் தேசத்தை நிறுவி அல்லாஹ்வுக்கிருக்கிற மகா ஆற்றல் தனக்கிருப்பதாகப் பறைசாற்றிய பிறகும் அந்த அழைப்பு காலாவதியாகாமல் இருக்குமா? அந்த தேசம் அல்லாஹ்வால் (தடுக்கப்பட்டு) ஹராம் ஆக்கியிருப்பவற்றை (அனுமதிக்கப்பட்ட) ஹலால் ஆக அறிவித்த

பிறகும் அவ்வழைப்பு இருக்குமா? இபுராஹீம் நபியின் அல்லாஹ் வட்டிக்கு வாங்குவதையும், கொடுப்பதையும் தடுத்திருக்கிறான் என்பதை வாசகர்கள் கவனிக்க வேண்டும். யூதர்கள் அல்லாதவரிடம் வட்டி வாங்குவதை அனுமதிக்கும் வகையில் யூதர்கள் தவ்ராத்தை மாற்றிவிட்டார்கள். பைத்துல்முகத்தஸில் இன்று வட்டி மட்டுமல்ல, தடுக்கப்பட்ட பல விஷயங்கள் (ஹலால்) அனுமதிக்கப்பட்டிருக்கின்றன.

இரண்டாவது மிக முக்கியமான கேள்வி, அல்லாஹுத்தஆலா பைத்துல்முகத்தஸை அனைத்து மனிதர்களுக்கும் பாக்கியமுள்ளதாக ஆக்கியிருக்கிறான் என்றால் இபுராஹீம் நபியின் மார்க்கத்தைப் பின்பற்றுகிறவர்களுக்கு அதில் நுழையும் உரிமை எப்படி இல்லாமல் போகும்? இது சர்வதேச அறிக்கை அல்லவா? பைத்துல்முகத்தஸுக்கு யூதர்கள் தான் சிறப்புத்தகுதிவாய்ந்தவர்கள் என்ற நிலை எப்போது வந்தது?

இந்த முக்கியமான வினாக்களுக்கு இந்நூலில் நாம் பதிலளிக்கும் அதே வேளையில், கீழ்வரும் குர்ஆன் வசனத்தின் மூலம் அல்லாஹ்வுக்கும் இபுறாஹீம் நபிக்கும் நடந்த உரையாடலை வாசகர்கள் கவனித்தால் நாம் சொல்ல வருவதைப் புரிந்துகொள்ள மிக உதவியாக இருக்கும்.

وَإِذِ ابْتَلَىٰ إِبْرَاهِيمَ رَبُّهُ بِكَلِمَاتٍ فَأَتَمَّهُنَّ قَالَ إِنِّي جَاعِلُكَ لِلنَّاسِ إِمَامًا قَالَ وَمِنْ
ذُرِّيَّتِي قَالَ لَا يَنَالُ عَهْدِي الظَّالِمِينَ ﴿١٢٤﴾

இபுராஹீமை அவருடைய இறைவன்(பெரும் சோதனையான) பல கட்டளைகளையிட்டுச் சோதித்த சமயத்தில் அவர், அவை யாவையும் பரிபூரணமாகவே நிறைவேற்றினார். (ஆதலால் இறைவன்) நிச்சயமாக நான் உம்மை மனிதர்களுக்கு (நேர்வழி காட்டக்கூடிய) தலைவராக ஆக்குகிறேன் எனக்கூறினான். அதற்கு (இபுராஹீம்) என்னுடைய சந்ததிகளையுமா (தலைவராக ஆக்குவாய்) எனக் கேட்டார். (அதற்கு உம் சந்ததியிலுள்ள) அநியாயக்காரரை என்னுடைய (இந்த) வாக்குறுதி சாராது எனக்கூறினான். **(2:124)**

குர்ஆன்'ளுல்மு' அநியாயம் என்று இனம் காட்டியவைகளில் ஒரு மக்களை அவர்கள் வீடுகளை விட்டும், அவர்கள் வாழ்ந்து கொண்டிருந்த நிலத்தை விட்டும் வெளியேற்றுவதும் அடங்கும்.

இப்படி அவர்கள் செய்யப்பட்டது அவர்கள் அல்லாஹ்வின் மீது கொண்டிருந்த (ஈமான்) நம்பிக்கையைத் தவிர வேறெந்த காரணத்திற்காகவும் அல்ல.

أُذِنَ لِلَّذِينَ يُقَاتَلُونَ بِأَنَّهُمْ ظُلِمُوا ۚ وَإِنَّ اللَّهَ عَلَىٰ نَصْرِهِمْ لَقَدِيرٌ ﴿٣٩﴾ الَّذِينَ أُخْرِجُوا مِنْ دِيَارِهِمْ بِغَيْرِ حَقٍّ إِلَّا أَنْ يَقُولُوا رَبُّنَا اللَّهُ

(நிராகரிப்போரால்) அநியாயத்திற்குள்ளானவர்களுக்கு (அவர்களை எதிர்த்து) யுத்தம் செய்ய அனுமதியளிக்கப்பட்டு விட்டது. நிச்சயமாக அல்லாஹ், இவர்களுக்கு உதவி செய்யப் பேராற்றல் உடையோனாக இருக்கின்றான்.

இவர்கள் (எத்தகையோரென்றால்) நியாயமின்றித் தங்கள் வீடுகளிலிருந்து (விரோதிகளால்) துரத்தப்பட்டார்கள். எங்களுடைய இறைவன் அல்லாஹ் ஒருவன்தான் என்று கூறியதுதான் இவர்கள் செய்த குற்றம்!

**(அல்குர்ஆன், 22:39-40)**

யூத இஸ்ரேல் அரசாங்கம் இப்படியான நூதன முறையில்தான் உருவாக்கப்பட்டது.

அல்லாஹ்வின் வார்த்தையை மாற்றி அல்லாஹ்வுக்கு எதிரான பொய்களைக் கூறியதை அநியாயம் என்று கூறி குர்ஆன் அதைக் கண்டித்திருக்கிறது.

وَمَنْ أَظْلَمُ مِمَّنِ افْتَرَىٰ عَلَى اللَّهِ كَذِبًا أَوْ كَذَّبَ بِآيَاتِهِ ۗ إِنَّهُ لَا يُفْلِحُ الظَّالِمُونَ ﴿٢١﴾

அல்லாஹ்வைப் பற்றிக் கற்பனையாகப் பொய் கூறியவனை விடவோ, அல்லது அவனுடைய வசனங்களைப் பொய்யாக்கியவனை விடவோ அநியாயக்காரன் யார்? நிச்சயமாக இந்த அநியாயக்காரர்கள் சித்தி பெறமாட்டார்கள்.

**(அல்குர்ஆன், 6:21)**

தவ்ராத்தில் செய்யப்பட்ட பல மாற்றங்களை இபுராஹீம் நபியின் மார்க்கமும், இஸ்ரேல் தேசமும் எனும் நமது நூல் நேரடியாக எடுத்துக் கூறுகிறது.

## மூஸா நபி(அலை).

ஐநூறு ஆண்டுகளுக்குப் பிறகு மூஸா நபி(அலை) இஸ்ரவேலர்களிடம் பைத்துல்முகத்தஸைக் கைப்பற்றப் போரிட வருமாறு

அழைத்தபோது பைத்துல்முகத்தஸ் பற்றிய குறிப்பு குர்ஆனில் இரண்டாவது தடவையாக இடம்பெறுகிறது. தற்பொழுதுதான் மூஸா நபி யூதர்களை அடிமைத்தளையிலிருந்து விடுவித்தார். கடல் பிளந்து அவர்களுக்கு வழிவிட்டு எதிரிகளை மூழ்கடித்த அதிசயமும் நடந்தேறியிருந்தது. பிறகு சினாய் மலையிலிருந்து பைத்துல் முகத்தஸை விடுவிக்கிற போராட்டமும் தொடங்கப்பட்டது.

يَا قَوْمِ ادْخُلُوا الْأَرْضَ الْمُقَدَّسَةَ الَّتِي كَتَبَ اللَّهُ لَكُمْ وَلَا تَرْتَدُّوا عَلَىٰ أَدْبَارِكُمْ فَتَنْقَلِبُوا
خَاسِرِينَ ﴿٢١﴾

(தவிர) அவர் என் சமூகத்தாரே! அல்லாஹ் உங்களுக்கென விதித்த பரிசுத்தமான பூமியில் (இருக்கும் உங்கள் எதிரியுடன் யுத்தம் புரிந்து, அதில்) நுழையுங்கள் (அவர்களுக்கு) நீங்கள் புறங்காட்டித் திரும்பாதீர்கள். (புறங்காட்டினால்) நீங்கள் நஷ்டமடைந்தவர்களாகவே திரும்புவீர்கள். (என்று கூறினார்)

(அல்குர்ஆன், 5:21)

அகில மக்கள் அனைவருக்கும் பாக்கியம் நிறைந்த பூமி என்று முன்னர் எடுத்துக்காட்டிய **(21:71)** குர்ஆன் வசனத்தில் கூறப்பட்ட கருத்தை இந்த வசனம் உறுதிப்படுத்துகிறது. உண்மையில், இஸ்ரவேலர்கள் என்பவர்கள் மூஸா நபியின் வழிகாட்டுதலின் கீழ் இபுராஹீம் நபியின் மார்க்கத்தைப் பின்பற்றுபவர்கள். பைத்துல்முகத்தஸில் வாழ உரிமையளிக்கப்பட்டிருக்கிறார்கள். அது அவர்கள் பூமியாக இருந்தது!

மூஸா நபி மரணித்துச் சில காலம் கழித்து இஸ்ரவேலர்கள் பைத்துல்முகத்தஸில் நுழையும் ஆற்றலைப் பெற்றார்கள். அந்நிலப் பகுதியிலும், அதைச்சுற்றிலும் வாழ்ந்த எதிரி இனங்கள் தொடர்ந்து அவர்களுக்குத் தொல்லை கொடுத்துக்கொண்டே இருந்தன. குர்ஆன் இதையும் குறிப்பிட்டுவிட்டு பைத்துல்முகத்தஸின் ஆதிக்கத்தைப் பெற்றுத்தரக் கூடிய போருக்கு தளபதியாக இருக்கிற ஒரு அரசன் வேண்டுமே! என அவர்கள் வெளிப்படுத்திய ஆசையையும் குர்ஆன் குறிப்பிட்டுகிறது.

أَلَمْ تَرَ إِلَى الَّذِينَ خَرَجُوا مِن دِيَارِهِمْ وَهُمْ أُلُوفٌ حَذَرَ الْمَوْتِ فَقَالَ لَهُمُ اللَّهُ مُوتُوا ثُمَّ
أَحْيَاهُمْ إِنَّ اللَّهَ لَذُو فَضْلٍ عَلَى النَّاسِ وَلَٰكِنَّ أَكْثَرَ النَّاسِ لَا يَشْكُرُونَ ﴿٢٤٣﴾
وَقَاتِلُوا فِي سَبِيلِ اللَّهِ وَاعْلَمُوا أَنَّ اللَّهَ سَمِيعٌ عَلِيمٌ ﴿٢٤٤﴾

## குர்ஆனில் ஜெருசலத்தின் வரலாற்றின் தொடக்கம்

مَنْ ذَا الَّذِي يُقْرِضُ اللَّهَ قَرْضًا حَسَنًا فَيُضَاعِفَهُ لَهُ أَضْعَافًا كَثِيرَةً ۚ وَاللَّهُ يَقْبِضُ وَيَبْسُطُ وَإِلَيْهِ تُرْجَعُونَ ﴿٢٤٥﴾

أَلَمْ تَرَ إِلَى الْمَلَإِ مِنْ بَنِي إِسْرَائِيلَ مِنْ بَعْدِ مُوسَىٰ إِذْ قَالُوا لِنَبِيٍّ لَهُمُ ابْعَثْ لَنَا مَلِكًا نُقَاتِلْ فِي سَبِيلِ اللَّهِ ۖ قَالَ هَلْ عَسَيْتُمْ إِنْ كُتِبَ عَلَيْكُمُ الْقِتَالُ أَلَّا تُقَاتِلُوا ۖ قَالُوا وَمَا لَنَا أَلَّا نُقَاتِلَ فِي سَبِيلِ اللَّهِ وَقَدْ أُخْرِجْنَا مِنْ دِيَارِنَا وَأَبْنَائِنَا ۖ فَلَمَّا كُتِبَ عَلَيْهِمُ الْقِتَالُ تَوَلَّوْا إِلَّا قَلِيلًا مِنْهُمْ ۗ وَاللَّهُ عَلِيمٌ بِالظَّالِمِينَ ﴿٢٤٦﴾

(நபியே!) மரணத்திற்குப் பயந்து தங்கள் வீடுகளைவிட்டு ஆயிரக் கணக்கில் வெளியேறியவர்களை நீர் கவனிக்கவில்லையா? அல்லாஹ் அவர்களை நோக்கி நீங்கள் இறந்து விடுங்கள் எனக்கூறி, (இறக்கச் செய்து) பின்னர் அவர்களை உயிர்பித்தான். நிச்சயமாக அல்லாஹ் மனிதர்கள் மீது கருணையுள்ளவனாக இருக்கிறான். எனினும், மனிதர்களில் பெரும்பாலோர் நன்றி செலுத்துவதில்லை.

(கஷ்டத்திலிருப்பவர்களுக்கு) அழகிய கடனை அல்லாஹ்வுக் காகக் கடன் கொடுப்பவர் யார்? அதை அவன் அவருக்கு அநேக மடங்கு அதிகரிக்கும்படிச் செய்வான். அல்லாஹ் (பொருளைச் சிலருக்குச்) சுருக்கியும் பிடிப்பான்; (சிலருக்குப்) பெருக்கியும் கொடுப்பான். அன்றி, அவனிடமே நீங்கள் மீண்டும் கொண்டுவரப்படுவீர்கள்.

(நபியே!) மூஸாவுக்குப்பின், இஸ்ராயீலின் சந்ததிகளில் இருந்த தலைவர்களை நீர் கவனிக்கவில்லையா? அவர்கள், அல்லாஹ்வுடைய பாதையில் நாங்கள் யுத்தம் புரிய எங்களுக்கு (தலைமை வகிக்க) ஓர் அரசனை அனுப்பிவையும் என்று தங்கள் நபியிடம் கூறியபோது, அவர், யுத்தம் செய்வது உங்கள் மீது விதிக்கப்பட்டால், நீங்கள் யுத்தம் செய்யாமல் (விலகி) இருந்து விடுவீர்களா? என்று கேட்டார். (அதற்கு) அவர்கள், எங்கள் மக்களையும் எங்கள் வீடுகளையும் விட்டு நாங்கள் வெளியேற்றப்பட்டிருக்க, (எங்களை வெளியேற்றிய) அவர்களுடன், அல்லாஹ்வுடைய பாதையில் நாங்கள் யுத்தம் செய்யா திருக்க எங்களுக்கென்ன (தடை)? என்று கூறினார்கள். ஆனால், யுத்தம் செய்யும்படி கட்டளையிட்டபொழுதோ, அவர்களில் சிலரைத் தவிர (மற்றவர்கள், யுத்தம் செய்யாது) பின்தங்கிவிட்டார்கள். (இத்தகைய) அநியாயக்காரர்களை அல்லாஹ் நன்கறிவான்.

**(அல்குர்ஆன், 2:243-246)**

அவர்களிடம் பேசிய நபி சாமுவேல், அவருக்கு அவர்கள் கூறிய பதில்.

قَالُوا وَمَا لَنَا أَلَّا نُقَاتِلَ فِي سَبِيلِ اللَّهِ وَقَدْ أُخْرِجْنَا مِنْ دِيَارِنَا وَأَبْنَائِنَا

(அதற்கு) அவர்கள், எங்கள் மக்களையும் எங்கள் வீடுகளையும் விட்டு நாங்கள் வெளியேற்றப்பட்டிருக்க, (எங்களை வெளியேற்றிய) அவர்களுடன், அல்லாஹ்வுடைய பாதையில் நாங்கள் யுத்தம் செய்யாதிருக்க எங்களுக்கென்ன(தடை)? என்று கூறினார்கள்.

(அல்குர்ஆன், 2:246)

ஒரு மக்கள் வாழ்ந்த நிலத்தை விட்டும், அவர்களின் வீடுகளை விட்டும் வெளியேற்றிய அடக்குமுறையாளர்களுக்கெதிராக போர் செய்வது கடமை என்பது, அவர்கள் வாயால் கூறிய பதிலே உறுதிப்படுத்துகிறது. இது எல்லா நிலப்பரப்புகளுக்கும் பொருந்தும் எனும்போது பைத்துல்முகத்தஸுக்கு மிக அதிமாகப் பொருந்தும். பிறகு எப்படி இபுராஹீம் நபியின் அல்லாஹ்வை வணங்கும் மக்களை அவர்களின் வீடுகளை விட்டும் வெளியேற்றுவதையே அடிப்படைக் கொள்கையாகக் கொண்டு இஸ்ரேல் தேசம் உருவாக முடியும்? மேலும் ஐம்பது ஆண்டு களாக அவர்கள் வீடு திரும்பும் உரிமையையும் பிடிவாதமாக மறுத்துக் கொண்டிருக்க முடியும்?

## யூஷஃ இப்னு நூன் (அலை)

இஸ்ரவேலர்கள் எகிப்திலிருந்து வெளியேறியபின் இறுதியாக அல்லாஹ்வின் ஆணைக்கிணங்க பைத்துல்முகத்தஸுக்கு (மீண்டுமொரு தடவை) வாரிசுகளாயினர். ஜோசுவா என்பவர்தான் இம்முறை அவர்களை வழிநடத்தினார் என்று பைபிள் கூறுகிறது. ஜோசுவா என்ற பெயர் சம்பந்தமாக குர்ஆன், பைபிளின் கருத்தை ஏற்கவுமில்லை, மறுக்கவுமில்லை.

وَأَوْرَثْنَا الْقَوْمَ الَّذِينَ كَانُوا يُسْتَضْعَفُونَ مَشَارِقَ الْأَرْضِ وَمَغَارِبَهَا الَّتِي بَارَكْنَا فِيهَا وَتَمَّتْ كَلِمَتُ رَبِّكَ الْحُسْنَىٰ عَلَىٰ بَنِي إِسْرَائِيلَ بِمَا صَبَرُوا وَدَمَّرْنَا مَا كَانَ يَصْنَعُ فِرْعَوْنُ وَقَوْمُهُ وَمَا كَانُوا يَعْرِشُونَ ﴿١٣٧﴾

ஆகவே எவர்களை, இவர்கள் பலவீனமானவர்களென்று (கேவலமாக) எண்ணினார்களோ அந்த மக்களுக்கே மிக்க பாக்கிய முள்ள

(அவர்களுடைய) பூமியின் கிழக்குப் பாகம், மேற்குப் பாகம் முதலிய யாவற்றையும் சொந்தமாக்கிக் கொடுத்தோம். ஆகவே, இஸ்ராயீலின் சந்ததிகள் (பிர்அவ்னால் ஏற்பட்ட கஷ்டங்களைப்) பொறுமையுடன் சகித்துக் கொண்டிருந்ததன் காரணமாக (அவர்களுக்கு) உம் இறைவன் கொடுத்த வாக்கு, மிக்க நல்ல விதமாகவே நிறைவேறிற்று. பிர்அவ்னும், அவனுடைய மக்களும் உற்பத்தி செய்திருந்தவைகளையும், கட்டியிருந்த மாட மாளிகைகளையும், நாம் தரை மட்டமாக்கிவிட்டோம்.

**(அல்குர்ஆன், 7:137)**

இதற்குமுன் பைத்துல்முகத்தஸுக்குள் நுழைவதற்காக போரிடுவதற்கு மூஸா நபி இஸ்ரவேலர்களை அழைத்தபோது அவர்கள் மறுத்துவிட்டார்கள். அச்சமயம் அவர்களில் இரண்டு நபர்கள் பைத்துல்முகத்தஸுக்குள் நுழைவதற்காகப் போர் செய்யுமாறு வற்புறுத்தினார்கள். அந்த இருவரில் ஒருவர் ஜோசுவாதான் என குர்ஆன் விரிவுரையாளர்கள் கூறுகிறார்கள்.

قَالَ رَجُلَانِ مِنَ الَّذِينَ يَخَافُونَ أَنْعَمَ اللَّهُ عَلَيْهِمَا ادْخُلُوا عَلَيْهِمُ الْبَابَ فَإِذَا دَخَلْتُمُوهُ
فَإِنَّكُمْ غَالِبُونَ ۚ وَعَلَى اللَّهِ فَتَوَكَّلُوا إِنْ كُنْتُمْ مُؤْمِنِينَ ﴿٢٣﴾

(இவ்வாறு) பயந்தவர்களில் (ஜோசுவா, காலெப்) என்ற இருவர் மீது அல்லாஹ் அருள் புரிந்தான். அவர்கள் (மற்றவர்களை நோக்கி,) "நீங்கள் (அவர்கள் பலத்தைப் பற்றிப் பயப்பட வேண்டாம்) அவர்களை எதிர்த்து, (அந்நகரத்தின்) வாயில் வரையில் சென்று விடுங்கள். அதில் நீங்கள் நுழைந்த மாத்திரத்தில், நிச்சயமாக நீங்கள் வென்றுவிடுவீர்கள். நீங்கள் (உண்மை) விசுவாசிகளாயிருந்தால், அல்லாஹ்வையே நம்புங்கள்." என்று கூறினார்கள்.

**(அல்குர்ஆன், 5:23)**

## சுலைமான் நபி (அலை)

ஐநூறு ஆண்டுகளுக்குப் பிறகு அல்லாஹ் பேரரசர் சுலைமான் (அலை) அவர்கள் பற்றிக் கூறும்போது, குர்ஆன் பைத்துல்முகத்தஸ் பற்றி நான்காவது தடவையாகக் குறிப்பிடுகிறது.

وَلِسُلَيْمَانَ الرِّيحَ عَاصِفَةً تَجْرِي بِأَمْرِهِ إِلَى الْأَرْضِ الَّتِي بَارَكْنَا فِيهَا ۚ وَكُنَّا بِكُلِّ شَيْءٍ
عَالِمِينَ

சுலைமானுக்கு, வேகமான காற்றையும் (நாம் வசப்படுத்திக் கொடுத்தோம்.) அது அவருடைய கட்டளைப்படி, பாக்கியம் பெற்ற ஊருக்கு (அவரை எடுத்து)ச் செல்லும். எல்லா விஷயங்களையும் நாம் அறிந்திருந்தோம்.

**(அல்குர்ஆன், 21:81)**

சுலைமான் நபி(அலை) ஆட்சி செய்த இஸ்ராயீல் தேசமும் அல்லாஹ்வால் வழங்கப்பட்ட அருட்கொடைகளில் ஒன்றாகும். பேரரசர் சுலைமான் நபியின் ஆட்சி உலகம் முழுவதையும் ஆளும் வல்லரசாக மட்டும் இருக்கவில்லை, மாறாக, உலக வரலாறு இதுவரை கண்டிராத உயர்வான, கம்பீரமான ஆட்சியாகவும் இருந்தது. பேரரசர் சுலைமான் நபியின் ஆட்சியில்தான் யூதர்கள் தங்கள் பொற்கால ஆட்சியை அனுபவித்தார்கள்.

## முஹம்மது நபி(ஸல்)

நபி(ஸல்) அவர்களை அதிசயமிக்க இஸ்ரா, மிஃராஜ் இரவுப் பயணத்தில் மக்காவிலிருந்து ஜெருசலத்திற்கும் பிறகு விண்வெளிக்கும் அழைத்துச் சென்றதை குர்ஆன் விவரிக்கும்போது பாக்கியம் நிறைந்த பைத்துல்முகத்தஸைப் பற்றி ஐந்தாவது தடவையாகக் குர்ஆன் குறிப்பிடுகிறது.

سُبْحَانَ الَّذِي أَسْرَى بِعَبْدِهِ لَيْلًا مِنَ الْمَسْجِدِ الْحَرَامِ إِلَى الْمَسْجِدِ الْأَقْصَى
الَّذِي بَارَكْنَا حَوْلَهُ لِنُرِيَهُ مِنْ آيَاتِنَا إِنَّه هُوَ السَّمِيعُ الْبَصِير

(அல்லாஹ்) மிகப் பரிசுத்தமானவன்; அவன் (முஹம்மது 'ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்' என்னும்) தன் அடியாரை (கஃபாவாகிய) சிறப்புற்ற பள்ளியிலிருந்து (வெகு தூரத்தில் இருக்கும் பைத்துல்முகத்தஸிலுள்ள) மஸ்ஜிதுல் அக்ஸாவிற்கும், ஓரிரவில் அழைத்துச் சென்றான். (அவ்வாறு அழைத்துச் சென்ற) நாம், அதனைச் சூழவுள்ள பூமிகளை ஆசீர்வதித்துள்ளோம். (அழைத்துச் சென்றோம்.) நிச்சயமாக (உமதிறைவனாகிய) அவனே, செவியுறுவோனாகவும், உற்று நோக்குபவனாகவும் இருக்கிறான்.

**(அல்குர்ஆன், 17:1)**

ஜெருசலத்தில் சுலைமான் நபியால் கட்டப்பட்ட பள்ளிவாசல் தான் "தூரத்திலுள்ள பள்ளிவாசல்" என்பதன் பொருள் என நபி (ஸல்)

அவர்களால் விளக்கம் கூறப்பட்டது.

நபி (ஸல்) அவர்கள் கூற ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். "குறைஷிகள் எனது இரவுப் பயணத்தை பொய்யாக்கியபோது ஹிஜ்ரில் நான் நின்றேன், அல்லாஹ் பைத்துல் முகத்தஸை என் கண் முன்னால் எடுத்துக் காட்டினான். நான் அதைக் நேரில் பார்த்து கொண்டிருப்பதுபோல விவரிக்க ஆரம்பித்தேன்"

**(ஸஹீஹ் புகாரி)**

மேலும் நபி (ஸல்) அவர்கள், முஸ்லிம்கள் மூன்று இடங்களைத் தவிர வேறு எங்கும் புனிதம் கருதி பயணம் மேற்கொள்ளக் கூடாது என்று தடை செய்திருக்கிறார்கள்.

அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள். நபி (ஸல்) அவர்கள், மூன்று பள்ளிவாசல்களைத் தவிர வேறெங்கும் தொழுவதற்காகப் (புனிதப்) பயணம் மேற்கொள்ளாதீர்கள்; (அவை களாவன) மஸ்ஜிதுல் ஹராம் (மக்கா), மஸ்ஜிதுன் நபவி (மதீனா), மஸ்ஜிதுல் அக்ஸா (ஜெருசலம்) எனக் கூறினார்கள்.

**(புகாரி)**

மைமூனா இப்னு சயீத் (ரலி) கூறுகிறார்கள். பைத்துல்முகத் தஸிற்குச் செல்வது பற்றிக் கூறுங்கள் என நான் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டேன், அதற்கு நபியவர்கள், "அங்குச் சென்று தொழுங்கள்" எனக் கூறினார்கள். (ஆனால், அன்று எல்லா இடங்களிலும் போர் மேகம் சூழ்ந்திருந்ததால் நபி (ஸல்) கூறினார்கள்) நீங்கள் அங்கு சென்று தொழ முடியாவிட்டால், அங்கு விளக்குகள் எரிவதற்கு சிறிது எண்ணெயையாவது அனுப்புங்கள் (ஆதரவைத் தெரிவியுங்கள்) என்று கூறினார்கள்.

**(சுனன் அபீதாவூத்)**

கி.பி.70 இல் ஜென்ரல் டைடஸின் தலைமையில் ரோமானியப் படை மஸ்ஜிதுல்அக்ஸாவை (சுலைமான் நபி காலத்தில் கட்டப்பட்ட பள்ளிவாசல்) அழித்தது. உமர் (ரலி) அவர்கள் காலத்தில் முஸ்லிம்கள் ஜெருசலத்தைக் கைப்பற்றும் வரை அது அழிந்த நிலையிலேயே இருந்தது. சுலைமான் நபியால் கட்டப்பட்டு, அழிக்கப்பட்ட அதே இடத்திலேயே இப்பொழுதுள்ள மஸ்ஜிதுல் அக்ஸாவை செய்யிதினா உமர் (ரலி) அவர்கள் தான் கட்ட ஆணையிட்டார்கள்.

# ஜெரூசலம் உட்பட பைத்துல்முகத்தஸ் யூதர்களுக்கு வழங்கப்பட்டதாக குர்ஆன் பறைசாற்றுகிறது

وَإِذْ قَالَ مُوسَى لِقَوْمِهِ يَا قَوْمِ اذْكُرُوا نِعْمَةَ اللَّهِ عَلَيْكُمْ إِذْ جَعَلَ فِيكُمْ أَنْبِيَاءَ وَجَعَلَكُمْ مُلُوكًا وَآتَاكُمْ مَا لَمْ يُؤْتِ أَحَدًا مِنَ الْعَالَمِينَ () يَا قَوْمِ ادْخُلُوا الْأَرْضَ الْمُقَدَّسَةَ الَّتِي كَتَبَ اللَّهُ لَكُمْ وَلَا تَرْتَدُّوا عَلَى أَدْبَارِكُمْ فَتَنْقَلِبُوا خَاسِرِينَ

மேலும், மூஸா தன் சமூகத்தாரை நோக்கி, "என் சமூகத்தாரே! உங்கள் மீது அல்லாஹ் புரிந்திருக்கும் அருட்கொடைகளை நீங்கள் நினைத்துப் பாருங்கள். அவன், உங்களுக்குள் (மூஸா, ஹாரூன் போன்ற) நபிமார்களை ஏற்படுத்தி, (எகிப்தியர்களிடம் அடிமைகளாயிருந்த) உங்களை அரசர்களாகவும் ஆக்கி, அகிலத்தில் மற்றெவருக்குமே அளிக்காத (அற்புதங்களாகிய, சமுத்திரத்தைப் பிளந்து செல்லுதல், 'மன்னு சல்வா' என்ற ஆகாரத்தை வானிலிருந்து இறக்கிவைத்தல் போன்ற)வைகளையும், உங்களுக்கு அளித்திருக்கிறான்," என்று கூறியதை (நபியே! நீர் அவர்களுக்கு) ஞாபகமூட்டும்.

(தவிர) அவர் "என் சமூகத்தாரே! அல்லாஹ் உங்களுக்கென விதித்த பரிசுத்தமான பூமியில் (இருக்கும் உங்கள் எதிரியுடன் யுத்தம் புரிந்து, அதில்) நுழையுங்கள். (அவர்களுக்கு) நீங்கள் புறங்காட்டித் திரும்பாதீர்கள்! (புறங்காட்டினால்) நீங்கள் நஷ்டமடைந்தவர்களாகவே திரும்புவீர்கள்." (என்று கூறினார்)

**(அல்குர்ஆன், 5:20-21)**

## ஜெருசலம் உட்பட பைத்துல்முகத்தஸ் யூதர்களுக்கு வழங்கப்பட்டதாக கூர்ஆன் பறைசாற்றுகிறது

லாஸ் ஏஞ்சல்ஸ் டைம்ஸில்2000, ஜூலை 2-இல் வெளியான டேனியல் பைப் உடைய கட்டுரை (முஸ்லிம்களைவிட யூதர்களே ஜெருசலத்திற்கு உரிமையானவர்கள்) குர்ஆனில் எங்கும் "ஜெரு சலம்" என்ற பெயர் இடம்பெறவில்லை" என்ற காரணம் காட்டி ஜெருசலத்திற்கு முஸ்லிம்களின் உரிமையை மறுக்கிறது.

ஜெருசலம் என்னும் வார்த்தை குர்ஆனில் வெளிப்படையாக இடம்பெறவில்லை என்பது உண்மைதான். ஆனால் ஆன்மிக நுண் ணறிவால் பார்க்கும்போது அந்த வார்த்தை இடம் பெற்றிருப்பதைக் காணமுடியும். குர்ஆன் ஜெரூசலம் என்னும் பெயரை மூடலாகக் குறிப் பிடுகிறது. (அது பொருத்தமும் கூட) "அந்த நகரம்" அழிக்கப்பட்டது அந்த மக்கள் வெளியேற்றப்பட்டார்கள், மீண்டும் அந்நகரத்தில் திரும்ப வந்து உரிமை கொண்டாடத் தடை விதிக்கப்பட்டார்கள். அந்தத் தடை யஃஜூஜ், மஃஜூஜ் வெளியாகும்வரை நீடிக்கும்.

**(அல்குர்ஆன், 21:95-96)**

ஜெருசலம் என்பதற்கான அரபிச்சொல் "பைத்துல்முகத்தஸ்" என்பது நபிமொழிகளில் பல இடங்களில் இடம்பெற்றிருக்கிறது. நபி(ஸல்) கூறிய ஒரு முக்கிய முன்னறிவிப்பில் "ஈலியா" எனும் சொல் இடம்பெற்றிருக்கிறது.

ஆச்சரியம்! டாக்டர் பைப்ஸ் பைத்துல்முகத்தஸ் (ஜெரூசலம் அதன் இதயமாக இருக்கிறது) அல்லாஹ்வால் இஸ்ரவேலர்களுக்கு வழங்கப்பட்டது என்பதை மறுப்பதில்லை! மூஸா நபி இஸ்ரவேலர்களை எகிப்தின் அடிமைத்தளையிலிருந்து மீட்டு, அதிசயமான முறையில் கடலைக் கடந்து சென்றார்கள். மூஸா பைத்துல்முகத்தஸைக் கைப் பற்றுவதற்கு உதவிக்கு வருமாறு அழைத்தார்.

يَا قَوْمِ ادْخُلُوا الْأَرْضَ الْمُقَدَّسَةَ الَّتِي كَتَبَ اللَّهُ لَكُمْ وَلَا تَرْتَدُّوا عَلَى أَدْبَارِكُمْ فَتَنْقَلِبُوا
خَاسِرِينَ () قَالُوا يَا مُوسَى إِنَّ فِيهَا قَوْمًا جَبَّارِينَ وَإِنَّا لَنْ نَدْخُلَهَا حَتَّى يَخْرُجُوا مِنْهَا فَإِنْ
يَخْرُجُوا مِنْهَا فَإِنَّا دَاخِلُونَ () قَالَ رَجُلَانِ مِنَ الَّذِينَ يَخَافُونَ أَنْعَمَ اللَّهُ عَلَيْهِمَا ادْخُلُوا
عَلَيْهِمُ الْبَابَ فَإِذَا دَخَلْتُمُوهُ فَإِنَّكُمْ غَالِبُونَ وَعَلَى اللَّهِ فَتَوَكَّلُوا إِنْ كُنْتُمْ مُؤْمِنِينَ

(தவிர) அவர் "என் சமூகத்தாரே! அல்லாஹ் உங்களுக்கென விதித்த பரிசுத்தமான பூமியில் (இருக்கும் உங்கள் எதிரியுடன் யுத்தம் புரிந்து, அதில்) நுழையுங்கள். (அவர்களுக்கு) நீங்கள் புறங்காட்டித் திரும்பாதீர்கள். (புறங்காட்டினால்) நீங்கள் நஷ்டமடைந்தவர்களாகவே திரும்புவீர்கள்." (என்று கூறினார்)

(அதற்கு) அவர்கள் (மூஸாவை நோக்கி) "மூஸாவே! நிச்சயமாக அதில் பராக்கிரமசாலிகளான ஜனங்கள் இருக்கின்றனர். அவர்கள் அதை விட்டு வெளியேறும்வரை, நாங்கள் அதனுள் நுழையவே மாட்டோம். அவர்கள் அதைவிட்டு வெளிப்பட்டுவிட்டால், நாங்கள் கண்டிப்பாக நுழைந்துவிடுவோம்" என்றனர்.

(இவ்வாறு) பயந்தவர்களில் (யூஷஃ இப்னு நூன், காலெப்) என்ற இருவர் மீது அல்லாஹ் அருள் புரிந்தான். அவர்கள் (மற்றவர்களை நோக்கி,) "நீங்கள் (அவர்கள் பலத்தைப் பற்றிப் பயப்பட வேண்டாம்) அவர்களை எதிர்த்து, (அந்நகரத்தின்) வாயில் வரையில் சென்று விடுங்கள். அதில் நீங்கள் நுழைந்த மாத்திரத்தில், நிச்சயமாக நீங்கள் வென்று விடுவீர்கள். நீங்கள் (உண்மை) விசுவாசிகளாயிருந்தால், அல்லாஹ்வையே நம்புங்கள்." என்று கூறினார்கள்.

**(அல்குர்ஆன், 5:21-23)**

அவர்கள் மூஸா நபிக்குக் கூறிய பதில் எந்த அளவுக்கு அல்லாஹ்வை அவமதிப்பதாக இருந்ததென்றால் அல்லாஹ் உடனே அவர்களை பைத்துல்முகத்தஸுக்குள் நுழைவதை தடுத்துவிட்டான்.

قَالُوا يَا مُوسَىٰ إِنَّا لَنْ نَدْخُلَهَا أَبَدًا مَا دَامُوا فِيهَا ۖ فَاذْهَبْ أَنْتَ وَرَبُّكَ فَقَاتِلَا إِنَّا هَاهُنَا قَاعِدُونَ ﴿٢٤﴾ قَالَ رَبِّ إِنِّي لَا أَمْلِكُ إِلَّا نَفْسِي وَأَخِي ۖ فَافْرُقْ بَيْنَنَا وَبَيْنَ الْقَوْمِ الْفَاسِقِينَ ﴿٢٥﴾ قَالَ فَإِنَّهَا مُحَرَّمَةٌ عَلَيْهِمْ ۛ أَرْبَعِينَ سَنَةً ۛ يَتِيهُونَ فِي الْأَرْضِ ۚ فَلَا تَأْسَ عَلَى الْقَوْمِ الْفَاسِقِينَ ﴿٢٦﴾

(இதன்பிறகும், அவர்கள் மூஸாவை நோக்கி) "மூஸாவே! அவர்கள் அதில் இருக்கும் வரை ஒருகாலும் நாங்கள் அதில் நுழைய மாட்டோம், நீரும் உம்முடைய இறைவனும் (அங்கு) சென்று (அவர்களுடன்) யுத்தம் புரியுங்கள். நிச்சயமாக நாங்கள் இங்கேயே உட்கார்ந்து (கவனித்துக்) கொண்டிருப்போம்" என்று கூறினார்கள்.

(அதற்கு மூஸா) "என் இறைவனே! நிச்சயமாக என் மீதும், என் சகோதரர் மீதும் தவிர, (மற்றெவர் மீதும்) எனக்கு அதிகாரமில்லை, ஆகவே, பாவிகளாகிய இந்த மக்களிலிருந்து, நீ எங்களைப் பிரித்து விடுவாயாக!" என்று (பிரார்த்தித்துக்) கூறினார்.

## ஜெருசலம் உட்பட பைத்துல்முகத்தஸ் யூதர்களுக்கு வழங்கப்பட்டதாக கூர்ஆன் பறைசாற்றுகிறது

(அதற்கிறைவன், அவ்வாறாயின், அவர்களுக்கு வாக்களிக்கப் பட்ட பலஸ்தீன் என்ற) "அந்த இடம், நாற்பது ஆண்டுகள் வரையில் அவர்களுக்கு நிச்சயமாகத் தடுக்கப்பட்டு விட்டது. (அதுவரையில்) அவர்கள், பூமியில் தட்டழி(ந்து கெட்டலை)வார்கள். ஆகவே இந்தப் பாவிகளான ஜனங்களைப் பற்றி நீர் கவலை கொள்ளாதீர்!" என்று (மூஸாவுக்குக்) கூறினான்.

**(அல்குர்ஆன், 5:24-26)**

உண்மையில் பைத்துல்முகத்தஸ் யூதர்களுக்கு வழங்கப்பட்ட தாக குர்ஆன் மற்றொரு இடத்தில் மீண்டும் உறுதியளிக்கிறது.

فَأَرَادَ أَنْ يَسْتَفِزَّهُمْ مِنَ الْأَرْضِ فَأَغْرَقْنَاهُ وَمَنْ مَعَهُ جَمِيعًا ﴿١٠٣﴾ وَقُلْنَا مِنْ بَعْدِهِ لِبَنِي
إِسْرَائِيلَ اسْكُنُوا الْأَرْضَ فَإِذَا جَاءَ وَعْدُ الْآخِرَةِ جِئْنَا بِكُمْ لَفِيفًا ﴿١٠٤﴾

(அதற்கு மூஸாவையும் அவருடைய ஜனங்கள்) யாவரையும் தன் தேசத்திலிருந்து விரட்டி விடவே அவன் எண்ணினான். எனினும் (அதற்குள்ளாக) அவனையும், அவனுடனிருந்த (அவனுடைய ஜனங் கள்) யாவரையும் நாம் மூழ்கடித்து விட்டோம்.

இதன் பின்னர் இஸ்ராயீலின் சந்ததிகளுக்கு நாம் கூறினோம்: "நீங்கள் இப்பூமியில் வசித்திருங்கள்; மறுமையின் வாக்குறுதி வந்தால், உங்கள் யாவரையும் (விசாரணைக்காக) நம்மிடம் கொண்டுவந்து ஒன்று சேர்ப்போம்.

**(அல்குர்ஆன், 17:103-104).**

மேலும்.

وَأَوْرَثْنَا الْقَوْمَ الَّذِينَ كَانُوا يُسْتَضْعَفُونَ مَشَارِقَ الْأَرْضِ وَمَغَارِبَهَا الَّتِي بَارَكْنَا فِيهَا وَتَمَّتْ
كَلِمَتُ رَبِّكَ الْحُسْنَىٰ عَلَىٰ بَنِي إِسْرَائِيلَ بِمَا صَبَرُوا وَدَمَّرْنَا مَا كَانَ يَصْنَعُ فِرْعَوْنُ وَقَوْمُهُ
وَمَا كَانُوا يَعْرِشُونَ ﴿١٣٧﴾

ஆகவே எவர்களை, இவர்கள் பலவீனமானவர்களென்று (கேவலமாக) எண்ணினார்களோ அந்த மக்களுக்கே மிக்க பாக்கிய முள்ள (அவர்களுடைய) பூமியின் கிழக்குப் பாகம், மேற்குப் பாகம் முதலிய யாவற்றையும் சொந்தமாக்கிக் கொடுத்தோம். ஆகவே, இஸ்ராயீலின் சந்ததிகள் (பிர்அவ்னால் ஏற்பட்ட கஷ்டங்களைப்) பொறுமையுடன் சகித்துக் கொண்டிருந்ததன் காரணமாக (அவர் களுக்கு) உம் இறைவன் கொடுத்த வாக்கு, மிக்க நல்ல விதமாகவே

நிறைவேறிற்று. பிர்அவ்னும், அவனுடைய மக்களும் உற்பத்தி செய்திருந்தவைகளையும், கட்டியிருந்த மாட மாளிகைகளையும், நாம் தரைமட்டமாக்கிவிட்டோம்.

(அல்குர்ஆன், 7:137)

உண்மையில் யூதர்களும், சியோனிஸ அறிஞர்களும், பைத்துல் முகத்தஸ் யூதர்களுக்கு வழங்கப்பட்டது என்று பறைசாற்றுகிற கீழ் வரும் குர்ஆன் வசனங்களை கவனமாக தவிர்த்திருப்பது ஆச்சரியமானது!

- **ஓ என் மக்களே! அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய புனித பூமிக்குள் நுழையுங்கள்.**
- **"நாம் இஸ்ரவேலர்களிடம் கூறினோம்" புனித பூமியில் அமைதியாக வசியுங்கள்"**
- **பாக்கியம் நிறைந்த நிலத்தின் கிழக்கு,மேற்குப் பகுதிகளுக்கு அவர்களை வாரிசுகளாக்கினோம்.**

ஜெரூசலத்தின் தலைவிதி குறித்த உண்மையை அறிய விரும்பும் வாசகர்கள், ஏன் யூத அறிஞர்கள் இந்த விஷயத்தில் குர்ஆனுடைய வசனங்களை மேற்கோளாக எடுத்துக்கொள்ள தயங்குகிறார்கள் என்று ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்க வேண்டும். இது ஒரு வினோதமான மனநிலை, அதை இந்நூல் விளக்குகிறது. பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாவதற்கு இறைவனால் விதிக்கப்பட்ட நிபந்தனைகளை மாற்றியதை வெளிப்படுத்தத் தயங்குவதுதான் அந்த வினோதமான நிலை. தவ்ராத்தை மாற்றி எழுதியதிலுள்ள மோசடியை குர்ஆன் பகிரங்கப்படுத்திவிட்டது. அந்த மோசடி என்ன?

## அத்தியாயம் 5

# பைத்துல் முகத்தஸுக்கு வாரிசாவதற்கான இறை நிபந்தனைகள்

وَلَقَدْ كَتَبْنَا فِي الزَّبُورِ مِنْ بَعْدِ الذِّكْرِ أَنَّ الْأَرْضَ يَرِثُهَا عِبَادِيَ الصَّالِحُونَ

நிச்சயமாக நாம் ஜபூர் என்னும் வேதத்தில் நல்லுபதேசங்களுக்குப் பின்னர் எழுதியிருக்கிறோம்; நிச்சயமாக அந்தப் பூமியை என்னுடைய அடியார்களில், நல்ல நடத்தையுடையவர்கள்தாம் அனந்தரங் கொள்வார்கள் (வாரிசாவார்கள்) என்று.

**(அல்குர்ஆன்,21:105)**

பைத்துல்முகத்தஸ் யூதர்களுக்கு அல்லாஹுத்தஆலாவால் வழங்கப்பட்டது என்று கூறும் குர்ஆன் செய்தியை டாக்டர் பைப் அறிந்திருந்தால் (அறியாமல் இருக்க வாய்ப்பில்லை) யூதர்களுக்கு வழங்கப்பட்ட நிலத்தை தங்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்று முஸ்லிம்கள் கேட்பதற்கு என்ன உரிமை இருக்கிறது என்று கேள்வி எழுப்பி இருக்க வேண்டும்.அவர் அப்படி கேட்கவில்லை. அது கிணறு வெட்ட பூதம் வெளியான கதையாகி விடும். முதலில், குறிப்பாக யூதர்களையும் பைத்துல்முகத்தஸையும் குறித்து குர்ஆன் கூறும் கருத்துகளை அவர்கள் நேரடியாக எதிர்கொள்ள விரும்பவில்லை. இரண்டாவது, (அவர் அப்படி கேள்வி எழுப்பியிருந்தால்) அதற்கான பதில் வேறொரு குர்ஆன் வசனத்தில் இருக்கிறது. நம்பிக்கையும் (ஈமான்) நற்கருமங்களும் உள்ள வரை தான் யூதர்களுக்கு பைத்துல்

முகத்தஸுக்கு உரிமை இருக்கும் என நிபந்தனையிட்டு அல்லாஹ் கூறியதுதான் அந்த மற்றொரு வசனம். அதாவது இபுராஹீம் நபியின் மார்க்கத்தை உண்மையாகக் கடைபிடிப்பவர்களாக இருக்க வேண்டும் என்பது தான் நிபந்தனை.

وَلَقَدْ كَتَبْنَا فِي الزَّبُورِ مِنْ بَعْدِ الذِّكْرِ أَنَّ الْأَرْضَ يَرِثُهَا عِبَادِيَ الصَّالِحُونَ

நிச்சயமாக நாம் ஜபூர் என்னும் வேதத்தில் நல்லுபதேசங் களுக்குப் பின்னர் எழுதியிருக்கிறோம்; நிச்சயமாக அந்தப் பூமியை என்னுடைய அடியார்களில், நல்ல நடத்தையுடையவர்கள் தாம் அனந்தரங் கொள்வார்கள் (வாரிசாவார்கள்) என்று.

**(அல்குர்ஆன், 21:105)**

மேலே குறிப்பிட்ட வசனத்தில் பயன்படுத்தப்பட்ட அந்த பூமி, அல்லது நிலம் என்னும் வார்த்தை உலகம் முழுவதும் என்ற அர்த்தத்தில் பயன்படுத்தப்பட்டதல்ல. அப்படி அர்த்தப்படுத்தப்படுமானால் அது அப்பட்டமான பொய்யாக ஆகியிருக்கும். இன்றைய, வரலாற்றின் பல விஷயங்கள் பொய்யாகிப் போயிருக்கும்.

ஆனால் அல்லாஹுத்தஆலாவின் கூற்று உண்மையானது. அது ஒருபோதும் பொய்யாக முடியாது. எனவே அந்த வசனத் திலுள்ள பூமி அல்லது நிலம் என்பது முழு உலகையும் கூற வில்லை. மாறாக, அதற்கான பதில் தவ்ராத்திலும், பைபிளிலும் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. (ஆனால் அந்த பதிலை வெளிக் காட்டாத மொழிபெயர்ப்புகள் தான் இன்றிருக்கின்றன.) எல்லா மொழிபெயர்ப்புகளிலும் நிலம் என்றுதான் இருக்கிறது.

இறைவனை பயப்படுகின்ற அந்த மனிதன் யார்? இறைவன் அவன் விரும்புகின்ற வழியில் அவனுக்குக் கற்பிப்பான். அவன் ஆன்மா அமைதியாக இருக்கும். அவர்களின் பிள்ளைகள் (பைத்துல்முகத்தஸ்) நிலத்திற்கு வாரிசாவார்கள். அவனைப் பயப்படுகிறவர்களிடத்தில் இறைவனின் ரகசியம் இருக்கிறது. அவன் அவர்களுக்குத் தன் வாக்குறுதியை நிறைவேற்றுவான்

**(சாம், 25:12-14)**

## பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாவதற்கான இறை நிபந்தனைகள்

பலவீனமானவர்கள் (பைத்துல்முகத்தஸ்) நிலத்திற்கு வாரிசாவார்கள் அங்கும் அளவில்லா அமைதியில் இருப்பார்கள்.

**(சாம், 37:11)**

நேர்வழி பெற்றவர்கள் (பைத்துல்முகத்தஸ்) நிலத்திற்கு வாரிசாகி அங்கேயே நிரந்தமாக இருப்பார்கள். (நேர்வழியில் இருக்கும் வரை வழங்கப்படும்)

**(சாம், 37:29)**

பாக்கியம் பெற்ற பலவீனர்கள் (பைத்துல்முகத்தஸ்) நிலத்திற்கு வாரிசாவார்கள்.

**(மாத்யூ, 5:5)**

இஸ்ரவேலர்கள் இரண்டு சந்தர்ப்பங்களில் பூமியில் குழப்பம் விளைவிப்பார்கள் என்று பறைசாற்றுகின்ற குர்ஆன் வசனம் (மேற்கண்ட பைபிளின்) வசனங்களில் இடம்பெற்ற நிலம் என்பது பைத்துல் முகத்தஸ் தான் என உறுதிப்படுத்துகிறது.

وَقَضَيْنَا إِلَى بَنِي إِسْرَائِيلَ فِي الْكِتَابِ لَتُفْسِدُنَّ فِي الْأَرْضِ مَرَّتَيْنِ وَلَتَعْلُنَّ عُلُوًّا كَبِيرًا

இஸ்ராயீலின் சந்ததிகளாகிய உங்களைப் பற்றி, (அல்லாஹ் கூறும்போது) 'நிச்சயமாக நீங்கள் இரண்டு தடவை அந்த பூமியில் விஷமம் செய்வீர்கள்' என்றும் 'நிச்சயமாக நீங்கள் பெரும் அகம்பாவம் கொண்டு அக்கிரமம் செய்வீர்கள்' என்றும் (உங்களுக்களித்த) வேதத்தில் நாம் வரைந்துள்ளோம்.

**(அல்குர்ஆன், 17:4)**

இந்தக் குர்ஆன் வசனத்தில் இடம்பெறும் பூமி என்பது பைத்துல்முகத்தஸ்தான் என்பது சர்வதேசமும் ஏற்றுக்கொண்ட ஒன்றாகும்.

நம்பிக்கையும் (ஈமான்) நல்லறங்களும்தான் யூதர்கள் பைத்துல்முகத்தஸிற்குள் சட்டப்பூர்வமாக நுழைந்து வாழ்வதற்கான நிபந்தனைகள் என வேத ஆகமங்கள் அனைத்தும் ஒரே குரலில் கூறுகின்றன.

எப்படியாகினும் இந்த நிபந்தனைகளை அகற்றிவிட வேண்டும் என்ற நோக்கத்தில் யாரோ ஒருவர் தவ்ராத்தை மாற்றி எழுதிவிட்டார்.

நீங்கள் நேர்வழியில் இருப்பதற்காக இப் புனித பூமி உங்களுக்கு வழங்கப்படவில்லை. மாறாக நீங்கள் பெருமைக்குரியவர்கள் என்ப தால். என்று அவர் மாற்றி எழுதியிருக்கிறார்.

**(டியூட்ரோனமி, 9:6)**

அல்லாஹுத்தஆலாவுக்கும், இபுராஹீம் நபியின் மார்க்கத் திற்கும் எதிராக இட்டுக்கட்டப்பட்ட இந்த இமாலய பொய்யை சரி கான டாக்டர் பைப்ஸ் முன்வராமல் இருக்கலாம். ஆனால், மார்க்க ஞானம் கொண்டவர்கள் நடுநிலையோடு சிந்தித்தால் இது பொய்தான் என்பதைக் கண்டறிய அதிக நேரம் பிடிக்காது. அப்பழுக்கற்ற நீதம் மட்டுமே வெளியாகக் கூடிய அல்லாஹ்வின் வேத வசனங்களில் இப்படி இடம்பெற்றிருப்பது சாத்தியமே இல்லாததாகும். உண் மையில் இது ஒரு மோசடி! யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாவதற்கு அல்லாஹ்வால் இடப்பட்ட நிபந்தனைகளை செல்லாத வையாக்குவதற்கான திட்டமேயாகும். சற்றுச் சிந்தித் தாலே இதற்கு விடை கிடைக்கும்! அதாவது பைத்துல்முகத்தஸ் நிலப் பகுதி அல்லாஹுத்தஆலாவால் தேர்ந்தெடுக்கப்பட்டு, அருள் நிறைந்ததாக ஆக்கப்பட்டு, அதைப் பெறுவதற்கு எந்த ஒழுக்கமும் பேணவேண்டிய தில்லை என்று அல்லாஹ் கூறினான் என்பது நம்பக்கூடியது அல்ல.

இரண்டாவது, யூதர்கள் பைத்துல்முகத்தஸிலிருந்து அல்லாஹ்வின் கட்டளையால் அடிக்கடி விரட்டப்பட்டார்கள் என்று வரலாற்று ஆதாரங்கள் கூறுகின்றன. விரட்டப்பட்டதற்குக் காரணம் நிபந்தனை களை மீறியதாகும். எப்பொழுது அவர்கள் நம்பிக்கை, நல்லறங்கள் என்ற நிபந்தனைகளை மீறினார்கள் என இந்நூல் குறிப்பிடுகிறது. எப்பொழுதெல்லாம் யூதர்கள் இந்த நிபந்தனைகளை மீறுவார்களோ அப்பொழுதெல்லாம் பைத்துல்முகத்தஸை விட்டும் விரட்டப்பட்டுக் கொண்டே இருப்பார்கள்.

**(அல்குர்ஆன்.21:105)**

பல இஸ்ராயீல் யூதர்கள் நாம் பைத்துல்முகத்தஸிலிருந்து விரட்டி அடிக்கப்படுவது நாம் அந்த ஒழுக்க நிபந்தனைகளை மீறியது தான் என்று உணர்ந்திருக்கிறார்கள். கடவுளில்லாத மதமில்லா ஐரோப்பிய சியோனியர்கள் இதை ஏற்றுக்கொள்ள மறுக்கிறார்கள்.

பைத்துல்முகத்தஸ் யூதர்களுக்கு வழங்கப்பட்டது அவர்களின் முதாதை இபுராஹீம் நபியின் நம்பிக்கையாலும் நல்லறத்தாலும்தான்

கிடைத்தது என்பதை யூதர்களுக்கு நினைவூட்டத்தான் மேற்கூறப்பட்ட வசனம் **(டியூட்ரோமி 9:6)** கூறுகிறது என யூதர்கள் நம்மிடம் வாதிடுகிறார்கள். அவர்களின் நேர்வழியின் காரணத்தால் அவர்கள் பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாகவில்லை என்பது அவர்களின் வாதத்திலிருந்து விளங்குகிறது.

பைத்துல்முகத்தஸ் அவர்களுக்கு எந்த நிபந்தனையுமின்றித் தான் வழங்கப்பட்டது என்ற அந்த வசனத்தின் கருத்தை அவர்களின் வாதம் செல்லாததாக ஆக்கவில்லை. அது பொய்யான கருத்து என்பதை குர்ஆன் தெளிவாக்குகிறது. பைத்துல்முகத்தஸ் யூதர்களுக்கு நிபந்தனையுடன்தான் வழங்கப்பட்டது என்று குர்ஆன் கூறுகிறது. அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைத்து நல்லறங்கள் புரிவதுதான் அந்த நிபந்தனையாகும்

**(அல்குர்ஆன்,21:105)**

பைத்துல்முகத்தஸிலிருந்து யூதர்களின் கடைசி வெளியேற்றத்திற்கு சுமார் 600 ஆண்டுகளுக்குப்பின் பைத்துல்முகத்தஸ் முஸ்லிம்களின் படையால் வெற்றிகொள்ளப்பட்டது. அதன் சாவியை வாங்குவதற்கு கலீஃபா உமர் (ரலி) ஜெரூசலத்திற்கு நேரில் வரும்படி அழைக்கப்பட்டபோது பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாகிற தகுதியை அல்லாஹ் முஸ்லிம்களுக்கு வழங்கினான். இவ்வாறு நடக்கும் என்ற குர்ஆனின் முன்னறிவுப்புத்தான் அங்கு நிகழ்ந்தது.

وَهُوَ الَّذِي جَعَلَكُمْ خَلَائِفَ الْأَرْضِ وَرَفَعَ بَعْضَكُمْ فَوْقَ بَعْضٍ دَرَجَاتٍ لِيَبْلُوَكُمْ فِي مَا آتَاكُمْ إِنَّ رَبَّكَ سَرِيعُ الْعِقَابِ وَإِنَّهُ لَغَفُورٌ رَحِيمٌ ﴿١٦٥﴾

அவன்தான் (தன்) பிரதிநிதிகளாகப் பூமியில் உங்களை ஆக்கியுள்ளான். மேலும், உங்களில் சிலரை மற்றோரைவிடப் பதவிகளில் உயர்த்தியுமிருக்கிறான். (இதன் மூலம்) உங்களுக்குக் கொடுத்தவற்றில் (நீங்கள் எவ்வாறு நடந்து கொள்கின்றீர்கள் என்று) உங்களைச் சோதிக்கின்றான். (நபியே!) நிச்சயமாக உமது இறைவன் தண்டிப்பதில் மிகத் தீவிரமானவன்; ஆயினும், நிச்சயமாக அவன் மிக்க பிழைபொறுபோனும், பேரன்புடையோனுமாயிருக்கிறான்.

**(அல்குர்ஆன்,6:165)**

முஸ்லிம்கள் பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாவார்கள் என்பது அல்லாஹ்வின் கட்டளை என்பதை அல்லாஹ்வே கூறுகிறான். இவ்வாறு

பைத்துல்முகத்தஸில் பொய்யை உண்மை வென்றது. முஸ்லிம்கள் பைத்துல்முகத்தஸைக் கைப்பற்றியதிலிருந்து தொடர்ச்சியாக 1200 ஆண்டுகள் அதை ஆண்டார்கள். (ஒரு சிறிய காலகட்டத்தைத் தவிர) இது அல்லாஹ்வின் அத்தாட்சியும், பைத்துல்முகத்தஸில் முஸ்லிம்களின் ஆட்சியை அல்லாஹ் பொருந்திக்கொண்டதுமாகும். பைத்துல்முகத்தஸில் இவ்வளவு நீண்ட காலம் எந்த இடையூறுமில்லாத ஆட்சியை முஸ்லிம்கள் பெற்றதற்கு யூத அறிஞர்கள் விளக்கம் கூறவேண்டும். அந்த முஸ்லிம் ஆட்சி நீதமானதாகவும், இறைபக்தி நிறைந்ததாகவும் இருந்தது.

புனித பூமியில் இஸ்ரேல் தேசத்தை மீட்டெடுப்பது இறை கட்டளையெனக் கூறி அதற்குப் போராடுவோம் என்று இஸ்ராயீல் யூதர்களை ஐரோப்பிய சியோனிஸவாதிகள் தூண்டிவிட்டது முற்றிலும் ஏமாற்று வேலையாகும். சியோனிஸவாதிகளின் கூற்று பொய் என்பதற்குத் தெளிவான சான்று இருந்தது. இஸ்ரேலுக்காகப் போராடும் சியோனிஸவாதிகளிடம் நம்பிக்கையும், நல்லறமும் இல்லாமல் இருந்ததே அந்தச் சான்று ஆகும். மேலும் இஸ்ரேல் தேசம் உருவாக்கப்பட்டபோது ஒரு நவீன மதமில்லா தேசம் எப்படி இருக்குமோ அப்படித்தானிருந்தது. நவீன மதச் சார்பற்ற தேசத்தின் அடித்தளம் ஷிர்க் (இணைவைத்தல்) குஃப்ர் (நிராகரித்தல்) ஆகியவற்றின் மீது அமைந்ததாகும். இவ்விரண்டும் இபுராஹீம் நபியின் மார்க்கத்திற்கு எதிரானவையாகும். இவ்விஷயம் இந்நூலின் இரண்டாம் பாகத்தில் விவரிக்கப்படுகிறது.

## அத்தியாயம் 6

# வாரிசாவதற்கான நிபந்தனைகளை மீறியதால் யூதர்கள் பைத்துல்முகத்தஸிலிருந்து வெளியேற்றப்படுதல்

وَقَضَيْنَا إِلَى بَنِي إِسْرَائِيلَ فِي الْكِتَابِ لَتُفْسِدُنَّ فِي الْأَرْضِ مَرَّتَيْنِ وَلَتَعْلُنَّ عُلُوًّا كَبِيرًا

فَإِذَا جَاءَ وَعْدُ أُولَاهُمَا بَعَثْنَا عَلَيْكُمْ عِبَادًا لَنَا أُولِي بَأْسٍ شَدِيدٍ فَجَاسُوا خِلَالَ الدِّيَارِ

وَكَانَ وَعْدًا مَفْعُولًا

ثُمَّ رَدَدْنَا لَكُمُ الْكَرَّةَ عَلَيْهِمْ وَأَمْدَدْنَاكُمْ بِأَمْوَالٍ وَبَنِينَ وَجَعَلْنَاكُمْ أَكْثَرَ نَفِيرًا

إِنْ أَحْسَنْتُمْ أَحْسَنْتُمْ لِأَنْفُسِكُمْ وَإِنْ أَسَأْتُمْ فَلَهَا فَإِذَا جَاءَ وَعْدُ الْآخِرَةِ لِيَسُوءُوا وُجُوهَكُمْ

وَلِيَدْخُلُوا الْمَسْجِدَ كَمَا دَخَلُوهُ أَوَّلَ مَرَّةٍ وَلِيُتَبِّرُوا مَا عَلَوْا تَتْبِيرًا

இஸ்ராயீலின் சந்ததிகளாகிய உங்களைப் பற்றி, (அல்லாஹ் கூறும்போது) "நிச்சயமாக நீங்கள் இரண்டு தடவை அந்த பூமியில் விஷமம் செய்வீர்கள்" என்றும் "நிச்சயமாக நீங்கள் பெரும் அகம்பாவம் கொண்டு அக்கிரமம் செய்வீர்கள்" என்றும் (உங்களுக்களித்த) வேதத்தில் நாம் வரைந்துள்ளோம்.

அவ்விரண்டில் முதல் தவணை வந்த சமயத்தில், நம் அடியார்களில் (இரக்கமற்ற) பெரும் பலவான்களாகிய மனிதர்களை உங்கள் மீது ஏவிவிட்டோம். அவர்கள் (பைத்துல்முகத்தஸிலிருந்த உங்கள்) வீடுகளுக்குள் ஊடுருவிச் சென்று (தங்கள் கைக்குக்கிட்டியதையெல்லாம் இடித்தழித்து நாசமாக்கி) விட்டார்கள். (அதனால் பைத்துல்முகத்

தஸிலிருந்த ஆலயமும், அவ்வூரும் அழிந்து நாசமாயின. இவ்வாறு நம்முடைய முந்திய) வாக்குறுதி நிறைவேறியது.

பின்னர் (உங்கள்) காலச் சக்கரத்தைத் திருப்பி, உங்களுக்கு வெற்றியைக் கொடுத்து, (ஏராளமான) பொருள்களையும் மக்களையும் கொண்டு நாம் உங்களுக்கு உதவி புரிந்து, உங்களை பெரும் கூட்டத் திரளாகவும் ஆக்கினோம்.

(பின்னர் அவர்களை நோக்கி,) நீங்கள் நன்மை செய்தால் (அது) உங்களுக்குத்தான் நன்று. நீங்கள் தீமை செய்தால் அது உங்களுக்கே (கேடாகும் என்று நாம் கூறினோம். எனினும், பின்னும் அவர்கள் அக்கிரமம் செய்யத்தலைப்பட்டனர். ஆகவே,) அதுவே இரண்டாவது தவணை (உங்களுக்கு) வந்த சமயத்தில், (உங்களைத் துன்புறுத்தி) உங்களுடைய ரூபத்தையே கெடுத்து, முந்திய தடவை மஸ்ஜிதுல் அக்ஸாவில் நுழைந்தவாறே (இந்தத் தடவையும் அதனுள்) நுழைந்து, தங்கள் கைக்குக் கிடைத்தவைகளையெல்லாம் இடித்தழித்து நாசமாக்கக் கூடியவர்களை (நாம் உங்கள் மீது) ஏவினோம்.

**(அல்குர்ஆன், 17:4-7)**

மேலே குறிப்பிடப்பட்ட பனூ இஸ்ராயீல் என்ற அத்தியாயத்தின் அவ் வசனங்கள் தவ்ராத்தில் செய்யப்பட்ட மோசடியை வெளிப்படுத்தும் பைத்துல்முகத்தஸின் வரலாற்றைப் பதிவு செய்கிறது. தவ்ராத்தின் வசனம் இதோ.

நீங்கள் நேர்வழியில் இருப்பதற்காக இப்புனித பூமி உங்களுக்கு வழங்கப்படவில்லை. மாறாக நீங்கள் பெருமைக்குரியவர்கள் என்பதால்.

**(டியூட்ரோனமி, 9:6)**

யூதர்களுக்கு பைத்துல்முகத்தஸ் எந்த நிபந்தனையுமின்றி வழங்கப்பட்டது என்ற கருத்தை உருவாக்குவதால் மேற்கூறப்பட்ட கூற்று மோசடியானதே! வேறு வார்த்தைகளில் கூறுவதானால், எந்த நிபந்தனையுமில்லாததால் நேர்வழியில் இல்லாமல் இருக்கும் ஒரு யூதர் பைத்துல்முகத்தஸ் தனக்கே உரியது என்று வாதம் புரிய இது இடமளிக்கிறது. இபுராஹீம் நபி நேர்வழியில் இருந்ததால் அவருக்கும், அவருடைய சந்ததிகளுக்கும் பைத்துல்முகத்தஸ் வழங்கப் பட்டதாக யூதர்கள் வாதிடுவார்கள்! யூதர்களின் எந்த நிபந்தனை

மீறல்களும் பைத்துல்முகத்தஸை அவர்களுக்கு இல்லாமல் ஆக்க முடியாது. இத்தனைக்குப் பிறகும் கீழ்வரும் தவ்ராத்தின் வசனம் இவ்விஷயத்தில் மிகத் தெளிவாக இருக்கிறது.

எனவே எனது வார்த்தைகளை உம் மனதில் பதிய வைக்கவும். உங்கள் கரங்களில் அது அடையாளமாகவும், நெற்றியில் குறியீடாகவும் அது இருக்கட்டும். உங்கள் குழந்தைகளுக்கும் கற்றுக்கொடுக் கவும். நீங்கள் வீட்டிலும், வெளியிலும் இருக்கும்போதும் (அதை ஓதவும்) படுக்கும் போதும், எழுந்திருக்கும்போதும், உங்கள் வீட்டு நிலைகளிலும், கதவுகளிலும் பொறித்து வைக்கவும். புனித பூமிக்கு நீங்களும் உங்கள் பிள்ளைகளும் பிரவேசிக்கும் வரை, பூமிக்கு மேல் வானம் இருக்கும் வரை. புனித பூமி அவர்களுக்கு வழங்கப்படும் என உங்கள் இறைவன் உங்கள் மூதாதையர்களுக்கு சத்தியம் செய்து கொடுத்திருக்கிறான். நான் கட்டளையிடப்பட்ட முறைப்படி நீங்கள் உண்மையாக நடந்து உங்கள் இறைவனை நேசித்து அவர் வழியில் எல்லா தேசங்களையும் உங்களை விட்டு விலகிச் செல்ல வைப்பான். உங்கள் எண்ணிக்கையைவிட அதிகமான மக்கள் கொண்ட தேசங்களை நீங்கள் எடுத்துக் கொள்வீர்கள். உங்கள் பாதம் படுகின்ற இடமெல்லாம் உங்களுடையதாகும், உங்கள் நிலப் பரப்பு பாலைவனத்திலிருந்து லெபனான் வரையிலும், யூஃப்ரடீஸ் நதியிலிருந்து மேற்குக்கடல் வரையிலும் விரிவடையும். எந்த மனித னும் உங்களுக்கு முன் நிற்கமுடியாது. இறைவன் உங்களுக்கு வாக்க ளித்தது போல நீங்கள் பாதம் வைக்கின்ற அனைத்து இடங்களிலும் உங்கள் மேல் அச்சத்தையும் பயத்தையும் போட்டு விடுவான்.

**(டியோட்ரோனமி, 11:18-25)**

(யூத என்ஸைக்ளோபீடியாவில் மைக்கேல் அவியோனாவின் கட்டுரை, தாவூத்(அலை) அவர்களின் வெற்றியில் எகிப்திலிருந்து யூஃப்ரடீஸ் வரை உள்ள நீண்ட நிலப்பரப்பிற்கு ஜெரூசலத்தை மையமாக ஆக்கினார் என்ற கருத்தை உறுதிப்படுத்துகிறது. தாவூத் (அலை) அவர்களுக்குப் பின் சுலைமான் (அலை) காலத்தில்தான் அந்நிலப்பரப்பின் முழு ஆட்சியும் யூதர்களுக்குக் கிடைத்தது)

ஆனால் **டியோட்ரோனமியின் 9:6 11:18-25** ஆகிய வசனங்கள் பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாவதற்கு நம்பிக்கை, நல்லறங்கள் என்ற எந்த நிபந்தனைகளும் தேவை இல்லை என்று கூறுவது பொய்யானதே ஆகும். திருக்குர்ஆன் பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாவதற்கு நேர்

வழியில் இருப்பதை நிபந்தனையாக இட்டது மட்டுமல்ல (அல்குர்ஆன், 21:105) மேலும் அந்த நிபந்தனைகள் மீறப்பட்டபோதெல்லாம் அவர்கள் பைத்துல்முகத்தஸை விட்டும் வெளியேற்றப்பட்டார்கள் என்ற வரலாற்றுச் சான்றுகளையும் கவனப்படுத்துகிறது. அந்தக் குர்ஆன் வசனம் (குறைந்தது) இரண்டு தருணங்களில் இஸ்ரவேலர்கள் இபுராஹீம் நபியின் மார்க்கத்தை கெடுத்து, நன்னடத்தையைக் கைவிட்டதால் பைத்துல் முகத்தஸை விட்டு வெளியேற்றப்பட்டார்கள் என எண்ணிக்கையைச் சுட்டிக்காட்டுகிறது. (இதைப் பற்றிய மேல திகமான விளக்கங்களுக்கு இபுராஹீம் நபியின் மார்க்கமும், இஸ்ரேல் தேசமும் என்ற நமது நூலைக் காண்க)

முதல் தருணம் கி.மு587-இல் புக்த் நஸ்ர் உடைய தலைமையில் பாபிலோனியப் படை ஜெருசலத்தை முற்றுகையிட்டது. நகரை எரித்து மக்களைக் கொன்று சுலைமான் நபியால் கட்டப்பட்ட பள்ளிவாசலை இடித்து யூதர்களை அடிமைகளாக்கி பாபிலோனுக்குக் கூட்டிச் சென்றார். இவ்வாறு நடக்குமென்று ஜெரமைய்யா எச்சரித்தார்.

(ஜெரமைய்யா, 32:36)

அல்லாஹ் எந்த மக்களையும் அவர்களுக்கு எச்சரிக்கை விடுப்ப தற்கு முன் அழிப்பதில்லை என்று அல்லாஹ் குர்ஆனில் கூறியிருப்பது இங்கு சிந்திக்கத்தக்கது.

(அல்குர்ஆன், 17:15-16)

பைபிளை எழுதியவர்கள் ஜெருசலமும், பள்ளிவாசலும் அழிக்கப் பட்டது இறைத் தண்டனைதான் என்பதைக் கண்டுகொள்ளாமல் பின்வருமாறு குற்றம் சாட்டுகின்றனர்:

இறைவா! மக்கள் உன் வாரிசுகளைத் தாக்கிவிட்டார்கள். உன் பரிசுத்தப் பள்ளிவாசலை அழித்து விட்டார்கள். ஜெருசலத்தை பாழடைந்ததாக ஆக்கிவிட்டார்கள்.

(சாம், 79:1)

அவர்கள் பல விஷயங்களில் அல்லாஹ் ஹராமாக்கியிருப்பதை (தடை செய்யப்பட்டதை) ஹலாலாக்கி (அனுமதிக்கப்பட்டதாக) தவ்ராத்தை மாற்றிய காரணத்தால் இவ்வாறு தண்டிக்கப்பட்டார்கள். யூதர்கள் அல்லாதவர்களிடம் வட்டி வாங்குவதற்கு அனுமதியளிக்கும் விதத்தில் தவ்ராத்தை மாற்றி எழுதினார்கள். இன்னும் யூதர்களுக்குள்

வட்டி வாங்குவது தடையாகத்தான் இருக்கிறது.

வட்டியின் அடிப்படையில் உங்கள் சகோதரனிடம் கடன் கொடுக்காதீர்கள்! பணமாக இருந்தாலும் பொருளாக இருந்தாலும் சரியே (அன்று பொருட்கள் பண்ட மாற்று முறையில் பயன்படுத்தப் பட்டன) அந்நியருக்கு (யூதர் அல்லாதவருக்கு) வட்டி அடிப்படையில் கடன் கொடுத்துக் கொள்ளுங்கள்.

**(டியோட்ரோனமி,23:19-20)**

இஸ்லாத்தில் ரிபா தடுக்கப்பட்டதன் முக்கியத்துவம் குர்ஆன், ஹதீஸில் ரிபாவின் தடை என்னும் நமது நூல்களில் இந்த விஷயத் தைப்பற்றி மேலும் தெளிவான விபரங்களைக் காணலாம்.

அல்லாஹ்வின் தூதர்களை யூதர்கள் கொன்றபோது (உதார ணத்திற்கு **அல்குர்ஆன், 2:61**-ஐ காண்க) இரண்டாவது முறையாக பைத்துல்முகத்தஸை விட்டு விரட்டப்பட்டார்கள். ஜகரிய்யா நபி (அலை) அவர்களைப் பள்ளிவாசலில் கொன்றார்கள். அவருடைய மகன் யஹ்யா நபி (அலை) அவர்களை துரோகத்தால் கொன்றார்கள். ஈஸா நபி (அலை) அவர்கள் இந்த நபிமார்களின் கொலையைக் குறிப்பிட்டு, அருவெறுக்கத்தக்க இந்தக் குற்றத்தை பகிரங்கமாகக் கண்டிக்கிறார்.

எனவேதான் அல்லாஹ்வின் நுண்ணறிவு கூறுகிறது: நான் தூதர்களையும், ரஸூல்மார்களையும் அனுப்புவேன், சிலரை அவர்கள் கொல்வார்கள். சிலரை நோவினைப்படுத்துவார்கள். ஏபிலிலிருந்து ஜகரிய்யா (பள்ளிவாசலுக்கும் அறுக்குமிடத்திற்கும் இடையில்) வரை எத்தனை நபிமார்கள் கொலை செய்யப்பட்டார்களோ அவர்கள னைவரின் பாவமும் இந்த (யூத)ச் சமுதாயத்தின் மீது போடப்படும்.

**(லூக், 11:49-51)**

இறுதியில் மர்யமின் குமாரர் ஈஸா நபியை தாங்கள் கொன்று விட்டதாகப் பெருமையாக் கூறிக்கொள்கிறார்கள் (ஆனால் அல்லாஹ் அவர்களை மரணத்தை விட்டும் காப்பாற்றினான்)

وَقَوْلِهِمْ إِنَّا قَتَلْنَا الْمَسِيحَ عِيسَى ابْنَ مَرْيَمَ رَسُولَ اللَّهِ وَمَا قَتَلُوهُ وَمَا صَلَبُوهُ وَلَكِنْ شُبِّهَ لَهُمْ وَإِنَّ الَّذِينَ اخْتَلَفُوا فِيهِ لَفِي شَكٍّ مِنْهُ مَا لَهُمْ بِهِ مِنْ عِلْمٍ إِلَّا اتِّبَاعَ الظَّنِّ وَمَا قَتَلُوهُ يَقِينًا

## குர்ஆனில் ஜெருசலம்

மேலும், அல்லாஹ்வுடைய தூதர், மர்யமுடைய மகன் ஈஸா மஸீஹை, நிச்சயமாக நாம் (சிலுவையில் அறைந்து) கொலை செய்து விட்டோம் என்று அவர்கள் கூறியதன் காரணமாகவும் - (அவர்களைச் சபித்தோம்) அவரை அவர்கள் வெட்டவுமில்லை; அவரை அவர்கள் சிலுவையில் அறையவுமில்லை. (அவர் இருந்த அறைக்குள் அவரைத் தேடிச் சென்றவன், அவரைப்போல் ஆக்கப்பட்டு விட்டான் தேடிச் சென்ற மற்றவர்கள் அவனையே சிலுவையில் அறைந்தனர். இதனால்) அவர்கள் சந்தேகத்திற்குள்ளாக்கப்பட்டு விட்டனர். ஆகவே, எவர்கள் இதற்கு மாறான அபிப்ராயம் கொண்டிருக்கிறார்களோ அவர்கள், வீண் சந்தேகத்திலேயே ஆழ்ந்துவிட்டனர். வீண் சந்தேகத்தைப் பின்பற்றுவதன்றி, அதில் அவர்களுக்கு உண்மையான ஞானம் கிடை யாது. நிச்சயமாக அவர்கள் அவரை வெட்டவே இல்லை.

**(அல்குர்ஆன், 4:157)**

இதன் பிறகுதான் அல்லாஹ் அவர்களை இரண்டாவது தடவை தண்டித்தான். கி.பி70-இல் ஜென்ரல் டைட்டஸின் தலைமையில் ரோமானியப் படை ஜெருசலத்தை முற்றுகையிட்டது. டைட்டஸ் ஜெருசலம் நகரை அழித்து, அங்கிருந்தவர்களைக் கொன்று மீதமுள் ளவர்களை பைத்துல்முகத்தஸை விட்டும் விரட்டினார், மேலும் பள்ளிவாசலை இடித்து, அதில் உருக்கி ஊற்றப்பட்ட தங்கத்தை எடுப்பதற்காக ஒவ்வொரு கல்லையும் பெயர்த்து எடுத்தார்கள். ஒரு கல்லும்கூட மிஞ்சாது அனைத்தும் வீசியெறியப்படும் என்று ஈஸா நபி(அலை) எச்சரித்தது இங்கு நினைவுகூரத்தக்கது. இதே கருத் தைத் தெரிவிக்கின்ற குர்ஆன் குறிப்பைக் காண்க

**(அல்குர்ஆன், 17:4-7)**

وَقَضَيْنَا إِلَى بَنِي إِسْرَائِيلَ فِي الْكِتَابِ لَتُفْسِدُنَّ فِي الْأَرْضِ مَرَّتَيْنِ وَلَتَعْلُنَّ عُلُوًّا كَبِيرًا

فَإِذَا جَاءَ وَعْدُ أُولَاهُمَا بَعَثْنَا عَلَيْكُمْ عِبَادًا لَنَا أُولِي بَأْسٍ شَدِيدٍ فَجَاسُوا خِلَالَ الدِّيَارِ

وَكَانَ وَعْدًا مَفْعُولًا

ثُمَّ رَدَدْنَا لَكُمُ الْكَرَّةَ عَلَيْهِمْ وَأَمْدَدْنَاكُمْ بِأَمْوَالٍ وَبَنِينَ وَجَعَلْنَاكُمْ أَكْثَرَ نَفِيرًا

إِنْ أَحْسَنْتُمْ أَحْسَنْتُمْ لِأَنْفُسِكُمْ وَإِنْ أَسَأْتُمْ فَلَهَا فَإِذَا جَاءَ وَعْدُ الْآخِرَةِ لِيَسُوءُوا وُجُوهَكُمْ

وَلِيَدْخُلُوا الْمَسْجِدَ كَمَا دَخَلُوهُ أَوَّلَ مَرَّةٍ وَلِيُتَبِّرُوا مَا عَلَوْا تَتْبِيرًا

இஸ்ராயீலின் சந்ததிகளாகிய உங்களைப் பற்றி, (அல்லாஹ் கூறும்போது) "நிச்சயமாக நீங்கள் இரண்டு தடவை அந்த பூமியில் விஷமம் செய்வீர்கள் " என்றும் "நிச்சயமாக நீங்கள் பெரும் அகம்பாவம் கொண்டு அக்கிரமம் செய்வீர்கள்" என்றும் (உங்களுக்களித்த) வேதத்தில் நாம் வரைந்துள்ளோம்.

அவ்விரண்டில் முதல் தவணை வந்த சமயத்தில், நம் அடியார்களில் (இரக்கமற்ற) பெரும் பலவான்களாகிய மனிதர்களை உங்கள் மீது ஏவிவிட்டோம். அவர்கள் (பைத்துல்முகத்தஸிலிருந்த உங்கள்) வீடுகளுக்குள் ஊடுருவிச் சென்று (தங்கள் கைக்குக் கிட்டியதையெல்லாம் இடித்தழித்து (நாசமாக்கி) விட்டார்கள். (அதனால் பைத்துல்முகத்தஸிலிருந்த ஆலயமும், அவ்வூரும் அழிந்து நாசமாயின. இவ்வாறு நம்முடைய முந்திய) வாக்குறுதி நிறைவேறியது.

பின்னர் (உங்கள்) காலச் சக்கரத்தைத் திருப்பி, உங்களுக்கு வெற்றியைக் கொடுத்து, (ஏராளமான) பொருள்களையும் மக்களையும் கொண்டு நாம் உங்களுக்கு உதவி புரிந்து, உங்களைப் பெரும் கூட்டத்திரளாகவும் ஆக்கினோம்.

(பின்னர் அவர்களை நோக்கி,) நீங்கள் நன்மை செய்தால் (அது) உங்களுக்குத்தான் நன்று. நீங்கள் தீமை செய்தால் அது உங்களுக்கே (கேடாகும் என்று நாம் கூறினோம். எனினும், பின்னும் அவர்கள் அக்கிரமம் செய்யத் தலைப்பட்டனர். ஆகவே,) அதுவே இரண்டாவது தவணை (உங்களுக்கு) வந்த சமயத்தில், (உங்களைத் துன்புறுத்தி) உங்களுடைய ரூபத்தையே கெடுத்து, முந்திய தடவை மஸ்ஜிதுல் அக்ஸாவில் நுழைந்தவாறே (இந்தத் தடவையும் அதனுள்) நுழைந்து, தங்கள் கைக்குக் கிடைத்தவைகளையெல்லாம் இடித்தழித்து நாசமாக்கக் கூடியவர்களை (நாம் உங்கள் மீது) ஏவினோம்.

**(அல்குர்ஆன், 17:4-7)**

.......பாவிகள் தங்குமிடத்தை, அதிசீக்கிரத்தில் நான் உங்களுக்குக் காண்பிப்பேன்என்றும் (நாம் கூறினோம்)

**(அல்குர்ஆன், 7:145)**

இந்த விஷயத்தைக் கூறுவதற்கு முன்னால் அல்லாஹ் நபி(ஸல்) அவர்களின் இரவுப் பயணத்தைப் பற்றிய செய்தியை கூறும்போது அங்கு அல்மஸ்ஜித் என்று குறிப்பிட்டிருக்கிறான். அதற்குப் பிறகுதான்

இந்த அழிவைப்பற்றிய செய்தியைக் கூறுகிறான். எனவே அங்கு அழிக்கப்பட்டதாக கூறப்படும் பள்ளிவாசல் என்பது சுலைமான் நபியால் கட்டப்பட்ட மஸ்ஜிதுல் அக்ஸா தான் என்பதை ஊகிக்க முடியும். இரவுப்பயணத்தில் நான் எந்த மஸ்ஜிதுக்கு அழைத்துச் செல்லப்பட்டேனோ அந்த மஸ்ஜித் மஸ்ஜிதுல்அக்ஸா தான் என்று நபி(ஸல்) அவர்களே உறுதிப்படுத்தியுள்ளார்கள். அல்லாஹ் தன் அத்தாட்சிகளை நபி(ஸல்) அவர்களுக்கு காண்பிப்பதற்காக அழைத்துச் சென்றதாக குர்ஆன் கூறுகிறது. அந்த அத்தாட்சிகளில் ஜெரூசலத்தின் எதிர்காலம் குறித்த விபரங்களும் அடங்கியே இருக்கின்றன.

பைத்துல்முகத்தலை விட்டும் இரண்டாவது முறையாக யூதர்கள் தண்டிக்கப்பட்ட பிறகு அல்லாஹ் ஒரு செய்தியைப் பதிவு செய்கிறான். அதில் நம்பிக்கை, நல்லறங்கள் என்ற நிபந்தனைகளை மீறி பைத்துல்முகத்தலை அவமதிக்கும் காலமெல்லாம் (துரத்தப்பட்டவர்களாகவே) தண்டனையிலேயே இருப்பார்கள் என அல்லாஹ் உறுதியிட்டுக் கூறுகிறான்.

وَإِنْ عُدتُّمْ عُدْنَا وَجَعَلْنَا جَهَنَّمَ لِلْكَافِرِينَ حَصِيرًا ﴿٨﴾

பின்னும் நீங்கள் (உங்கள் விஷமத்தின் பால்) திரும்பினால், நாமும் (உங்களை முன்போல் தண்டிக்க) முன் வருவோம். மேலும் (இத்தகைய) நன்றி கெட்டோரை நரகம் சூழ்ந்து கொள்ளும்படியும் செய்வோம்.

**(அல்குர்ஆன், 17:8)**

ஜெரூசலத்தின் தலைவிதி மேற்கூறப்பட்ட வசனத்தில் தெளிவாக எழுதப்பட்டிருகிறது. கீழே நாம் குறிப்பிடும் நிகழ்வுகள் நடந்த பிறகும் நிபந்தனைகள் மீறப்பட்டால் விரட்டப்படுகின்ற நிலையே தொடரும்.

- **மத விரோத ஐரோப்பிய யூத தேசியவாதிகளுக்கும், மதச்சார்பற்ற பாலஸ்தீன தேசிய பிரதிநிதிகளுக்கும் இடையில் டேவிட் கேம்பில் நடந்த அமைதி உடன்படிக்கைகள்**
- **பிரிட்டிஷ் பாராளுமன்றத்தை யூத தேசத்தின் மெய்க்காப்பாளர்களாகவும், பாதுகாவலர்களாகவும் மாற்றிய அமெரிக்க செனடர்களின் உறுதிமொழிகள்.**
- **ஐக்கிய நாடுகளின் சபையின் உறுதிமொழிகள்**

இவ்வளவு ஆதரவும் பாதுகாப்பும் அல்லாஹ்வின் தண்ட னையை தடுத்து நிறுத்த முடியாது.

மேற்கூறப்பட்ட உடன்படிக்கைகள், ஆதரவுகள் பைத்துல் முகத்தஸை மாசுபடுத்தி, அழிவுற்ற, கடவுளில்லாத, அடக்குமுறை செய்யும் துணிவை இஸ்ரேலுக்கு வழங்கியிருக்கிறது. அவைகளில் சிலவற்றை இந்நூலின் இரண்டாம் பாகத்தில் விளக்கியிருக்கிறோம். அதில் இஸ்ரேல் தேசத்தின் அரசியல் (ஷிர்க்), அதன் பொருளாதாரம் ரிபா ஆகியவற்றை ஆய்வு செய்கிறோம். முன்னர் இரண்டு முறை இறைத் தண்டனையை அனுபவித்த அதே நிலைக்கு ஆளாகப் போகிறது என்பது தான் இஸ்ரேலுடைய தலைவிதியாகும். இரண்டா வது தடவை ரோமானியப் படையால். மூன்றாவதும், கடைசியுமாக இஸ்ரேல் தேசம் முஸ்லிம் படையால் அழிக்கப்படும்.

ஜெரூசலத்திற்கு அழைத்துச் செல்லப்பட்ட நபி (ஸல்) அவர் களின் இரவுப் பயணத்தில் அல்லாஹ் நபி (ஸல்) அவர்களுக்கு காண் பித்த அத்தாட்சிகளில் ஜெரூசலத்தில் தலைவிதியும் இருந்தது என் பதை டாக்டர் பைப்ஸ் கவனிக்கத் தவறிவிட்டார்.

இறுதித் தூதர் முஹம்மது நபி(ஸல்) அவர்கள் வரலாற்றின் இறுதிக் காலத்தைக் கண்டார்கள். அந்த இறுதிக் காலத்தில் யூதர் கள் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்புவார்கள் என்பதை தம் ஆன்மீக ஞானத்தால் கண்டார்கள். கடவுள் இல்லாத, அழிவுற்ற, அடக்குமுறை செய்யும் இஸ்ரேல் தேசம் உருவாகும் என்பதையும் கண்டார்கள். ஈஸா (அலை) திரும்பி வருவதையும் முஸ்லிம் படையால் இஸ்ரேல் தேசம் அழிக்கப்படுவதையும் கண்டார்கள். இபுராஹீம் நபியின் மார்க்கத்தில் உண்மை, நீதி, நேர்வழி இருப்பதைக் கண்டு, உண்மையான மஸீஹ் திரும்பும்போது அந்த மார்க்கத்தையே மீட்டெடுப்பார் என்பதையும் தம் ஆன்மீக ஞானத்தால் கண்டார்கள்.

## அத்தியாயம் 7

# பைத்துல்முகத்தஸிலிருந்து மக்காவுக்குத் திரும்புதல்

أَفَلَمْ يَسِيرُوا فِي الْأَرْضِ فَتَكُونَ لَهُمْ قُلُوبٌ يَعْقِلُونَ بِهَا أَوْ آذَانٌ يَسْمَعُونَ بِهَا فَإِنَّهَا لَا تَعْمَى الْأَبْصَارُ وَلَكِنْ تَعْمَى الْقُلُوبُ الَّتِي فِي الصُّدُورِ

அவர்கள் பூமியில் சுற்றித் திரிந்து (இவைகளைப்) பார்க்கவில்லையா? (அவ்வாறு பார்ப்பார்களாயின்,) உணர்ந்து கொள்ளக்கூடிய இதயங்கள் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும்; அல்லது (நல்லுபதேசத்தைக்) கேட்கக் கூடிய செவி அவர்களுக்கு உண்டாயிகிருக்கும். நிச்சயமாக அவர்களுடைய (வெளிக்) கண்கள் குருடாகவில்லை. எனினும், நெஞ்சங்களில் இருக்கும் (அவர்களுடைய அகக்) கண்கள் குருடாகிவிட்டன.

**(அல்குர்ஆன், 22:46)**

(அவர்கள் பூமி முழுவதும் சுற்றிப்பார்க்க வேண்டாமா? ஒருகால் அவர்களது மரணித்த உள்ளங்கள் உயிர் பெறலாம். அகத்தைப் பார்க்கும் உள்ளார்ந்த பார்வையையும் உள்ளார்ந்த செவிப்புலனையும் பெற்றுக் கொள்வார்கள். அவர்களின் புறக்கண்கள் குருடானவையாக இருக்கின்றன)

பைத்துல்முகத்தஸ், ஜெருசலம், சுலைமான் நபி கட்டிய ஆலயம் ஆகியவை யூதர்களின் அடிப்படை மத நம்பிக்கையோடு சம்பந்தப்பட்டவை என யூத மத அறிஞர்கள் கருதுகிறார்கள். இந்த நம்பிக்கையின் அடிப்படையில், பைத்துல்முகத்தஸில் யூதர்கள்

நுழைதல், இஸ்ரேல் தேசத்தை மீட்டெடுத்தல், சுலைமான் நபியின் ஆலயத்தை புனர்நிர்மாணம் செய்தல் ஆகியவை மூலம்தான் யூத மதத்துக்கு உயிரூட்ட முடியும் என்ற முடிவுக்கு அவர்கள் வந்தார்கள். ஆனால் மேற்கூறப்பட்ட விஷயத்தில் சியோனிஸத்திற்கு எந்தப் புனிதத் தத்துவமோ, ஆன்மிகப் பார்வையோ கிடையாது. என்றாலும் சியோனிஸவாதிகள் இதற்காக உழைக்க முன்வருகிறார்கள் என்றால் அதற்கு உண்மையில் அரசியல், வரலாறு, மதச்சார்பின்மை, தேசியம் ஆகியவைதான் உந்துதலாக இருந்தன.

மதச்சார்பின்மையில் கொள்கைகள் எப்பொழுதும் மதச் சார்பற்ற உலகம் மாறுவதற்கேற்ப மாறிக்கொண்டே இருக்கும். எனவே தனியாக நிற்க முடியாது எதையாவது தொற்றிக் கொண்டுதானிருக்க வேண்டும். ஐரோப்பிய யூதர்கள் தற்பொழுது ஆர்வம் செலுத்தும், பைத்துல்முகத்தஸ், ஜெரூசலம், சுலைமான் நபியின் ஆலயம் ஆகிய வையும் சூழ்நிலையின் அவசியத்திற்காக அவர்கள் ஏற்படுத்திக் கொண்டவை, நிலையானவை அல்ல, மாறக்கூடிய அளவில்தான் உள்ளன. யூதமத அறிஞர்கள் இவைகளைத் தங்களின் அடிப்படை நம்பிக்கையாகக் கருதும் நிலையில் இவர்களோடு கைகோர்ப்பது இயலாததாகும்.

மறுபக்கம் மார்க்கத்தின் சாரம் என்பது நம்பிக்கையாகும் என குர்ஆன் பறை சாற்றுகிறது. அந்த நம்பிக்கை என்பது, அல்லா ஹுத்தஅலா, மலக்குமார்கள், வேதங்கள், தூதர்கள், உலக அழிவு, தீர்ப்புநாள், சொர்க்கம், நரகம் ஆகியவற்றை நம்புவதாகும். அல்லாஹ் தான் உண்மை, நம்பிக்கை மனிதனின் இதயத்தில் வசிக்கிறது. நம்பிக்கை உண்மையை அடைந்து விட்டால் (உண்மை) இதயத்தில் நுழைகிறது. அல்லாஹுத்தஆலா, நிலத்தைவிட, நகரத் தைவிட, ஆலயத்தைவிட மிகப் பெரியவன். என் வானங்களும் பூமியும் என்னை உள்ளடக்குவதற்கு மிகச் சிறியவையாகும், ஆனால் ஒரு இறைவிசுவாசியின் உள்ளம் என்னை உள்ளடக்கி கொள்ளும் என அல்லாஹுத்தஆலா கூறுவதாக நபி (ஸல்) ஹதீஸ் குத்ஸியில் கூறு கிறார்கள்.

இறுதித் தூதர் உலகுக்கு வந்தபோது மார்க்கத்தின் உள்ள மையைப் புரிந்து கொள்ளாததாலும், வெளிப்புறத்தை மட்டுமே அங்கீகரிக்கிற மனப்போக்காலும் யூதர்கள் திகைத்துவிட்டனர்.

முஹம்மது நபி (ஸல்) அவர்கள் அரபியாக இருந்ததால் அவர் நபியாக இருக்க முடியாது என வாதிட்டனர். யத்ரிபின் ஹிஜாஸ் நகருக்கு (இன்று மதீனா) நபி (ஸல்) வந்தபொழுது தவ்ராத்தின் வழிமுறைப்படி யூதர்கள் நோன்பு நோற்பது போலவே (அஸ்தம் தொடங்கி அஸ்தம் வரை) நோன்பு நோற்றார்கள். மேலும் தொழுகைக்கு நின்றபோதும் பைத்துல்முகத்தஸை முன்னோக்கியே தொழுதார்கள். பதினேழு மாதங்களுக்குப்பின் யூதர்கள் நபி (ஸல்) அவர்களை நபியாகவும் அவர் கொண்டு வந்த வேதத்தை அல்லாஹ்வின் வேதமாகவும் ஏற்றுக் கொள்ளாதது மட்டுமன்றி, முஸ்லிம்களின் ஒற்றுமையைக் குலைத்து ஆற்றலை அழிப்பதற்கான சதித் திட்டங்களில் ஈடுபட்டார்கள். அல்லாஹ் ஜெரூசலத்தை விட்டு மக்காவை நோக்கித் திரும்பிவிடுமாறு நபி (ஸல்) அவர்களுக்குக் கட்டளையிட்டான்.

இந்தக் கிப்லா மாற்றம் (தொழுகையில் முன்னோக்கும் திசை மாற்றம்) யூதர்களைப் பலவிதமாக விமர்சனம் செய்ய வைத்தது. மதத்தின் சாரம் ஜெரூசலத்தோடு பின்னிப்பிணைந்தது என்று அவர்கள் நம்பி இருந்ததால் (அதற்கெதிராக) இந்த மாற்றம் நிகழ்ந்தது அவர்களுக்கு அவமதிப்பாக இருந்தது. அவர்களின் விமர்சனங்களுக்குக் குர்ஆன் வெறுப்புடனே பதிலளிக்கிறது.

سَيَقُولُ السُّفَهَاءُ مِنَ النَّاسِ مَا وَلَّاهُمْ عَنْ قِبْلَتِهِمُ الَّتِي كَانُوا عَلَيْهَا قُلْ لِلَّهِ الْمَشْرِقُ وَالْمَغْرِبُ يَهْدِي مَنْ يَشَاءُ إِلَى صِرَاطٍ مُسْتَقِيمٍ

(நபியே! முஸ்லிம்கள் முன்னர்) நோக்கிவந்த 'கிப்லா'விலிருந்து அவர்களைத் திருப்பிவிட்டது எது? என, மனிதர்களில் அறிவீனர்கள் சிலர் கேட்க ஆரம்பிப்பார்கள். (அதற்கு) நீர் கூறும்: கிழக்கும் மேற்கும், அல்லாஹ்வுக்குரியனவே! அவன் விரும்புபவர்களை, (மேலான) நேரான வழியில் செலுத்துவான்

**(அல்குர்ஆன், 2:142)**

ஜெரூசலம் என்பது தான் மார்க்கத்தின் ஆதாரமாகவும், இதயமாகவும் இருக்கிறது (உலகத்தில் அதை யாராலும் மாற்ற முடியாது) என்ற பொய்யான நம்பிக்கையில் யூதர்கள் இருக்கிறார்கள் என்பதை குர்ஆன் கூறுகிறது.

وَلَئِنْ أَتَيْتَ الَّذِينَ أُوتُوا الْكِتَابَ بِكُلِّ آيَةٍ مَا تَبِعُوا قِبْلَتَكَ وَمَا أَنْتَ بِتَابِعٍ قِبْلَتَهُمْ

ஆகவே (நபியே!) வேதங்கொடுக்கப்பெற்ற அவர்களுக்கு(த் திருப்தியளிக்கும் பொருட்டு) எல்லாவிதமான சான்றுகளையும் நீர் கொண்டு வந்தபோதிலும், அவர்கள் உம்முடைய 'கிப்லா'வைப் பின்பற்றப் போவதில்லை; நீரும் அவர்களுடைய 'கிப்லா'வைப் பின்பற்றப் போவதில்லை................

**(அல்குர்ஆன், 2:145)**

இறுதியாக, இபுராஹீம் நபியின் மார்க்கத்தின் அடிப்படை, ஜெரூசலம், பைத்துல்முகத்தஸ், ஆலயம் ஆகியவற்றில்தான் இருக்கிறது என்ற அவர்களின் பொய்யான நம்பிக்கையை தகர்க்கும் வண்ணம் அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்.

**لَيْسَ الْبِرَّ أَنْ تُوَلُّوا وُجُوهَكُمْ قِبَلَ الْمَشْرِقِ وَالْمَغْرِبِ وَلَكِنَّ الْبِرَّ مَنْ آمَنَ بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ وَالْمَلَائِكَةِ وَالْكِتَابِ وَالنَّبِيِّينَ وَآتَى الْمَالَ عَلَى حُبِّهِ ذَوِي الْقُرْبَى وَالْيَتَامَى وَالْمَسَاكِينَ وَابْنَ السَّبِيلِ وَالسَّائِلِينَ وَفِي الرِّقَابِ وَأَقَامَ الصَّلَاةَ وَآتَى الزَّكَاةَ وَالْمُوفُونَ بِعَهْدِهِمْ إِذَا عَاهَدُوا وَالصَّابِرِينَ فِي الْبَأْسَاءِ وَالضَّرَّاءِ وَحِينَ الْبَأْسِ أُولَئِكَ الَّذِينَ صَدَقُوا وَأُولَئِكَ هُمُ الْمُتَّقُونَ**

மேற்கிலோ, கிழக்கிலோ உங்கள் முகங்களை நீங்கள் திருப்புவது (மட்டும்) நன்மை (செய்ததாக) ஆகிவிடமாட்டாது. எனினும் (உங்களில்) எவர் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் மலக்குகளையும் வேதத்தையும் நபிமார்களையும் மெய்யாகவே விசுவாசித்து, பொருளை (அது எவ்வளவோ விருப்புக்குரியதாயினும்) அவனுடைய விருப்பைப் பெறுவதற்காகப் பந்துக்களுக்கும் அநாதைகளுக்கும் ஏழைகளுக்கும் வழிப் போக்கர்களுக்கும் யாசகர்களுக்கும் விடுதலையை விரும்பிய (அடிமைகள், கடன்காரர்கள் முதலிய)வர்களுக்கும் கொடுத்து(தவி செய்து) தொழுகையையும் கடைப்பிடித்து ஜக்காத்தும் (மார்க்க வரியும்) கொடுத்து வாக்குறுதியை(ச் சரிவர) நிறைவேற்றுபவர்களும்; நஷ்டத்திலும் கஷ்டத்திலும் கடுமையான யுத்த நேரத்திலும் பொறுமையைக் கைக்கொண்டவர்களும் ஆகிய இவர்கள்தாம் நல்லோர்கள். மேலும் இவர்கள் தாம் உண்மையானவர்கள்; பயபக்தியுடையவர்கள்.

**(அல்குர்ஆன், 2:177)**

எனவே ஜெரூசலத்திலிருந்து மக்காவுக்கு கிப்லாவை மாற்றியது இஸ்லாத்தின் மீது எந்த எதிர்மறையான எண்ணத்தையும் ஏற்படுத்தவில்லை. மார்க்கத்தின் அடிப்படையை ஒரு குறிப்பிட்ட

நிலப்பரப்பில் அடக்கி வைத்திருந்த அவர்களின் கண்ணோட்டத்தை மாற்றுவதற்கு குர்ஆன் எடுத்துக்கொண்ட தெளிவான முயற்சியாகும். யூதர்களுக்கு குர்ஆனுடைய செய்தி மிகத்தெளிவானதாக இருந்தது. அதாவது, முஹம்மது நபி (ஸல்) அவர்கள் யூதராக இல்லாமலும், ஒரு நீண்ட காலம் ஜெரூசலத்தை முன்னோக்காதவராக இருந்தும் அவரால் அல்லாஹ்வின் தூதராக நிலைக்க முடிந்தது என்பதை யூதர்கள் உணரவேண்டும். மார்க்கத்தின் சாரம் அந்த நிலப் பகுதியில்தான் இருக்கிறது என்றால் அதை மாற்றியவுடன் அவர் நபியாக இருப்பது சாத்தியமில்லாமல் ஆகியிருக்க வேண்டும். ஜெரூசலம்தான் மார்க்கத்தின் ஆன்மிக பீடம் எனப் பிடிவாதமாக இருந்த யூதர்களுக்கு கிப்லா மாற்றப்பட்டது ஒரு துரதிஷ்ட அடையாளமாகும்.

ஜெரூசலத்திலிருந்து திரும்பிய பிறகும் நபி(ஸல்) அவர்கள் மீது அல்லாஹ்வின் கோபப்பார்வை விழவில்லை என்றால் அவர் ஓர் உண்மையான தூதராக இருந்தார் என்று ஆகும். ஜெரூசலத்திலிருந்து திரும்பியதற்காக நபி(ஸல்) எந்த விதத்திலும் துன்பப்படவில்லை, மாறாக நாங்கள் இறைவனுக்கு நெருக்கமானவர்கள் என்ற இறுமாப்புடனிருந்த யூதர்களையே தோற்கடிக்கவும் செய்தார்கள்.

அதே போல கிப்லா மாற்றம் இஸ்லாத்திற்கு ஜெரூசலத்தோடு இருக்கிற எந்த உறவையும், உரிமையையும் இல்லை என்று ஆக்கிடாது என்பதும் தெளிவானதாகும். அதற்கு மாறாக, முஹம்மது நபி(ஸல்) அவர்களும் அவரைப் பின்பற்றுபவர்களும்தான் இபுராஹீம் நபிக்கு நெருக்கமானவர்கள் என்று அல்லாஹ் கூறுகிறான்.

إِنَّ أَوْلَى النَّاسِ بِإِبْرَاهِيمَ لَلَّذِينَ اتَّبَعُوهُ وَهَذَا النَّبِيُّ وَالَّذِينَ آمَنُوا وَاللَّهُ وَلِيُّ الْمُؤْمِنِينَ

நிச்சயமாக மனிதர்களில் இபுராஹீமுக்கு மிக்க நெருக்கமானவர்கள் (எவர் என்றால்) அவரைப்பின்பற்றியோரும், இந்த நபியும், (இவரை) விசுவாங்கொண்டவர்களும் தாம். அல்லாஹ் இந்த விசுவாசிகளை (நேசித்து) இரட்சிப்போனாக இருக்கின்றான்.

**(அல்குர்ஆன், 3:68)**

குர்ஆனின் இத் தீர்மானத்தின் மூலம் நாம் பெறும் படிப்பினை என்னவென்றால் முஹம்மது நபி (ஸல்) அவர்களை உண்மையாக பின்பற்றுபவர்கள்தான் பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாக ஆகுகின்ற உரிமையுடையவர்கள் என்பதாகும். இந்த உண்மையை உறுதிப்படுத்துவதே ஜெருசலத்தின் தலைவிதியாகும்.

## யூதர்கள் அல்லாஹ்வின் கருணையைப் பெறுவதற்கான வாய்ப்பு.

கிப்லா மாற்றத்தில் மேலே குறிப்பிட்ட அந்த படிப்பினையைவிட முக்கியமான வேறு படிப்பினைகளும் இருக்கின்றன.

யூதர்கள் மூஸா நபி சினாய் மலைக்குச் சென்றபோது தங்க உலோகக் காளைக் கன்றை வணங்கினார்கள், அல்லாஹ் (தடுக்கப்பட்டதாக) ஹராம் ஆக்கியிருப்பதை (அனுமதிக்கப்பட்டதாக) ஹலால் ஆக்குவதற்காக தவ்ராத்தை மாற்றி எழுதியது, ஈஸா நபி(அலை) அவர்களை தாங்கள் கொன்று விட்டதாகப் பெருமையடிப்பது ஆகியவை அவர்கள் அல்லாஹ்வுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தின் தொடர்ச்சியான மீறுதல்களாகும். இவ்வனைத்து பாவங்களினால் அல்லாஹ் அவர்களுக்குத் தயார்படுத்தி வைத்திருக்கும் தண்டனையிலிருந்து தப்பிப்பதற்கு ஒரே ஒரு வாய்ப்பு மட்டும் மீதமிருப்பதாக அல்லாஹ் கூறுகிறான். நபிமார்களின் இறுதி நபியாக இருக்கிற அரபு நாட்டின் முஹம்மது நபி(ஸல்) அவர்களை ஏற்றுக்கொள்வதுதான் அந்த வாய்ப்பு. அவரை ஏற்று நம்பிக்கை கொண்டால் அல்லாஹ்வின் மன்னிப்பையும் கிருபையையும் பெற முடியும். இந்த உறுதிமொழி பின்வரும் குர்ஆன் வசனங்களில் வழங்கப்பட்டுள்ளது. ஏற்கெனவே இன்ஜீலையும், தவ்ராத்தையும் பெற்றுக் கொண்ட யூதர்களை அழைத்துக் கூறுகிறது. அல்லாஹ்வின் ஒப்பந்தத்தை மீறியதற்கும், பெரிய பாவங்களுக்கும் பதிலளிக்கும் விதத்தில் அல்லாஹ் கூறுகிறான்.

قَالَ عَذَابِي أُصِيبُ بِهِ مَنْ أَشَاءُ وَرَحْمَتِي وَسِعَتْ كُلَّ شَيْءٍ فَسَأَكْتُبُهَا لِلَّذِينَ يَتَّقُونَ وَيُؤْتُونَ الزَّكَاةَ وَالَّذِينَ هُمْ بِآيَاتِنَا يُؤْمِنُونَ الَّذِينَ يَتَّبِعُونَ الرَّسُولَ النَّبِيَّ الْأُمِّيَّ الَّذِي يَجِدُونَهُ مَكْتُوبًا عِنْدَهُمْ فِي التَّوْرَاةِ وَالْإِنْجِيلِ يَأْمُرُهُمْ بِالْمَعْرُوفِ وَيَنْهَاهُمْ عَنِ الْمُنْكَرِ وَيُحِلُّ لَهُمُ الطَّيِّبَاتِ وَيُحَرِّمُ عَلَيْهِمُ الْخَبَائِثَ وَيُحَرِّمُ عَلَيْهِمُ الْخَبَائِثَ وَيَضَعُ عَنْهُمْ إِصْرَهُمْ وَالْأَغْلَالَ الَّتِي كَانَتْ عَلَيْهِمْ فَالَّذِينَ آمَنُوا بِهِ وَعَزَّرُوهُ وَنَصَرُوهُ وَاتَّبَعُوا النُّورَ الَّذِي أُنْزِلَ مَعَهُ أُولَئِكَ هُمُ الْمُفْلِحُونَ

இன்னும் இவ்வுலகத்திலும், மறுமையிலும் எங்களுக்கு (அழகிய) நன்மைகளையே விதித்தருள்வாயாக! நிச்சயமாக நாங்கள் உன்னையே முன்னோக்குகிறோம்" (என்றும் பிரார்த்தித்தார்). அதற்கு இறைவன், "என்னுடைய வேதனையைக் கொண்டு நான் நாடியவரைப் பிடிப்பேன்; ஆனால் என்னுடைய அருளானது எல்லாப் பொருள்களிலும் (விரிந்து, பரந்து) சூழ்ந்து நிற்கிறது; எனினும் அதனை பயபக்தியுடன் (பேணி) நடப்போருக்கும், (முறையாக) ஜகாத்து கொடுத்து வருவோருக்கும் நம்முடைய வசனங்களை நம்புகிறவர்களுக்கும் நான் விதித்தருள் செய்வேன்" என்று கூறினான்.

எவர்கள் எழுதப்படிக்கத் தெரியாத நபியாகிய நம் தூதரைப் பின்பற்றுகிறார்களோ - அவர்கள் தங்களிடமுள்ள தவ்ராத்திலும் இன்ஜீலிலும் இவரைப் பற்றி எழுதப்பட்டிருப்பதைக் காண்பார்கள்; அவர், அவர்களை நன்மையான காரியங்கள் செய்யுமாறு ஏவுவார்; பாவமான காரியங்களிலிருந்து விலக்குவார்; தூய்மையான ஆகாரங்களையே அவர்களுக்கு ஆகுமாக்குவார்; கெட்டவற்றை அவர்களுக்குத் தடுத்து விடுவார்; அவர்களுடைய பளுவான சுமைகளையும், அவர்கள் மீது இருந்த விலங்குகளையும், (கடினமான கட்டளைகளையும்) இறக்கிவிடுவார்; எனவே எவர்கள் அவரை மெய்யாகவே நம்பி, அவரைக் கண்ணியப்படுத்தி, அவருக்கு உதவி செய்து, அவருடன் அருளப்பட்டிருக்கும் ஒளிமயமான (வேதத்)தையும் பின்பற்றுகிறார்களோ, அவர்கள்தாம் வெற்றி பெறுவார்கள்.

**(அல்குர்ஆன், 7:156-157)**

மேலே கூறிய குர்ஆன் வசனம் முஹம்மது நபி(ஸல்) அவர்களைத்தான் குறிப்பிடுகிறது என்பது தெளிவு.

நபி (ஸல்) மதீனா வந்தபோது யூதர்களுக்கான "வாய்ப்பு" அவர்களுக்குமுன் தயாராக இருந்தது. அவர்கள் நபி(ஸல்) அவர்களை ஏற்று நம்பிக்கை கொண்டிருந்தால் அல்லாஹ்வின் கருணையைப் பெற்றிருக்க முடியும். ஆனால் அவரை அவர்கள் மறுத்தால் இறைவனின் கருணை வாசல் மூடப்பட்டு இறைத்தண்டனை தொடங்கும் என்ற நிலை இருந்தது. ஒட்டு மொத்த யூத வரலாற்றிலும் இது நெருக்கடியான தருணம். பிறகு அவர்களுக்கு விதிக்கப்பட்டதை உலகம் காணும்.

நபி (ஸல்) மதீனா வந்தபோதுதான் நான் அல்லாஹ்வின் தூதரும், அவர்கள் எதிர்பார்த்திருந்த தூதரும் ஆவேன் என்பதை புரிய வைப்பதற்காக பல விஷயங்களைச் செய்தார்கள். மதீனாவுக்கு வந்த முதல் 17 மாதங்கள் பைத்துல்முகத்தஸை நோக்கித் தொழுதார்கள். இபுராஹீம் நபியின் மார்க்கத்தின்படி வணங்குபவர்களின் கிப்லாவாக அது இருந்தது, எனவே நபி (ஸல்) அவ்வாறு செய்தார்கள். ஒவ்வொரு அரபிக்கும் புராதனமானது கஃபா தான், என்றாலும் அவர்களுடைய எண்ணங்களைக்கூட இரண்டாவது பட்சமாக வைத்து யூதர்களின் எண்ணங்களுக்கு முக்கியத்துவம் வழங்கினார்கள். இதுவே தாம் உண்மை நபி என்று விளங்குவதற்குப் போதுமானதாக இருந்தது. ஆனால் நபி (ஸல்) இதைவிட அதிகமாகவே செய்தார்கள். தவ்ராத் தின் வழிமுறைப்படி யூதர்கள் நோன்பு நோற்பது போலவே (அஸ்தம் தொடங்கி அஸ்தம் வரை) நோன்பு நோற்றார்கள். வரலாறு முழுவதும் எந்த ஒரு அரபியும் இதுபோலச் செய்ததில்லை. ஆனால் ஒட்டுமொத்த முஸ்லிம் சமூகமும் அவ்வாறு நோன்பு நோற்றது. இது முஹம்மது நபி (ஸல்) அல்லாஹ்வின் தூதர்தான் என்று யூதர்களை ஏற்றுக்கொள்ளச் செய்திருக்க வேண்டும். இறுதியில் ஒரேயடியாக முத்திரை இடப்பட வேண்டிய ஒரு விஷயம் நடந்து விட்டது.

யூதர்கள் விபச்சாரம் செய்த இரண்டு நபர்களை நபி(ஸல்) அவர்களுக்குமுன் கொண்டுவந்தார்கள். இவ்விருவரையும் தண்டிக்க வேண்டும் என கேட்டுக்கொண்டார்கள், முன்னர் எப்படி அவர்கள் தண்டித்திருக்கிறார்கள் என நபி (ஸல்) கேட்டார்கள். முகத்தில் கரியைப் பூசி பொது இடத்தில் வைத்து அடிப்போம் என்று பதில் சொன்னார்கள். இந்த தண்டனை அவர்கள் வேதத்திலிருந்து எடுக்கப் பட்டதா? என நபி (ஸல்) கேட்டு வேதத்தை வரவழைத்து அதைப் படித்துக் காட்டும்படி வேண்டினார்கள். நபி (ஸல்) எழுதப் படிக்கத் தெரியாதவர்களாதலால் அவர்களில் ஒருவர் வேதத்தை வாசித்தார், நபி (ஸல்) அவர்களுக்கருகில் முன்னாள் பாதிரி அப்துல்லாஹிப்னு ஸலாம் (ரலி) அவர்கள் இருந்தார்கள். வாசித்தவர் விபச்சாரத்தின் தண்டனை ரஜ்ம் (கல்லெரிதல்) என்று குறிப்பிடப்பட்ட வார்த்தையை விரல் வைத்து மறைத்துவிட்டார், அப்துல்லாஹிப்னு ஸலாம் (ரலி) அவர்கள் அவரின் விரலை விலக்கிவிட்டு படிக்கச் சொன்னார்கள். பிறகு விபச்சாரத் திற்கு ரஜ்ம் தண்டனை வழங்கப்பட வேண்டும் என்ற வசனம் படிக்கப் பட்டது. அந்த வசனம் படித்துக்காட்டப்பட்டது யூதர்களுக்கு பெரும் மன உளைச்சலை ஏற்படுத்தியது. தன் சொந்த வேதத்திலேயே மோசடி செய்து அதை மறைக்கின்ற மக்களாக ஆயினர். பிறகு நபி

(ஸல்) அவ்விருவருக்கும் கல்லெறிந்து கொல்கின்ற தண்டனையை வழங்கினார்கள். இவ்வாறு யூதர்களே நடைமுறைப்படுத்த முன் வராத யூதச் சட்டம் நடைமுறைப் படுத்தப்பட்டது. இந்த நிகழ்ச் சியானது நபி (ஸல்) அவர்கள் உண்மையான தூதர் என்று யூதர்கள் ஏற்றுக்கொள்ளப் போதுமானதாக இருந்தது. பதினேழு மாதங்க ளுக்குப்பின் யூதர்கள் நபி (ஸல்) அவர்களை நபியாகவும் அவர் கொண்டு வந்த வேதத்தை அல்லாஹ்வின் வேதமாகவும் ஏற்றுக் கொள்ளாதது மட்டுமன்றி, முஸ்லிம்களின் ஒற்றுமையைக் குலைத்து, ஆற்றலை அழிப்பதற்கான சதித்திட்டங்களில் ஈடுபட்டது தெளிவாகி விட்டது. இத்தருணத்தில்தான் அல்லாஹ் கிப்லாவை ஜெருசலத்தி லிருந்து மக்காவுக்கு மாற்ற உத்திரவிட்டான். மேலும் அல்லாஹ் சண்டையிடுவதும்(கிதால்) நோன்பு நோற்பதும் (ஸவ்ம்) கட்டாயக் கடமை என்ற சட்டத்தை இறக்கினான். மூன்று சட்டங்களும் ஷஃபான் மாதத்தில் இறங்கின. ஆனால் நோன்பு நோற்பது விஷயத்தில் தவ்ராத் தில் கூறப்பட்ட நோன்பு நோற்கும் முறையை மாற்றிவிட்டான். நோன்பு நோற்பதன் புதிய சட்டம் பிறப்பிக்கப்பட்டது. அதாவது உதயம் தொடங்கி அஸ்தம் வரை என்பது புதிய சட்டமாகியது. இரவில் சாப்பிடுவது, குடிப்பது, உடலுறவு கொள்வது ஆகியவை அனுமதிக்கப்பட்டன.

அவர்கள் அந்தச் சட்டங்களை மாற்றியதன் முதல் விளைவு இன்று அது காலாவதியாக்கப்பட்டவையாக இருக்கின்றன. இனி அச்சட்டங்கள் நடைமுறைப்படுத்துவதற்கு உகந்தவையல்ல. அடுத்த மிக துரதிஷ்டமான விளைவு, யஃஜூஜ், மஃஜூஜ் உடைய வெளி யேற்றம் தொடங்கிவிட்டதாக நபி (ஸல்) அவர்கள் கண்ட கனவு ஆகும். நபி (ஸல்) அவர்கள் இப்னு சய்யாதைச் சந்திக்க உமர் (ரலி) அவர்களோடு சென்றபோது போலி மஸீஹ் தஜ்ஜாலின் வெளி யேற்றத்தை உறுதிப்படுத்தினார்கள். உமர் (ரலி) இப்னு சய்யாதை கொல்ல அனுமதி கேட்டபோது "அவன் உண்மையாக தஜ்ஜாலாக இருந்தால் உன்னால் அவனைக் கொல்லமுடியாது, உண்மையாக தஜ்ஜாலாக இல்லையெனில் அவனைக் கொன்ற பாவம் உன்னைச் சேரும்." எனக்கூறினார்கள். இது தஜ்ஜால் பூமியில் வெளியாகி விட்டான் என்ற செய்தியை தெளிவாக்குகிறது.

இப்பொழுது யஃஜூஜ், மஃஜூஜும், தஜ்ஜாலும் வெளியாகி விட்டார்கள் என்றால் கடைசி காலம் (குழப்பமான காலம்) என்பது நபி (ஸல்) அவர்கள் காலத்திலேயே கிப்லா மாற்றத்திற்குப்பின்

தொடங்கிவிட்டது என்று அர்த்தமாகிறது. யூதர்கள் அல்லாஹ்வின் கருணையைப் பெறும் வாய்ப்பின் கதவு நிரந்தரமாக மூடப்பட்டுவிட்டது. இறைவனின் மாபெரும் தண்டனை தற்பொழுது தொடங்கும்.

**(காண்க, அத்தியாயம்-12, உபதலைப்பு-7)**

இனி எப்பொழுதும் யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாக மாட்டார்கள். யஃஜூஜ், மஃஜூஜ் வெளியாகி பூமியில் எல்லாத் திசைகளிலும் பரவி உலகத்தைத் தங்கள் ஆதிக்கத்தில் கொண்டுவந்து, யஃஜூஜ், மஃஜூஜ் முறை ஆட்சியை நிலைநாட்டும்போது தான் யூதர்கள் பைத்துல்முகத்தஸில் நுழையமுடியும். அப்படி நடக்கும்போது அதன் மூலமாகத்தான் அல்லாஹ் யூதர்களின் மாபெரும் தண்டனையைக் கொண்டுவருவான்.

அத்தியாயம் 8

# ஈஸா நபி(அலை) உண்மை மஸீஹ். தஜ்ஜால் போலி மஸீஹ்

وَنُقَلِّبُ أَفْئِدَتَهُمْ وَأَبْصَارَهُمْ كَمَا لَمْ يُؤْمِنُوا بِهِ أَوَّلَ مَرَّةٍ وَنَذَرُهُمْ فِي طُغْيَانِهِمْ يَعْمَهُونَ ﴿١١٠﴾

மேலும், நாம் அவர்களுடைய உள்ளங்களையும் அவர்களுடைய பார்வைகளையும் திருப்பிவிடுவோம் - அவர்கள் முதலில் இதை நம்பாமல் இருந்தது போலவே; இன்னும் அவர்கள் தங்களுடைய வழிகேட்டிலேயே தட்டழிந்து திரியுமாறு அவர்களை நாம் விட்டுவிடுவோம்.

**[அல்குர்ஆன் 6:110]**

[அதாவது, யூதர்கள் செய்த பல விஷயங்களில் மர்யமின் மகன் ஈஸா நபி(அலை) அவர்களைப் புறக்கணித்தபோது அவர்களின் உள்ளங்களையும் பார்வைகளையும் அல்லாஹ் குழப்பத்தில் ஆழ்த்தி விட்டான்.]

## ஈஸா நபி (அலை) அவர்கள் மஸீஹ் ஆவார்

இஸ்ரவேலர்களின் நபிமார்கள், மஸீஹ் என்று அறியப்படும் ஒரு தூதர் அனுப்பப்பட்டு, தாவூத் நபி (அலை) அவர்களின் அரியணை யிலிருந்து உலகம் முழுவதையும் அவர் ஆள்வார் என அல்லாஹ் வாக்க ளித்திருப்பதாக இஸ்ரவேலர்களிடம் கூறினார்கள். இது சுலைமான் நபியின் பொற்காலம் திரும்ப கொண்டுவரப்படும் என்ற முன்னறிவிப்பாக மாறிவிட்டது.

**1குரோனிகள்ஸ் (17:11-15)**-இல் தீர்க்கதரிசி நாதன் மூலம் இறைவன் தாவூத் அரசரிடம் மஸீஹ் பற்றிப் பேசி, அவரை தாவூதின் மகன் என்று அழைத்தார்.

உங்களுடைய வாழ்நாள் முழுமையடைந்து நீங்கள் உங்கள் முன்னோர்களுடன் சென்றுவிடும்போது உங்கள் சந்ததியில் ஒரு அடியாரைத் தேர்ந்தெடுத்து அவருக்கு ஆட்சியதிகாரத்தையும் வழங்கு வோம். அவர் எனக்காக ஒரு வீடு கட்டுவார், நான் அவரின் ஆட்சியை நிலையாக வைத்திருப்பேன். நான் அவருடைய தந்தையாவேன், அவர் என் மகனாவார். உங்களுக்கு முன் இருந்தவர்களிடம் பிடுங்கியதைப்போல அவரிடமிருந்து என் கருணையை எடுத்துவிடமாட்டேன். ஆனால் அவரை என் வீட்டில், என் அரசாட்சியில் நிரந்தரமாக வைத்திருப்பேன். மேலும் அவரின் அரசாட்சியும் எப்போதும் நிலைத்திருக்கும்.

**[1 குரோனிகல்ஸ், 17:11-15]**

பல ஆண்டுகள் கழித்து இசய்யா பின்வருமாறு சிலவற்றைச் சேர்த்துக்கொண்டார்:

நமக்கு ஒரு குழந்தை பிறக்கும், அவர் நமக்கு மகனாக இருப்பார். அரசாட்சி அவருக்கு வழங்கப்படும். ஆச்சரியமானவர், நலம் விரும்பி, மகாப்பெரியவர், பேராற்றலுடையவர், அமைதியின் இளவரசர் என்றெல்லாம் அவருடைய பெயர் இருக்கும். அவருடைய அரசாட்சி விரிவடைந்துகொண்டிருக்கும், அமைதி என்றும் நிலைத்தி ருக்கும். தாவூத் நபியின் அரியணையில் ஆட்சி செய்வார். நீதி, நியாயம் நிலைநாட்டப்படும். இவையனைத்தும் இறைவனின் பெருங் கருணையால் சாத்தியப்படும்.

**(இசய்யா, 9:6-7)**

**ஜெரமய்யா அவரை இவ்வாறு குறிப்பிடுகிறார்.**

...........தாவூத்(அலை) அவர்களின் நேர்வழியின் கிளையில்.
**(ஜெரமய்யா,23:5-6)**

**இசய்யா மேலும் அவரைப் பற்றி எழுதுகிறார்.**

என் உயிர் பிரகாசித்துக்கொண்டிருக்கிற என் அடியாரைப் பாரும், என் உயிரை அவருள் வைத்தேன், அவர் யூதர் அல்லாதவருக்கு தீர்ப்புச் செய்வார்.

அவர் அழமாட்டார், சப்தத்தை உயர்த்தி அது தெருவின் கடைசி வரை கேட்கச் செய்யமாட்டார். எந்த புல் செடியையும் பிடுங் கமாட்டார். எந்த விளக்கையும் அணைக்க மாட்டார். உண்மையான நீதியை நிலைநாட்டுவார்.

அவர் தோற்கமாட்டார், நம்பிக்கை இழக்கமாட்டார், நீதத் தால் பூமியை நிரப்பும் வரை. பள்ளத்தாக்கு வாசிகள் நீதமான ஆட் சியை எதிர்பார்த்திருப்பார்கள்.
**[இசய்யா, 42:1-4]**

நான் உனக்கு யூதர் அல்லாதவர்களுக்காக ஒர் ஒளியையும் கொடுப்பேன், உலக முடிவு நாள் வரை நீர் என் தீர்வாக இருக்கலாம்.
**[இசய்யா, 49:6]**

மஸீஹ் நீதமான ஆட்சியாளராக (ஹாகிமுல் ஆதில்) இருப்பார் என நபி(ஸல்)கூறினார்கள்.

**அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்:**

எவன் கையில் என் உயிர் இருக்கிறதோ அவன் மீது ஆணையாக, மர்யமின் மகன் ஈஸா விரைவில் உங்களுக்கு மத்தியில் ஒரு நீதமான ஆட்சியாளராக இறங்கி வருவார். அவர் சிலுவையை உடைத்து, பன்றியைக் கொன்று ஜிஸ்யா (முஸ்லிம்கள் கட்டுப்பாட்டிலிருக்கும் யூதர்களும், கிருஸ்துவர்களும் செலுத்த வேண்டிய) வரியை ஒழிப்பார். மேலும் அப்போது ஏராளமான பணம் இருக்கும், தர்மத்தை வாங்க யாரும் இருக்க மாட்டார்கள்.
**(ஸஹீஹ் புகாரி)**

## இரண்டு மாறுபட்ட மஸீஹ்களின் வர்ணனை

தவ்ராத்தில் வாக்களிக்கப்பட்ட மஸீஹை வரவேற்பதில் யூதர்கள் மகிழ்ச்சியடைந்தார்கள். இரண்டு மாறுபட்ட தோற்றங்களும் செயல்பாடுகளுமுடைய இருவரின் தோற்றத்தால் குழம்பினர். முத லாவது மஸீஹ், வெற்றிவாகை சூடும் அரசன். "அல்லாஹ்வால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களுக்கு" (அக்காலத்தில் யூதர்களாக இருந்தவர்கள்) பைத்துல்முகத்தஸை மீட்டுக்கொடுத்து உலகை அமைதியாக ஆள்வார். இரண்டாவது மஸீஹ், பணிவானவர், கஷ்டப்படக்கூடியவர், மஸீஹை "இறைவனின் அடிமை" எனவும், செழிப்பானவராகவும், மேன்மையானவராகவும் இருப்பார்" என வர் ணித்த இசய்யா தெளிவான இரண்டு மாறுபட்ட வர்ணனைகளைச் செய்கிறார்: பாருங்கள்! என் அடியார் புத்திசாலித் தனமாகச் செயல் படுவார். அவரின் அந்தஸ்து உயர்வாகும். உயர்ந்த இடத்தைப் பெறுவார்.

**(இசய்யா, 52:13)**

ஆனால் "அடிமை" பற்றி மேற்குறிய விபரத்துடனே அதே மூச்சில் அவரை மனிதராக எண்ண முடியாத அளவு மிக கோரமானவராகவும் வர்ணிக்கிறார். இவ்வாறு ஒருவர் உயர்ந்த நிலையையும், தாழ்ந்த நிலையையும் அடைகிறார்.

அவர் முகம் மற்ற எல்லோரையும்விட விகாரமாக இருப்பது மற்றவர்களை விட கோரமாக இருப்பது பலருக்கு ஆச்சரியமளிக்கக் கூடியதாக இருந்தது.

**(இசய்யா, 52:14)**

யாரும் நினைத்துக் கூடப் பார்த்திருக்க முடியாது. அந்த "அடியார்" முன்பக்கமும், பின்பக்கமும் தாக்கப்படுவார் என முன்னறி விப்புச் செய்தார். முகத்தில் உமிழப்பட்டு கேவலப்படுத்தப்படுவார் என இசய்யா கூறினார்.

**(இசய்யா, 50:4-11)**

இது அப்படியே ஈஸா நபிக்கு நடந்தது. ஒரு கிருஸ்துவ எழுத்தாளர் ஹால் லிண்டே என்பவர் கீழ்வருமாறு சம்பவத்தை விமர் சித்து **5:13**-இலிலும் **53:12**-இலிலும் இசய்யா கூறிய முன்னறிவிப்பு உறுதியாகிவிட்டதைத் தீர்மானமாகக் கூறினார்.

"சட்டத்திற்குப் புறம்பான ஆறு வழக்குகள் சுமத்தப்பட்டபோது ஈஸா நபி (ஏசு) கீழ்கண்டபடிதான் நடத்தப்பட்டார்.

சன்ஹர்டின் ஈஸாவைக் கண்டித்தபின் ஹெரால்ட் ஆலய பாதுகாப்பு அதிகாரிகள் அவரின் முகத்தில் உமிழ்ந்தார்கள். பிறகு அவர்கள் அவருடைய கண்களைக் கட்டி அவர் முகத்தில் அடித்தார்கள். முள்கிரீடம் அவர் தலையில் கவிழ்க்கப்பட்டு ரோமானிய சவுக்கால் கொடூரமான முறையில் அடிக்கப்பட்டார். அந்த சவுக்கு தோல் பட்டைகளாலும், எலும்பாலும் இரும்புத்துகள்களாலும் செய்யப்பட்டது. கடுமையான வேதனையை அனுபவிக்கச் செய்வதற்காக.

**(ஹால் லிண்ட்ஸே "த மஸய்யா"ஹார்வெஸ்ட் ஹவுஸ் பப்ளிஷர்ஸ் ஒரேகான், 1982. பக்கம், 108-109)**

இசய்யாவே ஓர் இடத்தில் மஸீஹை "தேசத்தால் வெறுக்கப்பட்டவராக, நிந்திக்கப்பட்டவராக" **(49:7)** என வர்ணித்துவிட்டு, யூதர்கள் மஸீஹைக் கொடுமைப்படுத்துபவர்களாக இருந்தனர் என யூதர்களை இனம் காட்டுகிறார்.

அடிப்படையிலேயே அந்த வசனத்தில் **(49:7)** "தேசம்" என்று ஒருமையில்தான் உள்ளது, ஆனால் இப்பொழுதுள்ள மொழிபெயர்ப்பில் "தேசங்கள்" என்று இருக்கிறது. இது மொழிபெயர்ப்பில் செய்யப்பட்ட அநீதம் என ஹால் லிண்ட்ஸே குற்றம் சாட்டுகிறார்.

"திருத்தி வடிவைக்கப்பட்ட பைபிளிலும், சான்கினோ யூத விளக்கவுரையிலும் "அவர் தேசங்களால் அருவெறுக்கப்பட்டார்" (தேசங்கள் என்று பன்மையாக) என்று மொழிபெயர்த்திருப்பது அநியாயமாகும். தேசங்கள் என்று மொழி பெயர்க்கப்படும்போது (அது யூதர்கள் அல்லாதவர்களைக் குறிப்பிடுவதாக அமையும்.) யூதர்கள் அல்லாதவர்கள்தான் அடியாரை நிந்தித்தார்கள், அருவெறுத்தார்கள் என்று அமையும். மேலும் அந்த அடியார் என்பது இஸ்ரேல், தேசங்கள் என்பது யூதர்கள் அல்லாதவர்கள், யூதர்கள் அல்லாதவர்கள் இஸ்ரேலை நிந்தித்தார்கள் என்று விளக்கம் கூறிக்கொண்டிருக்கிறார்கள். (ஒருகால் யூதர்கள் வரலாற்றில் அது நடந்திருக்கலாம்.) அதற்காக இந்த வசனத்தை "தேசங்கள்" என்று மொழிபெயர்ப்பதை நியாயப்படுத்த முடியாது. ஹீப்ரு மொழியில் "கோய்" என ஒருமைச் சொல்தான் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. அது தேசம் என ஒருமையில் மட்டும்தான் மொழிபெயர்க்க முடியும்.

அப்படியென்றால் அது இஸ்ரேலைத்தான் குறிக்கும். (யூதர்கள்தான் அந்த அடியாரை நிந்தித்தார்கள் என்ற அர்த்தத்தில்)

இதோ கிங் ஜேம்ஸ் பதிப்பின் பைபிளின் ஆதாரப்பூர்வ மொழிபெயர்ப்பு:

"இஸ்ரவேலர்களை மீட்டெடுக்கின்றவர், புனிதமானவர், அவரைத்தான் கேவலப்படுத்துவார்கள், அவரைத்தான் தேசம் அருவெறுக்கும், அவரிடம் இருக்கின்ற இறை நம்பிக்கையின் காரணத்தால் மன்னர் களும் இளவரசர்களும் மதிப்பார்கள். அவரைத்தான் இறைவன் தேர்ந்தெடுப்பான்.

**(இசய்யா, 49:7)**

ஜெனிஸிஸ் உடைய காலத்திலிருந்தே இந்த முன்னறிவிப்புக் கூறப்பட்டு வருகிறது. அதாவது அவர் தாவூது, சுலைமான் நபியின் அரியணையில் உலகை ஆட்சி செய்வார். அவர் "ஷைலோஹ்" என்று வர்ணிக்கப்படுகிறார்.

அரசாணையைச் செயல்படுத்துபவன் (அவருடைய மகன்) ஜூதாவை விட்டுப் பிரியமாட்டான். ஆட்சியாளர்களின் பணியாளர்களும் நகரமாட்டார்கள். ஷைலோஹ் வரும் வரை. அவருக்கு மக்கள் கட்டுப் படுவார்கள்.

**(ஜெனிஸிஸ், 49:10)**

இந்த முன்னறிவிப்பு மஸீஹ் எந்த குலத்திலிருந்து வருவார் என்பதை மட்டும் கூறவில்லை. மாறாக எதிர்கால மன்னர் பரம் பரைக்குத் தொடர்புள்ளவராகவும் சித்திரிக்கப்படுகிறார். மஸீஹூக்கு ஷைலோஹ் என்ற தனிப்பட்ட பெயர் சொல்லப்படுவதும் புராதன பாதிரிகளின் விளக்கங்களிலிருந்து அறியக்கிடைக்கிறது. இங்கு அவர் ஜூதா எனும் குலத்திலிருந்து வருவார் எனக் கூறப்படுகிறது.

மஸீஹ் குழந்தையாகப் பிறந்து (பிறகு பெரிதாகி) இறுதியாக உலகை ஆள்வார் என்று கூறியதுவரை சரியாகத்தான் இருக்கிறது. "அவர் சக்திமிக்க கடவுளாகவும் இருப்பார்" என்று அறியப்படாத கை ஒன்று இசய்யாவின் வசனங்களைத் திருத்திய பொழுது தான் குழப்பம் ஏற்பட்டது. திருத்தப்பட்ட வசனம் மஸீஹை ஒரே நேரத்தில் மனிதனாகவும், கடவுளாகவும் கீழ்வருமாறு சித்திரிக்கிறது.

"நமக்கு ஒரு குழந்தை பிறக்கும், நமக்கு ஒரு மகன் கிடைப்பான். அரசாட்சி அவனுடைய தோளின் மீது போடப்படும். அவனுடைய பெயர் ஆச்சரியமானதாக இருக்கும். ஆலோசனை கூறுபவர், ஆற்றல் மிக்க கடவுள், அழியாத தந்தை, அமைதியின் இளவரசராக இருப்பார்.

**(இசய்யா, 9:6)**

அல்லாஹுதஆலா இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் தன் வாக்குறுதிபடி மர்யமின் மகன் ஈஸாவை இஸ்ரவேலர்களுக்கு அனுப்பியபோது அவர்கள் மார்க்கத்தின் வெளிப்புறத் தோற்றத்தைப் பற்றிக் கொண்டு, வருந்தத்தக்க விதத்தில் உள்ளமையை புறக்கணிப் பவர்களாகக் கண்டார். அவர்கள் தங்கள் மனவிருப்பத்திற்கிணங்க திருத்தி மாற்றி எழுதியபோது அந்த மார்க்கத்தின் வெளித்தோற்றம் கூட மாறிவிட்டது. வாக்களிக்கப்பட்ட மஸீஹ் தான் தான் என்பதை உறுதிப்படுத்தி, மார்க்கத்தின் உள்ளமையைப் போதித்து, வெளிப்புறத் தோற்றத்தின் முக்கியத்துவத்தை எதிர்த்தபோது சில யூதர்கள் அவரை ஏற்றுக்கொண்டார்கள். பலர் அவரை நிராகரித்தனர். இன்று வரை அவரை மஸீஹ் என ஏற்றுக்கொள்ள மறுத்துக் கொண்டே இருக்கிறார்கள். அவரைக் கொன்று விட்டதாகவும் பெருமைப்பட்டுக் கொள்வதைக் குர்ஆன் கூறுகிறது.

وَقَوْلِهِمْ إِنَّا قَتَلْنَا الْمَسِيحَ عِيسَى ابْنَ مَرْيَمَ رَسُولَ اللَّهِ

"நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்வின் தூதராகிய - மர்யமின் குமாரராகிய-ஈஸா மஸீஹை கொன்றுவிட்டோம்" என்று அவர்கள் கூறுவதாலும் (அவர்கள் சபிக்கப்பட்டனர்)

**(அல்குர்ஆன், 4:157)**

அவர் சிலுவையில் மரணித்ததை அவர்கள் கண்கூடாகக் கண்டபோது அவர் ஏமாற்றுபவர் என்று திட்டவட்டமாக நம்பினார்கள்.

"யார் தூக்கிலிடப்பட்டு மரணிக்கிறாரோ அவர் அல்லாஹ்வால் சபிக்கப்பட்டவர்" (மஸீஹ் ஆக இருக்கமுடியாது) என்று தவ்ராத்தின் வசனம் கூறுவதால் **(டியோட்ரோனமி, 21:23)** அவர் மஸீஹ் ஆக இருக்க முடியாது என்று சமாதானம் அடைந்தார்கள். இரண் டாவது மார்க்கமில்லா ரோமானிய ஆட்சியாளர்களிடமிருந்து பைத்துல்முகத்தஸை விடுவிக்கவில்லை என்பதும், தாவூத் நபியின் அரியணையிலிருந்து உலகை ஆட்சி செய்யவில்லை என்பதும் அவர் கள் அவரை மறுத்ததற்குக் காரணமாகும்.

அவ்வாறே அவர்கள் மஸீஹ் வருவார் என காத்திருக்கிறார்கள். ஈஸா நபியை மஸீஹ் ஆக ஏற்க மறுத்து, மஸீஹின் வருகைக்காக ஒவ்வொரு யூதரின் காத்திருப்பும், மறைமுகமாக அவரைச் சிலுவையில் அறைவதற்குத் தள்ளியிருக்கிறது. இவ்வாறே மஸீஹ் என்ற அவருடைய வாதத்தை மறுப்பது, அவரைக் கொலை (அவர்களின் எண்ணத்தில்) செய்வதோடு இணைக்கப்படுகிறது. ஈஸா நபி கொல்லப்பட்ட அல்லது சிலுவையில் அறையப்பட்ட விஷயத்தில் யூதர்கள் ஏமாற்றப்பட்டார்கள் என அல்லாஹ் குர்ஆனில் பறைசாற்றுகிறான்.

وَمَا قَتَلُوهُ وَمَا صَلَبُوهُ وَلَكِنْ شُبِّهَ لَهُمْ وَإِنَّ الَّذِينَ اخْتَلَفُوا فِيهِ لَفِي شَكٍّ مِنْهُ مَا لَهُمْ بِهِ مِنْ
عِلْمٍ إِلَّا اتِّبَاعَ الظَّنِّ وَمَا قَتَلُوهُ يَقِينًا

அவர்கள் சிலுவையில் அறையவுமில்லை. ஆனால் அவர்களுக்கு (அவரைப் போன்ற) ஒருவன் ஒப்பாக்கப்பட்டான்; மேலும் இவ்விஷயத்தில் அபிப்பிராய பேதம் கொண்டவர்கள், அதில் சந்தேகத்திலேயே இருக்கின்றார்கள் - வெறும் யூகத்தைப் பின்பற்றுவதேயன்றி அவர்களுக்கு இதில் எத்தகைய அறிவும் கிடையாது; நிச்சயமாக அவர்கள், அவரைக் கொல்லவே இல்லை.

**(அல்குஆன், 4:157)**

பிறகு அவருக்கு என்ன நேர்ந்தது? அவருக்கு என்ன நடந்தது என்று குர்ஆன் விளக்க ஐந்து அறிக்கைகளை வழங்குகிறது.

முதலாவது, யூதர்கள் ஈஸா நபியை கொலை செய்யவில்லை என குர்ஆன் கூறுகிறது.

இரண்டாவது, அவர்கள் அவரை சிலுவையில் அறையவில்லை.

மூன்றாவது, அல்லாஹ் தன்பால் எடுத்துக்கொண்டதாகக் கூறுகிறான். இவ்விஷயம் சம்பந்தமாக குர்ஆனில் இரண்டு விபரங்கள் உள்ளன.

إِذْ قَالَ اللَّهُ يَا عِيسَى إِنِّي مُتَوَفِّيكَ وَرَافِعُكَ إِلَيَّ وَمُطَهِّرُكَ مِنَ الَّذِينَ كَفَرُوا وَمُطَهِّرُكَ مِنَ
الَّذِينَ كَفَرُوا وَجَاعِلُ الَّذِينَ اتَّبَعُوكَ فَوْقَ الَّذِينَ كَفَرُوا إِلَى يَوْمِ الْقِيَامَةِ ثُمَّ إِلَيَّ مَرْجِعُكُمْ
فَأَحْكُمُ بَيْنَكُمْ فِيمَا كُنْتُمْ فِيهِ تَخْتَلِفُونَ

"ஈஸாவே! நிச்சயமாக நான் உம்மைக் கைப்பற்றுவேன்; இன்னும் என்னளவில் உம்மை உயர்த்திக் கொள்வேன்; நிராகரித்துக் கொண்டிருப்போருடைய (பொய்களில் நின்றும்) உம்மைத் தூய்மைப் படுத்துவேன்; மேலும் உம்மைப் பின்பற்றுவோரை கியாம நாள் வரை நிராகரிப்போருக்கு மேலாகவும் வைப்பேன்; பின்னர் உங்களுடைய திரும்புதல் என்னிடமே இருக்கிறது; (அப்போது) நீங்கள் தர்க்கம் செய்து கொண்டிருந்தது பற்றி நான் உங்களிடையே தீர்ப்பளிப்பேன்" என்று அல்லாஹ் கூறியதை (நபியே! நினைவு கூர்வீராக)!

**(அல்குர்ஆன், 3:55)**

وَإِذْ قَالَ اللَّهُ يَا عِيسَى ابْنَ مَرْيَمَ أَأَنْتَ قُلْتَ لِلنَّاسِ اتَّخِذُونِي وَأُمِّيَ إِلَٰهَيْنِ مِنْ دُونِ اللَّهِ ۖ قَالَ سُبْحَانَكَ مَا يَكُونُ لِي أَنْ أَقُولَ مَا لَيْسَ لِي بِحَقٍّ ۚ إِنْ كُنْتُ قُلْتُهُ فَقَدْ عَلِمْتَهُ ۚ تَعْلَمُ مَا فِي نَفْسِي وَلَا أَعْلَمُ مَا فِي نَفْسِكَ ۚ إِنَّكَ أَنْتَ عَلَّامُ الْغُيُوبِ ﴿١١٦﴾

مَا قُلْتُ لَهُمْ إِلَّا مَا أَمَرْتَنِي بِهِ أَنِ اعْبُدُوا اللَّهَ رَبِّي وَرَبَّكُمْ ۚ وَكُنْتُ عَلَيْهِمْ شَهِيدًا مَا دُمْتُ فِيهِمْ ۖ فَلَمَّا تَوَفَّيْتَنِي كُنْتَ أَنْتَ الرَّقِيبَ عَلَيْهِمْ ۚ وَأَنْتَ عَلَىٰ كُلِّ شَيْءٍ شَهِيدٌ ﴿١١٧﴾

இன்னும், மர்யமுடைய மகன் ஈஸாவே, அல்லாஹ்வையன்றி என்னையும் என் தாயாரையும் இரு கடவுள்களாக ஆக்கிக்கொள்ளுங்கள் என்று மனிதர்களிடம் நீர் கூறினீரா? என்று அல்லாஹ் கேட்கும் போது அவர், நீ மிகவும் தூய்மையானவன்; எனக்கு உரிமையில்லாத ஒன்றை நான் சொல்வதற்கில்லை; அவ்வாறு நான் கூறியிருந்தால், நீ அதை நிச்சயமாக அறிந்திருப்பாய்; என் மனத்திலுள்ளதை நீ அறிகிறாய்; உன் உள்ளத்திலிருப்பதை நான் அறியமாட்டேன்; நிச்சயமாக நீயே மறைவானவற்றையெல்லாம் நன்கு அறிபவன் என்று அவர் கூறுவார்.

நீ எனக்குக் கட்டளையிட்டபடி (மனிதர்களை நோக்கி), என்னுடைய இறைவனும், உங்களுடைய இறைவனுமாகிய அல்லாஹ் வையே வணங்குங்கள் என்பதைத் தவிர வேறு எதையும் அவர்களுக்கு நான் கூறவில்லை; மேலும், நான் அவர்களுடன் (உலகில்) இருந்த காலமெல்லாம் அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தேன்; அப்பால் நீ என்னைக் கைப்பற்றிய பின்னர் நீயே அவர்கள் மீது கண்காணிப்பவனாக இருந்தாய். நீயே எல்லாப் பொருட்கள் மீதும் சாட்சியாக இருக்கிறாய் (என்றும்);

**(அல்குர்ஆன், 5:116-117)**

அல்லாஹுதஆலா ஈஸா நபியின் ஆன்மாவை எடுத்துக் கொண்டு பிறகு திருப்பிக் கொடுக்கவில்லையென்றால் அது (மௌத்) மரணமில்லாமல் வேறென்ன? ஆனால் குர்ஆன் அவர் கொல்லப்பட வில்லை என உறுதியாகக் கூறுகிறது.

நிச்சயமாக அவர்கள், அவரைக் கொல்லவே இல்லை. **(4:157)**

பிறகு அல்லாஹ் ஆன்மாவை எடுத்துக்கொண்டு என்ன செய்கிறான்? எடுத்துக்கொண்ட ஆன்மாவை உடலில் திருப்பி அனுப்பியிருக்கிறானா? இது சாத்தியமா? இது நடந்திருக்கிறதா?

உடலிலிருந்து ஆன்மாவை எடுத்துக்கொண்ட பிறகு அல்லாஹ் திருப்பி அனுப்புகிறான் என குர்ஆன் உறுதிப்படுத்துகிறது.

اللَّهُ يَتَوَفَّى الْأَنْفُسَ حِينَ مَوْتِهَا وَالَّتِي لَمْ تَمُتْ فِي مَنَامِهَا فَيُمْسِكُ الَّتِي قَضَى عَلَيْهَا الْمَوْتَ وَيُرْسِلُ الْأُخْرَى إِلَى أَجَلٍ مُسَمًّى إِنَّ فِي ذَلِكَ لَآيَاتٍ لِقَوْمٍ يَتَفَكَّرُونَ

அல்லாஹ், உயிர்களை அவை மரணிக்கும் போதும், மரணிக்காதவற்றை அவற்றின் நித்திரையிலும் கைப்பற்றி, பின்பு எதன் மீது மரணத்தை விதித்துவிட்டானோ அதைத் (தன்னிடத்தில்) நிறுத்திக் கொள்கிறான்; மீதியுள்ளவற்றை ஒரு குறிப்பிட்ட தவணை வரை (வாழ்வதற்காக) அனுப்பிவிடுகிறான் - சிந்தித்துப் பார்க்கும் மக்களுக்கு, நிச்சயமாக இதில் அத்தாட்சிகள் இருக்கின்றன.
**(அல்குர்ஆன்,39:42)**

ஈஸா நபி விஷயத்தில் இப்படியா நடந்தது? அடுத்த இரண்டு குர்ஆனின் அறிக்கைகளில் பதில் அடங்கியுள்ளது.

நான்காவது, வல்லமையுள்ள அல்லாஹுதஆலா ஈஸா நபி கொல்லப்பட்டதாக அவர்களுக்குத் தோன்றச்செய்தான். இது ஒன்றை இன்னொன்றாக மாற்றுவதன் மூலம் சாத்தியப்படலாம், அல்லது ஒருவரை மற்றவராக மாற்றுவதன் மூலமும் நடைபெறலாம், (தஷ்பீஹ்) இவ்வாறுதான் அவ்விடத்தில் பார்த்துக்கொண்டிருந்தவர்கள் ஈஸா நபி இறந்துவிட்டவராக நம்பவைக்கப்பட்டார்கள்.

وَلَكِنْ شُبِّهَ لَهُمْ

ஆனால் அவர்களுக்குத் தோன்றுவது போல ஆக்கப்பட்டது.
**(யூசுஃப் அலி)**

ஆனால் அவர்களுக்கு மட்டும் அப்படித் தென்பட்டது.
**(எம், அசத்)**

ஆனால், அவ்வாறு அவர்களுக்கு தோன்றியது.
**(எம், பிக்தால்)**

அவரைப்போல் ஆக்கப்பட்டுவிட்டான்.

(ஆ.கா. அப்துல்ஹமீது)

இப்பொழுது நம் கேள்விக்கு பதில் அளிக்கிற சாத்தியம் இருக்கிறது. அல்லாஹுதஆலா அந்த ஆத்மாவை எடுத்துக்கொண்ட பின் என்ன செய்தான்? அல்லாஹ் ஒன்றுக்குப் பகரமாக இன்னொன்றை ஆக்கினான் (தஷ்பீஹ்) என்று பதிலளிப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது.

ஐந்தாவது, அல்லாஹ் ஈஸா நபி(அலை) அவர்களை தன்பால் உயர்த்திக் கொண்டான் என்பதைப் பின்வரும் வசனத்தில் கூறுகிறான்.

بَلْ رَفَعَهُ اللَّهُ إِلَيْهِ وَكَانَ اللَّهُ عَزِيزًا حَكِيمًا

ஆனால் அல்லாஹ் அவரைத் தன் அளவில் உயர்த்திக் கொண்டான் - இன்னும் அல்லாஹ் வல்லமை மிக்கோனாகவும் ஞானமுடையோனாகவும் இருக்கின்றான்.

**(அல்குர்ஆன், 4:158)**

إِذْ قَالَ اللَّهُ يَا عِيسَى إِنِّي مُتَوَفِّيكَ وَرَافِعُكَ إِلَيَّ وَمُطَهِّرُكَ مِنَ الَّذِينَ كَفَرُوا وَمُطَهِّرُكَ مِنَ الَّذِينَ كَفَرُوا وَجَاعِلُ الَّذِينَ اتَّبَعُوكَ فَوْقَ الَّذِينَ كَفَرُوا إِلَى يَوْمِ الْقِيَامَةِ ثُمَّ إِلَيَّ مَرْجِعُكُمْ فَأَحْكُمُ بَيْنَكُمْ فِيمَا كُنْتُمْ فِيهِ تَخْتَلِفُونَ

ஈஸாவே! நிச்சயமாக நான் உம்மைக் கைப்பற்றுவேன்; இன்னும் என்னளவில் உம்மை உயர்த்திக்கொள்வேன்; நிராகரித்துக் கொண்டிருப்போருடைய (பொய்களில் நின்றும்) உம்மைத் தூய்மைப் படுத்துவேன்; மேலும் உம்மைப் பின்பற்றுவோரை கியாம நாள் வரை நிராகரிப்போருக்கு மேலாகவும் வைப்பேன்; பின்னர் உங்களுடைய திரும்புதல் என்னிடமே இருக்கிறது; (அப்போது) நீங்கள் தர்க்கம் செய்து கொண்டிருந்தது பற்றி நான் உங்களிடையே தீர்ப்பளிப்பேன் என்று அல்லாஹ் கூறியதை (நபியே! நினைவு கூர்வீராக)!

**(அல்குர்ஆன், 3:55)**

ஒவ்வொரு ஆன்மாவும் (மௌத்தை) மரணத்தைச் சுவைத்தே தீரும். என்று குர்ஆன் கூறுகிறது.

كُلُّ نَفْسٍ ذَائِقَةُ الْمَوْتِ وَإِنَّمَا تُوَفَّوْنَ أُجُورَكُمْ يَوْمَ الْقِيَامَةِ فَمَنْ زُحْزِحَ عَنِ النَّارِ وَأُدْخِلَ الْجَنَّةَ فَقَدْ فَازَ وَمَا الْحَيَاةُ الدُّنْيَا إِلَّا مَتَاعُ الْغُرُورِ

ஒவ்வோர் ஆத்மாவும் மரணத்தைச் சுவைத்தே ஆகவேண்டும்; அன்றியும் - இறுதித் தீர்ப்பு நாளில் தான், உங்க(ள் செய்கைக)ளுக்குரிய பிரதி பலன்கள் முழுமையாகக் கொடுக்கப்படும்; எனவே எவர் (நரக) நெருப்பிலிருந்து பாதுகாக்கப்பட்டுச் சுவர்க்கத்தில் பிரவேசிக்குமாறு செய்யப்படுகிறாரோ அவர் நிச்சயமாக வெற்றியடைந்து விட்டார்; இவ்வுலக வாழ்க்கை மயக்கத்தை அளிக்கவல்ல (அற்ப இன்பப்) பொருளேயன்றி வேறல்ல.

**(அல்குர்ஆன், 3:185)**

ஒவ்வொரு ஆன்மாவும் மரணத்தைச் சுவைத்தே ஆக வேண்டும் எனில், ஈஸா நபி (அலை) அவர்களுக்கு ஆன்மா இருந்தால் அவரும் மரணத்தைச் சுவைக்க வேண்டுமே என்ற வினா எழும். ஈஸா நபிக்கு ஆன்மா இருந்ததா? அவர் மனிதர்தானா? மர்யமின் மகன் என்பதால் மர்யம் மனித இனத்தைச் சேர்ந்தவரா? என்ற கேள்விகளெல்லாம் எழுகின்றன.

மர்யமும்,ஈஸா நபி (அலை) அவர்களும் மனித இனத்தைச் சேர்ந்தவர்கள் தான் என அழுத்தமாகக் குர்ஆன் கூறுகிறது.

مَا الْمَسِيحُ ابْنُ مَرْيَمَ إِلَّا رَسُولٌ قَدْ خَلَتْ مِنْ قَبْلِهِ الرُّسُلُ وَأُمُّهُ صِدِّيقَةٌ كَانَا يَأْكُلَانِ الطَّعَامَ انْظُرْ كَيْفَ نُبَيِّنُ لَهُمُ الْآيَاتِ ثُمَّ انْظُرْ أَنَّى يُؤْفَكُونَ

மர்யமுடைய குமாரர் மஸீஹ் இறைத் தூதரேயன்றி வேறில்லை, இவருக்கு முன்னரும் தூதர்கள் பலர் வந்து சென்றுவிட்டனர். இவருடைய தாயார் மிக்க உண்மையானவர்; இவ்விருவரும் (மற்ற மனிதர்களைப் போல்) உணவு உண்பவர்களாகவே இருந்தனர்; அவர்களுக்கு நம்முடைய அத்தாட்சிகளை கொண்டு எவ்வாறு தெளிவாக்கினோம் என்பதை (நபியே!) நீங்கள் கவனிப்பீராக! அவர்கள் எவ்வாறு திசை திருப்பப்படுகிறார்கள் என்பதையும் கவனிப்பீராக!

**(அல்குர்ஆன், 5:75)**

இருவரும் உணவு உண்பார்கள் என்ற தெளிவான அறிவிப்பின் மூலம் ஈஸா நபியும், மர்யம்(அலை) அவர்களும் மனிதர்களைத் தவிர வேறு எந்த இனமாகவும் இருக்கிற வாய்ப்பை குர்ஆன் வழங்கவில்லை.

ஈஸா நபி அல்லாஹ்வின் அடியாராகவும், அடிமையாகாவும் தவிர வேறு நிலையில் இருக்கவில்லை என குர்ஆன் கூறுகிறது.

يَا أَهْلَ الْكِتَابِ لَا تَغْلُوا فِي دِينِكُمْ وَلَا تَقُولُوا عَلَى اللَّهِ إِلَّا الْحَقَّ إِنَّمَا الْمَسِيحُ عِيسَى ابْنُ مَرْيَمَ رَسُولُ اللَّهِ وَكَلِمَتُهُ أَلْقَاهَا إِلَى مَرْيَمَ وَرُوحٌ مِنْهُ فَآمِنُوا بِاللَّهِ وَرُسُلِهِ وَلَا تَقُولُوا ثَلَاثَةٌ انْتَهُوا خَيْرًا لَكُمْ إِنَّمَا اللَّهُ إِلَٰهٌ وَاحِدٌ سُبْحَانَهُ أَنْ يَكُونَ لَهُ وَلَدٌ لَهُ مَا فِي السَّمَاوَاتِ وَمَا فِي الْأَرْضِ وَكَفَى بِاللَّهِ وَكِيلًا

வேதத்தையுடையோரே! நீங்கள் உங்கள் மார்க்கத்தில் அளவு கடந்து செல்லாதீர்கள். அல்லாஹ்வைப் பற்றி உண்மையைத் தவிர (வேறெதையும்) கூறாதீர்கள்; நிச்சயமாக மர்யமுடைய மகனாகிய ஈஸா மஸீஹ் அல்லாஹ்வின் தூதர்தான்; இன்னும் (குன் ஆகுக என்ற) அல்லாஹ்வின் வாக்காக (அதனால் உண்டானவராகவும்) இருக்கின்றார்; அதை அவன் மர்யமின்பால் போட்டான்; (எனவே) அவரும் அவனிடமிருந்து (வந்த) ஓர் ஆன்மாதான்; ஆகவே, அல்லாஹ் வின் மீதும் அவன் தூதர்கள் மீதும் ஈமான் கொள்ளுங்கள்; இன்னும், (வணக்கத்திற்குரிய இறைவன்) மூன்று என்று கூறாதீர்கள் - (இப்படிக் கூறுவதை விட்டு) விலகிக் கொள்ளுங்கள்; (இது) உங்களுக்கு நன்மையாகும் - ஏனெனில் வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் ஒருவன்தான்; அவனுக்கு எவரும் சந்ததியாக இருப்பதிலிருந்து அவன் தூய்மையானவன். வானங்களிலும், பூமியிலும் இருப்பவையெல்லாம் அவனுக்கே சொந்தம். (காரியங்கள் அனைத்துக்கும்) பொறுப்பேற்றுக் கொள்வதற்கு அல்லாஹ்வே போதுமானவன்.

**(அல்குர்ஆன், 4:171)**

إِنْ هُوَ إِلَّا عَبْدٌ

அவர் (ஈஸா நம்முடைய) அடியாரே அன்றி வேறில்லை;

**(அல்குர்ஆன், 43:59)**

குர்ஆனின் பார்வையில் ஈஸா நபி (அலை) அவர்கள் மனிதராக இருந்தார்கள் என்பதைத் தெளிவாக இது விளக்குகிறது. எனவே ஈஸா நபியும் சர்வதேச விதிகளுக்குட்பட்டு மரணத்தை சுவைத்தே தீர வேண்டும் என்பதையும் தெளிவாக்குகிறது.

## ஈஸா நபி (அலை) திரும்பி வருவார்கள்

ஈஸா நபி (அலை) மரணிக்கவில்லை (கொல்லப்படவோ, சிலுவையில் அறையப்படவோ இல்லை) என்று குர்ஆன் உறுதியாகக் கூறுகின்றது. மேலும் அல்லாஹ்வின் பால் உயர்த்தப்பட்டார் என்றும் கூறுகிறது. (ஈஸா நபி உட்பட) ஒவ்வோர் ஆன்மாவும் மரணத்தைச்

சுவைத்தே தீர வேண்டும் என குர்ஆன் கூறுவதால் ஈஸா திரும்பி வந்து (வாழ்ந்து) மரணத்தை சுவைப்பார் (மற்றவர்களைப் போல) என்பது அவசியமாகிறது. அவர் மற்றவர்களைப் போல் மரணத்திற்குப்பின் அடக்கம் செய்யப்படுவதற்காக அவர் பூமிக்கு வழங்கப்பட வேண்டும்.

مِنْهَا خَلَقْنَاكُمْ وَفِيهَا نُعِيدُكُمْ وَمِنْهَا نُخْرِجُكُمْ تَارَةً أُخْرَى

இப்பூமியிலிருந்து நாம் உங்களைப் படைத்தோம்; அதனுள்ளேயே நாம் உங்களை மீளச்செய்வோம்; இன்னும், அதிலிருந்தே நாம் உங்களை இரண்டாம் முறையாகவும் வெளிப்படுத்துவோம்.

**(அல்குர்ஆன், 20:55)**

وَإِنْ مِنْ أَهْلِ الْكِتَابِ إِلَّا لَيُؤْمِنَنَّ بِهِ قَبْلَ مَوْتِهِ وَيَوْمَ الْقِيَامَةِ يَكُونُ عَلَيْهِمْ شَهِيدًا

ஆனால் ஈஸா நபியின் மரணத்தைப்பற்றிக் கூறும்போது குர்ஆன் ஒரு எச்சரிக்கையை விடுக்கின்றது. ஈஸா நபியின் மரணத்திற்கு முன்னால் யூதர்களும், கிருஸ்துவர்களும் ஈஸா நபியை அல்லாஹ்வின் தூதர் என்றும் மஸீஹ் என்றும் (குர்ஆனில் கூறப்பட்டிருப்பது போன்று) நம்பிக்கை கொண்டிருக்கவேண்டும் என்பதே அந்த எச்சரிக்கையாகும்.

வேதமுடையவர்களில் எவரும் தாம் இறப்பதற்கு முன் அவர் (ஈஸா) மீது ஈமான் கொள்ளாமல் இருப்பதில்லை; ஆனால் மறுமை நாளில் அவர் அவர்களுக்கு எதிராகச் சாட்சி சொல்பவராக இருப்பார்.

**(அல்குர்ஆன், 4:159)**

எனவே அந்நாளில் ஒவ்வொரு யூதரும் ஈஸா நபியை மஸீஹ் என்று ஏற்று அவரின் மீது நம்பிக்கை வைக்க வேண்டும். ஒவ்வொரு கிருஸ்துவரும் அவரை அல்லாஹ்வின் மகன் என்பதையும் திரி யேகத்து வத்தில் மூன்றாவது நபர் என்ற கருத்தையும் விடவேண்டும்.

ஈஸா நபி (அலை) இறங்கி வருவார்கள் என நபி (ஸல்) உறுதியாகக் கூறினார்கள்.

அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்: எவன் கையில் என் உயிர் இருக்கிறதோ அவன் மீது ஆணையாக, மர்யமின் மகன் ஈஸா விரைவில் உங்களுக்கு மத்தியில் ஒரு நீதமான ஆட்சியாளராக இறங்கி வருவார். அவர் சிலுவையை உடைத்து, பன்றியைக் கொன்று ஜிஸ்யா (முஸ்லிம்கள் கட்டுப் பாட்டிலிருக்கும் யூதர்களும், கிருஸ்துவர்களும் செலுத்த வேண்டிய) வரியை ஒழிப்பார். மேலும் அப்போது ஏராளமான

பணம் இருக்கும், தர்மத்தை வாங்க யாரும் இருக்க மாட்டார்கள்.
(ஸஹீஹ் புகாரி)

நபி (ஸல்) அவர்களால் முக்கியமான பத்து கியாமத்தின் (இறுதி நாளின்) அடையாளங்கள் என்று கூறப்பட்டவைகளில் ஈஸா நபி (அலை) அவர்கள் இறங்கி வருவதும் ஒன்றாகும்.

ஹுதைஃபா இப்னு உஸைத் இப்னு கிஃப்பாரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம், நபி (ஸல்) விரைவாக வந்து, எதைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறீர்கள் என்று கேட்டார்கள், அதற்கு நாங்கள் உலக அழிவைப் பற்றி என்று கூறினோம், அதற்கு நபியவர்கள் நீங்கள் பத்து அடையாளங்களைக் காணாத வரை உலக அழிவு நாள் ஏற்படாது என்றார்கள்.

1. புகை மூட்டம்
2. தஜ்ஜால்
3. (அதிசயமான) பிராணி
4. சூரியன் மேற்கிலிருந்து உதிப்பது
5. ஈஸா (அலை) இறங்கி வருவது
6. யாஃஜூஜ் மஃஜூஜ்

7,8,9. அரபு தீபகற்பத்தில் ஒன்று, கிழக்கில் ஒன்று, மேற்கில் ஒன்று என மூன்று நிலச்சரிவுகள் ஏற்படுவது

10. ஏமனிலிருந்து கிளம்பும் தீப்பிழம்பு மக்களை விரட்டி ஒன்று சேர்ப்பது.

இந்தப் பத்து நிகழ்ச்சிகளையும் நீங்கள் காணும் வரை அந்த நாள் வராது என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறியிருக்கிறார்கள்.
(ஸஹீஹ் முஸ்லிம்)

[இந்த அடையாளங்கள் வரிசைக் கிரமமாகக் கூறப்படவில்லை என்பதைக் கவனிக்கவும்]

நிச்சயமாக அவர் (ஈஸா) மறுமை நாளின் அத்தாட்சியாவார்,

وَإِنَّهُ لَعِلْمٌ لِلسَّاعَةِ

(அல்குர்ஆன், 43:61)

ஈஸா நபி(அலை) அவர்களே தாம் இறங்கிவரும் சமயத்தில் ஏற்படும் அடையாளங்களின் பட்டியல் வழங்கினார்கள்.

- **தன்னை மஸீஹ் எனக் கூறுவோர் அதிகமாவர், ஆனால் அவர்கள் போலிகள்.**
- **போர்களும், போரின் வதந்திகளும் இருக்கும்.**
- **இதுவரை வந்திராத உலக வறுமை ஏற்படும்.**
- **கொள்ளை நோய் பரவும்.**
- **சட்டமில்லாத நிலையும், மனித நேயமற்ற நிலையும் அதிகரிக்கும்.**
- **தீவிரமான நிலநடுக்கங்கள் அடிக்கடி ஏற்படும்.**

வேதங்களில் இரண்டு முரண்பட்ட மஸீஹ்கள் உடைய வர்ணனைகள் நம்மிடம் இருக்கின்றன. ஒருவர் அமைதியானவர், அடக்கமானவர், கஷ்டங்களை அனுபவிப்பவர். மற்றவர் வலிமையானவர், வெற்றி வீரர். ஈஸா நபி (அலை) இறங்கும்போது இந்த இரண்டாவது தோற்றத்தையே பெறுவார். ஆனால் நபி (ஸல்) அவர்கள், ஈஸா நபி (அலை) அவர்கள் இறங்குவதற்கு முன்பு அல்லாஹ் போலி மஸீஹை (தஜ்ஜாலை) உலகில் கடைசியில் வெளியாக்குவான் எனக் கூறினார்கள்.

## தஜ்ஜால் யார்?

இரண்டாயிரம் ஆண்டுகளாக யூதர்களின் பெருங்கனவு என்னவெனில், பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பி அதை தாவூத் நபி (அலை) சுலைமான் நபி (அலை) ஆகியோர் நிறுவிய இஸ்ரேல் தேசத்தை மீட்டெடுத்து, சுலைமான் நபி கட்டிய ஆலயத்தை புனர்நிர் மாணம் செய்து இபுராஹீம் நபியின் இறைவனை வணங்குவதுதான். உண்மையில் அதை ஒரு புனிதக் கனவாகவே கருதவேண்டும். இதைப் பெரிதாகக் கருதுபவர்கள் ஆன்மீக மகத்துவத்தைப் பெறுவார்கள். அப்படிப்பட்டவர்கள் உலக வாழ்க்கையைவிட மறுமைக்கு முக்கியத் துவம் கொடுப்பவர்கள். அவர்களின் ஆன்மீகப் பார்வை ஒவ்வொரு பொருள்களில் வெளித்தோற்றத்திற்குள் நுழைந்து உள்ளமையைக் காணும். இவைகளெல்லாம் அந்தப் பெருங்கனவைக் காண்பவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய விஷயங்களாகும். குறைந்த பட்சம், அந்தக் கனவு கடவுள் இல்லாத இஸ்ரேல் தேசத்தை உருவாக்குவதன் மூலமும், ஐம்பது ஆண்டுகளாக பைத்துல்முகத்தஸில் ரத்தக்கறை படிந்த அடக்குமுறையாலும் தீவிரவாதத்தாலும் நிறைவேறிவிடாது என்பதையாவது அவர்கள் உணரவேண்டும். அவர்கள் பயங்கரமான விளைவுகளைச் சந்திப்பதற்கு இன்னும் ஓர் ஐம்பது ஆண்டுகள்கூட ஆகாது என்றே கருதுகிறோம்.

## குர்ஆனில் ஜெருசலம்

சிறப்பு இறைத்தூதர் மஸீஹ் தோன்றாதவரை தங்களுடைய பெருங்கனவு நிறைவேறாது என்பதை இப்பொழுது யூதர்கள் நம்புகிறார்கள். அவர் உலகத்தின் மன்னராக முடிசூட்டப்படும்போது, இறுதிக் காலத்தின் தீர்வைக் கொண்டுவருவார். வேதங்களில் எங்கும் மஸீஹ் உடைய ஆட்சி பற்றிப் பலமுறை கூறப்பட்டிருக்கிறது. **(இனோ,45:3/105:2/28:29/13:32-35/14:9)** உண்மையில் ஐரோப்பிய யூதர்கள் (சியோனிஸ அமைப்பை நிறுவியவர்கள்) மஸீஹ் உடன் சம்பந்தப்பட்ட புனித முன்னறிவிப்புகளில் ஆர்வம் காட்டுவதில்லை.

யூதர்களின் பெருங்கனவைத் தான் நிறைவேற்றித் தருவதாகக் கூறி பிரச்சாரம் செய்யுமாறு (போலி மஸீஹ்) தஜ்ஜாலுக்கு அல்லாஹ் கட்டளையிடுகிறான். உண்மை என்னவென்றால் யூதர்கள் இஸ்ரேல் தேசத்தால் முழுமையாகவும் கடுமையாகவும் ஏமாற்றப்பட்டிருப்பதற்கு அவர்களின் தொடர்ச்சியான ஆன்மீக வெறுமையே காரணம்.

وَالَّذِينَ كَفَرُوا أَعْمَالُهُمْ كَسَرَابٍ بِقِيعَةٍ يَحْسَبُهُ الظَّمْآنُ مَاءً حَتَّىٰ إِذَا جَاءَهُ لَمْ يَجِدْهُ شَيْئًا وَوَجَدَ اللَّهَ عِندَهُ فَوَفَّاهُ حِسَابَهُ ۗ وَاللَّهُ سَرِيعُ الْحِسَابِ ﴿٣٩﴾

அன்றியும், எவர்கள் காஃபிராக இருக்கிறார்களோ, அவர்களுடைய செயல்கள் பாலைவனத்தில் (தோற்றமளிக்கும்) கானல் நீரைப் போலாகும்; தாகித்தவன் அதைத் தண்ணீரென்றே எண்ணுகிறான் - (எது வரையெனில்) அதற்கு (அருகில்) அவன் வரும் பொழுது ஒரு பொருளையும் (அங்கே) காணமாட்டானே (அது வரை); ஆனால், அங்கு அவன் அல்லாஹ் (அவனுக்கு விதித்திருக்கும் முடி)வை(யே) காண்கின்றான்; (அதன் படி அல்லாஹ்) அவன் கணக்கைத் தீர்க்கிறான்; மேலும், அல்லாஹ் கணக்குத் தீர்ப்பதில் துரிதமானவன்.

**(அல்குர்ஆன், 24:39)**

துல்லியமாக, தண்ணீருக்குத் தவிக்கின்றவன், கானல் நீரைக் கண்டு ஏமாறுகின்ற சூழ்நிலையில்தான் யூதர்கள் இருக்கின்றனர்.

إِنَّ هَٰذَا الْقُرْآنَ يَقُصُّ عَلَىٰ بَنِي إِسْرَائِيلَ أَكْثَرَ الَّذِي هُمْ فِيهِ يَخْتَلِفُونَ ﴿٧٦﴾ وَإِنَّهُ لَهُدًى وَرَحْمَةٌ لِّلْمُؤْمِنِينَ ﴿٧٧﴾

நிச்சயமாக இந்த குர்ஆன் பனூ இஸ்ராயீல்களுக்கு அவர்கள் கருத்து வேறுபாடு கொண்டிருந்ததில் பெரும்பாலானவற்றை விவரித்துக் கூறுகிறது.

மேலும் நிச்சயமாக இது முஃமின்களுக்கு நேர்வழியாகவும், ரஹ்மத்தாக (நல்லருளாக)வும் இருக்கிறது.

**(அல்குர்ஆன், 27:76-77)**

அந்தப் பெருங்கனவு இன்று ஏறக்குறைய நிறைவேற்றப்பட்டு விட்டதாகத் தோற்றமளிக்கிறது. இஸ்ரேலிய யூதர்கள் உலகில் எங்கு வசித்தவர்களாக இருந்தாலும் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பிவிட்டார்கள். அல்லது சுதந்திரமாகத் திரும்புவதற்கு ஆற்றல் பெற்றுவிட்டார்கள். 1948இல் இஸ்ரேல் தேசம் உருவாக்கப்பட்டு விட்டது, இன்று அது நிதர்சனம். அந்தப் பெருங்கனவில் மீதமிருப்பது, ஆலயம் எழுப்பப்படுவதற்கு ஓர் அரசர் நியமிக்கப்படுவது. (இதில் மஸ்ஜிதுல் அக்ஸா இடிக்கப்படுவதும் அடங்கும், இடித்தால்தானே சுலைமான் நபியின் ஆலயத்தை மீட்டெடுக்க முடியும்.)

உம்முடைய இறைவன் உமக்கு வழங்கிய அந்தப் பூமிக்கு வரும்போது அதைத் தமதாக்கிக்கொள்வீர். அதிலே வசிப்பீர்கள், கூறுவீர்கள்; எனக்கு ஒரு அரசனை ஏற்படுத்திக்கொள்வேன், எனக் கருகில் இருக்கும் தேசங்களைப்போல, உம் இறைவன் உமக்காக ஓர் அரசனை தேர்ந்தெடுப்பான். அவரை மன்னராக்கிக் கொள்வீர்.

**(டியோட்ரோனமி, 17:14-15)**

மேலும் இஸ்ரேல் உலகின் வல்லரசாக வேண்டும் இஸ்ரேலின் ஆட்சியாளர் ஜெரூசலத்திலிருந்து உலகை ஆள வேண்டும்.

இவையனைத்தும் மஸீஹ் இல்லாமல் நடைபெறவே முடியாது என்பதுதான் திட்டவட்டமான விதி. இவைகளெல்லாம் ஒருவிதமான மாயை ஆகும்,அப்படியென்றால் உண்மை எது?

இஸ்லாமியக் கண்ணோட்டத்தில் இவைகள் அனைத்தின் உண்மைநிலை என்னவெனில், இறைவனின் கருணைதான் பெருங் கனவை நிறைவேற்றுவதற்குத் துணை செய்கிறது என்று யூதர்களை (போலி மஸீஹ்) தஜ்ஜால் நம்பவைத்து ஏமாற்றிக்கொண்டிருக்கி றான். யதார்த்தம் என்னவெனில், அவர்களின் ஆன்மிக வெறுமை இப்பொழுது அவர்கள் தப்பமுடியாத தெய்விக வலைக்குள் மாட்டிக் கொள்ள வழிவகுத்திருக்கிறது. உலக மக்களுக்கு அவர்கள் அடக்கு முறையையும் அநியாயத்தையும் கைவிட்டுவிடும்படி உபதேசம் செய்கி றார்கள், ஆனால் தாங்கள் அடுத்தவர் மீது அடக்குமுறை அநியாயம்

புரிவதை நியாயம் காண்கிறார்கள். இப்படி தாங்கள் நடந்து கொள்வதற்கு இறைவனோடு மற்றவர்களுக்கில்லாத அந்தஸ்து தாங்களுக்கு இருப்பதாகக் கருதுகிறார்கள். எனவே பைத்துல் முகத்தஸ் எங்களுக்கே சொந்தம் என்றும், அங்கு நூற்றாண்டுகளாக வசிப்பவர்கள் விரட்டப்படவேண்டும் என்றும் நம்புகிறார்கள். முடிவு அதைத் தீர்மானிக்கும். தஜ்ஜாலால் அவர்கள் முழுமையாக வழிகெட்டுத் தவறாக வழி நடத்தப்படுகிறார்கள் என்பதே உண்மை.

மஸீஹ் போல தோற்றமளித்து தான்தான் மஸீஹ் என யூதர்களை ஏமாற்றும் தஜ்ஜால் (போலி மஸீஹ்) அல்லாஹ்வால் படைக்கப்பட்ட ஒரு படைப்புத்தான். நுண்ணறிவு, பேராற்றல், பல்துறைப்புலமை, ஏமாற்றுதல் தீமைசெய்யும் ஆற்றல் போன்றவை அல்லாஹ்வால் தஜ்ஜாலுக்கு வழங்கப்பட்டிருக்கிறது. கிருஸ்துவுக்கு எதிரானவன் என கிருஸ்துவர்கள் அறிந்திருக்கிறார்கள். அல்லாஹ்வால் படைக்கப்பட்ட தீய படைப்பு தஜ்ஜால் ஒரு நாள் பூமிக்கு மனித உருவத்தில் வருவான். யூதனாகவும், வலிமையான உடற்கட்டுள்ளவனாகவும் சுருள் முடிக்காரனாகவும் இருப்பான். நபி (ஸல்) அவர்கள் மதீனாவிலிருந்த ஒரு யூத இளைஞன் இப்னு சய்யாதை தஜ்ஜாலாக இருப்பானோ என சந்தேகித்தார்கள். இதிலிருந்து தஜ்ஜால் ஏற்கெனவே பூமியில் வெளியாகிவிட்டான் என்றும் ஒருநாள் கீழ்வரும் அமைப்பில் பூமிக்கு வருவான் எனவும் உறுதியாகிறது.

- **மனிதன்.**
- **யூதன்.**
- **இளைஞன்.**

உண்மை மஸீஹ் சுலைமான் நபியைப்போல தாவூத் நபியின் அரியணையிலிருந்து (ஜெருசலத்திலிருந்து) உலகை ஆள்வார். அவர் அவ்வாறு செய்யவேண்டுமெனில் முதலில் கீழ் வருபவற்றை அவர் நிறைவேற்றுவது அவசியமாகும்.

- **இப்ராஹீம் நபியின் இறைவனை வணங்காதவர்களை பைத்துல்முகத்தஸின் ஆட்சியை விட்டு அகற்றுவது.**
- **தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களை (இந்த தெய்வவாக்கு அறிவிக்கப்படு போது யூதர்களாக இருந்தவர்கள்) பைத்துல்முகத்தஸுக்குத் திரும்ப கொண்டு வருவது.**

**தாவூத் நபி சுலைமான் நபி ஆகியோர் நிறுவிய இஸ்ரேல் தேசத்தை மீட்டெடுப்பது.**

- **இஸ்ரேல் உலகின் வல்லரசாகுதல்.**

இச்சூழலில் தான் உண்மை மஸீஹ் தாவூத் நபியின் அரியணையிலிருந்து உலகை ஆள முடியும்.

(போலி மஸீஹ்) தஜ்ஜால் உண்மை மஸீஹ் போல தோற்றமளித்து முழுமையாக அவருடைய ஆற்றலை வெளிப்படுத்த முடியுமென்றால், மேற்கூறிய அனைத்தையும் தஜ்ஜாலாலும் செய்ய முடியும்.

மேற்கூறிய வாதத்தின் அடிப்படையில் ஒரு கேள்வி எழும். யூதர்களை மிகப்பெரும் ஏமாற்றத்திற்குள்ளாக்கியதற்கு தஜ்ஜால்தான் பொறுப்பா? மேலும் தஜ்ஜால் ஏற்கெனவே வெளியாக்கப்பட்டு பூமியில் தான் இருக்கிறான் என்றால் பூமியில் எங்கு இருக்கிறான்? (புதிர்களுக்கெல்லாம் புதிராக இருக்கின்ற விஷயத்தைப் பற்றி நபி (ஸல்) பேசினார்கள். மேலும் கீழ் வருமாறு தஜ்ஜாலைப் பற்றிக் கூறினார்கள்.

நவ்வாஸ் இப்னு சம்ஆன் (ரலி) அறிவிக்கிறார்கள்: நாங்கள் அவன் பூமியில் எத்தனை நாட்கள் தங்கியிருப்பான்? என்று கேட்டோம். அதற்கு நாற்பது நாட்கள் என்று பதிலளித்த நபியவர்கள் அவனுடைய ஒரு நாள் ஒரு ஆண்டைப் போலவும், மற்றொரு நாள் ஒரு மாதத்தைப் போலவும், அடுத்த நாள் ஒரு வாரத்தைப் போலவும் அதற்கடுத்த நாட்கள் சாதாரணமாக உங்களுடைய நாட்களைப் போலவும் இருக்கும் என்று குறிப்பிட்டார்கள்.

**(ஸஹீஹ்முஸ்லிம், சுனன் திர்மிதி)**

தஜ்ஜாலுடைய நாட்கள் நமது நாட்களைப்போன்று இருக்க வேண்டுமானால் அது பூமியில் தஜ்ஜாலுடைய கடைசிக் காலகட்டமாக இருக்கவேண்டும். இரண்டாவது அவனுடைய நாட்கள் நமது நாட்களைப் போல இருக்கும்போது அவன் நமது நேர மண்டலத்தில் இருப்பான். எனவே தஜ்ஜால் மஸீஹ் ஆகத் தன்னை உருமாற்றிக்கொள்கிற வேலையை முழுமையாக்குவதற்காக நமது உலகத்திற்குள் நுழையும்போது அது அவனுடைய வாழ்வின் கடைசிக் காலகட்டமாக இருக்கும். (இஸ்ரேலின் இதயமாக இருக்கும் ஜெருசலத்தில்) தாவூத் நபியின் அரியணையிலிருந்து மஸீஹ் உலகை ஆள்வார் என்பது அல்லாஹ்வின் வாக்காக இருந்தது. தஜ்ஜால் தன்

வாழ்நாளின் கடைசிக் காலத்தில் மனித உருவமாக ஜெருசலத்தில் இருப்பான் என்பது இதிலிருந்து தெளிவாகிறது. மேலும் அவனுடைய நாள் நம்முடைய நாளைப்போல இருப்பதால் நம்மால் அவனைப் பார்க்க முடியும். அந்த நேரத்தில் அவனை யூதனாக, இளைஞனாக, கட்டுடலுடையவனாக, சுருள் முடி கொண்டவனாகக் காண முடியும். ஜெருசலத்திலிருந்து உலகை ஆளும் வல்லரசாக தஜ்ஜால் இருப்பான். வரலாற்றின் கடைசிக் காலத்தில் ஜெருசலம் முக்கியப் பங்காற்றப்போகிறது என்ற புதிருக்கு விடை இதில் இருக்கிறது.

இந்த நிலைக்கு முன் அவன் நம்மோடுதான் இருக்கிறான். ஜின்களும் வானவர்கள் (நம்மோடு இருப்பதைப்)போல. நம் நேர மண்டலத்தில் இல்லாததால் (அவனுடைய ஒரு நாள், நம்முடைய ஒரு நாளைப்போல இல்லாததால்) அவன் நம்மோடு இருந்தும் நாம் அவனைப் பார்க்க முடிவதில்லை. நமது ஈமானைச் சோதிப்பதற்குப் பலமாக நம்மைத் தாக்குவான். சதிவலை பின்னிக்கொண்டே இருப்பான். அவனுடைய நாள் நம்முடைய நாளைப்போல் இல்லாததால் நாம் சாதாரண புலனுணர்வின் உறுப்புகளால் அவனைக் காண முடியாது. அல்லாஹ் தஜ்ஜாலை வெளிப்படுத்தும்போது அவனுடைய ஒரு நாள் ஒரு வருடத்தைப் போல என்று கூறப்பட்டது எந்த இடத்தில்? ஒரு நாள் ஒரு மாதத்தைப்போல என்று கூறப்பட்டது எந்த இடத்தில்? ஒரு நாள் ஒரு வாரத்தைப்போல என்று கூறப்பட்டது எந்த இடத்தில்? பூமியில்தான் இருப்பான் என்று நமக்குத் தெரியும். ஆனால் எங்கே?

அதிர்ஷ்டவசமாக முதல் கேள்விக்கு நம்மிடம் விடை இருக்கிறது. அந்த விடை முறையே மற்ற இரு கேள்விகளுக்கும் விடை கண்டுபிடிக்கின்ற சாத்தியத்தை உருவாக்குகிறது. தமீமுத்தாரியின் ஹதீஸ் என்று அறியப்பட்ட ஹதீஸில் முதல் கேள்விக்கு பதில் இருக்கிறது. தமீமுத்தாரி கிருஸ்துவராக இருந்தவர், மதீனாவில் இஸ்லாத்தைத் தழுவினார். தஜ்ஜாலை தான் அனுபவித்தது பற்றிச் சில விஷயங்களை நபி (ஸல்) அவர்களிடம் வந்து கூறினார். அவர் கனவு கண்டாரா? அல்லது காட்சிகளாக தென்பட்டனவா? அல்லது உண்மையான அனுபவமா? என்ற தெளிவு இல்லை. நபி (ஸல்) தஜ்ஜாலைப் பற்றிய தமீமுத்தாரியின் அனுபவத்திற்கு விளக்கமளிப்பதற்காக தொழுகைக்குப் பின் பள்ளிவாசலில் அமர்ந்திருக்குமாறு மக்களிடம் கேட்டுக்கொண்டார்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் அழைப்பாளர் அஸ்ஸலாத்து ஜாமிஆ (தொழுகை நடத்தும் நேரம் வந்து விட்டது) என்று அறிவிப்பதைச் செவியுற்று நான் பள்ளிவாசல் சென்றேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடன் தொழுதேன். தொழுது முடித்ததும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சிரித்துக் கொண்டு மிம்பரில் அமர்ந்தார்கள். ஒவ்வொருவரும் தொழுத இடத்திலேயே இருங்கள் என்று கூறிவிட்டு நான் உங்களை ஏன் கூட்டினேன் என்பதை அறிவீர்களா? என்று கேட்டார்கள். அல்லாஹ்வும் அவனது தூதருமே நன்கறிந்தவர்கள் என்று நாங்கள் கூறினோம். அல்லாஹ்வின் மீது ஆணையாக உங்களுக்கு அச்சமூட்டவோ, ஆர்வமூட்டவோ உங்களை நான் கூட்டவில்லை. தமீமுத்தாரி கிறிஸ்தவராக இருந்தார். அவர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார். தஜ்ஜால் பற்றி நான் உங்களுக்குக் கூறி வந்ததற்கேற்ப அவர் ஒரு செய்தியை என்னிடம் கூறினார்.

**அவர் கூறியதாவது:** லக்ம், ஜுதாம் ஆகிய கோத்திரத்தைச் சேர்ந்த முப்பது நபர்களுடன் கப்பலில் நான் பயணம் செய்தேன். ஒரு மாதம் அலைகளால் நாங்கள் அலைக்கழிக்கப்பட்டோம். சூரியன் மறையும் நேரத்தில் ஒரு தீவில் ஒதுங்கினோம். சிறு படகில் ஏறி தீவில் நுழைந்தோம். அப்போது அதிகமான மயிர்களைக் கொண்ட பிராணி ஒன்று எங்களை எதிர்கொண்டது. அதிகமான மயிர்கள் இருந்ததால் அப்பிராணியின் மலப்பாதை எது? சிறுநீர்ப்பாதை எது என எங்களால் அறிய முடியவில்லை.

அப்பிராணியிடம் உனக்குக் கேடு உண்டாகட்டும்! நீ என்ன பிராணி? என்று கேட்டோம். நான் ஜஸ்ஸாஸா என்று அப்பிராணி கூறியது. நீங்கள் இந்த மடத்திலுள்ள மனிதனிடம் செல்லுங்கள்! அவர் உங்களைப்பற்றி அறிவதில் அதிக ஆர்வமுடையவராக இருக்கிறார் எனவும் அப்பிராணி கூறியது. அது ஒரு மனிதனைப் பற்றிக் கூறியதும் அப்பிராணி ஒரு ஷைத்தானாக இருக்குமோ என்று அஞ்சினோம்.

நாங்கள் விரைந்து சென்று அந்த மடாலயத்தை அடைந்தோம். அங்கே பருமனான ஒரு மனிதனைக் கண்டோம். அவனைப் போன்ற ஒரு படைப்பை நாங்கள் ஒரு போதும் கண்டதில்லை. இரண்டு கரண்டைக் கால்களுக்கும் முட்டுக் கால்களுக்குமிடையே இரும்பினால் கழுத்துடன் தலை சேர்த்து அவன் கட்டப்பட்டிருந்தான். உனக்குக் கேடு உண்டாகட்டும். ஏனிந்த நிலை? என்று நாங்கள் கேட்டோம்.

அதற்கு அம்மனிதன், என்னைப்பற்றி அறிய சக்தி பெற்று விட்டீர்கள். எனவே நீங்கள் யார்? என எனக்குக் கூறுங்கள் என்றான்.

நாங்கள் அரபியர்கள். ஒரு கப்பலில் பயணம் செய்த போது ஒரு மாதம் கடல் எங்களை அலைக்கழித்து இந்தத் தீவில் நுழைந்தோம். அடர்ந்த மயிர்களைக் கொண்ட ஒரு பிராணியைக் கண்டோம். அப் பிராணி நான் ஜஸ்ஸாஸா ஆவேன். இந்த மடாலயத்தில் உள்ள மனிதரைச் சந்தியுங்கள் என்று கூறியது. எனவே உம்மிடம் விரைந்து வந்தோம். அதனால் திடுக்குற்றோம். அது ஷைத்தானாக இருக்குமோ என்று அஞ்சினோம் எனக் கூறினோம்.

பைஸான் எனுமிடத்தில் உள்ள பேரீச்சை மரங்கள் பலன் தருகின்றனவா? என எனக்குக் கூறுங்கள் என்று அம்மனிதன் கேட்டான். நாங்கள் ஆம் என்றோம். அதற்கு அம்மனிதன் 'விரைவில் அங்குள்ள மரங்கள் பலனளிக்காமல் போகலாம் என்றான்.

தபரிய்யா எனும் ஏரியைப் பற்றி எனக்குக் கூறுங்கள்! அதில் தண்ணீர் உள்ளதா? என்று அவன் கேட்டான். அதில் அதிகமான தண்ணீர் உள்ளது என்று நாங்கள் கூறினோம். அந்தத் தண்ணீர் விரைவில் வற்றிவிடக் கூடும் என்று அவன் கூறினான்.

ஸகர் என்னும் நீரூற்றில் தண்ணீர் உள்ளதா? அங்குள்ளவர்கள் அத் தண்ணீரால் விவசாயம் செய்கிறார்களா? என்று அவன் கேட்டான். அதற்கு நாங்கள் ஆம்! தண்ணீர் அதிகமாகவே உள்ளது, அங்குள்ளோர் அத்தண்ணீரால் விவசாயம் செய்து வருகின்றனர் என்றோம்.

உம்மி சமுதாயத்தில் தோன்றக் கூடிய நபியின் நிலை என்ன? என்பதை எனக்குக் கூறுங்கள் என்று அம்மனிதன் கேட்டான் அவர் மக்காவிலிருந்து புறப்பட்டு மதீனாவில் தங்கியிருக்கிறார் என்று கூறினோம்.

அவருடன் அரபுகள் போர் செய்தார்களா? என்று அம்மனிதன் கேட்டான். நாங்கள் ஆம் என்றோம். போரின் முடிவு எவ்வாறு இருந்தது? என்று அவன் கேட்டான். அதற்கு நாங்கள் அவர் தன்னை அடுத்துள்ள அரபியரையெல்லாம் வெற்றி கொண்டுவிட்டார் என கூறினோம். அவருக்கு கட்டுப்படுவதே அவர்களுக்கு நல்லதாகு என்று அவன் கூறினான்.

நான் இப்போது என்னைப் பற்றிக் கூறப்போகிறேன். நான் தான் தஜ்ஜால் ஆவேன். (இங்கிருந்து) வெளியேற வெகு விரைவில் எனக்கு அனுமதி வழங்கப்படலாம்.

அப்போது நான் வெளியே வருவேன். பூமி முழுவதும் பயணம் செய்வேன். (நான் பயணிக்கக் கூடிய) நாற்பது நாட்களில் எந்த ஊரை யும் அடையாமல் இருக்கமாட்டேன். ஆயினும், மக்கா, மதீனா ஆகிய இரு ஊர்களைத் தவிர. அவ்விரு ஊர்களும் எனக்கு விலக்கப்பட்டுள் என. அவ்விரண்டு ஊர்களுக்குள் நான் நுழைய முயலும் போதெல் லாம் தன் கையில் வாளுடன் ஒரு மலக்கு என்னை எதிர்கொண்டு தடுத்து நிறுத்துவார். அவற்றின் ஒவ்வொரு வழியிலும் அதைக் காக்கும் வானவர்கள் இருப்பர் என்று அம்மனிதன் கூறினான்.

இதை தமீமுத்தாரி (ரலி) அவர்கள் தம்மிடம் கூறியதாக நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள். மேலும் தமது கைத்தடியால் மிம்பர் மீது தட்டி, இது (மதீனா) தைபா (தூய நகரம்) இது தைபா இது தைபா எனக் கூறினார்கள். ‘இதே விஷயத்தை முன்பே நான் உங்களிடம் கூறியிருக்கிறேன் அல்லவா? என்று மக்களிடம் கேட்டார்கள். மக்கள் ஆம் என்றனர்.

அறிந்து கொள்க! நிச்சயம் அவன் ஷாம் நாட்டின் கடல் (மத்தியத் தரைக்கடல்) பகுதியில் இருக்கிறான், அல்லது எமன் நாட்டின் கடல் (அரபிக்கடல்) பகுதியில் இருக்கிறான், இல்லை, இல்லை, அவன் கிழக்குத் திசையில் இருக்கிறான் என மும்முறை கூறினார்கள்.

இந்த நிகழ்ச்சியை ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) அறிவிக்கி றார்கள்.

**(ஸஹீஹ் முஸ்லிம்.)**

தஜ்ஜால் உலகில் வெளியாகும்போது பூகோள அடிப்படையில் அந்தத் தீவில்தான் இருந்திருக்க வேண்டும். பைத்துல்முகத்தஸை யூதர்கள் அல்லாதவர்களிடமிருந்து விடுவிப்பதன் மூலம் அத்தீவிலிருந்து தான், தான் மஸீஹ் ஆக வேடமிடுகிற வேலையைத் தொடங்குவான். அத்தீவு எது?

## அந்தத்தீவு பிரிட்டன்

ஹதீஸில் குறிப்பிடப்பட்ட அந்தத் தீவு என்பது நமது பார்வையில் பிரிட்டன் ஆகும். நமது கருத்தை ஆதரிக்கும் ஆதாரம் உண்மையில் ஆச்சரியமளிக்கக்கூடியது. கீழ் வருபனவற்றைக் கவனியுங்கள்.

1917-இல் அந்தத் தீவின் பிரிட்டனின் அரசாங்கம் பெல்ஃபோர் தீர்மானம் என்று ஒன்றைக் கொண்டுவந்து உலகத்தை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. பைத்துல்முகத்தஸில் யூத தேசம் நிறுவுவதை பிரிட்டன் ஆதரிக்கிறது என்பதே அந்தத் தீர்மானம். பிறகு 1917-1918-இல் ஜென்ரல் அல்லன்பை தலைமையில் பிரிட்டிஷ் ராணுவம் துருக்கி ராணுவத்தைத் தோற்கடித்து பைத்துல்முகத்தஸை முஸ்லிம்களிடமிருந்து பறித்தது. ஐக்கிய நாடுகள் வழங்கிய கட்டற்ற சுதந்திரத்தின் மூலம் 1919முதல் 1948 வரை பைத்துல்முகத்தஸில் பிரிட்டன் ஆட்சி செலுத்தியது. இக்காலகட்டத்தில் ஐரோப்பிய யூதர்களின் பெருங்கூட்டம் பைத்துல்முகத்தஸில் குடிபுகுவதை உலகம் கண்டது. ஜெர்மன் முதலாம் உலகப்போரில் ஏமாற்றிய யூதர்களை வெறுத்தது. (ஜெர்மானிய யூதர்கள் பிரிட்டனிடம் ஒரு ஒப்பந்தம் செய்திருந்தார்கள், அதாவது அமெரிக்காவை பிரிட்டனுக்கு ஆதரவாக போரில் ஜெர்மானியர்கள் ஈடுபடுத்துவார்கள், பிரிட்டன் போரில் வென்றால் பைத்துல்முகத்தஸை ஜெர்மனுக்குக் கொடுக்கவேண்டும் என்பது ஒப்பந்தம்.) அதன் விளைவாக ஹிட்லரின் யூதக் கொலை வெறித் தாக்குதலும் ஐரோப்பாவிலிருந்து பைத்துல்முகத்தஸுக்கு யூதர்களின் குடியேற்றத்தைப் பெருமளவு அதிகரித்தது. இறுதியாக 1948 இல் குழந்தை பிறப்பதற்கு பிரிட்டன் மருத்துவச்சியாக இருந்தது. அதாவது இஸ்ரேல் தேசத்தின் சுதந்திரப் பிரகடனம். மேலும் அந்தத் தீவு - பிரிட்டன் மத்தியத் தரைக் கடலுக்குக் குறுக்கே அரப் நாட்டிலிருந்து ஒரு மாத பயண தூரத்தில் அமைந்திருப்பதை நாம் குறித்துக்கொள்ளலாம்! பிரிட்டன் வேவு பார்ப்பதிலும், ஒற்றர்களை நியமிப்பதிலும் கைதேர்ந்தது என்பதும் அவசியம் குறித்துக்கொள்ள வேண்டியதாகும். ஷெர்லாக் ஹோம்ஸ், ஜேம்ஸ்பாண்ட் ஆகிய திரைப்படங்கள் லாரன்ஸ் ஆஃப் அரேபியாவுக்கு நிகராக புனையப்பட்டவைகள் (லாரன்ஸ் ஆஃப் அரேபியா லாரன்ஸ் என்ற ராணுவ அதிகாரி பைத்துல்முகத்தஸைக் கைப்பற்றுவதற்கு எப்படி கீழறுப்பு வேலைகள் செய்தார் என்பதை விளக்கும் வரலாற்றுத் திரைப்படம்)

இத்தனைக்கும் பிறகும் ஹதீஸில் குறிப்பிடப்பட்ட தீவு பிரிட்டன் தான் என்ற நம்முடைய கருத்தை ஏற்க மறுக்கின்ற சிலர் இருப்பதற்கு எல்லா வாய்ப்புகளும் இருக்கின்றன. அப்படிப்பட்டவர்களை நம்மைத் திருத்துவதற்குக் கண்ணியத்தோடு அழைக்கிறேன். அப்படிச் செய்ய முன்வருபவர்கள் முதலில் அந்தத் தீவு எது என அடையாளப்படுத்தி அதை நிறுவுவதற்கான ஆதாரத்தையும், நம்முடைய கருத்தை செல்லாததாக்குவதற்கான ஆதாரத்தையும் வழங்க வேண்டும்.

எனவே தஜ்ஜால் பூமியில் வெளிப்படுத்தப்பட்டு மஸீஹ் ஆக தோற்றமளிக்கின்ற தன் வேலையை ஆரம்பிப்பான் (முதலில் ஒரு நாள் என்பது ஒரு வருடத்தைப்போல என்ற நிலையில்) என்று அறிவிக்கிற ஹதீஸிலிருந்து அவன் பிரிட்டன் தீவிலிருந்துதான் அந்த முதல் நிலையில் தோன்றுவான் என்ற முடிவுக்கு நாம் வருகிறோம். இந்த காலகட்டத்தில் பிரிட்டன் உலகின் வல்லரசாக செயல்பட்டதையும் நாம் கவனித்திருக்கிறோம். மேலும் பிரிட்டன் உலகை ஆள்கின்ற நிலையில் உலகத்தின் பணத்தைக் கட்டுப்படுத்தும் ஆற்றலைக் கொண்டிருந்ததையும் நாம் கவனித்தோம். இது இங்கிலாந்து வங்கி மூலம் செயல்படுத்தப்பட்டது. உண்மையில் லண்டன் உலகப் பொருளாதாரத்தின் தலைநகராக இருந்தது.

ஆனால் அதன்பிறகு ஒரு காலகட்டத்தை நாம் பார்த்தோம், அதில் வினோதமானதும் மர்மமானதுமான முறையில் பிரிட்டனின் உலக வல்லரசுப் பட்டம் பிடுங்கப்பட்டு யு.எஸ்.ஏ.க்கு வழங்கப்பட்டது. இந்த மாற்றத்தின் வேலைகள் ஒரு போரிலிருந்து (முதலாம் உலகப் போர்) இன்னொரு போரில் (இரண்டாம் உலகப்போர்) முடிவடைந்த தாகத் தோன்றுகிறது. முதலாம் உலகப்போருக்கும் இரண்டாம் உலகப்போருக்கும் இடையிலுள்ள காலகட்டம் என்பது தஜ்ஜாலுடைய ஒரு நாள் என்பது ஒரு வருடத்தைப் போல என்ற நிலையிலிருந்து ஒரு நாள் என்பது ஒரு மாதத்தைப் போல என்ற நிலைக்கு மாறிய கால கட்டம் என்பது நம்முடைய கருத்து. தஜ்ஜாலின் அடுத்த கட்டமாக இருக்கும் ஒரு நாள் என்பது ஒரு மாதம் என்ற நிலையிலிருந்து ஒரு வாரம் என்ற நிலைக்கு தஜ்ஜாலின் நகர்தல் பல நுணுக்கங்களை நமக்கு வழங்குவதால் இந்த மாற்றத்தைக் கூர்ந்து கவனிப்பது மிக அவசியமாகும்.

1914-இல் சரோகிவோ நகரில் கோடையில் ஏற்பட்ட தீவிரவாதச் செயல் ஆஸ்திரியா ஹங்கேரியின் உயர் ஆட்சியாளர்

ஃபிரான்ஸ் ஃபெர்டினன்ட் கொலையில் முடிந்தது. குற்றவாளி செர்பியர். ஆனால் ரேகைத் தடங்கள் ரஷ்யாவை நோக்கி இருந்தன. யார் கொலை செய்து அதன் தடயங்களை ரஷ்யாவை நோக்கித் திருப்பிவிட்டார்களோ அவர்கள் ஆஸ்திரிய ஹங்கேரி ரஷ்யா மீது போர்ப் பிரகடனம் செய்ய வேண்டும் என விரும்பினார்கள். கொலையின் முக்கிய இலக்கு நேரடியாக ரஷ்யா அல்ல, மாறாக ரஷ்யாவின் நண்பன், அதாவது பிரிட்டன். உஸ்மானியப் பேரரசு அடுத்த இலக்கு. இது அழிக்கப்பட வேண்டும், அந்த வேலையை பிரிட்டன் செய்ய வேண்டும். ஆஸ்திரிய ஹங்கேரி ரஷ்யா மீது போர் பிரகடனம் செய்தபோது பிரிட்டனும் பிரான்ஸும் உடனே ரஷ்யாவுக்கு ஆதரவாகக் களத்தில் குதித்தன. ஜெர்மனி ஆஸ்திரிய ஹங்கேரிக்கு ஆதரவு தெரிவிக்க முன்வந்தது. கொலையின் பின்னணியிலுள்ள திட்டம் என்னவெனில் போரின் மூலம் பிரிட்டனின் பொருளாதாரத்தை பலவீனப்படுத்தி, இறுதியாக வல்லரசு என்ற தகுதியை இழக்கச்செய்து வேறு ஒரு தேசத்தை அந்த இடத்தில் கொண்டு வருவதாகும். தீவிரவாதச் செயலின் குற்றவாளிகள் ஏக காலத்தில் உஸ்மானியப் பேரரசையும் தாக்க வேண்டும் என்ற மிகக் கெட்ட தந்திரத்தில் இருந்தனர். அந்தப் பேரரசு அதுவரைப் புனித பூமியில் யூதர்கள் நுழைவதற்கு அசைக்க முடியாத தடையை விதித்திருந்தது. அந்தத் தடையை அகற்றுவதற்குச் சிறந்த உபாயம் போர்தான். அவ்வாறு உஸ்மானியப் பேரரசு திறமையான உள்சதி வேலை மூலம் ஜெர்மனிக்கு ஆதரவாக போர்க்களத்தில் நுழைய நிர்ப்பந்திக்கப்பட்டது. பிரிட்டன் இறுதியாக உஸ்மானியப் பேரரசை அழிப்பதற்கு மட்டும் பயன்படுத்தப்படவில்லை, மாறாக இஸ்லாமிய கிலாஃபத்தையே அழிப்பதற்கு பயன்படுத்தப்பட்டது. (கிலாஃபத், ஹிஜாஸ் சவூதி வஹ்ஹாபிதேசம் எனற நமது நூலைக் காண்க)

ஆனால் 1914 முதல் 1916 வரை போர் பிரிட்டனுக்கு பேரழிவாக இருந்தது. முதலில் ஜெர்மானிய நீர்மூழ்கிக் கப்பல்கள் பிரிட்டனிடமிருந்து கடல் ஆதிக்கத்தைப் பறித்தன. இரண்டாவது, ஜெர்மனி ஃபிரான்ஸைக் கைப்பற்றி ஜெர்மனி ஆதரவு அரசை பாரிஸில் ஏற்படுத்தியது. மூன்றாவது, ரஷ்யத் துருப்புகள் படையிலிருந்து திருப்பி அழைக்கப்பட்டனர். இறுதியில் பிரிட்டன் தனித்துவிடப்படுகின்ற துக்ககரமான நிலையில் இருந்தது. பட்டினியால் பீடிக்கப்பட்டது. பிறகு 1916 இல் திட்டமிட்ட மாற்றம் ஏற்பட்டது. போரில் பிரிட்டனுக்கு ஆதரவாக அமெரிக்காவைத் தாங்கள் கொண்டுவருவதாகவும், அப்படி பிரிட்டன் போரில் வென்றால் தங்களுக்கு பைத்துல்முகத்தஸை வழங்க

வேண்டும் என்றும் யூதர்கள் பிரிட்டனிடம் கோரிக்கை வைத்தார்கள். பிரிட்டன் கோரிக்கையை ஏற்றுக்கொண்டது. இறுதியில் யூதர்கள் தங்களுடைய எல்லா முயற்சிகளையும் பயன்படுத்தி பிரிட்டனுக்கு ஆதரவாக அமெரிக்காவைப் போரில் நுழைய வைத்தார்கள். ஒரு வருடம் கழித்து பிரிட்டன் பெல்ஃபோர் உடன்படிக்கை மூலம் யூதர்களுக்குக் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்றியது. 1916 ஆம் ஆண்டு, பிரிட்டன் அரேபிய தீபகற்பத்தில் வெற்றிகரமான உளவு வேலை செய்த ஆண்டாகக் குறிக்கப்பட்டது.

உஸ்மானிய இஸ்லாமிய அரசுக்கெதிராக இரண்டு ராஜதந்திர அழுத்தங்களைக் கொடுப்பதில் பிரிட்டன் வெற்றி பெற்றது. முதலாவது, பிரிட்டனுக்கும் அப்துல் அஜீஸ் இப்னு சவூதுக்கும் இடையில் செய்யப்பட்ட சக உதவி மற்றும் நேச ஒப்பந்தம் கையெழுத்தானது. (பிறகு ரியாத் மீது ஆதிக்கம் செலுத்துவது) பிரிட்டனுக்கு இதற்கான விலை மாதம் 5000 ஸ்டெர்லிங் பவுண்டு அப்துல் அஜீஸுக்கு பிரிட்டிஷ் கருவூலத்திலிருந்து கொடுக்க வேண்டியதாயிற்று. இரண்டாவது, உஸ்மானிய கலீஃபாவுக்கெதிராக கிளர்ச்சி செய்து அதை சுதந்திர நாடாக்குவதற்காக, ஷரீஃப் ஹுஸைனை மக்கா, ஹிஜாஸ் பகுதிக்கு உஸ்மானியப் பேரரசின் நியமிக்கப்பட்ட கவர்னராக அறிமுகப்படுத்தியதில் வெற்றிகண்டது. பிரிட்டனுக்கு இதற்கான விலை ஏழு மில்லியன் ஸ்டெர்லிங் பவுண்டாக இருந்தது. (கிலாஃபத், ஹிஜாஸ் சவூதி வஹ்ஹாபிதேசம் என்ற நமது நூலைக் காண்க)

இவ்வாறு 1916இல் போரின் ஓட்டம் மாறியது. இறுதியாக அமெரிக்கா, பிரிட்டன் யூதர்களுக்கு வெற்றி கிடைத்தது. ஜெர்மனி தோற்கடிக்கப்பட்டது மட்டுமல்ல, மிக முக்கியமாக உஸ்மானியப் பேரரசு ஊனப்படுத்தப்பட்டு அங்கு மதச்சார்பற்ற துருக்கி தேசம் எழுந்தது. உண்மையில் உஸ்மானியப் பேரரசை ஊனப்படுத்துவதில் முக்கியப் பங்காற்றிய அதே பிரிட்டனுடன் துருக்கி மதச்சார்பற்ற தலைமை பாதுகாப்பு தற்காப்புப் பேச்சு வார்த்தை தொடங்கியது. அதே நேரம் அமெரிக்கா பிரிட்டனிடமிருந்து உலகை ஆளும் வல்லரசுப் பட்டத்தைப் பிடுங்கிக்கொள்ளும் அளவு பிரிட்டன் போரால் அழிக்கப்பட்டிருந்தது. இது இரண்டு உலகப் போர்களுக்கிடையிலுள்ள காலகட்டத்தில் உறுதி செய்யப்பட்டது. இரண்டாம் உலகப்போருக்குப் பிறகும் அமெரிக்கா வல்லரசாவது உறுதி செய்யப்பட்டது. இரண்டாம் உலகப் போரில் ஐசன் ஹோவர்

நட்புத் துருப்புக்களை வழிநடத்தியபோதும் உறுதி செய்யப்பட்டது. பிறகு 1944 இல் பிரிட்டன் வூட் உடன் படிக்கையில் ஸ்டெர்லிங்க் பவுண்டின் மதிப்பைக் குறைத்து அமெரிக்க டாலர்தான் சர்வதேச பணம் என்று தேர்ந்தெடுக்கப்பட்டபோதும் அமெரிக்கா வல்லரசாவது உறுதி செய்யப்பட்டது. உலக வங்கியும் சர்வதேச பண அமைப்பும் இங்கிலாந்து வங்கியை உலகின் உயர்ந்த பொருளாதார நிறுவனம் என்ற நிலையிலிருந்து மாற்றி அதை வாஷிங்டனிடம் கொடுத்தது. போருக்குப்பின் அமெரிக்கா, பிரிட்டன் ஐரோப்பியப் பொருளாதாரத்தை மாபெரும் திட்டத்தின் மூலம் மறுகட்டமைப்புச் செய்தது. 1956 இல் சூயஸ் பிரச்சனையிலும், 1963-இல் கியூபா ஏரிப் பிரச்சனையிலும் சாமர்த்தியமாக அமெரிக்கா தன்னைப் புதிய வல்லரசாக உலகத்திற்குக் காட்டியது.

உலகை ஆண்ட வல்லரசு பிரிட்டன் பைத்துல்முகத்தஸ் விஷயத்தில் எவ்வாறு துன்புறுத்தக் கூடியதாகவும் பிரிட்டன் மக்களுக்கு இந்த வினோத மனநிலையை விளக்க இயலாததாகவும் இருந்ததோ, அதே போல புதிய வல்லரசு அமெரிக்காவும் பைத்துல்முகத்தஸ் விஷயத்தில் துன்புறுத்தக்கூடியதாகவும், அதை அமெரிக்க மக்களுக்கு விளக்க இயலாததாகவும் இருக்கிறது. உதாரணத்திற்கு, 1948 இல் இஸ்ரேல் தேசம் சுதந்திரப் பிரகடனத்தை அறிவித்தபோது அதற்கு முதலில் உலக அங்கீகாரத்தை வழங்கியது அமெரிக்காதான். அன்றிலிருந்து இஸ்ரேலுடைய நேச நாடாக அமெரிக்கா இருந்து வருகிறது. அமெரிக்கா பெரிய அளவில் இஸ்ரேலுக்குப் பொருளாதார, ராணுவ உதவிகளைச் செய்திருக்கிறது. அமெரிக்கா உலகின் மற்ற நாடுகளுக்குச் செய்த ஒட்டுமொத்த உதவியைவிட அமெரிக்கா இஸ்ரேலுக்குச் செய்த உதவிதான் அதிகம். சில உதவிகள் அமெரிக்க அரசாங்கத்தால் இஸ்ரேலுக்குச் செல்கிறது, ஆனால் மிக முக்கியமான உதவிகள் அமெரிக்காவில் வசிக்கும் யூதர்கள் மூலமே இஸ்ரேலுக்குச் செல்கின்றன. (அமெரிக்காவின் அணு ஆயுத ரகசியத்தை ஜோனதன் பொல்லாட் இஸ்ரேலுக்குக் கடத்தினார் என்பது மிகப் பிரபலமான செய்தி.) அதன் விளைவாகவே அணு ஆயுத அமெரிக்காவுக்கு நிகராக இஸ்ரேலும் அணு ஆயுத சக்தியுள்ள நாடாக மாறியது.

இஸ்ரேலுக்கும் அமெரிக்காவுக்கும் இடையிலுள்ள மர்மமான இயற்கைக்கு முரணான விளக்கமுடியாத உறவுமுறை மீண்டும் ஒரு முறை சர்வதேச அரங்கில் நிகழ்ந்தது. இனம் இனப்பாகுபாடு பற்றிய

டர்பன் மாநாட்டில் பாலஸ்தீன மக்கள் மீது இஸ்ரேலின் ஆக்கிரமிப் பிற்கு கடுமையான கண்டனம் தெரிவிக்கப்பட்டது. இஸ்ரேல் மாநாட்டிலிருந்து வெளிநடப்புச் செய்தது. இஸ்ரேலுடம் வெளிநடப் பில் சேர்ந்து கொண்ட தன்னிகரில்லா ஒரே நாடு அமெரிக்காதான்.

தஜ்ஜாலுடைய பூமி வாழ்க்கையில் அவனுடைய ஒரு நாள் என்பது ஒரு மாதத்தைப்போல என்ற நிலையில் பூகோள அடிப்படை யில் தஜ்ஜால் அமெரிக்காவில் அமைந்திருக்கின்றான் என்பது நமது முடிவு. தஜ்ஜால் தன் பூமியின் வாழ்நாளில் ஒரு நாள் என்பது ஒரு வாரம் போல என்ற நிலைக்கு மாறும் காலகட்டத்தில் நாம் வாழ்கிறோம் என இந்நூலில் நாம் வாதிடுகிறோம். அப்பொழுது உலகை ஆளும் வல்லரசு என்ற பட்டம் அமெரிகாவிடமிருந்து இஸ்ரேலுக்கு மாற்றப்படும். உண்மையில் அமெரிக்காவில் நடந்த செப்டம்பர் 11 அமெரிக்கத் தாக்குதலை, வல்லரசு மாற்றத்தை முழுமையாக்கும் ஒரு நடவடிக்கையாகவே நாம் கருதுகிறோம்.

எல்லாவற்றையும் விளக்கும் **(அல்குர்ஆன், 16:89)** என்று தன்னைத்தானே பறைசாற்றிக்கொள்ளும் குர்ஆன், உண்மையில் மனிதகுல வரலாற்றில் என்றுமே நடந்திராத மிக ஆச்சரியமான நிகழ்வுகளுக்கு விளக்கமளிக்கும் ஆற்றலைக் கொண்டிருக்கிறது. அதாவது அல்லாஹ்வால் அழிக்கப்பட்டு 2000 ஆண்டுகளுக்குப் பிறகு பைத்துல்முகத்தஸில் இஸ்ரேல் தேசம் மீட்டெடுக்கப்பட்டிருப்பது.

அந்த விளக்கத்தைப் பெறுவதற்கு குர்ஆனின் பக்கம் நாம் கவனம் செலுத்தியிருப்பதன் நோக்கம் என்னவெனில், பைத்துல் முகத்தஸில் நடக்கும் வினோத நிகழ்ச்சிகளுக்கு இறைவழிகாட்டுதல் மூலம் பொருத்தமான பதிலளிக்க முஸ்லிம்களுக்கு உதவுவதுதான். இறுதி காலத்தில் அல்லாஹ் யூதர்களை பைத்துல்முகத்தஸுக்குக் கொண்டுவருவான் என்ற மிகவும் துக்ககரமான முன்னறிவிப்பின் விளக்கத்தைப் பெறும்முன், ஈஸா நபி(அலை) திரும்பி வருவார் என்ற முன்னறிவிப்பை வைத்துக்கொண்டு உலகம் இதுவரை கண்டிராத கேலிக்கூத்தாக இருக்கும் மிர்ஜா குலாம் அஹ்மதுடைய விஷயத்தைப் பார்த்துவிடுவது அவசியம்.

அத்தியாயம் 9

# மிர்ஜா குலாம் அஹ்மது - போலி மஸீஹ்

அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்.

எவன் கையில் என் உயிர் இருக்கிறதோ அவன் மீது ஆணையாக, மர்யமின் மகன் ஈஸா விரைவில் உங்களுக்கு மத்தியில் ஒரு நீதமான ஆட்சியாளராக இறங்கி வருவார். அவர் சிலுவையை உடைத்து, பன்றியைக் கொன்று ஜிஸ்யா (முஸ்லிம்கள் கட்டுப்பாட்டிலிருக்கும் யூதர்களும், கிருஸ்துவர்களும் செலுத்த வேண்டிய) வரியை ஒழிப்பார். மேலும் அப்போது ஏராளமான பணம் இருக்கும், அதை வாங்க ஆள் இருக்காது. உலகமும் அதிலுள்ளவைகளை விட அல்லாஹ்வுக்கு ஒரு ஸஜ்தாசெய்வது (சிரம்பணிவது) சிறந்ததாக இருக்கும். என்ற நபி மொழியை அறிவித்து விட்டு அறிவிப்பாளர் அபூஹுரைரா (ரலி) அவர்கள் நீ விரும்பினால் இந்த வசனத்தை ஓதிக்கொள் என கீழ்வரும் குர்ஆன் வசனத்தைச் சுட்டிக் காட்டினார்கள்.

وَإِنْ مِنْ أَهْلِ الْكِتَابِ إِلَّا لَيُؤْمِنَنَّ بِهِ قَبْلَ مَوْتِهِ وَيَوْمَ الْقِيَامَةِ يَكُونُ عَلَيْهِمْ شَهِيدًا

வேதமுடையவர்களில் எவரும் தாம் இறப்பதற்கு முன் அவர் (ஈஸா) மீது ஈமான் கொள்ளாமல் இருப்பதில்லை; ஆனால் மறுமை நாளில் அவர் அவர்களுக்கு எதிராக சாட்சி சொல்பவராக இருப்பார்.

**(அல்குர்ஆன், 4:159)**

20 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இந்தியாவில் காதியான் எனும் நகரில் வாழ்ந்த பஞ்சாபி முஸ்லிம்தான் மிர்ஜா குலாம் அஹ்மது. முதலாம் உலகப்போர் தொடங்குவதற்கு சற்றுமுன் இறந்துபோனார். முதலாம் உலகப்போரின் காலகட்டத்தில் பிரிட்டனிடமிருந்த வல்லரசு பட்டத்தை அமெரிக்கா பறித்துக்கொண்டதைக் காண அவர் இருக்க வில்லை. மேலும் யூதர்கள் பைத்துல்முகத்தஸ் திரும்பியதையும், இஸ்ரேல் தேசம் நிறுவப்பட்டதையும் அவர் பார்க்கவில்லை. மேலும் தற்காலத்தில் அமெரிக்காவின் வல்லரசுப் பட்டத்தை இஸ்ரேல் பறித்துக்கொண்டிருக்கிறதே அதைப் பார்ப்பதற்கும் அவர் இன்று இல்லை. இந்த வல்லரசின் இடமாற்றம் அடுத்த ஐந்திலிருந்து பத்து ஆண்டுகளுக்குள்ளோ, அதைவிடவும் விரைவிலோ ஏற்படலாம் என இந்நூல் எதிர்பார்க்கிறது.

மஸீஹ் திரும்பி வருவதன் முன்னறிவிப்பு சம்பந்தமான பல வாதங்களை முன்வைத்து உலக மக்களை அதிர்ச்சிக்குள்ளாக்கினார் அவர். இந்தியாவில் அஹ்மதிய்யா இயக்கத்தை நிறுவினார். உடனே இது, இதைப் பிரச்சாரம் செய்யவும், மேற்குலக மக்களை அஹ்மதிய்யா இயக்கத்தில் சேர்க்கவும் அசாதாரணமாக உழைக்க வைத்தது. பிறகு அந்த அமைப்பு இலிஜா முஹம்மதால் வழிநடத்தப்பட்ட ஆஃப்ரிக்க அமெரிக்க இஸ்லாமிய தேசத்தின் கவனத்தை ஈர்ப்பதற்கு சிரத்தை எடுத்துக் கொண்டது. அதன் விளைவாக மிர்ஜா ஆஃப்ரிக்க அமெரிக்கர்களின் மீது தாக்கத்தை ஏற்படுத்துவதில் வெற்றி கண்டார். அவர்கள் இன்று (மஸீஹ் திரும்பி வருவது சம்பந்தமான விஷயத்தில்) இமாம் வாரிதுத்தீனாலோ, அல்லது லூயிஸ் ஃபராக்கானாலோ வழி நடத்தப்படுகின்றனர். இது தான் மிர்ஜா குலாமின் வாதங்கள் பற்றி இந்நூலில் ஓர் அத்தியாயம் எழுதுவதற்குக் காரணமாக அமைந்தவை.

வரலாற்று நடவடிக்கைகள் உண்மையை வெளிப்படுத்துவதால் மிர்ஜா குலாமின் சீடர்களும், அவரின் பிரச்சாரத்தால் கவரப்பட்ட வர்களும் கீழ்வரும் மிர்ஜா குலாமின் வாதங்கள் பொய் என்பதை புரிந்து கொள்ளவேண்டும்.

- மஸீஹ் திரும்பிவரும் சமயத்தில் அவர் (குலாம் அஹ்மது) முஸ்லிம்களின் தலைவராக இருக்கப்போகும் இமாம் மஹ்தி ஆக இருப்பார்.
- மஸீஹ் திரும்பிவருவது சம்பந்தமான முன்னறிவிப்பு அவரின் (குலாம் அஹ்மது) மூலம் பூர்த்தியடைகிறது.
- முஹம்மது நபி (ஸல்) அவர்களின் நுபுவ்வதோடு (நபித்துவத்துடன்) அவரும் (குலாம் அஹ்மது) இறைவனால் நியமிக்கப்பட்ட இறைத்தூதராவார்.

மிர்ஜாவின் மரணத்திற்குப்பின் நடந்த, யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்புதல், இஸ்ரேல் தேசம் நிறுவப்படுதல் ஆகிய நிகச்சிகளுக்கு அஹ்மதிய்யாக்கள் குர்ஆன், ஹதீஸுடைய கண்ணோட்டத்தில் பதிலளிக்க வருமாறு அழைக்கின்றோம். குர்ஆன், ஹதீஸுடைய கண்ணோட்டத்தில் அவர்கள் இவற்றுக்கு பதிலளிக்க முன்வருவார்களானால் மிர்ஜா குலாம் கூறிய விளக்கங்களுக்கு முற்றிலும் வித்தியாசமான விளக்கங்கள் அவர்களுக்குக் கிடைக்கும் என்று நாம் உறுதியளிக்கிறோம்.

பைத்துல்முகத்தஸுக்கு யூதர்கள் திரும்பிய நிகழ்ச்சிக்கு அஹ்மதியாக்கள் குர்ஆனுடைய விளக்கம்பெற வேண்டுவார்களாயின் அவ்விஷயத்தில் அவர்களுக்கு இந்நூல் உதவும். அஹ்மதிய்யா இயக்கத்தின் எந்த உறுப்பினரும் குலாம் அஹ்மதின் வாதங்களைப் புறக்கணிக்காமல் இந்நூலின் அடிப்படை வாதங்களையும் முடிவுகளையும் புரிந்து கொள்ளமுடியாது. அல்லாஹ் யாருக்கு நாடுகிறானோ அவர்களுக்கு நேர்வழி எனும் ஒளியைக் காட்டுகிறான்.

தஜ்ஜாலால் ஏமாற்றப்பட்டவர்கள் யூதர்கள் மட்டுமல்ல, சத்தியத்தைத் தேடும் வேட்கையிலுள்ள, பிரமிக்கச் செய்யும் பக்தி வாய்ந்த முஸ்லிம்களும்தான் ஏமாற்றப்பட்டனர். அதே வேட்கையில் அவர்களை அஹ்மதிய்யா இயக்கத்தில் இணைய வைத்து, ஆதாரப்பூர்வமான தூய இஸ்லாத்தில் இணைந்துவிட்டதாக நம்பவைக் கப்பட்டனர். உண்மையில் அவர்கள் தஜ்ஜால் விரித்த வலையில் மாட்டிக் கொண்டனர். எவ்வாறு அவர்கள் ஏமாற்றப்பட்டார்கள்?

மஸீஹ் திரும்பி வருவார் என்பது குலாம் அஹ்மதின் வருகை தான் என்று அஹ்மதிய்யா இயக்கத்தினர் நம்புகின்றனர். இவ் வாதம் பொய் என்பதற்கு ஏராளமான சான்றுகள் இருக்கின்றன.

முதலில், மஸீஹ் திரும்பி வருவது சம்பந்தமான நபி மொழிகளில் அவர் திரும்பி வரும்போது "மர்யமின் மகனாக"த்தான் வருவார் என்று தெள்ளத்தெளிவாக இருக்கின்றது. ஆனால் குலாம் அஹ்மது ஒரு பஞ்சாபிப் பெண்ணின் மகனாவார். இரண்டாவது, (மஸீஹ் தஜ்ஜாலைக் கொல்வார் என்று முன்னறிவிப்பில் கூறப்பட்டுள்ளதால்) குலாம் அஹ்மதுதான் மஸீஹ் என்றால் அவர் போலி மஸீஹ் தஜ்ஜாலைக் கொல்ல வேண்டும். வாசகர்கள் வசதிக்காக நபி (ஸல்) அவர்களின் பொன்மொழியை முழுவதுமாகத் தருகிறோம்.

**நவ்வாஸ் இப்னு சம்ஆன் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:**

ஒரு நாள் காலையில் நபி (ஸல்) தஜ்ஜாலைப் பற்றிக் கூறினார்கள். அவன் தொடர்பாகப் பேசியபோது சில நேரங்களில் குரலைத் தாழ்த்தவும் சில சமயங்களில் குரலை உயர்த்தவும் செய்தார்கள். இறுதியில் அவன் அருகிலுள்ள பேரிச்சந்தோட்டங்களுக்குள் இருக்கிறானோ என்று நாங்கள் கருதும் அளவுக்குக் கூறினார்கள். பின்னர் நாங்கள் மறுபடியும் மாலையில் நபி (ஸல்) அவர்களிடம் வந்தோம். அப்போது தஜ்ஜாலைப் பற்றிய அச்சம் எங்கள் முகங்களில் இருப்பதைப் பார்த்து "உங்களுக்கு என்ன ஆயிற்று" என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதரே இன்று காலையில் தாங்கள் தஜ்ஜாலைப் பற்றிக் குறிப்பிட்டீர்கள். அப்போது தாங்கள் குரலைத் தாழ்த்தியும் உயர்த்தியும் பேசினீர்கள். இறுதியில் அருகில் எங்கோ பேரிச்ச மரத்தோட்டத்தில் இருக்கிறானோ என்று நாங்கள் எண்ணும் அளவுக்கு தாங்கள் பேசினீர்கள். அது தான் எங்கள் பயத்திற்குக் காரணம்.

அப்போது நபி (ஸல்) அவர்கள் உங்களைக் குறித்து நான் அதிகம் பயப்படுவது தஜ்ஜாலைக் குறித்து அல்ல; நான் உங்களி டையே உயிருடன் இருக்கும்போது அவன் தோன்றினால் அவனிட மிருந்து உங்களைக் காப்பாற்றுவதற்கு நானே போராடுவேன், நான் உங்களிடம் இல்லாதபோது அவன் வெளிப்பட்டால் அப்போது ஒவ்வொரு முஸ்லிமும் தங்களுக்காக போராடிக்கொள்ள வேண்டும். அப்போது அல்லாஹ் ஒவ்வொரு முஸ்லிமுக்கும் எனது சார்பில் பொறுப்பாளனாக இருப்பான். தஜ்ஜால் சுருள்முடி கொண்ட ஒரு இளைஞனாவான்; அவனுடைய கண் ஒரே குலையில் துருத்திக் கொண்டிருக்கும் திராட்சை போன்றிருக்கும். உருவத்தில் அவன் அப்துல் உஜ்ஜா பின் கத்தன் போலிருப்பான். உங்களில் யார் அவனை அடைகிறாரோ அவர் "அல்கஹ்ஃப்" (18) அத்தியாயத்தின்

தொடக்க வசனங்களை ஓதிக்கொள்ளவும். அவன் சிரியாவுக்கும் இராக்கிற்கும் இடையிலுள்ள ஒரு பகுதியிலிருந்து புறப்பட்டு வந்து வலப்பக்கத்திலும் இடப்பக்கத்திலும் அக்கிரமங்களைக் கட்டவிழ்த்து விடுவான்; அல்லாஹ்வின் அடியார்களே அப்போது நீங்கள் உறுதி யோடு இருங்கள் என நபி (ஸல்) கூறினார்கள்.

நாங்கள் அவன் பூமியில் எத்தனை நாட்கள் தங்கியிருப்பான்? என்று கேட்டோம். அதற்கு "நாற்பது நாட்கள்" என்று பதிலளித்த நபியவர்கள் "அவனுடைய ஒரு நாள் ஓர் ஆண்டைப் போலவும், மற் றொரு நாள் ஒரு மாதத்தைப் போலவும், அடுத்த நாள் ஒரு வாரத்தைப் போலவும் அதற்கடுத்த நாள்கள் சாதாரணமாக உங்களுடைய நாள் களைப் போலவும் இருக்கும் என்று குறிப்பிட்டார்கள்.

நாங்கள் அதற்கு ஓர் ஆண்டைப்போல இருக்கும் அந்த நாளில் வழக்கமாக ஒரு நாளைக்குத் தொழும் தொழுகையைத் தொழுதால் போதுமா? என்று கேட்டோம், அதற்கு நபியவர்கள் "இல்லை போதாது அந்த நீண்ட நாளை அதற்கேற்பக் கணக்கிட்டுத் தொழுதுகொள்ளுங்கள்" எனக் கூறினார்கள். நாங்கள் அவன் பூமியில் (சுற்றித் திரியும்) வேகம் எப்படி இருக்கும்? என்று கேட்டோம்; அதற்கு "பின்புறத்திலிருந்து காற்று விரட்டிச்செல்லும் மேகத்தைப்போன்று அவன் வேகம் இருக்கும் என்று நபி (ஸல்) கூறினார்கள்.

அவன் ஒரு சமுதாயத்திடம் வந்து அழைப்பு விடுப்பான் (தன்னை இறைவனாக ஏற்றுக்கொள்ளும்படி) அவர்களும் அவன் மீது நம்பிக்கை கொண்டு அவனது அழைப்பிற்குப் பதிலளிப்பார்கள். உடனே அவன் வானத்திற்கு கட்டளையிட மழை பொழியும், பிறகு பூமிக்குக் கட்டளையிட அது முளைக்கச் செய்யும். (அவைகளை மேய்ந்து) அவர்களின் கால்நடைகள் முன்பிருந்ததைவிட நீண்ட திமில்களைக் கொண்டவையாகவும், மடு கனத்தவையாகவும், வயிறு நிரம்பியவையாகவும் மாலையில் வீடு திரும்பும்.

பின்னர் அவன் இன்னொரு சமுதாயத்திரிடம் வந்து அழைப்பு விடுப்பான், ஆனால் அவர்கள் அவனுடைய அழைப்பை நிராகரித்து விடுவார்கள். அவர்களிடமிருந்து அவன் திரும்பிச் சென்றுவிடுவான். அதனால் அவர்கள் வரட்சியாலும் பஞ்சத்தாலும் பாதிக்கப்பட்டவர் களாக காலைப் பொழுதை அடைவார்கள். அவர்கள் கையில் செல்வம் எதுவும் இருக்காது.

அவன் பாழடைந்த இடமொன்றைக் கடந்து செல்வான் அதைப் பார்த்து உன்னிடம் உள்ள புதையல்களை வெளிப்படுத்து” என்று கூறுவான். அப்போது (வெளிப்படும்) அந்தப் புதையல்கள் இராணித் தேனீயை பின்பற்றிச் செல்லும் தேனீக்களைப்) போல அவனைப் பின்பற்றிச்செல்லும். பின்னர் அவன் வாட்ட சாட்டமான இளைஞர் ஒருவரை அழைத்து அவரை வாளால் வெட்டி இரண்டு துண்டாக்கி, அம்பெய்யும் தூரத்திற்கு இடைவெளிவிட்டு அவ்விரண்டையும் போடுவான். பின்னர் அந்தச் சடலத்தை அழைப்பான், உடனே அந்த இளைஞர் முகம் ஒளிர சிரித்துக்கொண்டே எழுந்து வருவார். இதற்கிடையில் மர்யமின் மகன் ஈஸா நபி (அலை) அவர்களை அல்லாஹ் பூமிக்கு அனுப்பி வைப்பான், அவர் திமிஷ்கின் கிழக்குப் பக்க (கோபுரத்தின்) மினாரா மீது இளங்குங்கும நிறத்தில் இரு உடையில் இரு மலக்குமார்களின் இறக்கையில் கைகளை வைத்தவர்களாக இறங்குவார்கள். அவர் தலையை தாழ்த்தும்போது வேர்வை முத்துகள் விழும். தலையை உயர்த்தும்போது முத்துப் போன்ற மணிகள் தூவப்படும். அவரின் உடல் வாசனையை நுகரும் (காஃபிர்கள்) இறை நிராகரிப்பாளர்கள் மரணிப்பார்கள். அவர் கண் எட்டும் தூரம் அளவு அவருடைய மூச்சு வியாபிக்கும். பிறகு தஜ்ஜாலைத் தேடுவார், லூத் வாசலில் அவனைப் பிடித்துக் கொலை செய்வார். அல்லாஹ் பாதுகாத்த அந்தக் கூட்டத்தார் ஈஸா நபிமுன் வருவார்கள், அவர் அவர்களின் முகங்களைத் துடைத்து சொர்க்கத்தில் அவர்களுடைய அந்தஸ்தை அவர்களுக்கு அறிவிப்பார். அல்லாஹ் கீழ்வரும் விஷயத்தை ஈஸா நபிக்குக் கூறுவான், “என் அடியார்களில் அவர்களை எதிர்த்துப்போரிட முடியாத மக்களை வெளியாக்குவேன், இம்மக்களைப் பாதுகாப்பாக தூர்மலைக்கு அழைத்துச் செல்லுங்கள் என அறிவிப்பான். பிறகு அல்லாஹ் யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தை அனுப்புவான், அவர்கள் ஒவ்வொரு மேடுகளிலிருந்தும் இறங்குவார்கள். அவர்களில் முதல் பிரிவினர் திப்ரியஸை (கலீலீ கடல்) கடப்பார்கள், அதிலிருந்து அவர்கள் நீர் அருந்துவார்கள். அவர்களின் கடைசிப் பிரிவினர் கடந்து செல்லும்போது “இங்கு ஒரு காலத்தில் தண்ணீர் இருந்தது” என்று கூறுவார்கள் என நபி (ஸல்) கூறினார்கள். ஈஸா நபியும், தோழர்களும் முற்றுகை இடப்படுவார்கள், (முற்றுகையின் கடுமையால்) ஒரு எருமையின் தலை நூறு தீனார்களைவிட அவர்களுக்கு விருப்பமானதாக இருக்கும். பின்னர் ஈஸா நபியும் அவர்களுடனிருப்பவர்களும் (அல்லாஹ்வின் உதவி கேட்டுப்) பணிந்து வேண்டுவார்கள். அப்போது யஃஜூஜ், மஃஜூஜின் பிடரிகளில் புழுக்களை அல்லாஹ் அனுப்புவான், அதனால்

ஒரே நேரத்தில் அவர்கள் பலியாவார்கள். பின்னர் இறைத்தூதர் ஈஸா நபியவர்களும் அவருடன் இருப்போரும் (மலையிலிருந்து) தரைக்கு இறங்கி வருவார்கள். அப்போது பூமியின் ஒவ்வொரு சாண் இடமும் யஃஜூஜ், மஃஜூஜ் உடைய துர்நாற்றத்தால் நிரம்பியிருப்பதாகவே காண்பார்கள். பின்னர் ஈஸா நபியவர்களும் அவருடன் இருப்போரும் (அவற்றை அகற்றக்கோரி) அல்லாஹ்விடம் பணிந்து வேண்டுவார்கள். அப்போது அல்லாஹ் ஒட்டகங்களின் கழுத்துப்போன்று உள்ள பறவைகளை அனுப்புவான், அவை அந்தப் பிணங்களைத் தூக்கிச் சென்று அல்லாஹ் நாடிய இடத்தில் வீசியெறியும்.

பின்னர் அல்லாஹ் மழை பொழியச் செய்வான், அந்த மழை எந்த வீட்டிலும் படாமல் இருக்காது, இறுதியில் பூமியைக் கழுவி கண்ணாடி போன்று ஆக்கிவிடும். பிறகு பூமிக்கு "நீ உன் கனிவர்க்கங்களை முளைக்கச் செய்வாயாக; உன்னிடமுள்ள வளங்களை மீண்டும் தருவாயாக! என்று உத்தரவு பிறப்பிக்கப்படும். அன்றைய நாளில் எந்த அளவுக்கு வளம் கொழிக்குமெனில் ஒரு குழுவினர் சேர்ந்து ஒரே ஒரு மாதுளம் பழம் உண்பர், அதன் தொலி அவர்கள் அனைவருக்கும் நிழல் அளிக்கும். அவர்களுக்கு பால் வளமும் கிட்டும், எந்த அளவுக்கென்றால் ஒரு ஒட்டகத்தின் பால் ஒரு கூட்டத்தினருக்கே போதுமானதாக இருக்கும். பால் தரும் பசுவொன்று ஒரு குலத்திற்கே போதுமானதாக இருக்கும், பால் தரும் ஆடொன்று உறவினர்கள் அடங்கிய கூட்டத்திற்கே போதுமானதாக இருக்கும். இந்நிலையில் அல்லாஹ் தூய காற்று ஒன்றை அனுப்புவான், அது அவர்கள் அக்குள்களுக்குக் கீழே நுழைந்து அவர்களைப் பிடித்துக் கொள்ளும், இறைநம்பிக்கை கொண்ட ஒவ்வொரு முஸ்லிமின் உயிரையும் அது கைப்பற்றும். அதையடுத்து மக்களில் தீயவர்கள் மட்டும் எஞ்சியிருப்பார்கள். அவர்கள் கழுதைகளைப் போன்று (வெட்டவெளியில்) உடலுறவு கொள்வார்கள், அவர்கள் மீதுதான் உலக அழிவு நாள் ஏற்படும், என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(ஸஹீஹ்முஸ்லிம்)**

“அவர் அவனைத் (தஜ்ஜாலை) தேடுவார். இறுதியில் லூத் வாசலில் அவனைக் கொலை செய்வார்” என ஹதீஸில் மஸீஹ் தஜ்ஜாலைக் கொல்வார் என்ற செய்தி தெளிவாக இருக்கிறது. மஸீஹ் திரும்பி வருவது சம்பந்தமாக ஹதீஸின் முன்னறிவிப்பில் கூறப்பட்டத தான்தான் என்று குலாம் அஹ்மது கூறுவாரானால் தஜ்ஜாலை கொன்றிருக்க வேண்டும். அவ்வாறு செய்ய முடியவில்லை, எனவே

தான் போலிமஸீஹ் தஜ்ஜால் மிர்ஜா குலாமின் மரணத்திற்குப் பிறகும் தன் பணியைத் தொடர்ந்துகொண்டிருக்கிறான். சியோனிஸ அமைப்பு தோன்றிய உடனே மிர்ஜா குலாம் மரணித்து விட்டார். தஜ்ஜாலுடைய மாபெரும் வெற்றியைக் காண அவர் இருக்கவில்லை. வெற்றி என்பது இஸ்ரேல் தேசம் உருவானதும், யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பி வந்ததுமாகும். மனிதகுல சமய வரலாற்றில் தஜ்ஜாலுடைய இந்த சாதனையை ஒப்பிட்டுச் சொல்லும் ஒரு நிகழ்வு நடைபெறவே இல்லை. (காண்க. முந்தைய அத்தியாயம்.)

மூன்றாவது, போலி மஸீஹ் தஜ்ஜாலுடைய காலத்தில்தான் நாம் இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்பதற்கு இரு கண்களாலும் (அகப்பார்வை, புறப்பார்வை) பார்ப்பவர்களுக்கு மலையளவு ஆதாரங்கள் இருக்கின்றன, கீழ்வரும் உதாரணத்தைப்போல.

- அல்லாஹ்வை விட்டுவிட்டு மனிதர்களை ஏமாற்றித் தன்னை வணங்க வைக்கிற முயற்சியில் தஜ்ஜால் ஈடுபடுவான் என நபி (ஸல்) அவர்கள் கூறிய முன்னறிவிப்பை, நவீன கால ஆதாய உலகம் நிறைவேற்றிவிட்டது. ஆதாய உலகத்தின் பலமான தாக்கம் பிரிட்டன் தீவிலிருந்துதான் கிளம்பியது. "தஜ்ஜால் வெளியாகும்போது ஒரு தீவிலிருந்துதான் வெளியாவான் அந்தத் தீவிலிருந்தே மனித சமூகம், யூதர்கள் மீது தாக்குதலைத் தொடங்குவான்" என்ற செய்தி ஸஹீஹ் முஸ்லிம் கிரந்தத்தில் தமீமுத்தாரி (ரலி) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸில் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. அந்தத் தீவு என்பது பிரிட்டன் தான் என்பதை தீர்க்கமாக நாம் கூறுகிறோம்.
- போலி மஸீஹ் தஜ்ஜால் ஒரு கண்ணால் பார்ப்பான். அதே நேரம் உங்கள் அல்லாஹ் ஒரு கண் உடையவன் அல்லன், என்ற நபி(ஸல்) அவர்கள் கூறியதிலிருந்து "அறிவு" என்பது ஆன்மீக ஞானமும் சேர்ந்தது என்பதை நவீன மேற்கத்திய அறிவைப் பேசக்கூடியவர்கள் மறுக்கின்றனர். இந்த ஒரு கண் அறிவு மேற்குலக நாகரிகத்தால் ஆரத்தழுவப்பட்டு மேற்கத்திய கல்வி மூலம் மற்ற உலக மக்களுக்கு பரிமாற்றம் செய்யப்பட்டது. மேலும் இந்த ஒரு பக்கப்பார்வை கொண்ட தாக்குதலை பிரிட்டன்தான் வழிநடத்தியது.
- தஜ்ஜால் அல்லாஹ்வுக்குப் பதிலாக மக்களை தன்னை வணங்க வைப்பதில் குறியாக இருப்பான் என நபி (ஸல்)

கூறிய முன்னறிவிப்பில் இருக்கின்றது. இன்றைய நவீன மதச்சார்பற்ற சர்வதேச அரசியலை அதற்கு நிகராகக் கூறலாம். நவீன மேற்கத்திய நாகரிகம், நவீன மதச்சார்பற்ற தேசங்களை உருவாக்கி, தேசத்தின் இறையாண்மை என்பது தேசத்திற்குள்ளேயே இருக்கிறதென்றும், தேசத்தின் நிலைத்தன்மையே வலிமையானது என்றும் தேசத்தின் சட்டமே உயர்ந்தது என்றும் உருவாக்கி வைத்திருக்கிறது. அல்லாஹ் சிலவற்றை (தடை செய்யப்பட்டதாக) ஹராம் ஆக்கலாம், ஆனால் தேசம் அவற்றை (அனுமதிக்கப்பட்டதாக) ஹலால் ஆக்க முடியும். சட்டப்படி இது தெளிவான ஷிர்க் ஆகும். ஆனால் முஸ்லிம்கள் இதை விளங்குவதற்கும், இனம் கண்டுகொள்வதற்கும் சிரமப் படுகிறார்கள் என்பது தான் ஆச்சரியம். மேலும் இதையும் பிரிட்டன்தான் வழி நடத்தியது. உலகம் முழுவதும் மதச் சார்பின்மையைத் தழுவியது. மதச் சார்பற்ற ஐக்கிய நாடுகள் சபை இந்த அமைப்பை வழிநடத்துகிறது. இது அத்தனையும் மிர்ஜா குலாம் மரணிக்கும்போது நடைபெற்றிருக்கவில்லை.

- ஆகாயப் பயணம், தொலைபேசி, தொலைத் தொடர்புச் சாதனங்களை சாத்தியப்படுத்தியிருக்கிற அறிவியல் தொழில் நுட்பப் புரட்சி. அது தனக்குள் கொண்டிருக்கிற அபாயமான விளைவுகளுடனே மனிதகுலத்திற்கு பயனளிக்க கூடியதாக ஒரு மாயத்தோற்றத்தை ஏற்படுத்தியிருக்கிறது. அந்தப் புரட்சி மனிதகுலத்தை பயங்கரமான முறையில் ஏமாற்றுவதற்கு வினோதமான பல தந்திரங்களைச் செய்துகொண்டிருக்கிறது. ஹதீஸில் கூறப்பட்டது போல அறிவியலும், தொழில்நுட்பமும் தஜ்ஜாலுடன் இணைத்துப் பேசப்படும்படியாக உள்ளன. உதாரணத்திற்கு, தஜ்ஜால் மேகத்தைவிட வேகமாக பயணிக்கும் கழுதை மீது பயணம் செய்வான், வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் காதுகள் அதற்கு இருக்கும் என நபி(ஸல்) கூறினார்கள். இது நவீன ஆகாய விமானத்தையும், தாக்குதல் நடத்தும் ஏவுகணையையும் குறிக்கிறது.

- அல்லாஹ் மனிதனைப் படைத்து தனது கலீஃபாவாக ஆக்கப்போகிறேன் என மலக்குகளிடம் கூறினான், (எனக்குப் பிரதிநிதியாக என் வேலைகளைச் செய்வதற்காக) இஸ்லாமிய கிலாஃபத் அரசு அதை துல்லியமாக நிறைவேற்றியது. இது அல்லாஹ்வின் வல்லமையையும் அதிகாரத்தையும் உறுதிபடுத்தி அல்லாஹ்வின் சட்டத்தை உயர்ந்த சட்டமாக இனம் கண்டது.

- மிர்ஜாவின் மரணத்திற்குப்பின் கிலாஃபத் மேற்கத்திய நாகரிகத்தால் அழிக்கப்பட்டது. ஷிர்கின் மீது நிறுவப்பட்ட நவீன மதச்சார்பின்மை அதற்குப் பகரமாகக் கொண்டுவரப்பட்டது. நவீன மதச்சார்பின்மை கிலாஃபத் இருக்கும்போதே துருக்கியைத் தழுவியது. இறுதியாக இது இஸ்லாமிய உலகைத் தழுவுவதற்கு முன்னால் இஸ்லாத்தின் இதயமாக விளங்கும் அரேபிய மண்ணைத் தழுவ முன்னேறிச் சென்றது. இவ்வாறு முழு இஸ்லாமிய உலகமும் ஒட்டுமொத்தமாக ஷிர்க்கில் நுழைந்தது. இது தஜ்ஜாலுடைய வேலை, இதுவும் மிர்ஜா குலாமின் மரணத்திற்குப் பிறகுதான் நிகழ்ந்தது.
- தஜ்ஜாலுடைய காலம் சர்வதேச (ரிபா) வட்டியின் காலமாக இருக்கும் என்பது நபி (ஸல்) கூறிய முன்னறிவிப்பில் கூறப்பட்டுள்ளது. இன்று உலகம் முழுவதிலும் பொருளாதாரத்தை வட்டி ஆக்கிரமித்திருப்பதை ஒப்பிட்டுப்பார்க்கலாம். மேலும், "ஒரு நாள் வரும் மனிதகுலம் முழுவதிலும் "ரிபா"-வை (வட்டியை) நுகராத எந்தத் தனி மனிதனும் இருக்கமாட்டார், அப்படி யாராவது ரிபாவை நுகரவில்லை என்று கூறினாலும் நிச்சயமாக ரிபாவின் தூசு அவர் மீது படிந்திருக்கும்" என்று கூறிய நபி (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பும் இப்பொழுது நிகழ்ந்து விட்டது. ரிபா முழு உலகப் பொருளாதாரத்தையும் கட்டுப்படுத்துகிறது. ஆனால் மிர்ஜா குலாம் மரணிக்கும்போது இது நடைபெற்றிருக்கவில்லை.
- தஜ்ஜாலிடம் கடைசியாக வரும் மக்கள் பெண்கள் தான் என நபி (ஸல்) கூறிய முன்னறிவிப்பில் இருக்கிறது. இன்றைய நவீன பெண்ணியமும், பெண்விடுதலைக்குப் போராடுவதும் இந்த முன்னறிவிப்போடு ஒப்பிட்டுப் பார்க்கத் தக்கதாகும். "தஜ்ஜாலிடம் கடைசியாக வருபவர்கள் பெண்கள். எந்த அளவுக்கென்றால் ஒரு மனிதன் தன் தாய், மகள், சகோதரி, மாமி ஆகியோரை தஜ்ஜாலிடம் செல்ல விடாமல் கட்டிவைக்க வேண்டி வரும் என நபி (ஸல்) கூறினார்கள். (கன்ஜுல்உம்மால், பாகம்-7, ஹதீஸ் எண் **2116**)

தஜ்ஜாலைப் பின்பற்றுபவர்களில் பெரும்பான்மையினர் யூதர்களும் பெண்களுமாவர். (கன்ஜுல்உம்மால், பாகம்-7, ஹதீஸ் எண், 2114) பிரிட்டிஷார் பெண்கள் போராட்டத்தை வழிநடத்தினர். இது 20ஆம் நூற்றாண்டில் மிர்ஜாவின் மரணத்திற்குப் பிறகுதான் நடந்தது. பெண்ணியப் புரட்சி வெற்றிகரமாக முஸ்லிம் சமுதாயத்தில் ஊடுருவியது.

- தஜ்ஜாலுடைய காலத்தில் பருவமாற்றம் ஏற்படும் என நபி (ஸல்) கூறிய முன்னறிவிப்புக் கூறுகிறது. இன்றைய பருவ கால மாற்றத்தை ஏற்படுத்திய சுற்றுச்சூழல் அதை உண்மைப் படுத்தி விட்டதாகவே தோன்றுகிறது. இவையெல்லாம் இன்றுதான் நடந்துகொண்டிருக்கின்றன, இப்பொழுது மிர்ஜா இறந்து பல காலம் கடந்து விட்டது.
- தஜ்ஜாலுடைய காலத்தில் புறத்தோற்றமும் உள்ளமையும் முற்றிலும் ஒன்றுக்கொன்று வேறுபட்டதாக இருக்கும். நரகத் திற்குச் செல்லும் பாதை சொர்க்கத்திற்குச் செல்லும் பாதையைப்போல சித்தரிக்கப்படும். இதுவே நவீன காலத்தின் பயங்கரமான மாயை ஆகும். தஜ்ஜால் தன் பணியில் மும்முரமாக இருக்கிறான் என்பதற்கு இவைகளெல்லாம் சான்றுகளாகும். தஜ்ஜால் இவ்வாறெல்லாம் எண்ணங்களை உண்டாக்குவான் என்று நபி (ஸல்) கூறியிருக்கிறார்கள்.
- யூதர்கள் அல்லாதவரிடமிருந்து பைத்துல்முகத்தஸ் பறிக்கப்பட்டது, பைத்துல்முகத்தஸுக்கு யூதர்கள் திரும்பியது. இஸ்ரேல் தேசம் நிறுவப்பட்டது ஆகிய அனைத்தும் அரேபிய தீபகற்பத்திலிருந்து ஒரு மாத கடல் பயண தூரத்தில் அமைந்திருக்கும் [பிரிட்டன் என்று அறியப்படுகிற] ஒரு கிருஸ்தவ தீவின் முழு ஈடுபாட்டால் தான் நடந்தன. (தமீமுத்தாரி (ரலி) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸில் துல்லியமாக குறிப்பிட்டிருப்பது போல) இவையனைத்தும் தஜ்ஜால் பிரிட்டன் தீவிலிருந்து யூதர்களைத் தாக்குகின்ற பணியில் இருக்கிறான் என்பதற்கு தவிர்க்க முடியாத ஆதாரங்களாகும். இதுவும் மிர்ஜாவின் மரணத்திற்கு வெகு நாட்களுக்குப் பிறகே நடைபெற்றன.
- இஸ்ரேல் தேசம் அமெரிக்காவிடமிருந்து வல்லரசுப் பட்டத் தைப் பெற்று சுலைமான் நபி (அலை) அவர்களின் பொற்காலத்தை மீட்டு விட்டதாக கொண்டாடும் போலத் தோன்றுகிறது. இது இன்னும் நடக்கவில்லை. ஆனால் இது நடைபெறும்போது மஸீஹாக தன்னை உருவகப்படுத்திக் கொள்ளும் பணியில் தஜ்ஜால் மும்முரமாக இருப்பான். இவையனைத்தும் விரைவில் நடைபெறும். இப்பொழுது மிர்ஜா குலாம் இறந்து ஒரு நூற்றாண்டு கடந்து விட்டது.
- மேலே கூறிய அனைத்தும் தஜ்ஜாலின் வேலைகள், அவன் இன்னும் உயிரோடு இருக்கிறான். ஆனால் மிர்ஜா மரணித்து விட்டார். உண்மையில் மேலே கூறிய அனைத்தும் உலகத்தில்

முழுமையாகத் தோன்றி அது சர்வதேச குணமாக மாறியது மிர்ஜா குலாமின் மரணத்திற்கு பல ஆண்டுகள் பிறகுதான்.

மிர்ஜா குலாம் தஜ்ஜாலைக் கொன்றார் என்றால் மேலே நாம் சுட்டிக்காட்டியவைகளெல்லாம் என்ன? மிர்ஜாவின் நுண்ணறிவுள்ள சீடர்கள் இன்றைய உலகின் உண்மையை இனம் கண்டு, மிர்ஜா குலாம் தவறான கருத்தில் இருந்தார் என்பதை விளங்கிக்கொள்ளலாம்..! ஆமீன்!!

அத்தியாயம் 10

# குர்ஆன், ஹதீஸில் யஃஜூஜ், மஃஜூஜ்

قَالُوا يَا ذَا الْقَرْنَيْنِ إِنَّ يَأْجُوجَ وَمَأْجُوجَ مُفْسِدُونَ فِي الْأَرْضِ فَهَلْ نَجْعَلُ لَكَ خَرْجًا عَلَى أَنْ تَجْعَلَ بَيْنَنَا وَبَيْنَهُمْ سَدًّا

அவர்கள் துல்கர்னைனே! நிச்சயமாக யஃஜூஜும், மஃஜூஜும் பூமியில் ஃபஸாது - குழப்பம் - செய்கிறார்கள்; ஆதலால், எங்களுக்கும், அவர்களுக்குமிடையே ஒரு தடுப்பு(ச் சுவரை) நீர் ஏற்படுத்தித் தரும் பொருட்டு நாங்கள் உமக்கு ஒரு தொகையைத் தரலாமா? என்று கேட்டார்கள்.

**(அல்குர்ஆன், 18:94)**

எங்கள் ஆசிரியர் நினைவேந்தல் மௌலானா டாக்டர் முஹம்மது ஃபத்லுர்ரஹ்மான் அன்ஸாரி (ரஹ்) அவர்கள் அறிவைத் தேடுகின்ற ஆர்வத்தை ஊட்டினார்கள். குறிப்பாக சத்தியத்தைத் தேடும் அறிவை. அந்த அறிவின் ஒரு பகுதி அது சார்ந்திருக்கின்ற முழுமையிலிருந்து தனித்தோ விலகியோ கற்றுக்கொள்ள முடியாது

என்றும் போதித்தார். மேலும் அந்த முழுமையை நிறுவுவதற்குத் தேவையான கல்வியைக் கற்றுக்கொடுத்தார். அதன் பாகங்களை ஒன்று சேர்த்து இணைக்கிற கோட்பாடு இல்லாமல் முழுமையைக் கற்றுக்கொள்வது ஒருவருக்கு சாத்தியமாகாது. அந்தக் கோட்பாட்டுக்கு அர்த்தப்படுத்தும் முறை என்று அவர் பெயரிட்டார். இவ்வாறான ஆய்வுமுறை பயன்படுத்தப்படும் வரை யஃஜூஜ், மஃஜூஜ் பற்றிய செய்தி பெரும் அறிஞர்களையும் வழிதவறச் செய்தது போலத்தான் ஆகும்.

ஸஹீஹ் முஸ்லிமில் உள்ள தனித்த ஒரு ஹதீஸில் ஈஸா நபி (அலை) அவர்கள் திரும்பி வந்த பிறகுதான் உலகம் யஃஜூஜ், மஃஜூஜின் தோற்றத்தைக் காணும் என்ற ஒரு குறிப்பு இருக்கிறது.

..........அப்படிப்பட்ட சூழ்நிலையில் அல்லாஹ் ஈஸா (அலை) அவர்களுக்கு, என் அடியார்களில் அவர்களை எதிர்த்துப் போரிட முடியாத மக்களை வெளியாக்குவேன், இம்மக்களைப் பாதுகாப்பாக தூர் மலைக்கு அழைத்துச் செல்லுங்கள் என அறிவிப்பான். பிறகு அல்லாஹ் யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தை அனுப்புவான், அவர்கள் ஒவ்வொரு மேடுகளிலிருந்தும் இறங்குவார்கள்.

**(ஸஹீஹ்முஸ்லிம்)**

தெளிவான குர்ஆனிலுள்ள ஆதாரமும் புகாரியிலுள்ள எட்டுக்கும் குறையாத ஹதீஸ்களும் இதற்கு மாற்றமாக உள்ளன. அவை யஃஜூஜ், மஜூஜ் உடைய வெளிப்பாடு ஈஸா நபி (அலை) திரும்பி வருவதற்கு நீண்ட நாட்களுக்கு முன்பு நபி (ஸல்) அவர்கள் வாழும் காலத்திலேயே நிகழும் என்று குறிப்பிடுகின்றன.

குர்ஆனில் இரண்டே இடங்களில் தான் யஃஜூஜ், மஃஜூஜ் பற்றிய குறிப்பு இடம்பெறுகிறது. அவ்விரண்டு வசனங்களை இணைக்கின்ற அந்த தனித்த கோட்பாட்டைக் கண்டுபிடிப்பதே நமது முதல் பணி.

முதல் குறிப்பு அல்கஹ்ஃபு அத்தியாயத்திலும், இரண்டாவது, அல் அன்பியா அத்தியாயத்திலும் இடம்பெறுகின்றன. முதல் குறிப்பு இதோ:

قَالُوا يَا ذَا الْقَرْنَيْنِ إِنَّ يَأْجُوجَ وَمَأْجُوجَ مُفْسِدُونَ فِي الْأَرْضِ فَهَلْ نَجْعَلُ لَكَ خَرْجًا عَلَى أَنْ تَجْعَلَ بَيْنَنَا وَبَيْنَهُمْ سَدًّا

அவர்கள் துல்கர்னைனே! நிச்சயமாக யஃஜூஜும், மஃஜூஜும் பூமியில் ஃபஸாது - குழப்பம் - செய்கிறார்கள்; ஆதலால், எங்களுக்கும், அவர்களுக்குமிடையே ஒரு தடுப்பு(ச் சுவரை) நீர் ஏற்படுத்தித் தரும் பொருட்டு நாங்கள் உமக்கு ஒரு தொகையைத் தரலாமா? என்று கேட்டார்கள்.

(அல்குர்ஆன், 18:94)

ஃபஸாது = ஊழல், பயங்கர அடக்குமுறை, கொடூரம்.

யஃஜூஜ், மஃஜூஜ் பற்றிய முதல் குர்ஆனின் குறிப்பு அவர்களை குழப்பத்தின் முகவர்கள் என்று பறைசாற்றுகிறது. யஃஜூஜ், மஃஜூஜ் என்பவர்கள் ஆதம்(அலை) அவர்களின் வழித் தோன்றலில் வந்த மனித வர்க்கத்தினரே என நபி(ஸல்) கூறினார்கள். உலகில் யாராலும் வெல்ல முடியாத குழப்பம் விளைவிக்கும் ஆற்றலை இந்த மனித இனத்திற்கு அல்லாஹ் வழங்கியிருக்கிறான் என்ற எச்சரிக்கையைப் பின்வரும் ஹதீஸ் கூறுகிறது.

"என் அடியார்களில் அவர்களை எதிர்த்துப்போரிட முடியாத மக்களை வெளியாக்குவேன், இம்மக்களைப் பாதுகாப்பாக தூர் மலைக்கு அழைத்துச் செல்லுங்கள் என அறிவிப்பான். பிறகு அல்லாஹ் யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தை அனுப்புவான், அவர்கள் ஒவ்வொரு மேடுகளிலிருந்தும் இறங்குவார்கள். அவர்களில் முதல் பிரிவினர் திப்ரியஸை (கலீலீ கடல்) கடப்பார்கள், அதிலிருந்து அவர்கள் நீர் அருந்துவார்கள். அவர்களின் கடைசி பிரிவினர் கடந்து செல்லும்போது இங்கு ஒரு காலத்தில் தண்ணீர் இருந்தது என்று கூறுவார்கள் என நபி (ஸல்) கூறினார்கள். ஈஸா நபியும், தோழர்களும் முற்றுகையிடப்படுவார்கள், (முற்றுகையின் கடுமையால்) ஒரு எருமையின் தலை நூறு தீனார்களைவிட அவர்களுக்கு விருப்பமானதாக இருக்கும். பின்னர் ஈஸா நபியும் அவர்களுடனிருப்பவர்களும் (அல்லாஹ்வின் உதவி கேட்டுப்) பணிந்து வேண்டுவார்கள். அப்போது யஃஜூஜ், மஃஜூஜின் பிடரிகளில் புழுக்களை அல்லாஹ் அனுப்புவான், அதனால் ஒரே நேரத்தில் அவர்கள் பலியாவார்கள். பின்னர் இறைத்தூதர் ஈஸா நபியவர்களும் அவருடன் இருப்போரும் (மலையிலிருந்து) தரைக்கு இறங்கி வருவார்கள். அப்போது பூமியின் ஒவ்வொரு சாண் இடமும் யஃஜூஜ், மஃஜூஜ் உடைய துர்நாற்றத்தால் நிரம்பியிருப்பதாகவே காண்பார்கள். பின்னர் ஈஸா நபியவர்களும் அவருடன் இருப்போரும் (அவற்றை அகற்றக்கோரி)

அல்லாஹ்விடம் பணிந்து வேண்டுவார்கள். அப்போது அல்லாஹ் ஒட்டகங்களின் கழுத்துப்போன்று உள்ள பறவைகளை அனுப்புவான், அவை அந்தப் பிணங்களைத் தூக்கிச்சென்று அல்லாஹ் நாடிய இடத்தில் வீசியெறியும்.

(ஸஹீஹ்முஸ்லிம்)

துல்கர்னைன் இந்த குழப்பம் விளைவிப்பதன் விற்பன்னர்களுக்கும் அந்த மக்களுக்குமிடையில் ஒரு தடுப்பை ஏற்படுத்தினார் என்று அல்கஹ்ஃபு அத்தியாயம் தெரிவிக்கின்றது. இரும்புப் பாளங்களைப் பயன்படுத்தினார் பிறகு செம்பு உலோகத்தை உருக்கி ஊற்றினார். பிறகு அந்தத் தடுப்பை அல்லாஹ்வின் (வஃது) வாக்கை நிறைவேற்றும் நேரம் வரும்போது அல்லாஹ்வே அந்தத் தடுப்பை நீக்கி யஃஜூஜ், மஃஜூஜை வெளிப்படுத்துவான்.

قَالَ هَٰذَا رَحْمَةٌ مِنْ رَبِّي فَإِذَا جَاءَ وَعْدُ رَبِّي جَعَلَهُ دَكَّاءَ وَكَانَ وَعْدُ رَبِّي حَقًّا

இது என் இறைவனிடமிருந்துள்ள ஒரு கிருபையே ஆகும், ஆனால் என் இறைவனுடைய வாக்குறுதி நிறைவேறும்போது, அவன் இதனையும் தூள் தூளாக்கிவிடுவான்; மேலும், என் இறைவனுடைய வாக்குறுதி (முற்றிலும்) உண்மையானதே என்று கூறினார்.

(அல்குர்ஆன் 18:98)

எந்த வாக்கை அல்லாஹ் இங்கு அல்லாஹ் குறிப்பிடுகிறான்? பிரபலமான ஹதீஸில் கியாமத்தின் பத்து அடையாளங்களில் ஒன்றாக யஃஜூஜ், மஃஜூஜ் வெளியாவதை நபி (ஸல்) கூறினார்கள்.

**ஹுதைஃபா இப்னு உஸைத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:**

அல்லாஹ்வின் தூதர் நபி (ஸல்) அவர்கள் ஒரு நாள் வேகமாக எங்களிடம் வந்தார்கள், நாங்கள் கலந்துரையாடலில் ஈடுபட்டிருந்தோம், என்ன உரையாடிக் கொண்டிருக்கிறீர்கள்? என்று நபி(ஸல்) கேட்டார்கள். ஸஹாபாக்கள் இறுதி நாளைப்பற்றி என்று பதிலளித்தார்கள்.

**1. புகை மூட்டம்**
**2. தஜ்ஜால்**
**3. (அதிசயமானப்) பிராணி**
**4. சூரியன் மேற்கிலிருந்து உதிப்பது**

5. ஈஸா (அலை) இறங்கி வருவது
6. யா.ஃஜூஜ் ம.ஃஜூஜ்
7,8,9. அரபு தீபகற்பத்தில் கிழக்கில் ஒன்று, மேற்கே ஒன்று என மூன்று நிலச்சரிவுகள் ஏற்படுவது.
10. ஏமனிலிருந்து கிளம்பும் தீப்பிழம்பு மக்களை விரட்டி ஒன்று சேர்ப்பது

இந்தப் பத்து நிகழ்ச்சிகளையும் நீங்கள் காணும்வரை அந்த நாள் வராது என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறியிருக்கிறார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

வேறு வார்த்தைகளில் கூறுவதாக இருந்தால், தடுப்பு விலக்கப்பட்டு யஃஜூஜ், மஃஜூஜ் வெளியேறினால் அது மனித சமூகம் சந்திக்கின்ற கடைசிக் கால கட்டத்தில் நுழைந்து விட்டதை அறிவிக்கின்ற முக்கிய அடையாளங்களில் ஒன்றாக இருக்கும். யஃஜூஜ், மஃஜூஜின் தடுப்பு விலக்கப்பட்டு அவர்கள் வெளியேறி விட்டார்களா? இல்லையா? என்பதை நாம் எப்படி அறிவோம்? என்பதே நம்முடைய கேள்வியாகும். புகாரியில் பதிவு செய்யப்பட்ட கீழ்வரும் எட்டு ஹதீஸ்களையும் ஆய்வு செய்வோம். அவைகள் கேள்விக்கு விடை தரும். சொல்லப்பட்ட செய்திகள் மீண்டும் மீண்டும் சொல்லப்படுவதால் வாசகர்கள் சலிப்படைய வேண்டாம். அவை வெவ்வேறான ஹதீஸ்களும் அல்ல. வார்த்தைகள் சற்று வித்தியாசப் பட்டிருக்கின்றன, கருத்து ஒன்றுதான்.

**1. அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:**

யஃஜூஜ், மஃஜூஜின் தடுப்பிலே ஒரு துளை விழுந்துவிட்டது. அறிவிப்பாளர் வுஹைப் (தன் ஆட்காட்டி விரலையும் கட்டை விரலையும் இணைத்து) தொண்ணூறைப்போல் செய்து காட்டினார்கள்.

(ஸஹீஹுல்புகாரி)

**2. ஜைனப் பின்தி ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:**

அல்லாஹ்வின் தூதர் ஒரு நாள் அச்சமுற்ற நிலையில் என்னிடம் வந்து கூறினார்கள்: அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குத் தகுதியானவன் யாருமில்லை. அரபிகளுக்குக் கேடுதான். பெரும் தீங்கு (அவர்களை) அணுகிக்கொண்டிருக்கிறது. இன்று யஃஜூஜ்,

மஃஜூஜின் தடுப்பிலே ஒரு துளை விழுந்துவிட்டது என்று கூறி நபி (ஸல்) தன் ஆட்காட்டி விரலையும் கட்டை விரலையும் ஒரு வட்டம் போல் செய்து காட்டினார்கள். எங்களில் நல்லவர்கள் இருக்கிற நிலையிலும் நாங்கள் அழிக்கப்படுவோமா? என ஜைனப் பின்தி ஜஹ்ஷ் (ரலி) கேட்டார்கள். ஆம், தீயவர்கள் அதிகமானால் என நபி (ஸல்) பதிலளித்தார்கள்.

(ஸஹீஹுல்புகாரி)

மேலே கூறப்பட்ட ஹதீஸ் சற்று வித்தியாசத்துடன் கீழ்வருமாறு புகாரியிலேயே இடம் பெற்றுள்ளது.

**3. ஜைனப் பின்தி ஜஹ்ஷ் (ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்:**

அல்லாஹ்வின் தூதர் ஒரு நாள் தூக்கத்திலிருந்து எழுந்து சிவந்த முகத்துடன் வந்து கூறினார்கள்: அல்லாஹ்வைத் தவிர வணக் கத்திற்குத் தகுதியானவன் யாருமில்லை. அரபிகளுக்குக் கேடுதான். பெரும் தீங்கு (அவர்களை) அணுகிக்கொண்டிருக்கிறது. இன்று யஃஜூஜ், மஃஜூஜின் தடுப்பிலே ஒரு துளை விழுந்து விட்டது (சுஃப்யான், தன் விரல்களால் 90 அல்லது 100 என்பதை செய்து காட்டினார்கள்). எங்களில் நல்லவர்கள் இருக்கிற நிலையிலும் நாங்கள் அழிக்கப்படுவோமா? என்று கேட்கப்பட்டது. ஆம், தீயவர்கள் அதிகமானால் என நபி(ஸல்) பதிலளித்தார்கள்.

(ஸஹீஹுல்புகாரி)

**4. ஜைனப் பின்தி ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:**

அல்லாஹ்வின் தூதர் ஒரு நாள் அச்சமுற்ற நிலையில் என்னிடம் வந்து கூறினார்கள்: அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குத் தகுதியானவன் யாருமில்லை. அரபிகளுக்குக் கேடுதான். பெரும் தீங்கு (அவர்களை) அணுகிக்கொண்டிருக்கிறது. இன்று யஃஜூஜ், மஃஜூஜின் தடுப்பிலே ஒரு துளை விழுந்துவிட்டது என்று கூறி நபி (ஸல்) தன் ஆட்காட்டி விரலையும் கட்டை விரலையும் ஒரு வட்டம் போல் செய்து காட்டினார்கள். எங்களில் நல்லவர்கள் இருக்கிற நிலையிலும் நாங்கள் அழிக்கப்படுவோமா? என ஜைனப் பின்தி ஜஹ்ஷ் (ரலி) கேட்டார்கள். ஆம், தீயவர்கள் அதிகமானால். என நபி (ஸல்) பதிலளித்தார்கள்.

(ஸஹீஹுல்புகாரி)

**5. ஜைனப் பின்தி ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:**

அல்லாஹ்வின் தூதர் ஒரு நாள் அச்சமுற்ற நிலையில் என்னிடம் வந்து கூறினார்கள்: அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குத் தகுதியானவன் யாருமில்லை. அரபிகளுக்குக் கேடுதான். பெரும் தீங்கு (அவர்களை) அணுகிக்கொண்டிருக்கிறது. யஃஜூஜ், மஃஜூஜின் தடுப்பிலே ஒரு துளை விழுந்துவிட்டது என்று கூறி நபி(ஸல்) தன் ஆட்காட்டி விரலையும் கட்டை விரலையும் ஒரு வட்டம் போல் செய்து காட்டினார்கள். எங்களில் நல்லவர்கள் இருக் கிற நிலையிலும் நாங்கள் அழிக்கப்படுவோமா? என ஜைனப் பின்தி ஜஹ்ஷ்(ரலி) கேட்டார்கள். ஆம், தீயவர்கள் அதிகமானால். என நபி(ஸல்) பதிலளித்தார்கள்.

**(ஸஹீஹுல்புகாரி)**

**6. உம்மு சல்மா (ரலி) அவர்கள் அறிவித்தார்கள்:**

நபி(ஸல்)விழித்தெழிந்து கூறினார்கள்: அல்லாஹ் உயர்வானவன், என்ன பெரிய பொக்கிஷங்கள் இறக்கியருளப்பட்டிருக்கின்றன, எத்தனை ஆபத்துகள் இறக்கப்பட்டிருக்கின்றன.

**(ஸஹீஹுல்புகாரி)**

**7. அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்:**

அல்லாஹ் யஃஜூஜ் மஃஜூஜ் உடைய சுவரில் இவ்வாறு (விரல்களால் சைகை செய்து காட்டி) விரிசல் ஏற்பட்டிருக்கிறது என்று நபி (ஸல்) கூறினார்கள்.

(ஸஹீஹுல்புகாரி)

**8. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவிக்கிறார்கள்:**

நபி (ஸல்) அவர்கள் (கஃபாவை தம் ஒட்டகத்தில் அமர்ந்து) தவாஃப் செய்தார்கள். ஒவ்வொரு சுற்றிலும் (ஹஜருல் அஸ்வத்) கறுப்புக் கல்லுக்கு அருகில் வரும்போதும் தம் கையால் அதைச் சுட்டிக்காட்டி

அல்லாஹுஅக்பர் என்று கூறினார்கள். ஜைனப் (ரலி) கூறினார்கள். யஃஜூஜ், மஃஜூஜ் உடைய சுவரில் இவ்வாறு (தன்

ஆட்காட்டி விரலையும் கட்டை விரலையும் 90 போல செய்து காட்டி) விரிசல் ஏற்பட்டு விட்டது என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(ஸஹீஹுல்புகாரி)**

அபூஹுரைரா (ரலி), ஜைனப் பிந்தி ஜஹ்ஷ் (ரலி) உம்மு சல்மா (ரலி) அப்துல்லாஹிப்னு அப்பாஸ் (ரலி) ஆகிய நான்கு அறிவிப்பாளர்கள் மூலம் அறிவிக்கப்பட்ட இந்த புகாரியின் எட்டு ஹதீகளும் யஃஜூஜ், மஃஜூஜின் வெளிப்பாடு நபி (ஸல்) காலத்தி லேயே தொடங்கிவிட்டது என தெள்ளத்தெளிவாகக் கூறுகின்றன. உண்மையில் நபி (ஸல்) இன்று என்று கூறியதிலிருந்து அவர்கள் வெளியாகிவிட்டார்கள் என்றே கருத வேண்டியிருக்கிறது. இவ்வாறு இறுதிக் காலம், அல்லது குழப்பமான காலம் என்பது நபி (ஸல்) அவர்கள் காலத்திலேயே தொடங்கிவிட்டதாகத் தெரிகிறது. மேலும் நபி (ஸல்) உலக அழிவு நாளோடு தம்மை இணைத்துக் கூறிய செய்தி பிரபலமான ஹதீஸாகும்.

சஹ்ல் இப்னு சஅத் (ரலி) அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) தம் ஆட்காட்டி விரலையும் நடு விரலையும் இணைத்து என் வருகையும், இறுதிக் காலமும் இவ்விரு விரல்களைப்போல் இருக்கின்றன, என நபி (ஸல்) சுட்டிக் காட்டுவதை நான் பார்த்தேன், பெரிய குழப்பம் (குழப்பமான காலம்) எல்லாப் பொருட்களையும் சூழ்ந்து கொள்ளும்.

**(ஸஹீஹுல்புகாரி)**

குர்ஆன் நம்பிக்கையாளர்களுக்கு யஃஜூஜ், மஃஜூஜ் வெளியா கிவிட்டதற்கான உறுதியான ஆதாரத்தை வழங்குகிறது. மேலதிகமாக உலகமே யஃஜூஜ், மஃஜூஜ் உடைய கட்டுப்பாட்டில்தான் இருக்கிறது என்பதற்கான ஆதாரத்தையும் வழங்குகிறது. யஃஜூஜ், மஃஜூஜ் இவ்வாறு ஆதிக்கச் சக்தியாக இருப்பார்கள் என்ற செய்தி குர்ஆனில் அல்அன்பியா எனும் அத்தியாயத்தில் இருக்கிறது.

وَحَرَامٌ عَلَى قَرْيَةٍ أَهْلَكْنَاهَا أَنَّهُمْ لَا يَرْجِعُونَ

حَتَّى إِذَا فُتِحَتْ يَأْجُوجُ وَمَأْجُوجُ وَهُمْ مِنْ كُلِّ حَدَبٍ يَنْسِلُونَ

எவ்வூரார்களை நாம் அழித்துவிட்டோமோ அவர்கள் (அவ்வூர் மக்கள்) நிச்சயமாக திரும்பவே மாட்டார்கள், யஃஜூஜ், மஃஜூஜுக்கு வழி திறக்கப்பட்டால், அவர்கள் ஒவ்வொரு மேட்டிலிருந்தும் இறங்கிப் பரவிவிடுவார்கள்.

**(அல்குர்ஆன், 21:95-96)**

யஃஜூஜ், மஃஜூஜ் வெளியாகி ஒவ்வொரு மேடுகளிலிருந்தும் இறங்கி, ஒவ்வொரு திசையிலும் பரவிச் செல்லும்போது அச்சமயம் எவர்கள் அல்லாஹ்வால் தண்டிக்கப்பட்டு, அவர்களின் நகரத்திற்குள் நுழையத் தடை செய்யப்பட்டார்களோ அந்த மக்கள் அந்த நகரத்திற்குத் திரும்பக் கொண்டு வரப்படுவார்கள். யஃஜூஜ், மஃஜூஜ் உடன் சம்பந்தப்படுத்தி ஹதீஸில் குறிப்பிடப்பட்ட அந்த நகரம் அல்லது ஊர் (அல்லாஹ்வால் அழிக்கப்பட்டது) ஜெருசலத்தைத் தவிர வேறில்லை.

பைத்துல்முகத்தஸில் உள்ள கலீலீ ஆற்றை யஃஜூஜ், மஃஜூஜ்கள் கடப்பார்கள்.

நவ்வாஸ் இப்னு சம்ஆன் (ரலி) அறிவிக்கிறார்கள்.

........... அப்படிப்பட்ட சூழ்நிலையில் அல்லாஹ் ஈஸா (அலை) அவர்களுக்கு, என் அடியார்களில் அவர்களை எதிர்த்துப் போரிட முடியாத மக்களை வெளியாக்குவேன், இம்மக்களை பாதுகாப்பாக தூர் மலைக்கு அழைத்துச் செல்லுங்கள் என அறிவிப்பான். பிறகு அல்லாஹ் யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தை அனுப்புவான், அவர்கள் ஒவ்வொரு மேடுகளிலிருந்தும் இறங்குவார்கள். அவர்களில் முதல் பிரிவினர் திப்ரியலை (கலீலீ கடல்) கடப்பார்கள், அதிலிருந்து அவர்கள் நீர் அருந்துவார்கள். அவர்களின் கடைசி பிரிவினர் கடந்து செல்லும்போது இங்கு ஒரு காலத்தில் தண்ணீர் இருந்தது எனக் கூறுவார்கள். ஈஸா நபியும், தோழர்களும் முற்றுகை இடப்படுவார்கள், (முற்றுகையின் கடுமையால்) ஒரு எருமையின் தலை நூறு தீனார்களை விட அவர்களுக்கு விருப்பமானதாக இருக்கும்.

**(ஸஹீஹ்முஸ்லிம்)**

யஃஜூஜ், மஃஜூஜ் கலீலீ ஆற்றைக் கடந்து தூர் மலையை அடைவார்கள். என்றும், வேறு ஒரு ஹதீஸில் ஜெருசலத்திலுள்ள ஒரு மலை என்ற குறிப்பும் இடம் பெறுகிறது.

யஃஜூஜ், மஃஜூஜ் அல்கமர் மலைவரை நடந்து செல்வார்கள், அது பைத்துல்முகத்தஸில் (ஜெருசலம்) உள்ள ஒரு மலை நாங்கள் பூமியிலுள்ளவர்களை கொன்றுவிட்டோம், வானத்திலுள்ளவர்களைக் கொலை செய்யப் போகிறோம் என்று கூறுவார்கள். அவர்கள்

வானத்தை நோக்கி அம்புகளை எரிவார்கள். அம்புகள் ரத்தக்கறையுடன் திரும்பிவரும்.

**(ஸஹீஹ்முஸ்லிம்)**

யஃஜூஜ், மஃஜூஜ் உடன் சம்பந்தப்படுத்தி ஹதீஸில் ஜெரூசலத்தைத் தவிர வேறு எந்த நகரமோ, அல்லது ஊரோ குறிப்பிடப்படாததால், அல் அன்பியா அத்தியாயத்தில் **(21:95-96)** குறிப்பிடப்படும் நகரம் அல்லது ஊர் என்பது ஜெரூசலம்தான் என்ற முடிவுக்கு நாம் வந்தோம். இந்த முடிவின் அடிப்படையில் யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பி வருவது அவசியமாகிறது. அது ஏற்கெனவே நடந்துவிட்டது. இவை அல்லாஹுத்தஆலாவால் யஃஜூஜ், மஃஜூஜ் உடைய தடை அகற்றப்பட்டுவிட்டது என்பதற்கும், நாம் யஃஜூஜ், மஃஜூஜ் உடைய காலத்தில் தான் (இறுதிக் காலத்தில்) வாழ்கிறோம் என்பதற்கும் போதுமான ஆதாரங்களாக இருக்கின்றன.

ஆனால் யூதர்கள் நகரத்திற்கு (ஜெரூசலம்) திரும்பி வந்து இஸ்ரேல் தேசம் நிறுவப்பட்டது எதை உணர்த்துகிறதென்றால், யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டம் அல்அன்பியா அத்தியாயத்தில் கூறப் பட்டது போல **(21:96)** பூமியில் தங்கள் பணியை செவ்வனே நிறைவேற்றி உலகத்தை தங்கள் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக் கிறார்கள். யூதர்களை பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பக் கொண்டு வந்திருக்கும் உலக அமைப்பு யஃஜூஜ், மஃஜூஜ் உருவாக்கிய அமைப்புதான்! அவர்கள் யார்? அவர்களை இனம் காண முடியுமா? ஒரு இன மக்கள் யூதர்களோடும் பைத்துல்முகத்தஸோடும் நெருங்கிய தொடர்பு வைத்துள்ளனர், நபி (ஸல்) அவர்களுக்கு முன்னுள்ள காலத் தில் அவர்களின் நடவடிக்கை, நபி (ஸல்) அவர்களுக்கு பின்னுள்ள காலத்தின் நடவடிக்கையோடு ஒப்பிடும்போது தெரியவரும் வித்தி யாசத்தை கண்டறிவதுதான் நம்முடைய ஆய்வு முறையாகும்.

## பைத்துல்முகத்தஸ் மீது வினோதமான ஐரோப்பிய ஆவேசம்

இபுராஹீம் நபி (அலை) அவர்கள் பைத்துல்முகத்தஸுக்கும், பாபிலோனுக்கும் ஹிஜ்ரத் செய்தபோது, பாரசிகம், எகிப்து, சீனா ஆகியவை பெரிய நாகரிகங்களாக இருந்தன. கிரேக்கமும் ரோமாபுரியும் உருவாகவே இல்லை. ஐரோப்பா மிகுதமும் காட்டு

மிராண்டி நிலையிலேயே இருந்தது. நாகரிக உலகத்தோடு எந்த வியாபாரத் தொடர்பும் வைத்துக்கொள்ளவில்லை, அல்லது சிறிதளவே வைத்திருந்தது, குறிப்பிட்டுச் சொல்லும்படி வெளிநாடுகளுடன் எந்தப் பயணத்தொடர்பும் இருந்ததாகக் காணக்கிடைக்கவில்லை. இப்படித் தீவு போல தனித்து வாழ்ந்ததன் காரணத்தால் மற்ற உலக மக்கள் ஐரோப்பிய மொழிகளை விளங்கிக் கொள்ளமுடியவில்லை. மேலும் ஐரோப்பா உலக அரங்கில் எந்தப் பங்கும் வகிக்க முடியாமல் போனது. துல்கர்னைன் (அலை) தனது மூன்றாவது பயணத்தில் எந்த மொழியையும் புரிந்துகொள்ள முடியாத மக்களிடம் இறங்கினார் என்று குர்ஆனில் (அல்கஹ்ஃபு அத்தியாயத்தில்) அல்லாஹ் கூறுகிறான் **(18:19)** அந்த வசனம் ஐரோப்பியர்களின் மனநிலையை படம் பிடித்துக் காட்டுகிறது.

ஒரு வினோத, மர்மப் புரட்சி ஐரோப்பாவைப் புரட்டிப்போட்டது. கிரேக்கமும் ரோமாபுரியும் மதமில்லாத நாகரிங்களாக உருவாகி, எவ்வளவு முடியுமோ அவ்வளவு உலகின் மற்ற பகுதிகளை வெற்றி கொண்டன. கிரேக்க ஐரோப்பிய ரோம நகரிகங்கள் பைத்துல் முகத்தஸ் விஷயத்தில் சிறப்புக் கவனம் செலுத்தியது போலத் தெரிகிறது. மகா அலெக்ஸாண்டர் ஜெருசலத்தைக் கைப்பற்றி யூதமதத்தின் மீது ஆர்வத்தை வெளிப்படுத்தினார். ரோமப் பேரரசு ஜெருசலத்தையும் பைத்துல்முகத்தஸையும் ஈஸா நபி (அலை) அவர்களின் காலம் வரையிலும், அதற்குப் பிறகும் ஆட்சி செய்தது. இரண்டாவது, அவர்களின் மதமில்லா வாழ்க்கை முறைக்கும் விசுவாசமாக இருக்கவில்லை, கடவுள்களுக்கும் யாரும் நம்பிக்கைக்குரியவர்களாக இருக்கவில்லை. இந்தியாவில் ஹிந்துக்களின் கடவுள்கள் பிழைத்திருப்பது போல கிரேக்க ரோமாபுரிக் கடவுள்கள் பிழைத்திருக்கவில்லை. மதமில்லாத வாழ்க்கை முறை பல நூற்றாண்டுகளுக்கு முன் எவ்வளவு வேகமாக அவர்களுடைய வாழ்க்கைக்குள் வந்ததோ, அவ்வளவு வேகமாக வெளியேறவும் செய்தது.

பிறகு முழுவதும் அரசியல் காரணங்களுக்காக ஐரோப்பியர்கள் கிருஸ்துவ மதத்தைத் தழுவியது ஐரோப்பிய கிருஸ்துவ சர்ச் (அமைப்பு) அமையக் காரணமாக இருந்தது. புனித ஆலயத்தின் மையமாக ரோம் உருவானது. மீதமிருக்கும் ஐரோப்பிய நிலப்பகுதியில் அவர்களை காட்டுமிராண்டி நிலையிலிருந்து வெளியேற்றிய கிருஸ்துவம், அவர்களை கிருஸ்துவ உலகத்தின் கீழ் ஒருங்கிணைந்த ஐரோப்பாவாக மாற்றியது. இந்த புதிய கிருஸ்துவ சபை தங்கள் சுதந்திரம் குறித்த

விஷயத்தில் பழைய கிருஸ்துவ சபையை விட மேலோங்கியவர்களாக இருக்கிறார்கள். எந்த அளவுக்கென்றால் கிருஸ்துவின் பிறந்த நாளைக் கொண்டாடுவதற்கு அவர்களாகவே ஒரு நாளைக் குறித்துக் கொண்டார்கள். புதிய ஐரோப்பிய கிருஸ்துவர்கள் தான் டிஸம்பர் 25 ஆம் தேதியில் கிருஸ்துமஸ் கொண்டாடுவதை உருவாக்கியவர்கள்.

ஆனால் ஐரோப்பிய கிருஸ்துவம் முக்கியமாகவும், வினோதமாகவும் பழைய மார்க்கப்பற்றுள்ள பைஸாந்திய கிருஸ்துவர்களிடம் வேறுபடுகிறார்கள். புதிய கிருஸ்துவ சபை ஐரோப்பா மீது தன் வலிமையை நிலை நாட்டிய உடனே அது வரை எந்த கிருஸ்துவரும் காட்டாத அடக்குமுறையை பைத்துல்முகத்தஸ் மீது காட்டியது. சிலுவைப் போராளிகள் உண்மைக் கிருஸ்துவர்கள் அல்லர். மாறாக அவர்கள் ஐரோப்பியக் கிருஸ்துவர்கள். பைத்துல்முகத்தலை தங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவருவதற்காக முஸ்லிம்களுக்கு எதிராக மேற்கொண்ட தொடர்ச்சியான அனைத்து முயற்சிகளும் பயனில்லாமல் ஆயின. கிருஸ்துவ சிலுவைப் போராளிகளைத் தோற்கடித்து சுல்தான் ஸலாஹுத்தீன் அய்யூபி (ரஹ்) அவர்கள் பைத்துல்முகத்தஸில் முஸ்லிம்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டினார். குறுகிய காலமே இருந்த ஐரோப்பிய ஒருங்கிணைப்பு ஒரு முடிவுக்கு வந்தது.

சிலுவைப் போராளிகளைப் பற்றிய மிக முக்கியமான விஷயம் என்னவென்றால் அவர்கள் ஐரோப்பியர்கள் என்பதுதான். ஐரோப்பியக் கிருஸ்துவர்கள் சிலுவைப் போருக்கு பைஸாந்திய கிருஸ்துவ நிலப்பரப்பைக் கடந்து செல்லும்போதும், ஐரோப்பியர் அல்லாத கிருஸ்துவர்கள் (சிலுவைப் போரில்) அவர்களோடு கலந்து கொள்ளவில்லை. எனவே அவர்கள் (ஐரோப்பியர் அல்லாத கிருஸ்துவர்கள்) சிலுவைப் போரில் எந்தப் பங்கும் வகிக்கவில்லை. மேலும் ஜெரூசலம் பைத்துல்முகத்தஸின் அடக்குமுறை, ஐரோப்பியர் அல்லாத கிருஸ்துவர்களைவிட ஐரோப்பிய கிருஸ்துவர்களுடையதே அதிகமாக இருந்தது. ஐரோப்பிய கிருஸ்துவர்களின் இந்த வினோத ஆவேசம் ஏன்? என இந்நூல் வினா எழுப்புகிறது.

அடுத்தது, ஜெரூசலத்தை முஸ்லிம்களிடமிருந்து ஒரு குறுகிய காலத்திற்காக கைப்பற்றும் முயற்சியில் ஐரோப்பிய கிருஸ்துவர்கள் வெற்றியடைந்த போது ரத்த ஆற்றை ஓட்டினார்கள். இதுவும் ஒரு உண்மை கிருஸ்துவர் அல்லாதவரின் வேலையே. அவர்கள் ஜெரூசலத்தில் வசித்த அனைவரையும் வெட்டினார்கள், பெண்களும்,

குழந்தைகளும் கூடத் தப்பவில்லை. பைத்துல்முகத்தஸை விடுவிப்பதற்கு மார்க்க ரீதியான, ஆன்மீக ரீதியான காரணங்களை முன்வைக்கும் ஐரோப்பிய கிருஸ்துவர்கள் உண்மைக் கிருஸ்துவர்கள் போல தங்களைக் காட்டிக்கொள்கிறார்கள். பைத்துல்முகத்தஸைக் விடுவிப்பதற்காக அவர்கள் கட்டவிழ்த்துவிட்ட காட்டுமிராண்டித் தனத்தையும், வன்முறையையும் கண்டு உண்மைக் கிருஸ்துவ உலகம் திடுக்கிட்டது.

ஐரோப்பியர்கள் கிருஸ்துவ உடையை அணிந்துகொண்டது நம்பிக்கையின் அடிப்படையில் செயல்படுவதற்கல்ல, மாறாக பைத்துல் முகத்தஸை கைப்பற்றுகிற காரியத்தைச் சாதிப்பதற்காகத்தான். சிலுவைப்போர்கள் பயங்கரத்தையும், கொடூரத்தையும், கடவுளில்லாத் தன்மையையும், ஐரோப்பாவின் அநீதத்தையும் வெளிக்காட்டின. முக்கியமாக கடவுளில்லாத நிலைப்பாடு கிருஸ்துவர்களுடையது அல்ல. இது காட்டுமிராண்டித் தனத்தைத்தான் நிறுவுகிறது, மனித நாகரிகத்தை அல்ல. மேலும் இது ஆபத்தில்லாதது போலக் காட்டிக் கொள்கிறது. தன் யதார்த்த நிலையை மறைக்கிற அபாரமான ஆற்றல் கொண்டிருக்கிறார்கள், காலம் கடந்தது, அவர்கள் தங்களை எப்படிக் காட்டிக்கொள்ளக்கூடாது என்று மறைத்தார்களோ அந்தத் தோற்றம் வெளிப்பட்டுவிட்டது.

மங்கோலியர்களின் படையெடுப்பு, இந்த வினோத ஐரோப்பியர்களின் வெளித்தோற்றத்தை அறிந்து கொள்கிற அவகாசம் இல்லாதவர்களாக முஸ்லிம்களை ஆக்கியது. ஐரோப்பிய கிருஸ்துவர்களின் நடத்தையை விட எந்த விதத்திலும் வித்தியாசமில்லாத இந்தக் காட்டுமிராண்டிகள் முஸ்லிம் உலகத்தை பயமுறுத்தினார்கள். மங்கோலியப் படையெடுப்பு நடைபெறவில்லையென்றால் முஸ்லிம் சிந்தனையாளர்கள் ஐரோப்பிய கிருஸ்துவர்களின் வினோத நடைமுறையை துல்லியமாகக் கண்டறிந்திருப்பார்கள்.

மத்திய கிருஸ்துவ நாகரிகத்திலிருந்த ஐரோப்பாவை, முற்றிலும் கடவுளில்லாத நவீன மதச்சார்பற்ற நாகரிகமாக மாற்றிய மர்ம, வினோத அமைப்பு எது என்பதன்பால் முஸ்லிம் உலகம் கவனம் செலுத்தவில்லை. அந்த ஐரோப்பாவுக்கு அறிவியல், தொழில்நுட்பம் வழங்கி, ஐரோப்பாவை மற்ற நாடுகளைவிட வலுவானதாகவும், வெல்ல முடியாததாகவும் ஆக்கி, வட்டி அடிப்படையிலான பொருளாதாரத் திட்டத்தையும் வழங்கியது. பைத்துல்முகத்தஸிலிருந்து ஒரு மாத கால கடல்பயண தூரத்தில் அமைந்துள்ள ஐரோப்பாவில் கண்டு

கொள்ளப்படாத பிரிட்டன் அனைத்து ஐரோப்பிய ஆற்றல்களையும் வீழ்த்திவிட்டு ஐரோப்பாவின் தலைவராகவும், உலகின் வல்லரசாகவும் மாறியது.

ஆனால் கிருஸ்துவ மதத்தை பின்பற்றுவது போலத் தோற்றமளிக்கும், புதிய கடவுளில்லாத ஐரோப்பா பழைய சிலுவைப் போர் கிருஸ்துவர்கள் பைத்துல்முகத்தஸ் விஷயத்தில் என்ன அணுகு முறையைக் கடைப்பிடித்தார்களோ அவ்வாறே நடந்து கொண்டது. பைத்துல்முகத்தஸைக் கைப்பற்றும் தொடர்ச்சியான அடக்கு முறைகளை மேற்கொள்ளும் விஷயத்தில் யூதர்களைப்போல் தோற்றமளிக்கும் ஐரோப்பிய கேஜர் இனத்தவர்களோடு கைகோத்துக்கொண்டது.

இந்த இரண்டு ஐரோப்பியர்களும் புனிதமற்ற இணைப்பாகவே எப்பொழுதும் பின்னிப் பிணைந்திருந்தனர்.

இந்த பிரிட்டன் தீவுதான் பாலஸ்தீனத்தில் யூதர்களின் தேசம் உருவாவதற்குப் பாடுபடும் என்று 1917-இல் தீர்மானம் இயற்றியது. (பெல்ஃபோர் ஒப்பந்தம் என்று அறியப்படுகிறது) அதற்கு இரண்டே ஆண்டுகளுகுப் பின் பிரிட்டன் பைத்துல்முகத்தஸை முஸ்லிம்களின் ஆதிக்கத்திலிருந்து விடுவித்தது. பைத்துல்முகத்தஸையும், ஜெரூசலத் தையும் பாதுகாத்துக்கொண்டிருந்த துருக்கிப் படை மீது பிரிட்டிஷ் ஜென்ரல் அல்லன்பை 1917-இல் ராணுவத் தாக்குதல் நடத்தியபோது இது நடந்தது. பெயரளவில் கிருஸ்துவர்களான ஐரோப்பிய கிருஸ்து வர்களால் நடத்தப்பட்ட பழைய சிலுவைப்போர்கள் தோற்ற போது, கடவுளில்லாத சிந்தனை கொண்ட ஐரோப்பியர்களால் நடத்தப்பட்ட புதிய சிலுவைப் போர்கள் (ராணுவத்தாக்குதல்) வென்றன. பைத்துல்முகத்தயும் ஜெரூசலத்தையும் விடுவிப்பதற்கான இரண்டு முயற்சிகளுமே ஐரோப்பியர்களுடையதே! இரண்டும் சிலுவைப் போர்களே! ஜெரூசலத்திற்குள் வெற்றிவீரனாக நுழையும் போது இன்று சிலுவைப்போர்கள் முடிவுற்றன என அல்லன்பை அவரே தன் வாயால் இதைக் கூறினார். இதைத் தவிர்த்து பைத்துல்முகத்தஸை விடுவிப்பதில் மார்க்கச் சிந்தனை எல்லாம் ஒன்றும் கிடையாது. உலக அரங்கில் இந்த வினோதக் கதாபாத்திரங்களை எல்லாம் ஆட்டி வைத்தது ஐரோப்பாதான்!

பிரிட்டன் பிறகு லீக் ஆஃப் நேஷன்ஸ் என்னும் போர்வையில் பைத்துல்முகத்தஸ் மீது ஆதிக்கம் செலுத்தி இறுதியில் யூத தேசி

யத்தை நிறுவும் குறிக்கோளை நோக்கிச் சென்றது. ஐரோப்பா மதச் சார்பின்மையையும், பொருள்வாதத்தையும் ஏற்றுக்கொண்ட பிறகு பைத்துல்முகத்தஸை அடைவதற்கு என்ன மார்க்க ரீதியான கடமை இருக்க முடியும்? என இந்நூல் வினா எழுப்புகிறது.

ஐரோப்பா கிருஸ்துவத்தை ஏற்றுக்கொண்டது புதிராக இருக்கிறது என்றால், ஒரு கட்டத்தில் ஐரோப்பா யூத மதத்தையும் ஏற்றுக்கொண்டது ஆச்சரியத்திலும் ஆச்சரியமே! இது ஏழாம் நூற்றாண்டில் ஒரு சமயத்தில் கிழக்கு ஐரோப்பாவின் கேஜர் கோத்திரத்தார் யூத மதத்தைத் தழுவியதைக் குறிக்கிறது. அவர்கள் அரசியல் நோக்கங்களுக்காகவே தழுவினர். அவர்களின் மத மாற்றத்தில் நம்பிக்கைக்கு எந்த இடமும் இருக்கவில்லை. அவர்கள் யூதத்தைத் தழுவும் முன் அபரிமிதமான ஆற்றலுடையவர்களாக இருந்தனர், எந்த அளவுக்கென்றால் இஸ்லாம் ஐரோப்பாவில் நுழைவதை வெற்றிகரமாகத் தடுத்தனர்.

ஐரோப்பிய கிருஸ்துவர்களைப் போலவே ஐரோப்பிய யூதர்களும் இஸ்ராயீல் யூதர்களிடமிருந்து முற்றிலும் வேறுபட்டவர்கள். ஐரோப்பிய யூதர்கள் பைத்துல்முகத்தஸைத் தங்கள் கைப்பிடிக்குள் வைக்க விரும்புவதைப்போல் இஸ்ராயீல் யூதர்கள் விரும்பவில்லை. சியோனிஸ அமைப்பை நிறுவிய ஐரோப்பிய யூதர்கள் இறுதியில்,ஐரோப்பிய கிருஸ்துவர்கள் சிலுவைப் போரில் எந்த லட்சியத்தின்பால் அழைத்துச் சென்றார்களோ, அதே லட்சியத்தை அடையத்தான் தூண்டினார்கள். அந்த லட்சியம் என்பது பைத்துல்முகத்தஸைப் பிடிப்பதுதான். ஐரோப்பிய யூதர்களுக்கு பைத்துல்முகத்தஸ் மேல் இவ்வளவு வெறித்தனம் ஏன்? என இந்நூல்வினா எழுப்புகிறது.

பைத்துல்முகத்தஸுக்கு யூதர்கள் திரும்புவதற்கு பிரிட்டன் உதவியது. 1948இல் இஸ்ரேல் தேசம் உருவான பிறகு அந்தக் கனவு எப்படியோ நிறைவேறிவிட்டது. பிரிட்டன் என்னும் மருத்துவச்சி இஸ்ரேல் என்னும் குழந்தையை பிரசவித்த பிறகு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் அல்லாஹ்வால் அழிக்கப்பட்ட பழைய இஸ்ரேலின் மறு உதயத்தை உலகம் கண்டது.

பிரிட்டன் சில நூற்றாண்டுகள் உலகை ஆண்ட பிறகு ஒரு வினோத மாற்றம் நிகழ்ந்தது. அந்த மாற்றத்தில் ஒரு புதிய சக்தி

உலகை ஆளும் வல்லரசாக மாறியது. முதலாம் உலகப் போரில் அமெரிக்கா தலையிட்டு பிரிட்டனைத் தோல்வியிலிருந்து காப்பாற்றியதில் அந்த மாற்றத்தின் தெளிவான ஆதாரம் இருக்கிறது. இரண்டாம் உலகப்போரில் நட்புத் துருப்புகளுக்கு அமெரிக்க ஜெனரல் ஐசன் ஹோவர் தளபதியாக நியமிக்கப்பட்டதில் இன்னும் ஆதாரம் தெளிவாக உள்ளது. ஐசன் ஹோவர் ஜெர்மானிய அமெரிக்கர், அவர் பிரிட்டிஷ் வம்சாவளியைச் சேர்ந்தவர் கூட அல்ல.

1944-இல் நடந்த நியூயோர்க் பிரிட்டன் வூட் என்னுமிடத்தில் நடந்த சர்வதேச மாநாட்டில் ஒரு புதிய சர்வதேச பண அமைப்பு உருவாவதற்கு வசதி செய்து தரப்பட்டது. அது வரை சர்வதேச பணமாக அங்கீகரிக்கப்பட்டிருந்த பிரிட்டிஷ் ஸ்டெர்லிங் பவுண்ட் அந்த ஒப்பந்தத்தின் மூலம் அமெரிக்க டாலராக மாறியது. அதே சர்வதேச பொருளாதார மையமாக இருந்த லண்டன், வாஷிங்டன் ஆக மாற்றப்பட்டது.

ஜெருசலத்தில் நடந்த கொடிய சிலுவைப்போருக்கும், யூத தேசியம் அமைவதற்கும் முக்கியப் பங்காற்றிய அதே ஐரோப்பிய நாகரிகத்தில் எழுந்தது தான் இந்தப் புதிய வல்லரசு. பைத்துல் முகத்தஸுடன் உள்ள உறவையும், வினோத அணுகுமுறையையும் முந்தைய வல்லரசு எங்கு நிறுத்தியதோ அந்த இடத்திலிருந்து புதிய வல்லரசு தன் நடவடிக்கையைத் தொடங்கியது. இவ்வாறு 1948-இல் இஸ்ரேல் தேசம் சுதந்திர நாடாக பிரகடனம் செய்யப்பட்டபோது அதை ஒரு நாடாக முதலில் அங்கீகரித்தது அமெரிக்காதான்.

புதிய வல்லரசு, பிரிட்டனை இஸ்ரேல் தேசத்தின் ராஜதந்திர உறவிலிருந்து விலக்கிவிட்டதாகப் பறைசாற்றுகிறது. உண்மையில் பிரிட்டனை பொது அவமரியாதை செய்ய வேண்டும் என்ற நோக்கில் தான் அப்படிச் செய்தது. 1952-இல் எகிப்தில் ஏற்பட்ட புரட்சியில் எகிப்தின் ராணுவம் ஆளும் மன்னராட்சியை மாற்றியது. 1956-இல் கர்னல் கமால் அப்துன் நாஸர் ஜெனரல் முஹம்மது நஜீபை தலைமைப் பதவியிலிருந்து மாற்றி சூயஸ் கால்வாயைத் தேசியமயமாக்க நாடினார். இதை இஸ்ரேல் ராஜதந்திர அச்சுறுத்தலாக உணர்ந்தது. இன்னொரு புறம் பிரிட்டன் தன் வல்லரசு அந்தஸ்து கேள்விக்குறியாக்கப்பட்டதை உணர்ந்தது.

அமெரிக்காவை பொருட்படுத்தாமல் பிரிட்டன், பிரான்ஸ், இஸ்ரேல் ஆகியோரின் கூட்டுப்படை சூயஸ் கால்வாயிலிருந்து எகிப்துப் படையை அப்புறப்படுத்தியது. அமெரிக்கா அதிபர் ஐசன் ஹோவர் பிரிட்டிஷ், பிரான்ஸ், இஸ்ரேல் படைகளை எகிப்து நிலப்பரப்பை விட்டு வெளியேறுமாறு கட்டளையிட்டார். முந்தைய வல்லரசு பிரிட்டன் விலகுமாறு நிர்பந்திக்கப்பட்டு ஆண்டனி ஈடன் உடைய பிரிட்டிஷ் அரசு கவிழ்ந்தது. அன்றிலிருந்து இன்றுவரை யூத தேசத்தின் மெய்க்காப்பாளனாக அமெரிக்கா இருந்து வருகிறது. பைத்துல்முகத்தஸ் மீது இந்த ஐரோப்பிய அமெரிக்க வெறி ஏன்? என இந்நூல் வினா எழுப்புகிறது?

பைத்துல்முகத்தஸ் மீது ஐரோப்பிய, அமெரிக்கர்களின் வெறி வினோதமானது என்றால் எதிர்காலத்தில் இதைவிட வினோதத்தை வெளிப்படுத்த உள்ளனர். ஐரோப்பிய சியோனிஸ அமைப்பால் உருவாக்கப்பட்ட இஸ்ரேல் வல்லரசு அந்தஸ்து அடைவதை உலகம் காணப்போகிறது. வல்லரசு அந்தஸ்துக்காக ஏற்கெனவே அணு ஆயுதத்தையும் ரசாயன ஆயுதங்களையும் தயாரித்து வைத்திருக்கிறது. மேலும் அதன் ராணுவத் தொழிநுட்பமும் உலகில் தலை சிறந்ததாக உள்ளது. இறுதியில் ஐரோப்பிய யூத பொருளாதாரத்தைத் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்துவிடுவார்கள் போல் தெரிகிறது. அமெரிக்க டாலர் கீழே செல்லும்போது உலகின் அனைத்து காகித பணங்களையும் கீழே இறக்கிவிடும். பாலஸ்தீனர்களையும் அண்டைய அரப் நாடுகளையும் தாக்குவதன் மூலம் தனது ராணுவ பலத்தைக்காட்டிக்கொள்ளும். அந்தப் போரின் பலன்களை மற்ற நாடுகளை அனுபவிக்க விடாமல் தடுக்கும். இவ்வாறு செய்வதன் மூலம் தன்னை உலகின் வல்லரசாக நிறுவிக்கொள்ளும். இவ்வாறு நிகழும்போது இஸ்ராயீல் யூதர்கள் தங்கள் பொற்காலம் திரும்பியதை அனுபவிப்பார்கள். அதாவது சுலைமான் நபி (அலை) உலகம் முழு வதையும் ஆட்சி செய்ததைப்போல.

மேலே கூறிய அனைத்தையும் குர்ஆன் விவரித்திருக்கிறதா? அப்படியென்றால் அந்த விளக்கம்தான் என்ன?

யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்புவதற்குமுன் இந்தத் தலைப்பில் நூல் எழுதுவது இயலாதது என்பதை நாம் முதலில் ஒப்புக்கொள்கிறோம். அவர்கள் பைத்துல்முகத்தஸுக்கு வந்தப் பிறகு இந்தத் தலைப்பில் எழுதப்படுகின்ற முதல் நூல் இதுவே ஆகும்.

மேற்கூறப்பட்ட நிகழ்வுகளை குர்ஆன், ஹதீஸ் உடைய ஒளியில் நாம் விளக்கம் கூறும்போது இஸ்லாமிய மார்க்க அறிஞர்களுக்கே ஆச்சரியமானதாக இருக்கிறது. ஐரோப்பாவிலும், பைத்துல்முகத் தஸிலும் நடந்த இந்த வினோத நிகழ்ச்சிகளை குர்ஆன் ஒளியில் விளக்கம் அளிப்பது இந்த காலகட்டத்திற்கு முன்பு எழுதுவது சாத்திய மில்லாதது என்பதும் இந்நூலாசிரியருக்குப் புலப்படுகிறது.

இதுவே இந்நூலாசிரியரையும், இந்நூலின் மூலம் உண்மையை அறிந்து கொண்டவர்களையும் அல்லாஹுவுக்கு முன் சிரம் பணிய வைத்துள்ளது. அல்லாஹ்வே எல்லாவற்றையும் அறிந்தவன். தான் நாடுகின்றவர்களுக்கு நேர்வழி காட்டக் கூடியவன்.

இந்நூலில் வழங்கப்பட்டுள்ள குர்ஆன் விளக்கங்களை மறுப்பவர்கள் பைத்துல்முகத்தஸுக்கு யூதர்கள் திரும்பி, இஸ்ரேல் தேசத்தை மீட்டெடுத்ததை குர்ஆன் விளக்கவில்லை என்றோ, அல்லது இந் நூலில் கூறப்படாத வேறு விளக்கம் இருக்கிறது என்றோ பறைசாற்ற வேண்டும். வேறு விளக்கம் எந்த அடிப்படையில் கூறப்படுகிறது என்பதையும் தெளிவாக்க வேண்டும்.

இஸ்லாத்தை மறுப்பவர்களும், தாங்கள்தான் சத்தியப் பாதையில் இருக்கிறோம் எனக் கூறுபவர்களும் அச்சத்தியத்தின் துணை கொண்டு யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பி வந்ததற்கான விளக்கத்தைக் கூறவேண்டும். அவர்கள் நவீன மதச் சார்பற்றவர்களாகவோ, யூதர்களாகவோ, கிருஸ்துவர்களாகவோ, ஹிந்துக்களாகவே, ஜைனர்களாகவோ, மற்ற எந்த சமயத்தைச் சார்ந்தவர்களாகவோ இருக்கலாம், இங்கே இந்த விஷயத்திற்கு விளக்கம் கூறாமல் அவர்கள் சத்தியத்தில் இருப்பவர்களாக வாதிட முடியாது. அந்த அடிப்படையில் இந்நூல் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது. இஸ்லாம் உண்மையானது என்பதை இந்நூல் நிரூபிக்கிறது.

இறுதி நாளுக்கான நேரம் நெருங்கிக்கொண்டு வருவதை உலகம் இப்பொழுது காண்கிறது என குர்ஆன் எச்சரிக்கிறது.

وَاقْتَرَبَ الْوَعْدُ الْحَقُّ فَإِذَا هِيَ شَاخِصَةٌ أَبْصَارُ الَّذِينَ كَفَرُوا يَا وَيْلَنَا قَدْ كُنَّا فِي غَفْلَةٍ مِنْ هَٰذَا بَلْ كُنَّا ظَالِمِينَ

(இறுதி நாளைப் பற்றிய) உண்மையான வாக்குறுதி நெருங்கினால், (அதைக் காணும்) காஃபிர்களின் கண்கள் திறந்தபடியே நிலைகுத்தி நின்றுவிடும்; (அன்றியும் அவர்கள்:) எங்களுக்கு கேடு தான்! நிச்சயமாக நாங்கள் இதை உதாசீனப்படுத்தியவர்களாகவே இருந்துவிட்டோம்; - அது மட்டுமில்லை - நாம் அநியாயம் செய்தவர் களாகவும் இருந்து விட்டோம் (என்று கூறுவார்கள்).

**(அல்குர்ஆன் 21:97)**

யஃஜூஜ், மஃஜூஜ் வெளிப்படுத்தப்படும்போது ஒவ்வொரு மேடுகளிலிருந்தும் இறங்கி வருவார்கள் அல்லது ஒவ்வொரு திசையிலும் பரவிச் செல்வார்கள் என்ற குர்ஆன் வசனம் கூறியதை அவர்களின் கண்ணுக்குப் புலப்படாத ஆற்றலால் உலகத்தைத் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்து விடுவார்கள் என்பதைச் சுட்டிக் காட்டுகிறது. உலக வரலாற்றில் முதன்முறையாக ஒட்டுமொத்த மனித இனத்தையும் ஒரு இன மக்கள் ஆட்டுவிப்பார்கள் என்றும் இந்த வசனம் சுட்டிக்காட்டுகிறது. இன்று உலகம் அப்படிப்பட்ட சூழ்நிலையில்தான் இருக்கிறது. யஃஜூஜ், மஃஜூஜ் உடைய உலக அமைப்பு என்பது குழப்பத்தை உண்டாக்கக் கூடியது. சூரத்துல் கஹ்ஃபுகுழப்பத்தின் இரண்டு குணங்களை விவரிக்கிறது. அவை இரண்டும் துல்கர்னைன் உடைய உலக அமைப்புக்கு முற்றிலும் எதிரானவை.

**அவை பின் வருமாறு:**

துல்கர்னைன் தன் ஆற்றலை அடக்குமுறையாளனைத் தண்டிப்பதற்கு பயன்படுத்தினார். இப்படிச் செய்வதில் பூமியின் வாழ்க்கை அமைப்பிற்கும் வானத்தின் (சொர்க்கம்) வாழ்க்கை முறைக்கும் இடையில் ஒரு இணைப்பை ஏற்படுத்தினார். (லௌகீக வாழ்க்கைக்கும் ஆன்மிக வாழ்க்கைக்கும் இடையில்) மறுபக்கம் யஃஜூஜ், மஃஜூஜ் தங்கள் கண்ணுக்குப் புலப்படாத ஆற்றலால் அடக்குமுறை செய்வதற்கும், அடக்கி ஆளப்பட்டவர்களை தண்டிப் பதற்கும் பயன்படுத்துவார்கள். இவ்வாறு செய்வதில் பூமியின் வாழ்க்கை அமைப்பு வானத்தின் வாழ்க்கை அமைப்போடு முற்றிலும் முரண்பட்டதாக இருக்கும். அந்த உலக அமைப்பு தொடர்ச்சியாக அடக்குமுறையை அதிகரித்துக்கொண்டே இருக்கும்.

அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டு நற்கருமங்கள்

செய்பவர்களுக்கு நன்மை செய்வதற்கு துல்கர்னைன் தன்னுடைய ஆற்றலைப் பயன்படுத்தினார். யஃஜூஜ், மஃஜூஜ் உடைய ஆற்றல் முற்றிலும் அதற்கு எதிரான நோக்கங்களுக்காகவே பயன்பட்டது. துல்கர்னைன் பழங்குடியினரைச் சந்தித்தபோது தன் நுண்ணறிவாலும் அரவணைப்பாலும் அவர்களைப் பழங்குடியினராகவே வாழ விட்டுவிட்டார். அவர்கள் மீது தன் அதிகாரத்தைப் பிரயோகிக்கவில்லை. மறுபக்கம் யஃஜூஜ், மஃஜூஜ் தங்கள் ஆற்றலைப் பழங்குடிகளைத் திட்டமிட்டு தீர்த்துக் கட்டுவதற்கோ, அல்லது அவர்களின் பழங்குடி வாழ்க்கை முறையை அழிப்பதற்கோ பயன்படுத்தினார்கள்.

யஃஜூஜ், மஃஜூஜ் இவ்வாறான உலக அமைப்பை உருவாக்கி தக்கவைத்துக் கொள்ளும். அதை (ஈமான் கொண்டு நற்காரியங்கள் புரியும்) ஆன்மிகப் பார்வையால் மட்டுமே கண்டுகொள்ள முடியும். யூதர்கள் இப்படிப்பட்டவர்களை பைத்துல்முகத்தஸை மீட்டுத்தருகிற தளபதிகளாக நியமிப்பார்களானால், யூதர்கள் ஆன்மிகக் குருடர்கள் ஆவார்கள்.

மத்திய ஐரோப்பிய கிருஸ்துவ காலம் முதல் நவீன ஐரோப்பிய நாகரிகம் வரை ஐரோப்பா, யஃஜூஜ், மஃஜூஜ் உடைய உலக அமைப்பை வெற்றிகரமாக நடத்திக்காட்டி அதன் முதல் கட்ட திட்டங்களை நிறைவேற்றியும் இருக்கிறது. ஐரோப்பாதான் உலகம் முழுவதையும் சீரழித்து, யூதர்களை பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பக் கொண்டுவந்தது. இது சிறிதுகூட யூதர்களுக்கு ஆன்மிகப் பார்வை இல்லை என்பதை சுட்டிக்காட்டுகிறது. யூதர்கள் தாங்களே ஏமாற்றப்படுவதற்கு வழிவகுத்து யஃஜூஜ், மஃஜூஜால் ஏற்படுத்தப்பட்ட அழிவின் பாதைக்குத் தங்களை இட்டுச்செல்கிறார்கள்.

யூதர்களின் இறுதித் தண்டனைக்கான நேரம் நெருங்குவதை அளவிடும் அளவுகோலை நபி (ஸல்) நமக்கு வழங்கி இருக்கிறார்கள். முதலில் ஈஸாநபி (அலை) தஜ்ஜாலைக் கொல்லும் வரையிலும், யஃஜூஜ், மஃஜூஜை அல்லாஹ்வால் அனுப்பப்படும் ஒரு உயிரினம் மூலம் அழிக்கும் வரையிலும் இறுதித் தண்டனை ஏற்படாது. கலீலீ ஆற்றில் நீர் இருக்கும் வரையிலும் அந்தத் தருணம் வராது.

கீழ்வரும் ஹதீஸைக் காண்க:

நவ்வாஸ் இப்னு சம்ஆன் (ரலி) அறிவிக்கிறார்கள்:

........... அப்படிப்பட்ட சூழ்நிலையில் அல்லாஹ் ஈஸா (அலை) அவர்களுக்கு, என் அடியார்களில் அவர்களை எதிர்த்துப் போரிட முடியாத மக்களை வெளியாக்குவேன், இம்மக்களை பாதுகாப்பாக தூர் மலைக்கு அழைத்துச் செல்லுங்கள் என அறிவிப்பான்.

பிறகு அல்லாஹ் யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தை அனுப்புவான், அவர்கள் ஒவ்வொரு மேடுகளிலிருந்தும் இறங்குவார்கள். அவர்களில் முதல் பிரிவினர் திப்ரியஸை (கலீலீ கடல்) கடப்பார்கள், அதிலிருந்து அவர்கள் நீர் அருந்துவார்கள். அவர்களின் கடைசிப் பிரிவினர் கடந்து செல்லும்போது இங்கு ஒரு காலத்தில் தண்ணீர் இருந்தது எனக் கூறுவார்கள்.

ஈஸா நபியும், தோழர்களும் முற்றுகை இடப்படுவார்கள், (முற்றுகையின் கடுமையால்) ஒரு எருமையின் தலை நூறு தீனார்களை விட அவர்களுக்கு விருப்பமானதாக இருக்கும்.

(ஸஹீஹ்முஸ்லிம்)

கலீலீ ஆற்றின் நீர்மட்டத்தின்பால் கவனம் செலுத்த நாம் கூறியது மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும். பிற்சேர்க்கை-1 இதை விளக்குகிறது. (சூரத்துல் கஹ்ஃபு நவீன காலம் என்னும் நமது நூலில் யஃஜூஜ், மஃஜூஜ் பற்றி விரிவாக அலசுவோம்.
இன்ஷா அல்லாஹ்.

## அத்தியாயம் 11

# யூதர்களும் அரபிகளும்

لَتَجِدَنَّ أَشَدَّ النَّاسِ عَدَاوَةً لِلَّذِينَ آمَنُوا الْيَهُودَ وَالَّذِينَ أَشْرَكُوا وَلَتَجِدَنَّ أَقْرَبَهُمْ مَوَدَّةً
لِلَّذِينَ آمَنُوا الَّذِينَ قَالُوا إِنَّا نَصَارَى ذَلِكَ بِأَنَّ مِنْهُمْ قِسِّيسِينَ وَرُهْبَانًا وَأَنَّهُمْ لَا
يَسْتَكْبِرُونَ

நிச்சயமாக யூதர்களையும், இணைவைப்பவர்களையும் முஃமின்களுக்குக் கடும் பகைவர்களாகவே (நபியே!) நீர் காண்பீர்; நிச்சயமாக நாங்கள் கிறிஸ்தவர்களாக இருக்கின்றோம் என்று சொல்பவர்களை, முஃமின்களுக்கு நேசத்தால் மிகவும் நெருங்கியவர்களாக (நபியே!) நீர் காண்பீர்; ஏனென்றால் அவர்களில் கற்றறிந்த குருமார்களும், துறவிகளும் இருக்கின்றனர் மேலும் அவர்கள் இறுமாப்புக் கொள்வதுமில்லை.

**(அல்குர்ஆன் 5:82)**

இப்பொழுது (இஸ்மாயீல் நபியை) அரபிகளைப் பற்றியும், பைத்துல்முகத்தஸ் பற்றியும் ஆய்வு செய்வோம். சியோனிஸ அமைப்பு

இஸ்ரேல் தேசத்தை மீட்டெடுப்பதில் வெற்றி கண்டு அரபிகளை அவர்களின் பூமியிலிருந்து விரட்டியடித்திருக்கிற இச்சமயத்தில் இந்த ஆய்வு மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது. மார்க்க ரீதியான காரணமில்லாமல் இதை அவர்கள் செய்யத் துணிய மாட்டார்கள். எந்த மார்க்கச் சிந்தனையில் இதைச் செய்யத் துணிந்தார்களோ அது பொய்யானது, இபுராஹீம் நபியின் பெயரால் இட்டுக் கட்டப்பட்டது. இது பொய்யானது என்பதை சியோனிஸ்டுகள் அறிவார்கள். அந்த விஷயத்தை இந்த அத்தியாயத்தில் அலசுகிறோம்.

## அரபிகளைப் பற்றிய யூத மார்க்க சிந்தனை

2000-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 5-இல் ஒரு சனிக்கிழமை பிரசங்கத்தில் இஸ்ரேலின் தீவிர மதச்சார்புள்ள ஷாஸ் பிரிவின் தலைவர் ஒவாதியா யூசுப் பாதிரி கீழ்வருமாறு கூறியதாகச் சொல்லப் படுகிறது:

இஸ்மாயீலிகள் (அரபிகள்) அனைவரும் சபிக்கப்பட்ட தீயவர்கள், அனைவரும் இஸ்ரேலுக்கு எதிரானவர்கள். அருள் நிறைந்தவன் இஸ்மாயீலிகளைப் படைத்ததற்காக வருந்துகிறான் பாதிரியின் மேற்கூறப்பட்ட அறிக்கை, ஜெரூசலம் சம்பந்தமாக பாலஸ்தீன விடுதலை அமைப்புக்கும், அன்றைய இஸ்ரேலின் யஹூத் பராக் அரசாங்கத்திற்குமிடையில் ஏற்பட்ட புரிந்துணர்வு ஒப்பந்தத்தை கேலி செய்கிறது.

பழைய நகரத்தை ஏன் பிரிக்க வேண்டும்? நம்மைக் கொல்வதற்கு அவர்கள் இன்னொரு வாய்ப்பைப் பெறுவார்கள். இன்னும் ஏன் அவர்கள் நமக்கருகில் இருக்க வேண்டும்?

பாம்பை எங்களுக்கருகில் வைத்திருக்கிறீர்? ஒரு பாம்போடு எப்படி அமைதி ஏற்படுத்தப்போகிறீர்? என்றெல்லாம் பாதிரி கேள்விகள் கேட்டு பிரதமர் பராக்கை துளைக்கிறார். அந்தப் பாதிரி பிரதமர் பராக்கைக் குறித்து பராக் கொடூரமான இஸ்மாயீலிகளின் பின்னால் கண் மூடித்தனமாக ஓடிக்கொண்டிருக்கிறார், ஜெரூசலத்தில் நமக்கருகில் பாம்புகளைக் கொண்டு வந்திருக்கிறார், அவருக்கு அறவே அறிவே இல்லை என்று கூறியிருக்கிறார். அந்தப் பிரசங்கம் வெகுவாகப் பாராட்டைப் பெற்றது என ஜெரூசலம் போஸ்ட் அறிவிக்கிறது (காண்க: www.jerusalampost.com-august5,2000)

இஸ்மாயீலிகள் மீதும், அவர்கள் ஜெருசலத்திற்கு உரிமை கோருவதன் மீதும் பாதிரியின் கோபத்திற்கான காரணங்களில் ஒன்று அவர்களுடைய தவ்ராத் வேதம்தான், தவ்ராத்தின் ஜெனிஸிஸ் அத்தியாயம் இஸ்மாயீலிகளைக் குறித்து கீழ்வருமாறு கூறுகிறது.

ஒரு மனிதனின் காட்டுக் கழுதை: அவனுக்கு மனித குலம் எதிரி, மனிதகுலம் அனைத்திற்கும் அவன் எதிரி

**(ஜெனிஸிஸ், 16:12)**

மனித குலத்தில் அனைவரும் அவனுக்கு எதிரி இந்த வசனத்தின் மூலம்தான் இஸ்ரேல் தேசம் அரபிகள் மீது கட்டவிழ்த்து விடப்படும் அடக்குமுறையை அந்தப் பாதிரியும், அவரது தோழர்களும் நியாயப்படுத்துகிறார்கள். அவர்களுக்கு வேண்டுமானால் இது நியாயம். பைத்துல்முகத்தஸில் ஜெனீன் அகதி முகாமில் நடத்தப் பட்ட இஸ்ரேலின் காட்டுமிராண்டித்தனமான தாக்குதலுக்கு உலகம் என்ன விளக்கம் சொல்லப் போகிறது. தவ்ராத்தில் மாற்றம் செய்து இட்டுக்கட்டப்பட்ட இந்த வசனத்தை யூதர்கள் செருகாமல் இருந் திருந்தால், சியோனிஸ தீவிரவாதிகளுக்கு நூற்றாண்டுகளாக வசித்த பாலஸ்தீனர்களை அவர்களின் சொந்த நிலத்தை விட்டு வெளியேற்று வது இயலாமல் ஆகியிருக்கும்.

இஸ்மாயீல் நபி (அலை) அல்லாஹ்வின் தூதர் என்ற திருக்குர்ஆனின் கூற்று தவ்ராத்தின் அந்த வசனம் அல்லாஹ்வின் மீதே இட்டுக்கட்டுப்பட்டது என்பதை தெளிவாக்குகிறது.

وَاذْكُرْ فِي الْكِتَابِ إِسْمَاعِيلَ إِنَّهُ كَانَ صَادِقَ الْوَعْدِ وَكَانَ رَسُولًا نَبِيًّا

وَكَانَ يَأْمُرُ أَهْلَهُ بِالصَّلَاةِ وَالزَّكَاةِ وَكَانَ عِنْدَ رَبِّهِ مَرْضِيًّا()وَاذْكُرْ فِي الْكِتَابِ إِدْرِيسَ إِنَّهُ

كَانَ صِدِّيقًا نَبِيًّا

(நபியே!) இவ்வேதத்தில் இஸ்மாயீலைப் பற்றியும் நினைவு கூர்வீராக! நிச்சயமாக அவர் வாக்குறுதியில் உண்மையாளராக இருந்தார்; இன்னும் அவர் தூதராகவும், நபியாகவும் இருந்தார்.

அவர் தம் குடும்பத்தினரைத் தொழுகையைக் கடைப்பிடிக்கவும், ஜகாத்து கொடுத்து வரும்படியும் ஏவுபவராக இருந்தார்; தம் இறைவ னிடத்தில் மிகவும் விரும்பப்பட்டவராகவும் அவர் இருந்தார்.

**(அல்குர்ஆன், 19:54-55)**

وَإِسْمَاعِيلَ وَإِدْرِيسَ وَذَا الْكِفْلِ كُلٌّ مِنَ الصَّابِرِينَ
وَأَدْخَلْنَاهُمْ فِي رَحْمَتِنَا إِنَّهُمْ مِنَ الصَّالِحِينَ

இன்னும்: இஸ்மாயீலையும், இத்ரீஸையும், துல்கிஃப்லையும் (நபியே! நீர் நினைவு கூர்வீராக); அவர்கள் யாவரும் பொறுமையாளர்களில் நின்றுமுள்ளவர்களே!

இவர்கள் (எல்லோரையும்) நாம் நம் கிருபையில் புகுத்திக் கொண்டோம், நிச்சயமாக இவர்கள் (ஸாலிஹீன்களான) நல்லடியார்களில் நின்றுமுள்ளவர்களே!

**(அல்குர்ஆன், 21:86-87)**

وَاذْكُرْ إِسْمَاعِيلَ وَالْيَسَعَ وَذَا الْكِفْلِ وَكُلٌّ مِنَ الْأَخْيَارِ ﴿٤٨﴾ هَٰذَا ذِكْرٌ وَإِنَّ لِلْمُتَّقِينَ لَحُسْنَ مَآبٍ ﴿٤٩﴾ جَنَّاتِ عَدْنٍ مُفَتَّحَةً لَهُمُ الْأَبْوَابُ ﴿٥٠﴾ مُتَّكِئِينَ فِيهَا يَدْعُونَ فِيهَا بِفَاكِهَةٍ كَثِيرَةٍ وَشَرَابٍ ﴿٥١﴾ وَعِنْدَهُمْ قَاصِرَاتُ الطَّرْفِ أَتْرَابٌ ﴿٥٢﴾ هَٰذَا مَا تُوعَدُونَ لِيَوْمِ الْحِسَابِ ﴿٥٣﴾ إِنَّ هَٰذَا لَرِزْقُنَا مَا لَهُ مِنْ نَفَادٍ ﴿٥٤﴾

இன்னும் (நபியே!) நினைவு கூர்வீராக; இஸ்மாயீலையும், அல்யஸவுவையும், துல்கிஃப்லையும் - (இவர்கள்) எல்லோரும் நல்லோர்களில் உள்ளவராகவே இருந்தனர்.

இது நல்லுபதேசமாக இருக்கும்; நிச்சயமாக பயபக்தியுடையவர்களுக்கு அழகிய இருப்பிடமுண்டு

அத்னு என்னும் சுவனபதிகளின் வாயில்கள் அவர்களுக்காகத் திறந்து வைக்கப்பட்டவையாக இருக்கும்.

அதில் அவர்கள் (பஞ்சணைகள் மீது) சாய்ந்தவர்களாக, அங்கே ஏராளமான கனிவகைகளையும், பானங்களையும் கேட்(டு அருந்திக் கொண்டிருப்)பார்கள்.

அவர்களுடன் கீழ்நோக்கிய பார்வையும், ஒரே வயதுமுடைய சொர்க்கக் கன்னிகைகளும் இருப்பார்கள்.

கேள்வி கணக்குக்குரிய நாளுக்கென உங்களுக்கு வாக்களிக்கப்பட்டிருந்தது இதுதான்.

நிச்சயமாக இவை நம்முடைய கொடையாகும்; இதற்கு (என்றும்) முடிவே இராது (என்று அவர்களுக்குக் கூறப்படும்).

**(அல்குர்ஆன், 38:48-54)**

وَتِلْكَ حُجَّتُنَا آتَيْنَاهَا إِبْرَاهِيمَ عَلَىٰ قَوْمِهِ ۚ نَرْفَعُ دَرَجَاتٍ مَنْ نَشَاءُ ۗ إِنَّ رَبَّكَ حَكِيمٌ
عَلِيمٌ ﴿٨٣﴾

وَوَهَبْنَا لَهُ إِسْحَاقَ وَيَعْقُوبَ ۚ كُلًّا هَدَيْنَا ۚ وَنُوحًا هَدَيْنَا مِنْ قَبْلُ ۖ وَمِنْ ذُرِّيَّتِهِ دَاوُودَ وَسُلَيْمَانَ
وَأَيُّوبَ وَيُوسُفَ وَمُوسَىٰ وَهَارُونَ ۚ وَكَذَٰلِكَ نَجْزِي الْمُحْسِنِينَ ﴿٨٤﴾ وَزَكَرِيَّا وَيَحْيَىٰ وَعِيسَىٰ
وَإِلْيَاسَ ۖ كُلٌّ مِنَ الصَّالِحِينَ ﴿٨٥﴾ وَإِسْمَاعِيلَ وَالْيَسَعَ وَيُونُسَ وَلُوطًا ۚ وَكُلًّا فَضَّلْنَا عَلَى
الْعَالَمِينَ ﴿٨٦﴾

وَمِنْ آبَائِهِمْ وَذُرِّيَّاتِهِمْ وَإِخْوَانِهِمْ ۖ وَاجْتَبَيْنَاهُمْ وَهَدَيْنَاهُمْ إِلَىٰ صِرَاطٍ مُسْتَقِيمٍ ﴿٨٧﴾ ذَٰلِكَ
هُدَى اللَّهِ يَهْدِي بِهِ مَنْ يَشَاءُ مِنْ عِبَادِهِ ۚ وَلَوْ أَشْرَكُوا لَحَبِطَ عَنْهُمْ مَا كَانُوا يَعْمَلُونَ
﴿٨٨﴾

أُولَٰئِكَ الَّذِينَ آتَيْنَاهُمُ الْكِتَابَ وَالْحُكْمَ وَالنُّبُوَّةَ ۚ فَإِنْ يَكْفُرْ بِهَا هَٰؤُلَاءِ فَقَدْ وَكَّلْنَا بِهَا قَوْمًا
لَيْسُوا بِهَا بِكَافِرِينَ ﴿٨٩﴾ أُولَٰئِكَ الَّذِينَ هَدَى اللَّهُ ۖ فَبِهُدَاهُمُ اقْتَدِهْ ۗ قُلْ لَا أَسْأَلُكُمْ عَلَيْهِ
أَجْرًا ۖ إِنْ هُوَ إِلَّا ذِكْرَىٰ لِلْعَالَمِينَ ﴿٩٠﴾
وَمَا قَدَرُوا اللَّهَ حَقَّ قَدْرِهِ إِذْ قَالُوا مَا أَنْزَلَ اللَّهُ عَلَىٰ بَشَرٍ مِنْ شَيْءٍ ۗ قُلْ مَنْ أَنْزَلَ الْكِتَابَ الَّذِي
جَاءَ بِهِ مُوسَىٰ نُورًا وَهُدًى لِلنَّاسِ ۖ تَجْعَلُونَهُ قَرَاطِيسَ تُبْدُونَهَا وَتُخْفُونَ كَثِيرًا ۖ وَعُلِّمْتُمْ مَا لَمْ
تَعْلَمُوا أَنْتُمْ وَلَا آبَاؤُكُمْ ۖ قُلِ اللَّهُ ۖ ثُمَّ ذَرْهُمْ فِي خَوْضِهِمْ يَلْعَبُونَ ﴿٩١﴾
وَهَٰذَا كِتَابٌ أَنْزَلْنَاهُ مُبَارَكٌ مُصَدِّقُ الَّذِي بَيْنَ يَدَيْهِ وَلِتُنْذِرَ أُمَّ الْقُرَىٰ وَمَنْ حَوْلَهَا ۚ وَالَّذِينَ يُؤْمِنُونَ
بِالْآخِرَةِ يُؤْمِنُونَ بِهِ ۖ وَهُمْ عَلَىٰ صَلَاتِهِمْ يُحَافِظُونَ ﴿٩٢﴾

இவை நம்முடைய ஆதாரங்களாகும், நாம் இவற்றை இபுராஹீமுக்கு அவருடைய கூட்டத்திற்கு எதிராகக் கொடுத்தோம்; நாம் விரும்புவோருக்கு பதவிகளை (மேலும் மேலும்) உயர்த்துகிறோம்; நிச்சயமாக உம்முடைய இறைவன் பூரண ஞானமும் பேரறிவும் உள்ளவன்.

நாம் அவருக்கு இஸ்ஹாக்கையும், யஃகூபையும் (சந்ததியாகக்) கொடுத்தருளினோம், இவர்கள் அனைவரையும் நாம் நேர்வழியில் செலுத்தினோம்; இதற்கு முன்னர் நாம் நூஹையும் அவருடைய சந்ததி யிலிருந்து தாவூது, ஸுலைமான், அய்யூப், யூஸுஃப், மூஸா, ஹாரூன் ஆகியோரையும் நேர்வழியில் செலுத்தினோம்; இப்படியே நாம் நன்மை புரிவோருக்கு நற்கூலி வழங்குகிறோம்.

இன்னும், ஜகரிய்யா, யஹ்யா, ஈஸா, இல்யாஸ் - இவர்கள் யாவரும் (நேர் வழிசார்ந்த) ஸாலிஹானவர்களில் நின்றுமுள்ளவர்களே.

இன்னும் இஸ்மாயீல், அல்யஸஉ, யூனுஸ், லூத் - இவர்கள் யாவரையும் உலகத்திலுள்ள அனைவரிலும் மேன்மையாக்கினோம்.

இவர்களுடைய மூதாதையர்களிலிருந்தும், இவர்களுடைய சந்ததிகளிலிருந்தும், இவர்களுடைய சகோதரர்களிலிருந்தும் (பலரை) நாம் தேர்ந்தெடுத்து, அவர்களை நேர் வழியில் செலுத்தினோம்.

இதுவே அல்லாஹ்வின் நேர் வழியாகும், தன் அடியார்களில் அவன் யாரை விரும்புகிறானோ, அவர்களுக்கு இதன்மூலம் நேர்வழி காட்டுகிறான்; (பின்னர்) அவர்கள் இணைவைப்பார்களானால், அவர்கள் செய்து வந்ததெல்லாம், அவர்களை விட்டு அழிந்துவிடும்.

இவர்களுக்குத்தான் நாம் வேதத்தையும், அதிகாரத்தையும், நபித்துவத்தையும் கொடுத்தோம்; ஆகவே இவற்றை இவர்கள் நிராகரித்தால் இதனை நிராகரிக்காத ஒரு சமுதாயத்தினரை இதற்கு நாம் நிச்சயமாக பொறுப்பாக்குவோம்

இவர்கள் யாவரையும் அல்லாஹ் நேர்வழியில் செலுத்தினான்; ஆதலால், இவர்களுடைய நேர்வழியையே நீரும் பின்பற்றுவீராக; இதற்காக நாம் உங்களிடம் எவ்வித பிரதிபலனையும் கேட்கவில்லை; இது (இக்குர்ஆன்) உலக மக்கள் யாவருக்கும் நல்லுபதேசமேயன்றி வேறல்ல என்று கூறுவீராக.

இவர்கள் அல்லாஹ்வை மதிக்க வேண்டிய முறையில் மதிக்கவில்லை; ஏனெனில் அவர்கள், அல்லாஹ் எந்த ஒரு மனிதர் மீதும் எ(ந்த வேதத்)தையும் இறக்கவில்லை என்று கூறுகின்றனர்; அவர்களிடத்தில் நீர் கூறும்: பிரகாசமானதாகவும், மனிதர்களுக்கு வழிகாட்டியாகவும் மூஸா கொண்டுவந்தாரே அந்த வேதத்தை இறக்கியவன் யார்? அதனை நீங்கள் தனித்தனி ஏடுகளாக ஆக்கி, அவற்றில் சிலவற்றை வெளிப்படுத்துகிறீர்கள்; பெரும்பாலானவற்றை மறைத்தும் விடுகிறீர்கள்; (அவ்வேதத்தின் மூலமாகவே) நீங்களும் உங்கள் மூதாதையர்களும் அறியாமல் இருந்தவைகளையெல்லாம் கற்றுக்கொடுக்கப்பட்டீர்கள். (நபியே! மேலும்) நீர் கூறுவீராக:

அல்லாஹ்தான் (அதை இறக்கிவைத்தான்) பின்பு அவர்களைத் தம் வீணான (தர்க்கத்)தில் விளையாடிக்கொண்டிருக்குமாறு விட்டு விடுவீராக.

இந்த வேதத்தை - அபிவிருத்தி நிறைந்ததாகவும், இதற்குமுன் வந்த (வேதங்களை) மெய்ப்படுத்துவதாகவும் நாம் இறக்கிவைத்துள் ளோம்; (இதைக்கொண்டு) நீர் (நகரங்களின் தாயாகிய) மக்காவில் உள்ளவர்களையும், அதனைச் சுற்றியுள்ளவர்களையும் எச்சரிக்கை செய்வதற்காகவும், (நாம் இதனை அருளினோம்.) எவர்கள் மறுமையை நம்புகிறார்களோ அவர்கள் இதை நம்புவார்கள். இன்னும் அவர்கள் தொழுகையைப் பேணுவார்கள்.

**(அல்குர்ஆன், 6:83-92)**

இஸ்மாயீல் நபியைப் பற்றியும், இஸ்மாயீலிகளைப் பற்றியும் இட்டுக்கட்டிய பொய்களுக்காக குர்ஆனில் அல்லாஹ் கூறிய எச்சரிக்கையை அந்த பாதிரி கவனிக்க வேண்டும்.

وَمَنْ أَظْلَمُ مِمَّنِ افْتَرَىٰ عَلَى اللَّهِ كَذِبًا أَوْ قَالَ أُوحِيَ إِلَيَّ وَلَمْ يُوحَ إِلَيْهِ شَيْءٌ وَمَنْ قَالَ سَأُنْزِلُ مِثْلَ مَا أَنْزَلَ اللَّهُ وَلَوْ تَرَىٰ إِذِ الظَّالِمُونَ فِي غَمَرَاتِ الْمَوْتِ وَالْمَلَائِكَةُ بَاسِطُو أَيْدِيهِمْ أَخْرِجُوا أَنْفُسَكُمُ الْيَوْمَ تُجْزَوْنَ عَذَابَ الْهُونِ بِمَا كُنْتُمْ تَقُولُونَ عَلَى اللَّهِ غَيْرَ الْحَقِّ وَكُنْتُمْ عَنْ آيَاتِهِ تَسْتَكْبِرُونَ ﴿٩٣﴾

அல்லாஹ்வின் மீது பொய்க் கற்பனை செய்பவன், அல்லது வஹீயின் மூலம் தனக்கு ஒன்றுமே அறிவிக்கப்படாமலிருக்க, எனக்கு வஹீ வந்தது என்று கூறுபவன்; அல்லது அல்லாஹ் இறக்கிவைத்த இ(வ்வேதத்)தைப் போல் நானும் இறக்கிவைப்பேன் என்று கூறுபவன், ஆகிய இவர்களை விடப் பெரிய அநியாயக்காரன் யார் இருக்க முடியும்? இந்த அநியாயக்காரர்கள் மரண வேதனையில் இருக்கும் போது நீங்கள் அவர்களைப் பார்த்தால், மலக்குகள் தம் கைகளை நீட்டி (இவர்களிடம்) உங்களுடைய உயிர்களை வெளியேற்றுங் கள்; இன்றைய தினம் நீங்கள் இழிவு தரும் வேதனை கூலியாகக் கொடுக்கப்படுவீர்கள். ஏனெனில், நீங்கள் உண்மையல்லாததை அல்லாஹ்வின் மீது கூறிக் கொண்டிருந்தீர்கள்; இன்னும், அவனு டைய வசனங்களை (நம்பாது நிராகரித்துப்) பெருமையடித்துக் கொண்டிருந்தீர்கள் (என்று கூறுவதை நீர் காண்பீர்).

**(அல்குர்ஆன், 6:93)**

## குர்ஆனில் ஜெருசலம்

இட்டுக் கட்டப்பட்ட தவ்ராத்தின் வசனத்தை நம்பக்கூடிய பாதிரியும், மற்ற அனைவரும் பொய்யான உலகில் வாழ்கின்றனர். உண்மையைப் பற்றிய அவர்கள் கண்ணோட்டம் தவறானது. இஸ்மாயீல் நபியைப் பற்றிய தவறான செய்தி உருவாக்கப்பட்டு இன்றும் நிலைபெற்றிருக்கிறது. தவ்ராத்தில் எங்கும் இஸ்மாயீல் நபியைப் பற்றித் தவறான நடவடிக்கையோ, தீயவைகளின் தொடர்பு இருந்ததாகவோ எந்தப் பதிவும் இல்லை. அவ்வாறு இருந்தால்தானே இறைவைனின் இவ்வளவு கடுமையான கண்டனத்திற்கு ஆளாக முடியும்? மாறாக அந்த பாதிரியால் பாம்புகள் என்று நிந்திக்கப்பட்ட அதே இஸ்மாயீலிகள்தான் அவர்களுக்கு மத்தியில் இரண்டாயிரம் ஆண்டுகளாக வசிப்பதற்கு இடமளித்திருக்கிறார்கள். அவர்களின் உயிர்களுக்கும், உடைமைகளுக்கும் பாதுகாப்பு அளித்து யூதர்களாக வாழ்வதற்கும், வணங்குவதற்கும் சுதந்திரம் அளித்திருக்கிறார்கள்.

அநீதம், அடக்குமுறையின் அடித்தளத்தில் எழுப்பப்பட்ட இஸ்ரேல் தேசத்தை ஆதரித்தவர்கள், ஆதரித்துக்கொண்டிருப்பவர்கள் முற்றிலும் ஆன்மீகப் பார்வையற்றவர்கள். இந்த ஆன்மீகக் குருடுதான் இஸ்ரேல் தேசத்தை ஏமாற்றக் கூடியது என்பதை அறியாதவர்களாகி விட்டனர், அதுதான் மர்யம் (அலை) அவர்களை விபச்சாரம் செய்து விட்டார் எனவும், ஈஸா நபி (அலை) அவரகளை விபச்சாரத்தில் பிறந்த குழந்தை (நஊது பில்லாஹ்) எனவும் கூற வைத்திருக்கிறது. இன்னும் அதிகமாக வரலாற்றில் என்றும் நடந்திராத (ஈஸா நபியை சிலுவையில் அறைவது) செயலைச் செய்யும் துணிவை கொடுத்தது. பிறகு அவரைக் கொன்றுவிட்டதாகவும் பெருமையாக பேசவைத்தது. இவையனைத்திற்கும் அந்த ஆன்மிகக் குருடுதான் காரணம். முஹம்மது நபி (ஸல்) அவர்களை நிராகரிக்க வைத்து, மீண்டும், மீண்டும் அல்லாஹுவுக்கு கோபமூட்டக்கூடிய காரியங்களைச் செய்யத் தூண்டுவதும் அதுதான். அவர்களின் தற்கால இனம், பொருளாதாரம் மிகவும் வெறுக்கத்தக்கவையாக இருக்கின்றன.

நீண்ட காலம் முன்பு (பைத்துல்முகத்தஸை விடுவிக்க) மூஸா நபி (அலை) அவர்களிடம் நீயும் உன் இறைவனும் போரிடுங்கள் என்று கூறியபோது அவர்கள் இருந்த இடத்திலேயேதான் இருந்தார்கள். இந்தக் கெட்ட நடவடிக்கைக்காக அல்லாஹ் 40 ஆண்டுகள் பைத்துல்முகத்தஸுக்குள் நுழையவிடாமல் தடுத்து உலகம் முழுவதும் சுற்றித்திரிய வைத்தான். இந்தத் தீய மக்களைப் பற்றி வருந்த வேண்டாம் என அல்லாஹ் மூஸா நபியிடம் கூறினான்.

இவ்வார்த்தைகளில் அல்லாஹ் அவர்கள் மீது சிறிதளவும் கருணை காட்டவில்லை என்பது தெளிவாகிறது. தவ்ராத்தில் உள்ளது இட்டுக் கட்டப்பட்டது என்பதை சுட்டிக்காட்டும் குர்ஆன் வசனம் இல்லா விட்டாலும், இஸ்மாயீல் நபி பற்றி கூறப்பட்டவை சரியல்ல என்பதை உணர ஆன்மீகப் பார்வை ஒன்றே போதுமானது.

இதே காரணத்திற்காகவே அன்றும் அவர்கள் இரக்கம் காட்டப்படுவதற்குத் தகுதியற்றவர்களாக இருந்தார்கள். இன்றும் அதே காரணத்திற்காகவே இரக்கம் காட்டப்படுவதற்குத் தகுதியற்ற வர்களாக இருக்கிறனர். அவர்களின் நேரம் முடிவடைந்து விட்டது. அவர்களின் விதிக்கு முத்திரையிடப்பட்டுவிட்டது. வரலாற்றில் என்றுமில்லாத அளவு (ஆசை காட்டப்பட்டு) மிகப் பெரிய ஏமாற்றத் திற்கு ஆளாகியிருக்கிறார்கள். அந்த ஆசையை அடைவது தான் இரண்டாயிரம் ஆண்டுகளாக இஸ்மாயீலி அரபிகளுடன் அமைதியா கவும், பாதுகாப்பாகவும் வாழ்ந்து கொண்டிருந்த நிலப்பரப்புகளை (எமன், மொரோக்கோ, எகிப்து, ஈரான், இராக் சிரியா) விட்டுவிட்டு பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பி, அநியாயத்திற்கும் அடக்கு முறைக்கும் துணைபோக வைத்திருக்கிறது. துரதிஷ்டமாக, அந்த அடக்குமுறை நாளுக்குநாள் அதிகமாகிக்கொண்டே இருக்கிறது.

முஸ்லிம்கள் அவர்களை ஏமாற்றவில்லை, முஸ்லிம்கள் அவர்களை பைத்துல்முகத்தஸுக்கு வரும்படி அழைக்கவில்லை. அல்லாஹ்வே இவர்களை பைத்துல்முகத்தஸுக்கு திரும்பி கொண்டு வந்ததாகத்தான் குர்ஆன் கூறுகிறது. அதே அல்லாஹ் தான் சுலைமான் நபியால் கட்டப்பட்ட ஆலயம் இருமுறை அழிக்கப்படுவ தற்கும் விதி அமைத்தான், அதே அல்லாஹ்தான் ஏமாற்றும் இஸ்ரேல் தேசத்தின் அழிவிற்கும் உறுதியளிக்கிறான். ஜெரூசலத்தைப் பற்றியும், இஸ்ரேல் தேசத்தின் அழிவைப்பற்றியும் கூறும் குர்ஆன் வசனங்களை கவனப்படுத்துவதே இந்நூலின் நோக்கமாகும். இஸ்ரேலுக்கு அழிவு நிகழும் நாள், வரலாற்றில் எந்த மக்கள் மீதும் வந்திராத மிகப்பெரும் இறைத் தண்டனை அவர்களின் கண்களுக்கு முன்னாலேயே கொண்டு வரும் நாளாகும். அந்தப் பாதிரி எச்சரிக்கையாக இருக்கவும்!

பாதிரியின் பிரசங்கத்தில் இடம்பெற்றது திரித்துக் கூறப்பட்டது என்பது எவ்வளவு தெளிவானதோ அதே போல, பாலஸ்தீன விடுதலை அமைப்பும் (பி எல் ஓ) இஸ்ரேல் தேசமும் நடத்திய பேச்சு வார்த்தைகளும் பயனற்றவை என்பதும் தெளிவானது.

அவர்களைப் பொறுத்தவரையில் இவ்விஷயத்தில் குர்ஆனையோ, தவ்ராத்தையோ வழிகாட்டியாக எடுத்துக்கொள்ள மாட்டார்கள். இஸ்லாமோ, யூதமோ மார்க்கத்தைப் பின்பற்றுவதில் இருவரும் ஒரே மனநிலையில்தான் உள்ளனர். மதச்சார்பற்ற தேசிய நோக்கங்களை அடைவதற்காகவே மார்க்கங்களைப் பயன்படுத்து கிறார்கள். மதச்சார்பற்ற தேசியத்திற்கு உண்மையைக் கண்டறியும் தேடல் கிடையாது. அவர்கள் வணங்கும் கடவுள் அவர்களாகவே உருவாக்கிக் கொண்டது. அவர்களின் அறம் என்பது சூழ்நிலைக் கேற்ப தேவைப்படும்போது தேவைப்படும் விதத்தில் மாற்றிக் கொள்ளக் கூடியதாகும். அவையே தேசிய மதச்சார்பின்மையின் கொள்கையாகும்.

பாலஸ்தீன தேசம் உருவாகும்போது கிழக்கு ஜெரூசலம் தலைநகராக வேண்டும் என்று பாலஸ்தீனர்கள் நிபந்தனை விதிக்கலாம், அப்போது அது சாமர்த்தியமாக சமரசம் செய்யப்படலாம். அப்படி பாலஸ்தீன தேசம் உருவானால் மதச்சார்பற்ற யூத தேசத்தின் ஒரு பகுதியாகத்தான் இருக்கும். அப்பொழுது பைத்துல்முகத்தஸ் முழுமையாக நவீன மேற்கத்திய நாகரிகத்தில் எழுந்த அமைப்பின் ஒரு பகுதியாக மாறிவிடும்.

அல்லாஹ்வை விட்டுவிட்டு ஒரு நாட்டில் தேசிய இறையாண்மை கடைப் பிடிக்கப்பட்டால் அது தெளிவான [ஷிர்க்] இணை வைத்தல் ஆகும். ஒரு தேசம் ஒரு மேல்மட்ட தலைமைக்கு ஹலால் ஹராமை, தீர்மானிக்கிற அதிகாரத்தை வழங்கிவிடுமானால் அது ஷிர்க் ஆகும். அத்தேசத்தின் சட்டம் என்பது அல்லாஹ்வால் உருவாக்கப்பட்டதாக இருக்காது, மாறாக அந்த மேல்மட்டத்தின் அதிகாரமே சட்டமாக இருக்கும்.

சுலைமான் நபி கட்டிய பள்ளிவாசலின் [பைத்துல்முகத்தஸின்] இடம் சம்பந்தமான பிரச்சனையில் பி.எல்.ஓவுக்கும், இஸ்ரேல் அரசுக்குமிடையில் அமெரிக்கா முன்மொழிந்த யோசனையில் ஷிர்க்கின் கேவலமான முகம் தென்பட்டது. அமெரிக்காவின் திட்டப்படியே அழும் சுவர் [வெய்லிங் வால்] யூதர்களுக்கு வழங்கப்படுவதாக இருந்தது. சுலைமான் நபி கட்டிய அசல் பள்ளிவாசலின் மிச்சமாகவே அதை யூதர்கள் கருதினர். மறுபக்கம், மஸ்ஜிதுல் அக்ஸாவும் மஸ்ஜிது உமரும் (டோம் ஆஃப் தி ராக்) பாலஸ்தீனர்களுக்கு வழங்கப்பட வேண்டும். மீதமிருக்கும் பள்ளிவாசலின் சுவர் பகுதி இபுராஹீம் நபியின் இறைவனுக்கு வழங்கப்பட வேண்டும் என்று யோசனை

கூறப்பட்டது. உண்மையில் இவ்விஷயத்தில் ஷைத்தானே அமர்ந்து யோசனை கூறியது போலவே தோன்றுகிறது.

அல்லாஹ் ஹராமாக்கி இருப்பதை அரசு ஹலால் ஆக்கும்போது ஷிர்க் நிகழ்கிறது. எதிர்கால பாலஸ்தீன அரசு சூதாட்டத்தையும், லாட்டரியையும் சட்டப்பூர்வமானதாக்கும். மேலும் அரசாங்கமே நடத்தும் லாட்டரியையும் கொண்டு வரும் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. ரிபாவுக்கு (வட்டிக்கு பணம் கொடுப்பதும் வாங்குவதும்) சட்ட அங்கீகாரம் வழங்கும். [காண்க, ரிபா பற்றிய நமது இருநூல்கள்.] மது அருந்துவதையும் சட்டப்பூர்வமானதாக்கும். வேறு வார்த்தைகளில் கூறுவதானால் இஸ்ரேல் தேசமும் மற்ற நாடுகளும் எவ்வாறு ஷிர்க்கைத் தழுவியிருக்கின்றனவோ, அவ்வழியிலேயே பாலஸ்தீன அரசும் ஷிர்க்கைத் தழுவும். பி.எல்.ஓவால் நிறுவப்படும் பாலஸ்தீன அரசு இஸ்ரேல் தேசத்திலும் மற்ற மதச்சார்பற்ற நாடுகளிலும் உள்ளது போல தரம் தாழ்ந்த வாழ்க்கையைத்தான் அதன் மக்களுக்கு வழங்கும்.

சமீபத்தில் சவூதி அரேபியா கொண்டு வந்தது போன்ற எந்தத் திட்டத்திற்கும் முஸ்லிம்கள் ஆதரவளிக்கக்கூடாது. அது மதச்சார்பற்ற இஸ்ரேல் தேசத்திற்கு சட்ட அங்கீகாரம் வழங்கி, ஐம்பது ஆண்டு காலம் தங்கள் சொந்த நாட்டிலேயே முஸ்லிம்களும், கிருஸ்துவர்களும் அடக்குமுறைக்கு ஆளாக்கப்பட்டதை ஏற்றுக் கொள்ளும் யோசனையை முன்மொழிகிறது. மேலும் பைத்துல்முகத்தஸில் இஸ்ரேல் தேசத்தின் மறுபிரதியாக அமைய இருக்கும் பாலஸ்தீன அரசுக்கும் முஸ்லிம்கள் ஆதரவளிக்கக்கூடாது. இந்த நம்முடைய நிலையை ஆதரித்து குர்ஆனிய கண்ணோட்டத்தில் இபுராஹீம் நபியின் மார்க்கமும், இஸ்ரேல் தேசமும் என்ற தலைப்பில் ஒரு நூல் எழுதியிருக்கிறோம்.

தாவூத் நபியாலும் சுலைமான் நபியாலும் உருவாக்கப்பட்ட போற்றத்தக்க தேசம்தான் இஸ்ரேல் வடிவில் மீட்டெடுக்கப்பட்டிருக்கிறது என்று எந்த கேள்வியும் கேட்காமல் ஏற்றுக்கொண்ட யூதர்களுக்கு உண்மையை விளங்க வைக்க இந்நூல் விரும்புகிறது. இந்த இஸ்ரேல் தேசம் யூதர்களை ஏமாற்றியிருக்கிற ஏமாற்றுக்காரனாகும்.

மர்மமான முறையில் கொலை செய்யப்பட்ட, பாலஸ்தீன இஸ்லாமிய அறிஞர், டாக்டர், இஸ்மாயீல் ராஜி ஃபாரூக்கி, இஸ்ரேல் தேசத்தைக் கீழ்வருமாறு விமர்சித்தார்.

காலனித்துவ நிறுவனம் பாவத்தில் கருவுற்றது காலாவதியான தேசியக் கருத்துகளின் அடிப்படையில் அமைக்கப்பட்டது. சொந்த நாட்டு மக்களை அடக்கும் ராணுவ அடக்குமுறை (இஸ்லாமும், இஸ்ரேலின் பிரச்சனைகளும் என்ற அவரின் சிறந்த நூலைக் காண்க.) தங்களின் வீடுகளிலிருந்தும் வெளியேற்றப்பட்ட சொந்த நாட்டு அரபிகள் இபுராஹீம் நபியின் அல்லாஹ்வை வணங்கியவர்கள். பைத்துல்முகத்திஸில் யூதர்களின் ஆதிக்கம் வந்தபோதும்கூட அகதிகளாக வாழும் அரபிகளைத் தங்கள் வீடுகளுக்கு திரும்பி வரும்படி அழைக்கவுமில்லை, அவர்களாகவே குடியேறுவதை அனுமதிக்கவுமில்லை. ஐம்பது ஆண்டுகளைக் கடந்து இன்றும் கூட அந்த அகதிகள் வீடு திரும்புவதை யூதர்கள் பிடிவாதமாக மறுக்கிறார்கள். அதே நேரம் உலகில் எங்கு வாழ்ந்தாலும் யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்கு வந்து குடியேற அழைக்கப்படுகிறார்கள். இது நியாயமான செயல் அல்ல, ஷைத்தானிய செயலாகும். சியோனிஸ இஸ்ரேல் தேசம் இறுதியாக யூதர்களை ஏமாற்றி இஸ்ரேல் தேசத்தால் அடக்குமுறைகளுக் குள்ளாக்கப்பட்ட மக்கள் முன்னிலையிலேயே அவர்களைக் கேவலப்படுத்தும் என நபி (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பு சுட்டிக்காட்டுகிறது.

யாசிர் அரஃபாத்தும் ஒரு ஏமாற்றுக்காரர். வீடு இழந்து ஐம்பது ஆண்டுகள் கொடுமைப்படுத்தப்பட்ட மக்களின் பிரதிநிதியாக அவர் இருக்கவில்லை. அந்த மக்கள் இஸ்ரேலால் பாலஸ்தீனத்தை விட்டு வெளியேற்றப்பட்ட பாலஸ்தீனர்கள். லெபனான் அகதி முகாம்களிலும், மற்ற இடங்களிலும் அவர்கள் ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக வசித்திருக்கிறார்கள். இஸ்ரேல் யூதர்களை ஏமாற்றியது போலவே அரஃபாத் அரபிகளை ஏமாற்றினார். அரஃபாத்தால் ஏமாற்றப்பட்ட அரபிகள்தான், இஸ்ரேல் யூதர்களை கைகழுவும் போது, அவர்களை நேர்கொண்டு தண்டிக்கும் முஸ்லிம் படையில் முன்னணியில் இருப்பார்கள். அந்த முஸ்லிம் படை தெற்கு லெபனானில் தங்கள் போர் வீரத்தைக் காட்டிவிட்டது. தெற்கு லெபனானில் இஸ்ரேலின் பின்வாங்கல், வரவிருக்கும் சதித்திட்டத்திற்கான பீடிகையாக இருக்கலாம். இஸ்ரேல் தேசத்தால் இஸ்மாயீலிகள் மீது கட்டவிழ்த்து விடப்பட்டிருக்கும் இனக் கொடுமைகள், ஏற்கெனவே



Scanned by CamScanner

பைத்துல்முகதஸில் அடக்குமுறையை தீவிரப்படுத்தியிருக்கிறது. அடக்குமுறை தொடர்ந்து அதிகரித்துக்கொண்டே இருக்கிறது.

இந்த இடத்தில் நபி (ஸல்) கூறிய முன்னறிவிப்பை நாம் விளங்க முடியும்.

நிச்சயமாக நீங்கள் யூதர்களோடு சண்டையிட்டு அவர்களைக் கொல்வீர்கள். (இது தொடரும்) கற்கள் பேசும். ஓ முஸ்லிமே! எனக்குப்பின் ஒரு யூதன் மறைந்திருக்கிறான் வந்து கொல் என்று கூறும்.

**(ஸஹீஹ் முஸ்லிம்)**

## அத்தியாயம் 12

# யூதர்கள் பைத்துல் முகத்தஸ் திரும்பியது பற்றிய குர்ஆனின் விளக்கம்

وَقُلِ الْحَمْدُ لِلَّهِ سَيُرِيكُمْ آيَاتِهِ فَتَعْرِفُونَهَا وَمَا رَبُّكَ بِغَافِلٍ عَمَّا تَعْمَلُونَ

புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியது. அவன் தன் அத்தாட்சிகளை அதிசீக்கிரத்தில் உங்களுக்குக் காண்பிப்பான். அது சமயம் அவைகளை நீங்கள் (உண்மையென) அறிந்து கொள்வீர்கள் என்று நபியே நீர் கூறுவீராக, (தற்சமயம்) நீங்கள் செய்து கொண்டிருப்பவை பற்றி உமதிறைவன் பாராமுகமாயில்லை.

**(27:93)**

இரண்டாயிரம் ஆண்டுகளாக இறைவனால் வெளியேற்றப்பட்ட யூதர்கள் பைத்துல் முகத்தஸுக்குத் திரும்பி அதற்கு உரிமை கொண்டாடுகின்ற காலத்தில் நாம் வசிக்கிறோம். ஜெரூசலம் இன்று வளமாக இருக்கிறது. பைத்துல்முகத்தஸ் அமைந்திருக்கும் பகுதி முழுமையையும் இன்று அது ஆதிக்கம் செய்கிறது. கடவுள் இல்லாக் கொள்கையை ஆதரிக்கும் ஜோர்டான், எகிப்து போன்ற நாடுகளின் ஆதரவால் அமைதி உடன்படிக்கை என்ற பெயரில் இஸ்ரேல் நன்மை அடைந்து வருகிறது. இஸ்ரேல், பி.எல்.ஓ. உடன் செய்து கொண்ட எத்தனையோ ஒப்பந்தங்கள் வெற்றிகரமாக பைத்துல் முகத்தஸில் யூத நாடு அமைவதற்கு தோதுவாக அமைந்திருக்கிறது. சவூதி அரேபியாவும் இந்த விஷயத்தில் மிக ரகசியமாகத் தலையிட்டு எச்சரிக்கையாக தீட்டப்பட்ட சவூதி பிளான் மூலம் யூத தேசத்திற்கான அங்கீகாரத்தை வழங்கிவிட்டது.

இதற்கிடையில் மதீனா தன் அதிகாரத்தை இழந்துவிட்டது. மேலும் கிலாஃபத் அழிவதற்கு காரணமாக இருந்த, மதீனாவைத் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்த சவூதி பிரிட்டனின் செல்லப் பிள்ளையாகி விட்டது. அமெரிக்கா வல்லரசு பட்டத்தை பிரிட்டனிட மிருந்து பறித்தபோது சவூதி அமெரிக்காவின் செல்லப்பிள்ளை ஆவதற்கும் தயங்கவில்லை. ஆரம்பத்திலிருந்தே இஸ்ரேலைப்போல் சவூதியும் தான் வாழ்வதற்கு முதலில் பிரிட்டனையும் பிறகு அமெரிக்கா வையும் சார்ந்தே இருக்கவேண்டியதாயிற்று.

உஸ்மானிய இஸ்லாமிய அரசிடமிருந்து ஹிஜாஸ் பகுதியின் ஆதிக்கத்தை பிரிட்டனுக்கு தாரைவார்த்துக் கொடுப்பதற்காக சவூதி அரேபியா மாதத்திற்கு 5000 ஸ்டெர்லிங் பவுண்டு பெற 1916ல் அன்றைய மன்னர் அப்துல் அஜூஸ் ஏற்றுக்கொண்டார். அதிலிருந்து பிரிட்டனின் நேச நாடு என்ற தகுதியில் இருக்கும் சவூதி வஹ்ஹாபிய கூட்டணிதான் சவூதி தேசத்தின் அரசியல், மார்க்க விவகாரத்திற்கு ஆதாரமாக விளங்குகிறது. வஹ்ஹாபிய மார்க்கச் சிந்தனை இந்த நேச நாட்டு அந்தஸ்தை கிருஸ்தவர்களுடனும் யூதர்களுடனும் கைகோத்துக்கொள்வதற்கு வசதியாக பயன்படுத்திக்கொண்டது. ஏனென்றால் கிருஸ்துவர்களும் யூதர்களும் முஸ்லிம்களை விட தனக்கு நெருக்கமானவர்கள் என அது கருதுகிறது. வஹ்ஹாபி அல்லாத முஸ்லிம்கள் அனைவரும் ஷிர்க் வைப்பதால் அவர்கள் உண்மை முஸ்லிகள் அல்லர் என்ற எண்ணம் வஹ்ஹாபிகளுக்கு இருக்கிறது. (காண்க நமது நூல்: கிலாஃபத், ஹிஜாஸ், மற்றும் சவூதி தேசம்)

இஸ்ரேல் தேசமும் இதே முறையில்தான் மேற்கின் நேச நாடு என்ற அந்தஸ்தைப் பெற்றது. ஆனால் இஸ்ரேல், சவூதி ஆகிய இரு நேச நாடுகளுக்கும் அடிப்படையில் வித்தியாசங்கள் உள்ளன. இஸ்ரேல் தேசம் இந்த நேச நாட்டு உறவை ஒரு கட்டத்தில் முறித்துகொள்வது மட்டுமல்ல, பிரிட்டனும் அமெரிக்காவும் அடைந்த வல்லரசு பட்டத்தையே வெல்லப்போகிறது. அப்படி நடக்கும்போது சவூதி அரேபியா இஸ்ரேலின் நேச நாடாக மாறிவிடும். அச்சமயம் ஜெரூசலம் ஜொலிக்கும், மதீனா காய்ந்துகிடக்கும். (சவூதி முழுமையாக தன்னை இஸ்ரேலிடம் ஒப்படைத்துக்கொள்ளும்போது இது நடைபெறும்.)

இப்படி ஒரு நாள் வரும் என நபி (ஸல்) முன்னறிவிப்பு செய்திருக்கிறார்கள், ஆனால் அந்த நாள் இஸ்ரேலுக்கு வாக்களிக்கப்பட்ட துரதிஷ்டமான நாளாக இருக்கும்.

முஆத் இப்னு ஜபல் (ரலி) அறிவிக்கிறார்கள், மதீனா (இன்றிருக்கும் சவூதி அரேபியாவின் நவீன மதீனா) அழிவிலிருக்கும்போதுதான் ஜெரூசலம் செழிப்பாகும் என நபி (ஸல்) கூறினார்கள். அந்த மகா யுத்தம் நடக்கும்போது தான் மதீனா அழியும், போரின் முடிவு கான்ஸ்டாண்டிநோபிலின் வெற்றியாக இருக்கும், தஜ்ஜால் வெளிப்படும்போதுதான் கான்ஸ்டாண்டிநோபில் வெற்றி பெறும். நபி (ஸல்) முஆத் (ரலி) அவர்களின் தொடையையோ, தோளையோ தட்டி நீ இங்கு அமர்ந்திருப்பது எவ்வாறு நிஜமானதோ அதுபோல இதுவும் நிஜமாக நடக்கும் என்று கூறினார்கள்.

**(சுனன், அபீ தாவூத்**

அது அமைந்திருக்கிற அனைத்து நிலப்பரப்புகளையு தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்து வளமடைந்திருக்கும் ஜெரூசல உள்ளபடியே மேலே கூறப்பட்ட முன்னறிவிப்பை பூர்த்தியாக்க இருக்கிறது. ஏற்கெனவே அமெரிக்க அதிபர், ஐ.நா-வின் பாது காப்புமன்றம் ஆகியோர் பாலஸ்தீனத்திலிருந்து படைகளை திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்று கோரிக்கை வைத்ததை இஸ்ரேல் வெற்றிகரமாக மறுத்துள்ளது. இது பாலஸ்தீன மனித வெடி குண்டுகளுக்கு இஸ்ரேல் பதிலடி கொடுத்தபிறகு நிகழ்ந்தது (அவர்கள் ஷுஹதாக்கள், மனித வெடிகுண்டுகள் அல்லர்) இ இஸ்ரேல் எப்போதும் நடத்திராத அளவு பெரும் போராக உருவாகு

இது அனைவரும் எதிர்பார்த்தது தான். (அமெரிக்க அதிபரைத் தவிர) அந்த போர் இஸ்ரேல் தேசத்திற்கு பெருமளவு நிலப்பரப்புகளை சேர்த்துக்கொடுக்கும். மேலே குறிப்பிடப்பட்ட நபி (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பு அப்போது நன்கு புரியும்.

எதிர்பார்க்கப்பட்ட அமெரிக்க பொருளாதாரத்தின் வீழ்ச்சி, அரப் நிலத்தை விட்டு விலகுமாறு வைக்கப்பட்ட கோரிக்கை இஸ்ரேலால் நிராகரிக்கப்பட்டது ஆகியவை நபி (ஸல்) கூறிய முன்னறிவிப்பை உண்மைப்படுத்திவிட்டன. அது போலவே இஸ்லாத்தின் இதயமாகக் கருதப்படும் மதீனாவை உள்ளடக்கிய சவூதி நேசநாட்டு அந்தஸ்தை அடைந்தபோதே மதீனாவின் அழிவும் நிகழ்ந்துவிட்டது. இஸ்ரேல் வல்லரசு அந்தஸ்தை அடைந்து சவூதி அதன் நேசநாட்டு நிலைப்பாட்டை எடுக்கும்போது அந்த முன்னறிவிப்பு பூரணமாக நிறைவேறும். இஸ்ரேல் துருக்கி படையுடன் இணைந்து நடத்தவுள்ள அந்த மகாயுத்தத்தின் விளிம்பில் முஸ்லிம்கள் நிற்கின்றனர் என்பதே அந்த முன்னறிவிப்பு நிறைவேற்றப்படுவதற்கான அறிகுறியாகும். தற்பொழுது இஸ்ரேலின் கருவியாக இருக்கும் துருக்கியுடனான போரைப்பற்றி நபி (ஸல்) முன்னறிவித்திருக்கிறார்கள்.

**அபூ ஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்,**

நீங்கள் ரோமத்தினாலான காலணி அணியும் மக்களுடன் சண்டையிடாதவரை உலக அழிவு நாள் ஏற்படாது, சிறிய கண்கள், சிவந்த முகம், சப்பை மூக்கு, தட்டையான கேடயத்தைப் போல முகம் கொண்ட துருக்கியர்களுடன் சண்டையிடாதவரை உலக அழிவுநாள் ஏற்படாது, பொறுப்புகளை வெறுக்கும் மக்கள் சிறப்பானவர்களாக கருதப்படுவார்கள், இவ்வாறு அவர்கள் மக்களை ஆளும் ஆட்சியாளர்களாவார்கள். அம்மக்கள் வெவ்வேறான இயல்புகளைக் கொண்டவர்கள், இஸ்லாம் வருவதற்கு முன்னுள்ள காலகட்டத்தில் சிறந்தது இஸ்லாத்திலும் சிறந்ததாகும், ஒரு காலம் வரும் உங்கள் குடும்பத்தையும், உங்கள் பொருளாதாரத்தையும் விட என்னைக் காண்பதை விரும்புவீர்.

**(ஸஹீஹ், புகாரி)**

துருக்கி சிரியாவின் மீது தாக்குதல் தொடுக்கும்போது அந்தப் போர் ஆரம்பிக்கலாம், அந்தப் பகுதியில் பெரும் கலகத்தை

தூண்டிவிட இஸ்ரேல் இதைப் பயன்படுத்திக்கொள்ளும், இதன் முடிவில் இஸ்ரேல் தேசம் உலகின் வல்லரசாக உருவெடுக்கும். இந்தத் தருணத்தில்தான் தஜ்ஜால் வெளிப்படுவான்.

அவனுடைய ஒரு நாள் என்பது உங்களுடைய நாட்களைப் போன்றிருக்கும் என்ற நிலையிலிருப்பான். அவன் நமது நேரக் கணக்கிற்கு வந்து இறுதியில் நமது உலகத்திற்குள் வந்துவிடுவான். இஸ்ரேல் தேசத்தின் ஆட்சியாளராக ஜெரூசலத்தில் வருவான் என்பது உறுதி. எப்பொழுது போலி மஸீஹ் தஜ்ஜால் தோன்றுவானோ அதே நேரத்தில்தான் உண்மை மஸீஹ் ஈஸா நபி (அலை) அவர்களும் திரும்புவார்கள். அவர்கள் தஜ்ஜாலைக் கொல்வார்கள், முஸ்லிம் படையினர் இஸ்ரேல் தேசத்தை அழிப்பார்கள்.

குர்ஆன் யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்புவார்கள் என்று முன்னறிவித்து அதற்கான அடையாளங்களையும் கூறியிருக் கிறது. ஜெரூசலத்தின் எதிர்காலம் குறித்த ஏராளமான குர்ஆன் பிரகடனங்களும், எண்ணிலடங்கா நபி (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பு களும் இருக்கின்றன. குர்ஆனின் அந்த பிரகடனங்கள் என்ன? மேலும் நபி (ஸல்) அவர்களின் முன்னறிவிப்புகள் என்ன? ஜெரூசலம் குறித்து திருக்குர்ஆனின் கருத்தை முழுமையாக தெளிவுபடுத்தும் கீழ்வரும் பத்து விஷயங்களையும் வாசகர்கள் கவனமாக வாசிக்க வேண்டும்.

ஒரு நாள் ஈஸா நபி (அலை) அவர்கள் திரும்பி வருவார்கள் என குர்ஆனும், ஹதீஸும் உறுதியளிக்கின்றன. அவர் திரும்பும் நேரத்தில் அவரை உண்மை மஸீஹாக ஏற்றுக்கொள்வதைத் தவிர யூதர்களுக்கு வேறு வழி இருக்காது. பிறகு அவர்கள் பரிதாபமாக மரணிப்பார்கள். பரிதாபம் என்னவெனில் இதுவரை எதை உண்மையென பிடிவாத மாகவும், ஆக்ரோஷமாகவும் நம்பிவந்தார்களோ அது பொய் என்றும், ஈஸா நபியும், முஹம்மது நபியும் கொண்டுவந்தது தான் உண்மை என்றும் அறிந்தபிறகு மரணிப்பது தான். இந்த உண்மையை அறிந்த பின் மரணித்து நரகம் செல்வார்கள்.

ஈஸா நபியைச் சிலுவையில் அறைந்ததாக அவர்கள் மார் தட்டிக்கொண்டபின் அல்லாஹ் அவர்களை பைத்துல்முகத் திஸிலிருந்து வெளியேற்றினான். இந்த வெளியேற்றம் முன்பு அவர்கள் பாபிலோனுக்கு அடிமைகளாக பிடித்துச் சென்றதைவிட முற்றிலும்

வித்தியாசமானது. இம்முறை அவர்கள் உலகம் முழுவதும் சிதறித் துண்டு துண்டாக வாழ்ந்தார்கள். பிறகு குர்ஆன் ஜெரூலசத்தின் எதிர்காலத்தைப் பற்றியும், யூதர்களைப் பற்றியுமான செய்திகளைக் கீழ்வருமாறு வெளியிடுகிறது:

- உலகம் முழுவதும் சிதறி யூதர்கள் அகதிகளாக வாழ்ந்தது.
- பைத்துல்முகத்திஸிற்கு திரும்பி உரிமைகோர யூதர்கள் தடை செய்யப்பட்டது.
- யூதர்கள் உம்மி (எழுத்தறிவில்லாத) நபியாக இருக்கும் முஹம்மது நபி (ஸல்) அவர்களை ஏற்றுக்கொண்டால் கிருபையுள்ள அல்லாஹ்வின் மன்னிப்பைப் பெறுகின்ற வாய்ப்பை பெற்றிருப்பது.
- உலக இறுதி நாளின்போது பைத்துல்முகத்திஸிற்கு அல்லாஹ்வால் கட்டளையிடப்பட்ட யூதர்களின் திரும்புதல்.
- யூதர்கள் பைத்துல்முகத்தஸிற்குத் திரும்புவதற்கு யஃஜூஜ், மஃஜூஜ் காரணமாயிருப்பது.
- யூதர்களுக்கு இறைத் தண்டனை வரலாம் என்ற எச்சரிக்கை.
- யூதர்களுக்கு என்றுமில்லாத மோசமான தண்டனையின் எச்சரிக்கை.
- இறுதித்தண்டனை வரும்போது அவர்களின் ஆன்மீக பார்வை அற்றுப்போதல்.
- பிர்அவ்னுடைய உடல் கண்டுபிடிக்கப்பட்டதும் அவனைப் போன்றே யூதர்களும் அவதியுறுவார்கள் என்று அது உணர்த்தியதும்.

ஈஸா நபி திரும்பிவரும்போது அவரை ஏற்றுக்கொள்வதைத் தவிர வேறு வழி இல்லாமல் போவதும், நரக நெருப்பை விட்டும் காப்பாற்ற காலம் கடந்துபோயிருப்பதும்.

## 1. உலகம் முழுவதும் யூதர்கள் சிதறுண்டு அகதிகளாக வாழ்ந்தது

யூதர்கள் ஈஸா நபியை மஸீஹாக ஏற்க மறுத்து அவரைக் கொல்லவும் முயன்றபோது அல்லாஹ் அவர்களை பைத்துல்முகத்தஸை விட்டும் வெளியேற்றினான், இந்த வெளியேற்றம் முந்தியதைவிட வித்தியாசமானதாகும், ஏனெனில் முந்திய வெளியேற்றத்தில் அவர்கள் அனைவரும் பாபிலோன் எனும் ஒரே இடத்தில் வாழ்ந்தார்கள். இம் முறை வெளியேற்றப்பட்டபோது வித்தியாசமான அகதி வாழ்க்கையை அல்லாஹ் அவர்களுக்கு ஏற்படுத்தினான்.

அவர்களை, இப்புவியில் பல பிரிவுகளாகப் பிரித்து, (பூமியின் பல பாகங்களிலும் சிதறடித்து) விட்டோம்.

இரண்டாயிரம் ஆண்டுகளாக யூதர்கள் உலகம் முழுவதும் பிரிந்து வாழ்ந்தபோது அல்லாஹ் கூறிய இந்த குர்ஆனின் கருத்து நிதர்சனமானது. இந்த நீண்ட காலகட்டத்தில் அவர்கள் எமன், மோரோக்கோ, இராக், ஈரான், எகிப்து, ஜோர்டான், லிபியா, எத்தியோபியா, அரேபியா, சிரியா, துர்க்கி போன்ற நாடுகளில் வசித்தார்கள்.

இப்படி பரிதாபமாக இரண்டாயிரம் ஆண்டுகள் அகதிகளாக வாழ நேர்ந்தது யூதர்களின் மீது இறைவனின் கோபம், தண்டனைக்குமான அறிகுறியாகும், பல யூதர்கள் அதை உணர்ந்திருக்கிறார்கள்.

## 2. யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்ப தடை விதிக்கப்பட்டது

பைத்துல்முகத்தஸிலிருந்து யூதர்களை வெளியேற்றியபின் அங்கு மீண்டும் நுழைய அவர்களுக்குத் தடை விதித்துவிட்டான். (சுற்றுலாப் பயணிகளாக அங்கு வரமுடிந்தது, உரிமை கோரி வரமுடியவில்லை) இந்தத் தடை வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்ததாகவும், இரண்டாயிரம் ஆண்டுகளாக அனைவரும் அறியும்படி அது நிலையாக இருந்தது. பின்வரும் குர்ஆன் வசனம் அதை நடைமுறைப்படுத்தியது.

எவ்வூரார்களை நாம் அழித்துவிட்டோமோ அவர்கள் (அவ்வூர் மக்கள்) நிச்சயமாக திரும்பவே மாட்டார்கள் என விதிக்கப்பட்டுள்ளது.

وَحَرَامٌ عَلَى قَرْيَةٍ أَهْلَكْنَاهَا أَنَّهُمْ لَا يَرْجِعُونَ

(கீழே யஃஜூஜ், மஃஜூஜ் திரும்புதல் யூதர்கள் பைத்துல் முகத்தஸுக்குத் திரும்புவதோடு சம்பந்தப்படுத்தப்பட்டிருக்கிறது. அத்தோடு அத்தியாயம் 10ல் அந்த ஊர் என்பது ஜெரூசலம்தான் என விளக்கப்பட்டுள்ளது.)

பைத்துல்முகத்தஸுக்கு யூதர்கள் திரும்ப முடியாமல் செய்திருக்கும் இறைத்தடையானது யூதர்கள் மீது அல்லாஹ்வின் கோபமாகவும் தண்டனையாகவும் இருக்கிறது. மேலும் இது அவர்கள் அல்லாஹ்வுக்கு உகந்தவர்களாக இருக்கவுமில்லை என்பதையும் தெள்ளத்தெளிவாக்குகிறது.

# 3. யூதர்கள் நபி (ஸல்) அவர்களை ஏற்றுக்கொண்டால் கிருபையுள்ள அல்லாஹ்வின் மன்னிப்பை பெறும் வாய்ப்பு

பைத்துல்முகத்தஸிலிருந்து யூதர்கள் வெளியேற்றப்பட்டு, மீண்டும் அங்கு நுழைய தடை விதிக்கப்பட்ட பிறகும் அவர்களுக்கு மன்னிப்பின் வாசல் திறந்திருப்பதாகவே குர்ஆன் கூறுகிறது.

உங்களுடைய இறைவன் உங்களை மன்னிக்கக்கூடும். (17:8)

யூதர்கள் நல்வழியைத்தேர்ந்தெடுத்து அல்லாஹ்விடம் மன்னிப்புக்கோரி இபுராஹீம் நபியின் மார்க்கத்திற்கு திரும்புவதற்கு அல்லாஹ் அவர்களுக்கு நீண்ட கால அவகாசத்தைக் கொடுத்திருந்தான். ஆனால் மன்னிப்பு ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு ஒரே ஒரு வாசலைத்தான் வைத்திருந்தான். ஏற்கெனவே தவ்ராத்தையும் இன்ஜீலையும் பெற்ற, ஈஸா நபியைச் சிலுவையில் அறைய முயன்ற, அதே இஸ்ரவேலர்களுக்குக் கீழ்வருமாறு கூறி மன்னிப்பின் பாதையின்பால் அழைக்கிறது.

الَّذِينَ يَتَّبِعُونَ الرَّسُولَ النَّبِيَّ الْأُمِّيَّ الَّذِي يَجِدُونَهُ مَكْتُوبًا عِنْدَهُمْ فِي التَّوْرَاةِ وَالْإِنْجِيلِ
يَأْمُرُهُمْ بِالْمَعْرُوفِ وَيَنْهَاهُمْ عَنِ الْمُنْكَرِ وَيُحِلُّ لَهُمُ الطَّيِّبَاتِ وَيُحَرِّمُ عَلَيْهِمُ الْخَبَائِثَ
وَيُحَرِّمُ عَلَيْهِمُ الْخَبَائِثَ وَيَضَعُ عَنْهُمْ إِصْرَهُمْ وَالْأَغْلَالَ الَّتِي كَانَتْ عَلَيْهِمْ فَالَّذِينَ آمَنُوا
بِهِ وَعَزَّرُوهُ وَنَصَرُوهُ وَاتَّبَعُوا النُّورَ الَّذِي أُنْزِلَ مَعَهُ أُولَئِكَ هُمُ الْمُفْلِحُونَ

(ஆகவே, அவர்களில்) எவர்கள் எழுத்தாற்றல் அற்ற தூதராகிய இந்த நபியைப் பின்பற்றுகிறார்களோ அவர்கள், தங்களிடமுள்ள தவ்ராத்திலும், இன்ஜீலிலும், இவரைப் பற்றி எழுதப்பட்டிருப்பதைக் காண்பார்கள். (இத்தூதரோ) அவர்களை நன்மையான காரியங்களை(ச்செய்யும்படி) ஏவி, பாவமான காரியங்களிலிருந்து அவர்களை விலக்குவார். நல்லவைகளையே அவர்களுக்கு ஆகுமாக்கி வைப்பார், கெட்டவற்றை அவர்களுக்குத் தடுத்துவிடுவார். அன்றி, அவர்களுடைய பளுவை அவர்களை விட்டுப் போக்கி, அவர்கள் மீதிருந்த விலங்குகளையும் நீக்கிவிடுவார். ஆகவே எவர்கள் அவரை விசுவாசித்து அவரைப் பலப்படுத்தி, அவருக்கு உதவி செய்து, அவர் மீது அருளப்பட்ட ஒளிமிக்க (இவ்வேதத்)தைப் பின்பற்றுகிறார்களோ

அவர்கள்தாம் சித்தி பெற்றவர்கள்.

(அல்குர்ஆன், 7:157)

இவ்வாறு இறுதித்தூதரை ஏற்று நம்பிக்கை கொண்டு பின்பற்றினால் மன்னிப்பைப் பெறமுடியும்.

இஸ்ரவேலர்கள் மன்னிப்பைப் பெறுவதற்காக வழங்கப்பட்ட காலக்கெடு முடிந்துவிட்டது என்பதற்கான ஏராளமான சான்றுகள் உள்ளன. அந்தச் சான்றுகளில் ஒன்று தான் தஜ்ஜால், யஃஜூஜ், மஃஜூஜின் வெளிப்பாடு. நபி (ஸல்) அவர்கள் காலத்திலேயே இவ்விருவர் களின் வெளிப்பாடும் நிகழ்ந்துவிட்டது. நபி (ஸல்) மதீனாவில் 17 மாதங்கள் வசித்தபிறகுதான் நிகழ்ந்தது, இக்காலகட்டத்தில் யூதர்கள் நபிகளையும் குர்ஆனையும் மறுத்து இஸ்லாத்தை அழிப்பதற்குச் சதித்திட்டம் தீட்ட ஆரம்பித்துவிட்டார்கள். இந்தத் தருணத்தில்தான் அல்லாஹ் கஃபாவையே கிப்லாவாக ஆக்கிக்கொள்ளுமாறு கட்டளை யிட்டான். ஜெருசலத்திலிருந்து மக்காவுக்குக் கிப்லா மாற்றப்பட்டது, யூதர்கள் மன்னிப்பைப் பெறுவதற்காக இருந்த ஒரே ஒரு வாசலும் அடைக்கப்பட்டுவிட்டது என்பதைச் சுட்டிக்காட்டுகிறது. இறுதிக் காலம் தொடங்கிவிட்டது, யூதர்களின் தண்டனையும் தவிர்க்க முடியாது. இறுதிக் காலம் தொடங்கி யூதர்களின் மன்னிப்பின் வாசலும் அடைக்கப்பட்ட பிறகும் அவர்களின் தண்டனைக்காக சில காலம் காத்திருக்க வேண்டியிருக்கிறது. நிச்சயமாக அந்தத் தண்டனை நேர்த்தியான முறையில் வரும். அவர்களின் தண்டனைக்கான நேரம் நெருங்குவதற்கு உண்மையில் யூதர்கள் முஸ்லிம்களிடம் தஞ்சம் புகுவார்கள்.

ضُرِبَتْ عَلَيْهِمُ الذِّلَّةُ أَيْنَ مَا ثُقِفُوا إِلَّا بِحَبْلٍ مِنَ اللَّهِ وَحَبْلٍ مِنَ النَّاسِ وَبَاءُوا بِغَضَبٍ مِنَ
اللَّهِ وَضُرِبَتْ عَلَيْهِمُ الْمَسْكَنَةُ ذَلِكَ بِأَنَّهُمْ كَانُوا يَكْفُرُونَ بِآيَاتِ اللَّهِ وَيَقْتُلُونَ الْأَنْبِيَاءَ
بِغَيْرِ حَقٍّ ذَلِكَ بِمَا عَصَوْا وَكَانُوا يَعْتَدُونَ

அவர்கள் எங்கிருந்த போதிலும் அவர்கள் மீது இழி விதிக்கப்பட்டுவிட்டது;

அல்லாஹ்வின் உடன்படிக்கையைக்கொண்டும், (விசுவா கொண்ட) மனிதர்களின் உடன்படிக்கையைக் கொண்டுமே த (அவர்கள் தப்பித்துக் கொள்ளமுடியாது.) அல்லாஹ்வின் கோ திலும் அவர்கள் சிக்கிகொண்டார்கள், இழிவும் அவர்கள் மீது விதி

பட்டுவிட்டது. இதன் காரணம்: நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்வின் வசனங்களை நிராகரித்துக்கொண்டும், நியாயமின்றி நபிமார்களைக் கொலைசெய்து கொண்டும் இருந்ததுதான். (தவிர) அவர்கள் பாவம் செய்துகொண்டிருந்ததும், வரம்பு மீறி வந்ததும் இதற்குக் காரண மாகும்.

(அல்குர்ஆன், 3:112)

பிறகு அல்லாஹ்வின் இறுதித் தண்டனை வரும்போது அதற்கான அறிகுறிகளும் வரும். மூஸா நபியையும் இஸ்ரவேலர்களையும் பின்தொடர்ந்து சென்று கடலில் மூழ்கிய பிர்அவ்னின் உடல் கண்டெடுக் கப்பட்டிருப்பதும் அந்த அறிகுறிகளில் ஒன்றாகும். துரதிஷ்டவசமாக, பிர்அவ்னின் உடல் கண்டுபிடிக்கப்பட்டு நீண்ட நாட்களான பிறகும் யூதர்கள் பாவமன்னிப்பின் வாய்ப்பைப் பயன்படுத்தி, நபி (ஸல்) அவர்களையும், குர்ஆனையும் ஏற்றுக்கொள்ளவில்லை. இப்பொழுது தண்டனையிலிருந்து தப்புவதற்கான காலம் கடந்துவிட்டது.

هَلْ يَنظُرُونَ إِلَّا أَنْ تَأْتِيَهُمُ الْمَلَائِكَةُ أَوْ يَأْتِيَ رَبُّكَ أَوْ يَأْتِيَ بَعْضُ آيَاتِ رَبِّكَ يَوْمَ يَأْتِي بَعْضُ آيَاتِ رَبِّكَ لَا يَنفَعُ نَفْسًا إِيمَانُهَا لَمْ تَكُنْ آمَنَتْ مِنْ قَبْلُ أَوْ كَسَبَتْ فِي إِيمَانِهَا خَيْرًا قُلِ انتَظِرُوا إِنَّا مُنتَظِرُونَ ﴿١٥٨﴾

(உயிர் பறிக்க) மலக்குகள் அவர்களிடம் வருவதையோ, அல்லது உம் இறைவனின் தண்டனை வருவதையோ அல்லது உம்முடைய இறைவனின் அத்தாட்சிகளில் சில வருவதையோ அன்றி, (வெறெதையும்) அவர்கள் எதிர்பார்க்கின்றனரா? உம் இறைவனின் சில அத்தாட்சிகள் வரும் (இறுதி) நாள் அன்று, முன்னர் விசுவாசங்கொள்ளாதிருந்து, அல்லது விசுவாசங்கொண்டிருந்தும் யாதொரு நன்மையும் செய்யாதிருந்துவிட்டு, (அந்நாளில்) அவர்கள் கொள்ளும் விசுவாசம் யாதொரு பலனையும் தராது, எனவே நீங்களும் எதிர்பாருங்கள்; நிச்சயமாக நாங்களும் எதிர்பார்க்கிறோம் என்று (நபியே) நீர் கூறுவீராக!

(6:158)

# 4. இறுதிகாலத்தில் யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்புவார்கள் என்ற இறை கட்டளை

இறுதிக் காலத்தில் அல்லாஹ்வே யூதர்களை பைத்துல்முகத்தஸிற்குத் திருப்பிக் கொண்டு வருவான் என்று கூறுகிறான். யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பி அதற்கு உரிமைகொண்டாடுவதில் வெற்றி பெற்றிருப்பது தாங்கள் உண்மையில் இருப்பதை நிருபிப்பதாக நம்பி ஏமாற்றப்படுவார்கள். பைத்துல்முகத்தஸுக்குத் திரும்புவார்கள் என்ற முன்னறிவிப்பு நிறைவேற்றப்பட்டிருக்கிறது. அங்கு நிறுவப்பட்டிருக்கும் ஆட்சி மதச்சார்பற்றதாகவும், தேசியமானதாகவும் இருந்தாலும் சரியே!

وَقُلْنَا مِنْ بَعْدِهِ لِبَنِي إِسْرَائِيلَ اسْكُنُوا الْأَرْضَ فَإِذَا جَاءَ وَعْدُ الْآخِرَةِ جِئْنَا بِكُمْ لَفِيفًا

இதன் பின்னர், இஸ்ராயீலின் சந்ததிகளுக்கு நாம் கூறினோம்; நீங்கள் இப்பூமியில் வசித்திருங்கள்; வாக்குறுதி வந்தால் (இறுதி காலம் வந்தால்) உங்கள் யாவரையும் நாம் ஒன்று சேர்ப்போம், (பைத்துல்முகத்திஸுக்கு கொண்டு வருவோம்).

**(அல்குர்ஆன், 17:104)**

இரண்டாயிரம் ஆண்டுகளாக உலகம் முழுவதும் சிதறி வாழ்ந்ததால் அவர்கள் பலதரப்பட்ட இனமக்களாக வாழ்ந்தார்கள், அல்லாஹ் குர்ஆனில் லஃபீஃப் என்ற வார்த்தை பலதரப்பட்ட மக்களை ஒன்று சேர்ப்பதற்குச் சொல்லப்படும். இது துல்லியமாக இன்று இஸ்ரேலில் வாழும் பலதரப்பட்ட மக்களை படம்பிடித்துக் காட்டுவதாகும். இவர்கள் பல நிறம், பல மொழி, பல தரப்பட்ட உடையணிபவர்களாக, பல விதமான உணவு உண்பவர்களாக, பல்வேறு வணக்க வழிபாடுகளில் ஈடுபடுபவர்களாக, பல வித தெய்வக் கொள்கையுடையவர்களாக இருந்தது அரபு நாடு உட்பட பல நாடுகளில் நீண்டகாலம் வாழநேர்ந்ததேயாகும். ஆனால் இதிலெல்லாம் அவர்கள் இனரீதியாக வேறுபட்டிருப்பதுதான் ஆச்சரியமானது. குர்ஆனின் முன்னறிவிப்பு நிறைவேறியதில் இந்த விஷயம் மிகக் குறிப்பானது. நவீன இஸ்ரேல் மக்களில் நீலக்கண்களும், பொன்னிற ரோமமும் கொண்ட அசல் ஐரோப்பிய மக்கள்தான் அதிகம், இவர்கள் மரபணுரீதியாக உலகிலுள்ள மற்ற அனைத்து மக்களிடமிருந்தும்

வேறுபடுகிறார்கள். இபுராஹீம் நபியின் வழித்தோன்றலில், இஸ்ஹாக் நபி, யூசுப் நபி ஆகியோரின் மரபில் அங்கு வாழ்ந்த உள்ளூர் மக்களின் அடையாளம் காற்றில் பறக்கவிடப்பட்டுள்ளது.

இறுதிக் காலத்தில் யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்குத் திருப்பிக் கொண்டுவரப்படுவார்கள் என்ற குர்ஆனின் முன்னறிவிப்பு நிறைவேற்றப்பட்டதற்கான அறிகுறியோ, அர்த்தமோ என்ன?

## 5. யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்கு திரும்புவதற்கு யஃஜூஜ், மஃஜூஜ் தான் காரணம்

யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பும்போது அவர்களின் இறைத்தண்டனை நிகழ்வதுபற்றி குர்ஆன் மூன்று இடங்களில் ஒளிவுமறைவின்றிக் கூறுகிறது. இங்கு பிரச்சனை என்னவெனில் குர்ஆனின் வசனங்களை, குறிப்பாக இறுதிக் காலம் சம்பந்தமான செய்திகளை, ஆன்மீக பார்வையின்றி ஒரு கண்ணில் பார்ப்பதாகும். அந்த வசனங்களின் அர்த்தம் விளங்க வேண்டுமெனில் ஆன்மீக பார்வை அவசியமாகும். அம்மூன்று வசனங்களில் இரண்டு இங்கே.

وَحَرَامٌ عَلَى قَرْيَةٍ أَهْلَكْنَاهَا أَنَّهُمْ لَا يَرْجِعُونَ

حَتَّى إِذَا فُتِحَتْ يَأْجُوجُ وَمَأْجُوجُ وَهُمْ مِنْ كُلِّ حَدَبٍ يَنْسِلُونَ

எவ்வூரார்களை நாம் அழித்துவிட்டோமோ அவர்கள் (அவ்வூர் மக்கள்) நிச்சயமாக திரும்பவே மாட்டார்கள், யஃஜூஜ், மஃஜூஜூக்கு வழி திறக்கப்பட்டால், அவர்கள் ஒவ்வொரு மேட்டிலிருந்தும் இறங்கிப் பரவிவிடுவார்கள்.

**(அல்குர்ஆன், 21:95,96)**

அவ்வூர் என்பது எது என்று இங்குத் தெளிவாக குறிப்பிடப்படவில்லை, அது ஜெரூசலத்தைத் தவிர வேறேதுவும் இருக்கமுடியாது என்பது தெளிவு. கீழ்வரும் வசனத்தில் மறைமுகமான ஒரு குறிப்பு இருக்கிறது. மதீனா பாதிரிகளின் தூண்டுதலால் குறைஷிகள் நபி (ஸல்) அவர்களிடம் மூன்று வினாக்கள் தொடுத்தார்கள். இவ்வினாக்

களுக்கு பதிலளித்தால் தான் அவரை உண்மையான நபியாக ஏற்றுக்கொள்வதாகக் கூறினார்கள். அல்லாஹ் மூன்று வினாக்களுக்கும் குர்ஆனில் பதிலளித்தான், முதல் இரண்டு வினாக்களுக்கு - குகையில் தஞ்சம் புகுந்த இளைஞர்கள், பூமியின் இரு எல்லைகளுக்கு பயணம் செய்த மகாபயணி- **(சூரா அல்கஹ்ஃபு, 18:88-98)** பற்றி கஹ்ஃபு அத்தியாயத்தில் பதிலளித்தான், மூன்றாவது, ரூஹ் என்றால் என்ன என்ற வினாவுக்கு சூரா பனீஇஸ்ராயீலில் பதிலளித்தான். இந்த ஆச்சரியமான அமைப்பு, குர்ஆனுக்கு விளக்கமளிக்கிற ஒரு கோட்பாடு உருவாவதற்கு அந்த கோட்பாடு இவ்விரு அத்தியாயங்களையும் ஜோடியாக ஆக்கி இருக்கிறது. இவ்வாறு அல்லாஹ் ஜோடியாக அமைத்த அத்தியாயங்களைப் பற்றி டாக்டர். இஸ்ரார் அஹ்மது அவர்கள் ஆய்வு மேற்கொண்டுள்ளார்கள்.

இவ்வாறு குகைத்தோழர்களின் இடத்தையும், துல்கர்னைன், யஃஜூஜ், மஃஜூஜ் ஆகியோரது இடங்களையும், அவ்வூர் எது என்பது பற்றியும் தெரிந்துகொள்தற்காக அத்தியாயம் பனீ இஸ்ராயீல் உடைய துணையை நாம் நாட வேண்டும். அப்படி இந்த அத்தியாயத்திற்குள் வந்தால் இது ஊர் என்ற பெயரில் ஜெருசலம் பற்றித்தான் கூறிப்பட்டுள்ளது.

நவ்வாஸ் இப்னு சம்ஆன் (ரலி) அறிவிக்கிறார்கள்.

.......... அப்படிப்பட்ட சூழ்நிலையில் அல்லாஹ் ஈஸா (அலை) அவர்களுக்கு, என் அடியார்களில் அவர்களை எதிர்த்துப்போரிட முடியாத மக்களை வெளியாக்குவேன், இம்மக்களைப் பாதுகாப்பாக தூர் மலைக்கு அழைத்துச் செல்லுங்கள் என அறிவிப்பான். பிறகு அல்லாஹ் யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தை அனுப்புவான், அவர்கள் ஒவ்வொரு மேடுகளிலிருந்தும் இறங்குவார்கள். அவர்களில் முதல் பிரிவினர் திப்ரியஸை (கலீலீ கடல்) கடப்பார்கள், அதிலிருந்து அவர்கள் நீர் அருந்துவார்கள். அவர்களின் கடைசி பிரிவினர் கடந்து செல்லும்போதுஇங்கு ஒரு காலத்தில் தண்ணீர் இருந்தது எனக் கூறுவார்கள். ஈஸா நபியும், தோழர்களும் முற்றுகை இடப்படுவார்கள், (முற்றுகையின் கடுமையால்) ஒரு எருமையின் தலை நூறு தீனார்களைவிட அவர்களுக்கு விருப்பமானதாக இருக்கும்.

**(ஸஹீஹ்முஸ்லிம்)**

## குர்ஆனில் ஜெருசலம்

கலீலீ கடல் பைத்துல்முகத்தஸ் பகுதியில் இருக்கிறது. இரண்டாவது, நபி மொழியில் குறிப்பிடப்பட்ட தூர் மலை ஜெருசலத்தில் உள்ளது. இதே நபிமொழி இதே அறிவிப்பாளர்கள் மூலம் வேறு விதமாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது,

யஃஜூஜ், மஃஜூஜ்கள் பைத்துல்முகத்திஸிலுள்ள அல்கமர் மலைக்குச் செல்வார்கள், பிறகு, நாங்கள் பூமியிலுள்ளவர்களைக் கொன்றுவிட்டோம், வானத்திலுள்ளவர்களைக் கொல்லப்போகிறோம் என்று கூறுவார்கள். அவர்கள் வானத்தை நோக்கி அம்புகள் எறிவார்கள், அம்புகள் ரத்தக்கறை படிந்ததாக அவர்களிடம் திரும்பிவரும்.

**(ஸஹீஹ் முஸ்லிம்)**

பைத்துல்முகத்தஸுக்கு யூதர்கள் திரும்புவது இறுதிக்காலத்தின் அடையாளம் என் குர்ஆன் கூறியதைக் கண்டறிந்துகொள்ளும் சூழ்நிலையில் இன்று நாம் இருக்கிறோம். அந்த அடையாளம் யஃஜூஜ், மஃஜூஜ்கள் வெளியாவதை மட்டும் உறுதிப்படுத்தவில்லை, மாறாக அழிக்க முடியாத ஆற்றலோடு உலகத்தைத் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்பார்கள் என்றும் உறுதிப்படுத்துகிறது. (யஃஜூஜ், மஃஜூஜ் பற்றி மேலும் தெரிந்து கொள்ள அத்தியாயம் 10ஐக் காண்க.) இப்பொழுது யஃஜூஜ், மஃஜூஜ்கள் தான் ஃபஸாதின் (குழப்பங்களின்) முகவர்களாக இருக்கின்றனர். (காண்க: **அல்குர்ஆன் ;18:94**) ஃபஸாத் என்றால், ஊழல், அழிவு, மூர்க்கத் தனம், கற்பின்மை, தீச்செயல் ஆகியவையாகும். யஃஜூஜ், மஃஜூஜ் எந்த மக்களை இலக்காக ஆக்குகிறார்களோ அவர்களை நரகத்திற்கு கொண்டுபோய் சேர்த்துவிடுவார்கள். யஃஜூஜ், மஃஜூஜ் காலத்தின் உலகமயமாக்கல் ஆயிரத்தில், தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொம்பது பேரை நரகத்தில் தள்ளிவிடும் என்ற செய்தி அந்த நபிமொழியில் காணக்கிடக்கிறது.

அபூ சயீதினில் குத்ரீ (ரலி) அறிவிக்கிறார்கள்,

விசாரனை நாளில் அல்லாஹ், ஓ ஆதமே! என அழைப்பான், ஆதம் நபி வந்துவிட்டேன் எனக் கூறுவார்கள், பின்பு ஒரு குரல், உங்கள் சந்ததியிலிருந்து ஒரு கூட்டத்தை நரகத்திற்கு இழுத்துச் செல்லுமாறு அல்லாஹ் கட்டளையிட்டுள்ளான் என்று ஒலிக்கும். அதற்கு ஆதம், இறைவா! அவர்களில் எத்தனை பேர் நரகத்திற்குச் செல்கின்றனர்

என்று கேட்பார். அதற்கு அல்லாஹ், ஒவ்வொரு 1000த்திலும் 999 நபர்கள் என்று கூறுவான். அந்த நேரம் கருவுற்றிருக்கும் ஒவ்வொரு தாயும் தான் சுமந்திருப்பதை விட்டுவிடுவாள்.மேலும் குழந்தைகள் சாம்பல் நிற ரோமமுடையதாக இருக்கும். மனிதர்களைப் போதை நிலையில் நீர் காண்பீர் ஆனால் மது அருந்தி இருக்கமாட்டார்கள். அல்லாஹ்வின் வேதனை கடுமையானது. **(அல்ஹஜ், 22:2)** நபி (ஸல்) இதைக் கூறியபோது மக்கள் மிகவும் சோகமடைந்து அவர்கள் முகங்கள் மாறிவிட்டன. யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்திலிருந்து 999 வெளியாக்கப்படும், உங்களிலிருந்து ஒன்று வெளியாக்கப்படும் என்று அப்போது நபி (ஸல்) கூறினார்கள். வெள்ளை எறுதின் மீதிருக்கும் கருப்பு ரோமங்களைப் போல நீங்கள் இருப்பீர்கள், அல்லது கறுப்பு எருதின் மீது வெள்ளை ரோமங்களைப் போல இருப்பீர்கள். மேலும் உங்களில் நான்கில் ஒரு பங்கு மக்கள் சொர்க்கத்தில் இருப்பீர்கள்,என்று நபி(ஸல்) கூறினார்கள். அப்போது நாங்கள் அல்லாஹுஅக்பர் என்று கூறினோம், நபி(ஸல்) உங்களில் மூன்றில் ஒரு பங்கு மக்கள் சொர்க்கத்தில் இருப்பார்கள் என்றார்கள், நாங்கள் அல்லாஹுஅக்பர் என்றோம், அதற்கு நபி(ஸல்) உங்களில் பாதி மக்கள் சொர்க்கம் செல்வார்கள் என நம்புகிறேன் என கூறினார்கள், நாங்கள் அல்லாஹுஅக்பர் என்றோம்.

**(ஸஹீஹ்புகாரி)**

யூதர்கள் ஜெரூசலம் திரும்பவும், இஸ்ரேல் தேசம் உருவாக்கவும் யஃஜூஜ், மஃஜூஜ், போலி மஸீஹ் தஜ்ஜால் ஆகியோர் மூலமாகத்தான் சாத்தியப்பட்டிருக்கிறது. இது யூதர் கள் வரலாற்றில் ஏற்பட்டிருக்காத அளவு பெரிய அபாயத்தை உருவாக்கி இருக்கிறது. உண்மையில் அவர்களின் விதி முடிவாக்கப்பட்டு விட்டது. ஆனால் அவர்கள் இது பற்றி அறியாமல் இருக்கின்றனர். குர்ஆனை அல்லாஹ்வின் வாக்காகவும், நபி (ஸல்) அவர்களை இறுதித் தூதராகவும் ஏற்றுக்கொண்டால் தவிர அவர்கள் இப்பொழுது சந்தித்துக்கொண்டிருக்கும் ஆபத்துகளை உணர்ந்து கொள்ள முடியாது. இந்நூலில் மேற்கோள் காட்டப்பட்டுள்ள குர்ஆன், ஹதீஸ் உடைய குறிப்புகள் உண்மை நிலையை உணர்ந்துகொள்ள அவர்களுக்கு உதவும்.

## 6. இறைத் தண்டனை மீண்டும் வரலாம் என யூதர்களுக்கு எச்சரிக்கை

யூதர்கள் தங்கள் தீய செயல்களைத் திரும்பத் தொடங்கினால் அல்லாஹ் தன் தண்டனையை அவர்களுக்கு மீண்டும் கொண்டு வருவான் என குர்ஆன் யூதர்களை எச்சரிக்கிறது. அல்லாஹ் அவர்களை முதலில் பாபிலோன் படை மூலம் தண்டித்தான். பிறகு அவர்களை ரோமானிய படை மூலம் தண்டித்தான். கடைசித் தண் டனை அவர்களுக்கு வழங்கப்படும்போது அது முஸ்லிம் படை மூலம்தான் இருக்கும்.

عَسَى رَبُّكُمْ أَنْ يَرْحَمَكُمْ وَإِنْ عُدْتُمْ عُدْنَا وَجَعَلْنَا جَهَنَّمَ لِلْكَافِرِينَ حَصِيرًا

(நீங்கள் விஷமம் செய்வதைவிட்டுப் பின்னரேனும் விலகிக் கொண்டால்) உங்கள் மீது கருணை புரியப்பலாம். (அவ்வறன்றி, உங்கள் விஷமத்தின்பாலே) பின்னும் நீங்கள் திரும்பினால், நாமும் (உங்களை முன்புபோல் தண்டிக்க) முன் வருவோம். அன்றி (இத்த கைய) நன்றி கெட்டோரை நரகம் சூழ்ந்து கொள்ளும்படியும் செய் வோம்.

**(அல்குர்ஆன், 17:8)**

## 7. என்றுமில்லாத அளவு மோசமான யூதர்களின் தண்டனை பற்றிய இறை எச்சரிக்கை

யூதர்கள் ஒரு நாள் அவர்கள் இன்று சந்தித்துக்கொண்டிருக்கும் உண்மை நிலையை அறிந்துகொள்வார்கள், என குர்ஆன் தெள்ளத் தெளிவாகக் கூறுகிறது. அதாவது யஃஜூஜ், மஃஜூஜ், தஜ்ஜால் போலிமஸீஹ் வெளிப்படுத்தப்படுவார்கள். யூதர்கள் குர்ஆனை அல்லாஹ்வுடைய வார்த்தையாகவும், நபி (ஸல்) அவர்களை

அல்லாஹ்வின் தூதராகவும் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்கள். அதன் விளைவாக அவர்களின் உண்மை நிலையை அறிந்து கொள்ள முடியாதவர்களாகி விட்டார்கள்.

وَإِذْ تَأَذَّنَ رَبُّكَ لَيَبْعَثَنَّ عَلَيْهِمْ إِلَى يَوْمِ الْقِيَامَةِ مَنْ يَسُومُهُمْ سُوءَ الْعَذَابِ إِنَّ رَبَّكَ لَسَرِيعُ الْعِقَابِ وَإِنَّهُ لَغَفُورٌ رَحِيمٌ

(நபியே) அவர்களுக்கு கொடிய நோவினை செய்யக்கூடியவர்களையே, அவர்கள் மீது (ஆதிக்கும் வகிக்கும்படி) இறுதிநாள் வரை அவன் அனுப்பிவிடுவான் என்று உமதிறைவன் அறிக்கையிட்டதை (நீர் அவர்களுக்கு) ஞாபகமூட்டுவீராக! நிச்சயமாக உம் இறைவன் தண்டிப்பதில் மிக்க தீவிரமானவன், ஆனால் மிக்க மன்னிப்புடையோனாகவும், கிருபையுடையோனாகவும் இருக்கின்றான்.

**(அல்குர்ஆன், (7:167)**

தண்டனை குற்றத்திற்கு நிகரானதாகவும், சரிசமமாகவும் இருக்கும் என்பது அல்லாஹ்வின் நியதியாகும். யூதர்கள் ஈசா நபியை கொல்ல முயன்றது, தவ்ராத்தை மாற்றியது போன்ற மிக மோசமான குற்றங்களை மேற்கொண்டிருப்பதால் தண்டனையும் மிக கடுமையாகவே தான் இருக்கும். அந்தத் தண்டனை கியாமத்து நாளுக்கு முன்பே தொடங்கிவிடும். உண்மையில் அந்தத் தண்டனை இறுதித்தூதர் இந்த உலகத்திற்கு வந்து அவரை இவர்கள் மறுத்த பிறகுதான் தொடங்கும். தொடர்ச்சியாக நாடக நிகச்சிகள் போன்று நடைபெறவேண்டியவை நடைபெறும், பிறகு யூதர்களின் மோசமான தண்டனை உச்சமடையும். அந்த நாடகத்தில் முக்கிய கதாபாத் திரமாக இருப்பவர்களை அல்லாஹ் கொண்டுவருவான். யஃஜூஜ் மஃஜூஜ், போலிமஸீஹ் தஜ்ஜால் ஆகியோர் தான் அவர்கள். போலி மஸீஹ் தஜ்ஜாலின் தோற்றத்தைப்பற்றி இந்நூலின் எட்டாவது அத்யாயத்தில் நாம் விளக்கியுள்ளோம்.

# 8. இறுதி தண்டனையின் நேரம் வரும்போது யூதர்கள் ஆன்மீக பார்வை இல்லாதிருத்தல்

سَأَصْرِفُ عَنْ آيَاتِيَ الَّذِينَ يَتَكَبَّرُونَ فِي الْأَرْضِ بِغَيْرِ الْحَقِّ وَإِنْ يَرَوْا كُلَّ آيَةٍ لَا يُؤْمِنُوا بِهَا وَإِنْ يَرَوْا سَبِيلَ الرُّشْدِ لَا يَتَّخِذُوهُ سَبِيلًا وَإِنْ يَرَوْا سَبِيلَ الْغَيِّ يَتَّخِذُوهُ سَبِيلًا ذَٰلِكَ بِأَنَّهُمْ كَذَّبُوا بِآيَاتِنَا وَكَانُوا عَنْهَا غَافِلِينَ

நியாயமின்றி, பூமியில் கர்வங்கொண்டு அலைபவர்களை என்னுடையப் கட்டளையை புறக்கணிக்கும்படிச் செய்துவிடுவேன். ஆகவே அவர்கள் அத்தாட்சிகள் யாவையும் (தங்கள் கண்ணால்) கண்ட போதிலும், அவற்றை நம்பவே மாட்டார்கள். அவ்வாறே நேரான வழியை அவர்கள் கண்ட பொழுதிலும் அதனைத்தாங்கள் செல்லும் வழியாக எடுத்துக்கொள்ள மாட்டார்கள். எனினும் தவறான வழியை அவர்கள் கண்டாலோ, அதனையே (தாங்கள்) செல்லும் வழியாக எடுத்துக்கொள்வார்கள். நிச்சயமாக அவர்கள் நம்முடைய வசனங்களைப் பொய்யாக்கி அவைகளைப் புறக்கணித்ததே இதற்குரிய காரணமாகும்.

**(அல்குர்ஆன், 7:146)**

இறுதிக் காலத்தின் அந்த பயங்கரமான நாடகத்தின் முக்கிய கதாபாத்திரமாக இருப்பவன் மனிதர்களெல்லாம் (இறைநம்பிக்கை யாளர்களைத் தவிர) ஆன்மீகக் குருடர்களாவதற்குக் காரணமாக இருக்கின்ற போலிமஸீஹ் - தஜ்ஜால்தான் அவன். அவனுக்கு அல் லாஹ் பயன்படுத்துவதற்கு வழங்கியிருக்கும் ஆற்றல்களின் மிக முக்கியமானது அவனுடைய ஒற்றைக்கண்தான். தஜ்ஜால் அவன் வலது கண் குருடானவன். மேலும் இது அவனுக்கு ஆன்மீகப் பார்வை இல்லாததை சுட்டிக்காட்டுகிறது. யாரெல்லாம் அவனால் ஏமாற்றப்படுகிறார்களோ அவர்களும் ஆன்மீக பார்வை இழப்பிற்கு இலக்காகி இறுதி காலத்தின் அல்லாஹ்வுடைய அடையாளங்களை இனம் கண்டுகொள்ள முடியாதவர்களாகி விடுவார்கள். இந்த ஆன்மீக பார்வை இழப்பு உண்மை மஸீஹ் மர்யமின் மகன் ஈஸா நபி திரும்பிவரும்வரை நீடிக்கும்.

## 9. பிர்அவ்னின் உடல் கண்டுபிடிக்கப்பட்டு, அவன் எவ்வாறு துன்புற்றானோ, அவ்வாறு யூதர்களும் துன்பப்படுவது

இறுதிக் காலத்தில் இஸ்ரவேலர்களின் கடைசி நேரம் நெருங்கிக்கொண்டிருப்பதையும், அல்லாஹ்வால் விதிக்கப்பட்ட மிக மோசமான தண்டனை அவர்களுக்குக் கட்டவிழ்த்து விடப்படுவதையும், இனம்காட்டுகிற, அறிவுலகம் அரவணைத்துக் கொள்கின்ற ஓர் அடையாளத்தைக் குர்ஆன் வழங்கியுள்ளது. அந்த அடையாளம், மூஸா நபியைப் பின்தொடர்ந்து சென்ற பிர்அவ்ன் கடலில் மூழ்கடிக்கப்பட்டு அவனுடைய உடல் கண்டெடுக்கப்பட்டிருப்பது. குர்ஆன் அதை இவ்வாறு கூறுகிறது:

وَإِذْ فَرَقْنَا بِكُمُ الْبَحْرَ فَأَنْجَيْنَاكُمْ وَأَغْرَقْنَا آلَ فِرْعَوْنَ وَأَنْتُمْ تَنْظُرُونَ

அன்று உங்களுக்காகக் கடலைப் பிளந்து நாம் உங்களை ரட்சித்துக்கொண்டு (உங்களைப் பின்தொடர்ந்து வந்த) பிர்அவ்னுடைய கூட்டத்தாரை நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே மூழ்கடித்தோம்.

**(அல்குர்ஆன், 2:50)**

யூதர்கள் அந்த நேரத்திலும், இன்றும், தாங்களும் பிர்அவ்னைப் போல் ஒரு நாள் அழிக்கப்படுவோம் என்று அறிந்திருக்கவில்லை. மேலும் யூதர்கள் அல்லாஹ்வை ஏமாற்றிக்கொண்டு பாவமான காரியங்களில் ஈடுபட்டுக்கொண்டிருந்தால் பிர்அவ்ன் மரணிக்கும்போது என்ன அனுபவித்தானோ, அதே மாதியான துன்பத்தை யூதர்களும் அனுபவிப்பார்கள்.

பிர்அவ்ன் எப்படி மரணித்தான் என்பதைக் கீழ்வரும் குர்ஆன் வசனத்தில் படிக்ககூடிய வாசகர்கள் ஆச்சரியமடைவார்கள்.

وَجَاوَزْنَا بِبَنِي إِسْرَائِيلَ الْبَحْرَ فَأَتْبَعَهُمْ فِرْعَوْنُ وَجُنُودُهُ بَغْيًا وَعَدْوًا حَتَّى إِذَا أَدْرَكَهُ الْغَرَقُ

قَالَ آمَنْتُ أَنَّهُ لَا إِلَهَ إِلَّا الَّذِي آمَنَتْ بِهِ بَنُو إِسْرَائِيلَ وَأَنَا مِنَ الْمُسْلِمِينَ

آلْآنَ وَقَدْ عَصَيْتَ قَبْلُ وَكُنْتَ مِنَ الْمُفْسِدِينَ

فَالْيَوْمَ نُنَجِّيكَ بِبَدَنِكَ لِتَكُونَ لِمَنْ خَلْفَكَ آيَةً وَإِنَّ كَثِيرًا مِنَ النَّاسِ عَنْ آيَاتِنَا لَغَافِلُونَ

இஸ்ராயீலின் சந்ததிகள் சமுத்திரத்தைக் கடக்கும்படி நாம் செய்தோம், பிர்அவ்னும், அவனுடைய ராணுவங்களும் அளவு கடந்த கொடுமை செய்ய(க்கருதி), அவர்களைப் பின்தொடர்ந்து சென்றார்கள். (ஆகவே அவர்களை நாம் சமுத்திரத்தில் மூழ் கடித்துவிட்டோம்) பிர்அவ்ன் மூழ்க ஆரம்பிக்கவே, அவன் இஸ்ரா யீலின் சந்ததிகள் விசுவாசித்திருக்கும் ஆண்டவனை நானும் விசுவா சிக்கிறேன். அவனைத் தவிர வேறு நாயன் இல்லை. அன்றி, நான் அவனுக்கு முற்றிலும் வழிபடுவோரில் (ஒருவனாக) இருக்கிறேன் என்று அலறினான்.

(அதற்கு நாம் அவனை நோக்கி,) இச்சமயந்தானா (நீ விசுவாசிக்கிறாய்)! சற்று முன் வரையில் நீ மாறுசெய்து கொண்டு விஷமிகளில் ஒருவனாக இருந்தாய் எனினும், உனக்குப் பின்னுள்ளவர் களுக்கு, ஓர் அத்தாட்சியாவதற்காக உன்னுடைய தேகத்தை (அது அழியாமல்) நாம் இன்றைய தினம் பாதுகாத்துக்கொள்வோம் (என்று கூறினோம்) எனினும், நிச்சயமாக மனிதர்களில் அநேகர் நம்முடைய சான்றுகளைப் பற்றியும் பாரமுகமாக இருக்கின்றனர்.

**(அல்குர்ஆன், 10:90-92)**

فَلَمَّا آسَفُونَا انْتَقَمْنَا مِنْهُمْ فَأَغْرَقْنَاهُمْ أَجْمَعِينَ فَجَعَلْنَاهُمْ سَلَفًا وَمَثَلًا لِلْآخِرِينَ

(இவ்வாறு அவர்கள்) நமக்கு கோபமூட்டவே, அவர்களிடம் நாம் பழிவாங்கினோம். இன்னும், அவர்கள் யாவரையும் மூழ்கடித்துவிட்டோம். இன்னும் அவர்கள் (அழிந்து) சென்றுபோன ஜனங்களாக்கி, (அவர்களு டைய சரித்திரத்தைப்) பிற்காலத்திலுள்ளோருக்கு உதாரணமாக்கி னோம்.

**(அல்குர்ஆன், 43:55-56)**

இவ்வாறு குர்ஆன் பிர்அவ்னின் உடல் ஒரு நாள் கண்டுபிடிக்கப் படும் என்று ஆச்சரியமான முறையில் முன்னறிவிப்புச் செய்திருக்கிறது. அப்படிக் கண்டுபிடிக்கப்படுவது இறைவனின் புறத்திலிருந்து வரும் ஒரு துக்ககரமான அடையாளமாகவும் இருக்கிறது. ஆச்சரியமளிக்கும் பிர்அவ்னுடைய உடல் சென்ற நூற்றாண்டின் இறுதியில்தான் கண்டுபிடிக் கப்பட்டது. மேலும் இந்த நிகழ்ச்சியிலிருந்து, பிர்அவ்னுடைய உடல் கண்டெடுக்கப்பட்டது என்பதைத் தவிர, வேறெந்த முக்கியமான செய்தி யையும் அறிந்துகொள்ள முடியாமல் போனது முஸ்லிம் சமுதாயத்தின் ஆன்மீக வீழ்ச்சியாகும். பிர்அவ்னின் உடல் கண்டுபிடிக்கப்பட்ட அதே

காலகட்டத்தில் தான் சியோனிஸ அமைப்பு உருவானது என்பதிலும் யூதர்களுக்கான துக்ககரமான அறிகுறி இருக்கின்றது. இதிலிருந்து சியோனிஸ அமைப்பு நிறுவுவதற்கு மூளையாக இருந்தது போலி மஸீஹ்தஜ்ஜால்தான் என்பது தெளிவாகிறது.

இதிலிருந்து யூதர்கள் தஜ்ஜாலாலும், யஃஜூஜ், மஃஜூஜாலும் தான் வழிநடத்தப்படுகிறார்கள் என்றாகிறது. இவர்கள் மூலமே அல்லாஹ்வால் அவர்களுக்கு விதிக்கப்பட்ட தண்டனை வந்து சேரப்போகிறது. ஆனால் பிர்அவ்னுக்கு என்ன முடிவு ஏற்பட்டதோ அவ்வாறுதான் இவர்களுக்கும் ஏற்படப்போகிறது. அந்த முடிவு என்ன? பிர்அவ்னின் உடல் கண்டுபிடிக்கப்பட்டிருப்பதில், மனிதகுல வரலாற்றில் என்றும் நடந்திராத மிகப்பெரும் நாடகத்தை உலகம் காணப்போகிறது என்ற செய்தியும் உள்ளது. குறிப்பாக யூதர்களுக்கும், பொதுவாக எல்லோருக்கும் இப்பொழுது அதற்கான நேரம் ஆகும்.

## 10. ஈஸா நபி திரும்பி வரும்போது அவரை உண்மை மஸீஹ் என்று ஏற்றுக்கொள்வதைத் தவிர யூதர்களுக்கு வேறு வழி இல்லாமல் போவதும், தண்டனையிலிருந்து தப்பிப்பதற்கான காலம் கடந்திருப்பதும்

யூதர்கள் ஈஸா நபியைச் சிலுவையில் அறைந்து, அவரைக் கொன்று விட்டதாகவும் பெருமையடித்த நிகழ்ச்சியைக் குர்ஆன் விவரித்த பிறகு தான் அல்லாஹுதஆலா அந்த துக்ககரமான எச்சரிக்கையைச் செய்கிறான். யூதர்கள் ஈஸா நபியை உண்மை மஸீஹ் ஆக ஏற்றுக்கொள்ள மறுத்தபின், அவர் மீண்டும் வந்து மரணத்தைச் சுகிப்பதற்கு முன் அவர் மீது நம்பிக்கை கொண்டு விடவேண்டும் என்று கூறினான். இவ்வாறு யூதர்கள் அவரை உண்மை மஸீஹ் என்றும் கிருஸ்துவர்கள் அவரைத் தூதர் என்றும் ஏற்கவேண்டி இருக்கிறது.

وَإِنْ مِنْ أَهْلِ الْكِتَابِ إِلَّا لَيُؤْمِنَنَّ بِهِ قَبْلَ مَوْتِهِ وَيَوْمَ الْقِيَامَةِ يَكُونُ عَلَيْهِمْ شَهِيدًا

வேதத்தையுடையவர்களில் ஒவ்வொருவரும், அவர் இறப்பதற்கு முன்னதாக அவரை விசுவாசிக்காமலிப்பதில்லை. எனினும், மறுமை நாளில், இவர்களுக்கு விரோதமாகவே அவர் சாட்சியங்கூறுவார்.

**(அல்குர்ஆன், 4:159)**

மேலே கூறப்பட்ட வசனம், ஈஸா நபி திரும்பி வரும்போது யூதர்கள் அவரை மஸீஹ் ஆக ஏற்றுக்கொள்வதோடு மட்டுமல்லாமல், முஹம்மது நபி (ஸல்) அவர்களை இறுதி தூதராகவும், குர்ஆனை இறுதி வேதமாகவும் ஏற்றுக்கொள்வார்கள் என்று தெரிவிக்கிறது. ஆனால் இந்த இறுதி நேர உறுதிப்பாடும், நம்பிக்கை கொள்ளலும் அவர்களுக்கு எந்தப் பலனையும் தராது, எவ்வாறு பிர்அவ்னின் இறுதி நேர நம்பிக்கை அவனுக்கு எந்தப் பலனையும் தரவில்லையோ அதுபோல. இதுதான் பிர்அவ்னின் உடல் கண்டுபிடிக்கப்பட்டிருப்பதில் யூதர்களுக்கான வேதனைக்குரிய செய்தியாகும்.

யூதர்களும், நிராகரிப்பாளர்களும் இறுதி நிமிடம் வரை தாங்கள் வெற்றியில் இருப்பதாகவே நம்பிக்கொண்டிருந்தார்கள், இவ்வுலகத்தின் புறக்காரணிகள் தொடர்ச்சியாக இஸ்லாம் உதவாத ஒன்று என்பது போலவே காட்டுகின்றன, உலகில் நடக்கின்ற நிகழ்ச்சி களும் அதுமாதிரியே அமைகின்றன.

## அத்தியாயம் 13

# குர்ஆனும், ஜெருசலத்தின் தலைவிதியும்

وَإِنْ عُدتُّمْ عُدْنَا ۘ وَجَعَلْنَا جَهَنَّمَ لِلْكَافِرِينَ حَصِيرًا ﴿٨﴾

உங்கள் விஷமத்தின்பாலே பின்னும் நீங்கள் திரும்பினால், நாமும் (உங்களை முன்புபோல் தண்டிக்க) முன் வருவோம். அன்றி (இத்தகைய) நன்றி கெட்டோரை நரகம் சூழ்ந்து கொள்ளும்படியும் செய்வோம்.

**(அல்குர்ஆன், 17:8)**

எதுவரை அல்லாஹ் விரும்புவானோ அதுவரை நபித்துவத்தை விட்டு வைத்திருப்பான், பிறகு அதை எடுத்துக்கொள்வான் என நபி(ஸல்) கூறினார்கள். பிறகு நபி (ஸல்) அவர்களின் வழியை முழுமை யாக பின்பற்றும் கிலாஃபத் அல்லாஹ் விரும்பும்வரை நீடிக்கும், பிறகு அல்லாஹ் அதையும் எடுத்துவிடுவான். பிறகு வாரிசுமுறை ஆட்சி வரும் அல்லாஹ் நாடும்வரை அது நீடிக்கும், பிறகு அதையும் அல்லாஹ் அகற்றிவிடுவான். அதன்பின் கடுமையான அடக்குமுறை ஆட்சி வரும் அல்லாஹ் விரும்பும்வரை, அதையும் அல்லாஹ் அகற்றிவிடுவான். அதன் பிறகு நபி (ஸல்) அவர்களை முழுமையாக பின்பற்றும் கிலாஃத் ஆட்சி முறை வரும், இப்படிக் கூறிவிட்டு நபி (ஸல்) அவர்கள் அமைதி யாகி விட்டார்கள்.

**(முஸ்னத், அஹ்மது இப்னு ஹம்பல்)**

இரண்டாவது முறையாக யூதர்களை பைத்துல்முகத்தஸிலிருந்து விரட்டியபின், இவர்கள் தங்கள் கொடூரமான நடவடிக்கைகள் மூலம் புனித இடத்தை அசுத்தப்படுத்திக்கொண்டே இருந்தால் தண்டனையும் தொடர்ந்து கொண்டே இருக்கும் என்று தீர்மானித்தான்.

وَإِنْ عُدتُّمْ عُدْنَا وَجَعَلْنَا جَهَنَّمَ لِلْكَافِرِينَ حَصِيرًا ﴿٨﴾

உங்கள் விஷமத்தின்பாலே பின்னும் நீங்கள் திரும்பினால், நாமும் (உங்களை முன்புபோல் தண்டிக்க) முன் வருவோம். அன்றி (இத்தகைய) நன்றி கெட்டோரை நரகம் சூழ்ந்து கொள்ளும்படியும் செய்வோம்.

**(அல்குர்ஆன், 17:8)**

திட்டவட்டமாக மேலே கூறப்பட்டுள்ள குர்ஆன் வசனத்தில் ஜெருசலத்தின் தலைவிதி தெளிவாக உள்ளது. பாலஸ்தீன மதச்சார் பற்ற தேசிய பிரதிநிதிகளும், இஸ்ரவேலர்களின் பிரதிநிதிகளாக அறியப்பட்ட ஐரோப்பிய யூதப் பிரதிநிதிகளும் நடத்திய பேச்சுவார்த்தை களையும் தாண்டி ஜெருசலத்தின் தலைவிதி நிர்ணயிக்கப்பட்டதுதான். இஸ்ரேல் தேசத்தின் எல்லாவற்றையும் விட மிக அசாதாரணமானது என்னவெனில் கடவுள் இல்லா உலகத்தை உருவாக்கி இருப்பதும், மத வாழ்க்கை முறையை கைவிட்டிருப்பதுமாகும். இஸ்ரேலின் மார்க்க அனுஷ்டானங்களை சமீபத்திய ஜெருசலம் போஸ்டின் கட்டுரை ஒன்று விவரிக்கிறது. பல இஸ்ரவேலர்களுக்கு யூத மதம் மிகப் பழமை யானதாகவும், காலத்திற்குப் பொருந்தாததாகவும் இருக்கிறது. அதன் பெயரால், அதிகாரத்தையும், பொருளாதாரத்தையும் அடைவதற்கு போட்டியிடப்படுகிறது, மேலும் அறிவுலக நவீன சமூகத்தை எதிர்கொள் வதிலும் தயக்கம் இருக்கிறது

**(ஜெருசலம் போஸ்ட், 12,2000)**

மிஃராஜ் புனித பயணத்தில் முஹம்மது நபி (ஸல்) அவர்களுக்கு ஜெருசலத்தில் காட்டப்பட்ட அறிகுறிகளில் ஜெருசலத்தின் தலைவிதி குறித்தும் கூறப்பட்டிருந்தது. இந்த விஷயம் டேனியல் பைப்ஸ் உடைய கவனத்திலிருந்து தப்பியிருக்கிறது. இதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை, அவரும் மற்ற யூதர்களைப்போல, பைத்துல்முகத்தஸில் இன்திஃபாதா உடைய கற்கள் பேசுவதை கேட்காதவர் போலத்தானிருக்கிறார். ஆனால், இஸ்ரேலின் ராணுவ பாதுகாப்பு பிரிகேடியர் ஜென்ரல் அஃப்ராஹீம் ஈதாம் சமீபத்தில் பதவியை ராஜினாமா செய்தார்,

பைத்துல்முகத்தஸின் கற்கள் பேசுவதை அவர் நம்புவது போலவே தெரிகிறார். மேலும் அவர், உலகத்திலேயே இஸ்ரேல்தான் யூதர்களுக்கு மிக ஆபத்தானது என்றும் கூறினார்.

**(ஜெருசலம் போஸ்ட், 20பிப்ரவரி, 2000)**

முஸ்லிம்கள் ஜெருசலத்தைக் கைப்பற்றுவார்கள் என்ற விதியை குர்ஆன் நிர்ணயித்திருக்கிறது - நபி (ஸல்) அவர்களின் மரணத்திற்குச் சிறிது காலம் கழித்து ஜெருசலம் முஸ்லிம்கள் ஆதிக்கத்தில் வந்தது, அது எந்த இடையூறுமின்றி சில நூற்றாண்டுகள் தாக்குப்பிடித்தது. ஐரோப்பிய கிருஸ்துவர்களின் சிலுவைப்போர் வீரர்கள் ஜெருசலத்தைக் கைப்பற்றி 80 ஆண்டுகள் அவர்கள் கட்டுப்பாட்டில் இருந்தது. ஒரு முஸ்லிம் படை சிலுவைப்போர் வீரர்களை வீழ்த்திவிட்டு மீண்டும் ஜெருசலத்தைத் தன் கட்டுப்பாட்டில் கொண்டுவந்தது, இதுவும் எந்த இடையூறுமின்றி சில நூற்றாண்டுகள் தாக்குப்பிடித்தது இறைவனின் கட்டளையால் யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பக் கொண்டுவரப்படும் வரை அது நீடித்தது. தற்போதய யூத ஆட்சி, முந்தைய ஐரோப்பிய சிலுவைப்போர் வீரர்களைப் போல் 80 ஆண்டுகளைக் கடப்பதே கடினம்தான், அல்லாஹ்வே மிக அறிந்தவன். ஒரு முஸ்லிம் படை யூதர்களைத் தோற்கடித்துவிட்டு முஸ்லிம் ஆட்சியை நிறுவும். அல்லாஹ் குர்ஆனில் அதைப் பற்றிக் கூறுகிறான்.

وَعَدَ اللَّهُ الَّذِينَ آمَنُوا مِنكُمْ وَعَمِلُوا الصَّالِحَاتِ لَيَسْتَخْلِفَنَّهُمْ فِي الْأَرْضِ كَمَا اسْتَخْلَفَ
الَّذِينَ مِن قَبْلِهِمْ وَلَيُمَكِّنَنَّ لَهُمْ دِينَهُمُ الَّذِي ارْتَضَىٰ لَهُمْ وَلَيُبَدِّلَنَّهُم مِّن بَعْدِ خَوْفِهِمْ أَمْنًا

(மனிதர்களே) உங்களில் எவரேனும் மெய்யாகவே விசுவாசங் கொண்டு நற்கருமங்களைச் செய்தால், அவர்களுக்கு முன்னர் சென்றவர்களை (ப்பூமிக்கு) அதிபதிகளாக்கியதைப் போலவே இவர்களையும் நிச்சயமாக பூமிக்கு அதிபதிகளாக்கி வைப்பதாகவும், அவன் விரும்பிய மார்க்கத்தில் இவர்களை ஸ்திரப்படுத்தி வைப்பதாகவும், இவர்களுடைய பயத்தை, அமைதியும், பாதுகாப்புமாக மாற்றிவிடுதாகவும் அல்லாஹ் வாக்களித்திருக்கிறான்.

**(அல்குர்ஆன், 24:55)**

அல்லாஹ் குர்ஆனில் குறிப்பிட்ட பயம் என்ற நிலை இன்றைய இஸ்ரேலிய பயங்கரமான அடக்குமுறையைக் குறிக்கிறது. அல்லாஹ்வை மட்டுமே வணங்கி, அவனுக்கு யாரையும் இணை கற்பிக்காத முஸ்லிம்களே பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாக ஆகமுடியும்

என்பதையும் குர்ஆன் தெளிவாகக் கூறியிருக்கிறது. அல்லாஹ்வின் மீது இன்னும் நம்பிக்கை வைத்திருக்கும் சமுதாயத்தில் பி.எல்.ஓவுக்கு எந்தப் பங்கும் இல்லை.

கீழ்வரும் ஹதீஸில் நபி (ஸல்) அவர்களும் குர்ஆனுடைய வாக்கை உறுதிப்படுத்துகிறார்கள்.

**அபூஹுரைரா(ரலி) அறிவிக்கிறார்கள்,**

கருப்புப் பதாகைகள் குராசானிலிருந்து எழுந்து வரும் (இன்று ஆப்கானிஸ்தான், பாகிஸ்தான், ஈரானின் சிறு பகுதி, மத்திய ஆசியா ஆகிய நாடுகளை உள்ளடக்கிய பகுதி) எந்தச் சக்தியாலும் அவர்கள் ஜெருசத்தில் நுழைவதைத் தடுக்க முடியாது,

**(சுனன் திர்மிதி)**

ஜெருசலத்தைக் கைப்பற்றப்போகும் ஆயுதம் ஏந்திய அந்தப் போரை திருக்குர்ஆன் சரி கண்டிருக்கிறது. தங்கள் சொந்த பூமியிலிருந்து விரட்டப்பட்டவர்கள் பதிலடி கொடுப்பதற்காக இப்படி ஒரு போருக்குத் அல்லாஹ்வும் கடமையாக ஆக்கியிருக்கிறான். - அவர்கள் தயாராவதை அல்லாஹ்வும் கடமையாக ஆக்கியிருக்கிறான் என்பதற்காக மட்டுமே வெளியாக்கப்பட்டார்கள்.

أُذِنَ لِلَّذِينَ يُقَاتَلُونَ بِأَنَّهُمْ ظُلِمُوا وَإِنَّ اللَّهَ عَلَى نَصْرِهِمْ لَقَدِيرٌ
الَّذِينَ أُخْرِجُوا مِنْ دِيَارِهِمْ بِغَيْرِ حَقٍّ إِلَّا أَنْ يَقُولُوا رَبُّنَا اللَّهُ وَلَوْلَا دَفْعُ اللَّهِ النَّاسَ بَعْضَهُمْ بِبَعْضٍ لَهُدِّمَتْ صَوَامِعُ وَبِيَعٌ وَصَلَوَاتٌ وَمَسَاجِدُ يُذْكَرُ فِيهَا اسْمُ اللَّهِ كَثِيرًا وَلَيَنْصُرَنَّ اللَّهُ مَنْ يَنْصُرُهُ إِنَّ اللَّهَ لَقَوِيٌّ عَزِيزٌ

(நிராகரிப்போரால்) அநியாயத்திற் குள்ளானவர்களுக்கு (அவர்களை எதிர்த்து) யுத்தம் செய்ய அனுமதியளிக்கப்பட்டுவிட்டது. நிச்சயமாக அல்லாஹ், இவர்களுக்கு உதவி செய்யப் பேராற்றலுடை யோனாக இருக்கிறான்.

இவர்கள் (எத்தகையோரென்றால்) நியாயமின்றித் தங்கள் வீடுகளிலிருந்து (விரோதிகளால்) துரத்தப்பட்டார்கள். எங்களுடைய இறைவன் அல்லாஹ் ஒருவன் தான் என்று கூறியதுதான்.

**(அல்குர்ஆன், 22:39-40)**

இது தான் இவர்கள் செய்த குற்றம்!..

ஒரு முஸ்லிம் படை இஸ்ரேல் தேசத்தை அழிக்கும், மஸீஹ் (மர்யமின் மகன்) ஜெருசலத்திலிருந்து உலகை நீதமான ஆட்சியாளராக இருந்து ஆள்வார் என்பதுதான் ஜெருசலத்தின் எதிர்காலமாகும். மஸீஹ் ஈஸா நபி (அலை) பைத்துல்முகத்தஸில் இஸ்ரேல் தேசம் இருந்த இடத்தில் இஸ்லாமிய தேசம் அமைத்து உலகை ஆள்வார்கள்.

இது நடைபெறுவதற்கு முன் இஸ்ரேல் தேசம் உலகை ஆளும் வல்லரசாக ஆக வேண்டும் என்பதும் ஜெருசலத்தின் விதியில் உள்ளதாகும். இஸ்ரேல் உலகை ஆளும் அந்தக் காலம் என்பது ஒரு நாள் என்பது ஒரு வாரத்தைப்போல் இருக்கும். அந்த அடக்குமுறை ஆட்சியின் இறுதியில் போலி மஸீஹ் - தஜ்ஜால் அவனே தோன்றுவான் அவனுடைய நாள் நம்முடைய நாள்களைப்போல் இருக்கும் காலகட்டம் அது. அந்தச் சமயத்தில் கலீலீயின் தண்ணீர் வற்றிப்போகும். தஜ்ஜால் ஜெருசலத்திலிருந்து உலகம் முழுவதையும் ஆட்சி செய்வான், போலி மஸீஹாக தோற்றமளிக்கின்ற தன் லட்சியத்தில் வெற்றி பெறுவான். தஜ்ஜால் தன் உடலோடு வெளிப்படும்போது இமாம் மஹதி (அலை) அவர்களும் வெளிப்படுவார்கள்.

கீழ்வரும் ஹதீஸில் நபி (ஸல்) இந்நிகச்சியைப் பற்றிக் கூறியிருக்கிறார்கள்:

எதுவரை அல்லாஹ் விரும்புவானோ அதுவரை நபித்துவத்தை விட்டு வைத்திருப்பான், பிறகு அதை எடுத்துக்கொள்வான் என நபி (ஸல்) கூறினார்கள். பிறகு நபி (ஸல்) அவர்களின் வழியை முழுமையாக பின்பற்றும் கிலாஃபத் அல்லாஹ் விரும்பும்வரை நீடிக்கும், பிறகு அல்லாஹ் அதையும் எடுத்துவிடுவான். பிறகு வாரிசுமுறை ஆட்சி வரும் அல்லாஹ் நாடும்வரை அது நீடிக்கும், பிறகு அதையும் அல்லாஹ் அகற்றிவிடுவான். அதன்பின் கடுமையான அடக்குமுறை ஆட்சி வரும் அல்லாஹ் விரும்பும்வரை, அதையும் அல்லாஹ் அகற்றிவிடுவான். அதன் பிறகு நபி (ஸல்) அவர்களை முழுமையாகப் பின்பற்றும் கிலாஃபத் ஆட்சி முறை வரும், இப்படிக் கூறிவிட்டு நபி (ஸல்) அவர்கள் அமைதியாகி விட்டார்கள்.

**(முஸ்னத், அஹ்மது இப்னு ஹம்பல்)**

தஜ்ஜால் திமிஷ்கில் இமாமைத் தாக்குவான், ஈஸா நபி (அலை) இறங்கிவந்து தஜ்ஜாலைக் கொல்வார்கள். தஜ்ஜால் கொல்லப்பட்டபின் யஃஜூஜ், மஃஜூஜின் கடைசிப் பிரிவு வெளியாகும், இங்கு ஒரு காலத்தில் தண்ணீர் இருந்தது என்று கூறியவர்களாகக் கலீல் கடலைக் கடப்பார்கள். யஃஜூஜ், மஃஜூஜ் ஈஸா (அலை) அவர்களுடன் ஜெருசலத்திலுள்ள ஒரு மலைக்குச் செல்வார்கள். அல்லாஹ் ஈஸா (அலை) அவர்களுக்கு மலை ஏறுமாறு கட்டளையிடுவான். அப்போது யஃஜூஜ், மஃஜூஜ்கள் பூமியிலுள்ளவர்களைக் கொன்றுவிட்டதாகப் பெருமிதம் கொண்டு வானத்திலுள்ளவர்களைக் கொல்லப்போவதாகக் கூறுவார்கள். அம்புகளை வானத்தை நோக்கி எறிவார்கள், அல்லாஹ் அவற்றை ரத்தக்கறை படிந்ததாகத் திருப்பி அனுப்புவான். (யாராவது ஒருவர் மிக விரைவில் இந்த ஹதீஸுக்கு விளக்கமளிப்பார்கள்.) பிறகு ஈஸா (அலை) யஃஜூஜ், மஃஜூஜ்களை அழிக்குமாறு அல்லாஹ்விடம் துஆ செய்வார்கள், அல்லாஹ் ஒருவித பூச்சிகளை அனுப்புவான் அவை அவர்களின் கழுத்தின் பின்பகுதியில் தாக்கும், அடுத்த நாள் காலையில் அவர்கள் அனைவரும் மரணித்தவர்களாகக் கிடப்பார்கள்.

யஃஜூஜ், மஃஜூஜை அல்லாஹ் அழிக்கும்போது அசைக்க முடியாத மேற்குலகம் நொறுங்கிப்போகும், நவீன உலகின் அறிவியல், தொழில்நுட்ப ஆச்சரியங்கள் வீழ்ந்து போகும். இந்த நிகழ்ச்சி நடப்ப தற்கு இன்னும் ஐம்பது ஆண்டுகள்கூட தேவைப்படாது என இந் நூல் கருதுகிறது. அந்த நேரத்தில் முஸ்லிம் படை ஒன்று குராசானிலிருந்து கிளம்பி, யூதர்களை தரைப்போர்க் களத்தில் சந்திக்கும். புகாரியிலும் முஸ்லிமிலும் பதிவுசெய்யப்பட்டிருக்கும் இந்த ஹதீஸில் நபி (ஸல்) ஒரு முஸ்லிம் படை யூதர்களை எதிர்த்துப் போரிடும் எனக் கூறினார்கள். அந்த வாசகங்கள் இதோ!

நீங்கள் நிச்சயமாக யூதர்களுடன் சண்டையிடுவீர்கள், (இது தொடரும்) கற்கள் பேசும்; ஓ முஸ்லிமே! என் பின்னால் ஒரு யூதன் மறைந்திருக்கிறான் வந்து கொல் என்று கூறும் என நபி (ஸல்)கூறினார் கள்.

**(ஸஹீஹ், புகாரி)**

**அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்.**

முஸ்லிம்கள் யூதர்களுடன் சண்டையிடாதவரை உலக அழிவு நாள் ஏற்படாது என நபி (ஸல்) கூறினார்கள். யூதர்கள் கற்களுக்கும்,

மரத்திற்கும் பின்னாலும் சென்று மறைந்துகொள்ளும் வரை, ஒரு கல்லோ, மரமோ, முஸ்லிம் என்றோ, அல்லாஹ்வின் அடிமையே என்று அழைத்தோ என் பின்னால் ஒரு யூதன் இருக்கிறான் வந்து கொல் என்று கூறும், ஆனால் கர்கத் மரம் மட்டும் கூறாது. ஏனென்றால் அந்த மரம் யூதர்களின் மரம் என்று அழைக்கப்படுகிறது.

(ஸஹீஹ், முஸ்லிம்)

இந்தக் காலத்தில் உண்மையான வழிகாட்டுதலை வழங்க இயலாத இஸ்லாமிய மார்க்க அறிஞர்களை அகற்றுவது மிக எளிதான விஷமாகும். அந்த அறிஞர்கள் எப்பொழுதும் பகிரங்கமாக இந்த நபி மொழியை சொல்லக்கூட முடியாத அறிஞர்கள்தான்.

இவ்வாறு ஜெரூசலத்தின் தலைவிதி, சத்தியம் அசத்தியத்தையும் அடக்குமுறையையும் வெல்லும் என்பது முஸ்லிம்களுக்குப் பெரும் நம்பிக்கையையும், தைரியத்தையும் கொடுத்திருக்கிறது.

இன்று நாம் வாழ்ந்துகொண்டிருக்கும் உலகம் மிக வினோதமானது என்பதை விளக்குவதற்காகத்தான் இந்நூல் எழுதப்பட்டிருக்கிறது. இஸ்லாத்தின் நோக்கமும் பயனில்லாததாகக் காட்டப்படும் உலகமும் இதுதான். ஆனால் இந்நூலைப் படித்தபின் இதற்கு முன்னால் தெரியாதவர்களாக இருந்தால், உண்மை அவ்வாறல்ல என்பதைத் தெரிந்து கொள்வார்கள். இஸ்லாம் சத்திய மார்க்கம் என்பதை நிரூபிப்பதுதான் ஜெரூசலத்தின் தலைவிதி என்பதை முஸ்லிம் அறியும்போது, இன்று அல்லாஹ்வின் மீதுள்ள நம்பிக்கையை முழுமையாக அழிப்பதற்குத் துடிக்கும் கடவுள் இல்லாத உலகத்தாரால் இஸ்லாத்தின் மீது தொடுக்கப்பட்டிருக்கும் போரை எதிர்கொள்ள எல்லா விதமான ஆற்றலையும் கொடுக்க முன்வருவார்கள்.

# இரண்டாம் பாகம்

## அத்தியாயம் I

# பைத்துல்முகத்தஸும், இஸ்ரேல் தேசத்தின் அரசியல் (ஷிர்கும்) இணைவைத்தலும்

وَآتَيْنَا مُوسَى الْكِتَابَ وَجَعَلْنَاهُ هُدًى لِبَنِي إِسْرَائِيلَ أَلَّا تَتَّخِذُوا مِنْ دُونِي وَكِيلًا

மூஸாவுக்கு ஒரு வேதத்தை நாம் கொடுத்தோம். அதனை இஸ்ராயீல் சந்ததிகளுக்கு ஒரு வழிகாட்டியாக அமைத்து, நீங்கள் என்னைத்தவிர (மற்றெவரையும் உங்கள்) ரட்சகனாக எடுத்துக்கொள்ளக் கூடாது (என்று அவர்களுக்குக் கட்டளையிட்டோம்)

**(அல்குர்ஆன், 17:2)**

## குர்ஆனில் ஜெருசலம்

(ஷிர்க் என்பது இபுராஹீம் நபியின் அல்லாஹ்வை விட்டுவிட்டு மற்றவர்களை வணங்குவதாகும், அந்த ஓரிறைவனின் வழிபாட்டில் ஏதும் ஊழல் செய்தாலும் அதுவும் ஷிர்க் ஆகும். குஃப்ர் என்பது உண்மையை மறுப்பதாகும்)

இஸ்ரேல் என்பது பைத்துல் முகத்தஸில் எழுந்திருக்கும் நவீன மதச்சார்பற்ற நாடாகும். இதன் அரசியல் அமைப்பு மதச்சார்பற்ற கொள்கையின் அடிப்படையில் கட்டமைக்கப்பட்டிருக்கிறது. இபுராஹீம் நபியின் மார்க்கக் கண்ணோட்டத்தில் இந்த நவீன மதச்சார்பற்ற தேசத்திற்கு என்ன மார்க்க அங்கீகாரம் வழங்க முடியும்? இந்த தேசத்தின் நிர்மாணம், பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாவதற்கு இடப்பட்ட இறை நிபந்தனைகளுக்கு இணக்கமாக இருக்கிறதா? அல்லது எதிராக இருக்கிறதா? இவ்வத்தியாயம் இக்கேள்விகளுக்கு பதிலளிக்கிறது.

### இன்றைய உலக அமைப்பு

ஆயிரம் ஆண்டுகள் பழமையான சில நாகரிகங்கள் உட்பட மாபெரும் நாகரிகங்களை உள்ளடக்கியிருக்கிற ஓர் உலகில் எது வும் எந்த நிலப்பரப்பின் மீதும் ஆதிக்கம் செலுத்த முடியவில்லை என்பது வினோதமானதாகும். உலகில் எங்கும் மனிதர்கள் ஐரோப்பிய நாகரிகத்திற்குப் பலியாகி இருக்கிறார்கள். உலகில் எங்கும் மனிதர் கள் ஐரோப்பிய முறை மதச்சார்பின்மையைத் தழுவியுள்ளார்கள். இது மனிதகுல வரலாற்றில் தனித்தன்மை வாய்ந்ததாகும். இது மேலும் புதிரானதும், துக்ககரமானதுமாகும். சர்வதேச அரசியல் இயக்கம் ஆரம்பத்தில் லீக் ஆஃப் நேஷன்ஸ் என்று அழைக்கப்பட்டு, பிறகு ஐக்கிய நாடுகள் கூட்டமைப்பு (யுனைடெட் நேஷன்ஸ்) என்றும் மாற்றப்பட்டது. இந்தப் பெயரே ஐரோப்பாவால் உருவாக்கப்பட்ட புதிய உலகத்தின் குறிக்கோளைப் புனிதப்படுத்துகிறது. உலகம் முழுவதையும் ஐரோப்பாவே வல்லரசாகி உலகை ஆள்வது போலக் காய் நகர்த்துவது அதன் குறிக்கோளாகும். இந்நூலை எழுதும் போது ஐரோப்பா தன் லட்சியத்தை அடைகின்ற விளிம்பிலே நின்று கொண்டிருக்கிறது. உலகிலுள்ள ஐரோப்பா அல்லாத நாடுகள் ஐரோப்பிய நாகரிகத்தின் பிடியிலிருந்து விடுபட முடியாமல் தவித்துக் கொண்டிருக்கின்றன.

பிரபல பிரிட்டிஷ் வரலாற்றாசிரியர் அர்னால்ட் டோயன்பீ தனித்துவமிக்க இந்தத் தோற்றத்தைப் பார்த்து இதற்கு முன் வந்த எல்லா நாகரிகங்களும் மரணித்துவிட்டன, அல்லது சாகும் தருவாயில் இருக்கின்றன, மேற்கத்திய நாகரிகமும் முந்தய நாகரிகங்களைப் போலவே அழிவைச் சந்திப்பது தவிர்க்க முடியாதது என்றார். (டோயன்பீ: சிவிலைசேஷன் ஆன் டிரையல். பக்கம்-38) உலகத்தில் ஐரோப்பிய அரசாட்சியை நிலைநாட்டுவதான ஐரோப்பாவின் குறிக்கோள் தான் மிகப் புதிரானதும், துக்ககரமானதுமாகும். டோயன்பீ எந்த ஒளிவுமின்று தன் பிரபல நூலில் உறுபடுத்திவிட்டார்.

உலக மக்களையெல்லாம் ஒரே மகா சமுதாயமாக மாற்றி, பூமியிலுள்ள அனைத்தின் (வான், கடல்) மீதும் ஆதிக்கம் செய்ய வேண்டும் என்பது தான் ஐரோப்பாவின் குறிக்கோள்..

**(அதே நூல்: பக்கம்-166)**

யூதர்களை பைத்துல்முகத்தஸுக்குத் திரும்பக் கொண்டு வருகிற சாத்தியங்களை உருவாக்கி, உலக ஆட்சி அதிகாரத்தை யூதர்களுக்கு வழங்கி, அவர்களை ஜெரூசலத்திலிருந்து உலகை ஆளவைப்பதுதான் ஐரோப்பியர்களின் இறுதித் திட்டமாகும். எந்த ஒளிவும், மறைவுமின்றி இந்நூல் உண்மைகளை விவரிக்கிறது.

யஃஜூஜ், மஃஜூஜ்கள் உலகில் அல்லாஹ்வால் வெளிப்படுத்தப் படும்போது, ஒவ்வொரு திசையிலும் பரவிச் செல்வார்கள். என்று குர்ஆன் **(அல்அன்பியா; 21:96)** பறைசாற்றுகிறது. இதன் விளைவாக எந்த மக்கள் அந்த நகரத்திலிருந்து வெளியேற்றப்பட்டு, அல்லாஹ்வால் அழிக்கப்பட்டு, மீண்டும் திரும்ப முடியாமல் தடுக்கப்பட்டிருக்கிறார்களோ, அவர்கள் அந்த நகரத்திற்குத் திரும்ப வந்து உரிமை கொண்டாடுவார்கள். அந்த நகரம் என்பது ஜெரூசலம்தான் என்று இந்நூல் வாதிடுகிறது. ஒவ்வொரு திசையிலும் பரவிச் செல்லும் யஃஜூஜ் மஃஜூஜ்களை மற்ற யாராலும் தடுக்க முடியாது, ஏனெனில் அது இறைக் கட்டளை.

என் அடியார்களில் அவர்களை யாராலும் எதிர்க்க முடியாத ஒரு மக்களை நான் கொண்டு வருவேன், இம்மக்களை நீர் தூர் மலைக்குப் பாதுகாப்பாக அழைத்துச் செல்லுங்கள், பிறகு அல்லாஹ் யஃஜூஜ், மஃஜூஜ்களை அனுப்புவான். அவர்கள் ஒவ்வொரு திசையிலும் பரவிச்செலவார்கள்.

**(ஸஹீஹ், முஸ்லிம்)**

நபி (ஸல்) அவர்களின் வருகைக்குப்பின் ஐரோப்பிய நாகரிகம் தான், யஃஜூஜ், மஃஜூஜ் உடைய நாகரிகம் என்பது மேலே கூறப் பட்டதிலிருந்து தெளிவாகிறது.

இந்நூல் போலி மஸீஹ் - தஜ்ஜாலைப் பற்றியும் விளக்குகிறது.

தஜ்ஜால், யஃஜூஜ், மஃஜூஜுடன் சேர்ந்து இறுதிக் காலத்தின் முக்கிய அடையாளமாக விளங்குகிறான். அவன் உலகம் முழுவதையும் ஆட்சி செய்யும் மஸீஹ் ஈஸா நபி போல தோற்றமளிப்பதால் (மக்களை ஏமாற்றுதல்) ஜெருசலத்திலிருந்து உலகை ஆள்கின்ற நிலையை யும் அடைவது அவனது திட்டங்களில் உள்ளதுதான். தஜ்ஜால் தன் பயணத்தை எங்கிருந்து தொடங்கினான் என்பதைச் சுட்டிக் காட்டும் போது இந்நூல் பிரிட்டன் தீவு என்று கூறுகிறது. யூதர்களை பைத்துல்முகத்தஸுக்கு திரும்பக் கொண்டு வருவது மட்டுமல்ல, ஐரோப்பியர்களின் குறிக்கோள், மாறாக, உலக வல்லரசுப் பட்டத்தை அவர்களுக்கு வழங்கி ஜெருசலத்திலிருந்து உலகை ஆள வைப்பது தான். ஐரோப்பா தன் குறிக்கோளை அடைவதற்கு மதச்சார்பின்மை என்ற மந்திரம் தான் முக்கிய பங்கு வகித்தது.

## நவீன மதச்சார்பற்ற தேசத்தின் தொடக்கம்

ஐரோப்பிய கிருஸ்துவ நாகரிகம் அதற்குள்ளிருந்தே மர்மமான முறையில் தாக்கப்பட்டு, புரட்சிகரமான மாற்றங்களுக்கு பலியான பின், நவீன மதச்சார்பற்ற தேசம் எழுந்தது. இந்தப் புரட்சி வெளித் தோற்றத்தில் மார்க்கப்பற்றுள்ளது போன்ற ஒரு நாகரிகத்திற்கு வித்திட்டது, பிறகு அது, எதிர்க்கமுடியாத சக்தியாகவும், அடிப்படையில் கடவுளில்லாததாகவும், வியக்கவைக்கும் அளவு ஏமாற்றக்கூடியதாகவும், மிகவும் தரம் தாழ்ந்ததான ஒரு நாகரிமாக உருவெடுத்தது. இது ஐரோப்பாவின் வரலாற்றில் என்றும் நடந்திராத மிக முக்கியமானதும், தனித்துவமானதுமாகும்.

நவீன ஐரோப்பிய நாகரிகம் கடவுளில்லாக் கொள்கையுடையது என்பது அது மெட்டீரியலிஸ்ம் என்று கூறப்படுகிற பொருள் முதல்வாதத்தை தழுவிக்கொண்டதில் தெளிவாகிறது. அப்படியென்றால் பொருள்

முதல் வாதத்தை விட்டுவிட்டு வேறெந்த உள்ளமையையும் இருக்கிறது என்று நம்பாது. இந்த பொருள்முதல் வாதத்தைத் தழுவியதே அந்த ஒற்றைக்கண் பார்வைக்கு வழிவகுத்துவிடுகிறது. அந்தப் பார்வை பிடிவாதமாக புலனுணர்வாலும், பரிசோதனை மூலமாகவும்தான் எதையும் கண்டறிகிற தன்மையுடையது. உண்மையான ஞானத்தை அடைந்து கொள்வதற்கு காரணியாக இருக்கின்ற மற்றொரு கண் - ஆன்மீகத்தின் மூலம் காணும் கண் நிராகரிக்கப்படுகிறது.

நவீன கடவுளில்லாத ஐரோப்பியச் சிந்தனை அரசியல் தத்துவத்திற்கும், அரசியல் கொள்கைக்கும் பொருத்தியதன் விளைவில் தான் நவீன மதச்சார்பின்மை உயிர்பெற்றது. ஆனால் இதுவே எல்லாவற்றிற்கும் காரணமல்ல. இதற்கு முன்பும் வரலாற்றில் மதச்சார்பின்மை தோன்றி யிருக்கிறது, ஆனால் இன்றுள்ளது போல் உலகம் முழுவதும் அதை ஏற்றுக்கொள்வதற்குத் தயாராக இருக்கவில்லை. மேலும் இன்றைய நவீன உலகம் துக்ககரமான மிக முக்கியமான ஐரோப்பிய புரட்சிக்குப்பிறகு தான் தோன்றியது. ஐரோப்பிய புரட்சி, தன் கடவுளில்லாக் கொள்கையில் எல்லா மனிதர்களையும் தழுவி, அவர்களை சர்வதேச, தனித்த, மதச்சார் பற்ற உலகமாக மாற்றிவிட்டது. மனிதகுல வரலாற்றில் இது ஒரு தனித்த நிகழ்ச்சியாகும். இதை விளக்குகிற ஏதும் இருக்கிறதா? குர்ஆன் இதை விளக்குகிறது என்பது நமது வாதமாகும்.

அறிவியலும், தொழில்நுட்பமும் கடவுளில்லாக் கொள்கையுடைய ஐரோப்பாவிற்குப் புதிய ஆற்றலையும், வசீகரத்தையும் வழங்கி அதை யாரும் வெல்ல முடியாததாகக் காட்டிக்கொண்டதனால் ஐரோப்பிய புரட்சி மேலும் ஆச்சரியமளிக்கக் கூடியதாகியது. நீராவி இயந்திரம், ரயில், மோட்டார் வாகனம், விமானம் போன்றவை உலகத்தின் போக்குவரத்தையும், போர் முறையையும் முழுமையாக மாற்றி விட்டன. அதன் பலனாக மனித வாழ்க்கை முறையும் அடியோடு மாறிப்போனது. மின்சாரம் இரவை பகலாக மாற்றியது, இதுவும் மனித வாழ்க்கைமுறையை மாற்றியது. தொலைபேசியும், தந்தியும் நீண்ட தொலைவிலிருந்தும் உடனடி தகவல்களைப் பெற்றுத்தந்தது. இதுவும் மனித வாழ்க்கையை மாற்றியது. பெண்ணாதிக்கப் புரட்சி பெண்களுக்கு சுதந்திரத்தையும், குர்ஆன் அல்லாஹ்வின் கட்டளைப்படி ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் அமைத்திருக்கின்ற வித்தியாசத்தை **(92:1-4)** எதிர்த்துக்கொண்டு சமூகத்தில் ஆண் மகன் வகிக்கும் பங்களிப்புக்கு நிகராக வேலையில் ஈடுபடும் ஆற்றலையும் வழங்கியிருக்

கிறது. அது பெண் சுதந்திரத்தைப் பறைசாற்றுகிறது! இது மனித வாழ்க்கை அனைத்திலும் மிக முக்கியமான மாற்றம் ஏற்படுவதற்குக் காரணமாக அமைந்தது.

புதிய ஐரோப்பா, பேராசை, காமம் ஆகிய உணர்வுகளை மட்டுமே முன்னிருத்துவதன்வழி மனிதகுலத்தின் மீது தன் தொடச்சியான தாக்குதலின் பால் கவனம் செலுத்தியது. பாலினப்புரட்சி, இயற்கை யாகவும், இயற்கைக்கு அப்பாற்பட்டும், நினைத்த நேரத்தில் உடனடியாகவும், இலவசமாகவும் கிடைக்கின்ற பாலின்பத்திற்கு வாக்களித்தது. திருமணம் என்பது தேவையற்றதாகக் கருப்படுவது அதிகரித்து, திருமணமின்றி சேர்ந்து வாழ்வது மரியாதையானது என்ற கண்ணோட்டம் வந்திருக்கிறது. முன்னாள் அமெரிக்க ஜனாதிபதி ஜான் எஃப் கென்னடியின் மனைவி, ஜாக்லின் கென்னடி, அமெரிக்க நட்சத்திர நடிகருடன் தன் வாழ்நாளின் இறுதிவரை திருமணமில் லாமலே வாழ்ந்தார். அவர் மரணித்தபோது அவருடன் இருந்த அந்த யூதர் அவரைத் தன் கூட்டாளி என்று உலகத்திற்கு அறிமுகம் செய்தார்.

ஓரினச்சேர்க்கை பாலுணர்வை தீர்த்துக் கொள்வதற்கான மாற்றுவழி என்று விவாதிக்கப்பட்டு பொதுமக்களின் மனசாட்சியால் அங்கீகரிக்கப்பட்டு விட்டது. ஒரு ஓரினச்சேர்க்கை பழக்கமுள்ள பாதிரி குற்றமற்றவராக சமூகத்தில் வலம் வருவது மட்டுமன்றி தொடர்ச்சி யாக வழிபாடுகளை நடத்தவும் அனுமதிக்கப்படுவார் என்ற நிலை இருக்கிறது. ஓரினச்சேர்க்கை என்ற வார்த்தையே இயற்கைக்கு மாற்றமான பாலின்பம் என்று மக்களால் வெறுக்கப்படுவதால் அதற்கு "கே" என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டிருக்கிறது. சந்தேகம் கொள்ளாத பொதுஜனம் திட்டமிட்டு அதன் பெயர் மாற்றம் செய்யப்பட்டிருக்கிறது என்று கூட அறியாமல் அதை ஏற்றுக்கொண்டிருக்கிறது.

நுகர்வுப்புரட்சி மனிதகுலத்திற்கு சலிப்பில்லாமல புதுப்புதுப் பொருட்களை வாங்கிக் குவிக்கிற பசியை ஏற்படுத்தியிருக்கிறது. இப்படிப் பொருட்களை வாங்கிக் குவிக்கிற மனப்பான்மை, சமைய லறை, குளியலறை, கழிவறைவரை நுழைந்து விட்டது, வீடுகளின் புராதனம் என்பது அடியோடு மாறிவிட்டது.

நவீன கடவுளில்லாக் கொள்கையுடைய ஐரோப்பா, ஆற்றலைப் பயன்படுத்தி உலகமனைத்தையும் வென்று அடிமையாக்க நினைக்கிறது.

கவர்ச்சியைப் பயன்படுத்தி, மனிதகுலம் முழுவதையும் தரம்கெட்ட ஐரோப்பிய வாழ்க்கை முறையையும், நுகர்வு கலாச்சாரத்தையும் நகல் எடுக்க வைக்கிறது. 1776, 1787, -1800, 1917 ஆகிய ஆண்டுகளில், அமெரிக்கா, ஃபிரான்ஸ், போல்ஸ்விக் ஆகிய நாடுகளில் ஏற்பட்ட புரட்சிகளில் கடவுளில்லா ஐரோப்பாவின் புரட்சி தன் அரசியல் திருப்பு முனையைக் கண்டது. ரிபாவின் அடிப்படையிலான பொருளாதார அமைப்பின் வருகைதான் பொருளாதார திருப்புமுனையாக இருந்தது. இது முழுவதும் புரொடெஸ்டண்டுகளின் புரட்சியின் மூலமே சாதிக்கப் பட்டது. பெண் விடுதலைப் போராட்டத்துடன் நடைபெற்ற பெண்ணிய புரட்சிதான் கலாச்சாரத்தின் திருப்புமுனையாக இருந்தது. ஆனால் அறிவியல், தொழில்நுட்பத்தின் துணையில்லாமல் இந்தப் புரட்சிகள் எதுவும் நடைபெற சாத்தியமில்லை.

## நவீன மதச்சார்பற்ற தேசத்தின் குஃப்ரும், ஷிர்க்கும்

கடவுள் அவனது வல்லமை, அதிகாரம் ஆகியவை மீது நம்பிக்கை அடிப்படையில் கட்டமைக்கப்பட்ட ஐரோப்பிய கிருஸ்துவ நாகரிகம் அதன் புரட்சியின் இறுதியில், இபுராஹீம் நபியின் கடவுளை வல்லமையுள்ளவனாகவும், அவனது அதிகாரத்தை இறுதியானதாகவும் அவர்களால் அங்கீகரிக்க முடியவில்லை. நவீன மதச்சார்பற்ற தேசம் இன்று உயர் அதிகாரம் பெற்றதாகிவிட்டது அது ஷிர்க் ஆகும். (ஷிர்க் என்பது இப்றாஹீம் நபியின் இறைவனைத் தவிர வேறு கடவுள்களை வணங்குவதும், அந்த ஓரிறைவனை வணங்குவதில் எந்த விதமான ஊழல் செய்தலுமாகும். குஃப்ர் என்பது உண்மையை மறுத்தல்.) நவீன மதச்சார்பற்ற தேசத்தின் சட்டஅதிகாரம்தான் உயர் அதிகாரமுடையதாகக் கருதப்படுகிறது, இது ஷிர்க் ஆகும்! இபுராஹீம் நபியின் இறைவன் ஹராமாக்கி (தடுத்து) இருப்பதை மதச்சார்பற்ற தேசத்தின் அதிகாரம் ஹலாலாக (அனுமதிக்கப்பட்டதாக) ஆக்கி அதைச் செய்வதற்கு எந்தத் தயக்கமில்லாமல் ஆக்கிவிடும் - இது தான் ஷிர்க்!

ஷிர்க் பெரும்பாவம். உண்மையில் அனைத்து பாவங்களிலும் ஷிர்க் தான் மிகப்பெரியது. அல்லாஹ் மன்னிக்க மாட்டேன் என்று திட்டவட்டமாகக் கூறிய பாவம் தான் ஷிர்க்.

إِنَّ اللَّهَ لَا يَغْفِرُ أَنْ يُشْرَكَ بِهِ وَيَغْفِرُ مَا دُونَ ذَٰلِكَ لِمَنْ يَشَاءُ وَمَنْ يُشْرِكْ بِاللَّهِ فَقَدِ افْتَرَىٰ إِثْمًا عَظِيمًا

நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணைவைப்பதை மன்னிக்கவே மாட்டான். இதனைத் தவிர (மற்ற) எதனையும், தான் நாடியோருக்கு மன்னிப்பான். எவர்கள் அல்லாஹ்வுக்கு இணை வைக்கின்றார்களோ அவர்கள், நிச்சயமாக மிகப்பெரும் பாவத்தையே கற்பனை செய்கின்றார்கள்.

**(அல்குர்ஆன், 4:48)**

எவர்கள் இணைவைத்து அந்த நிலையிலேயே மரணிக்கிறார்களோ, அவர்கள் சொர்க்கத்தில் நுழையவே முடியாது.

إِنَّهُ مَنْ يُشْرِكْ بِاللَّهِ فَقَدْ حَرَّمَ اللَّهُ عَلَيْهِ الْجَنَّةَ وَمَأْوَاهُ النَّارُ وَمَا لِلظَّالِمِينَ مِنْ أَنْصَارٍ

எவன் அல்லாஹ்வுக்கு இணை வைக்கிறானோ அவனுக்கு நிச்சயமாக அல்லாஹ் சுவனபதியைத் தடுத்துவிடுகிறான். அவன் தங்குமிடம் நரகம் தான். (இத்தகைய) அக்கிரமக்காரர்களுக்கு (மறுமையில்) உதவி செய்வோர் ஒருவருமில்லை.

**(அல்குர்ஆன் 5:72)**

சிலைகளை வணங்குவது மிக வெளிப்படையான இணை வைப்பு. இந்த வித இணைவைப்பு இன்று உலகில் வெகுவாகக் குறைந்துவிட்டது. ஆனால் இந்துக்கள் பிடிவாதமாக அதை பிடித் துக் கொண்டிருக்கிறார்கள். அவ்வாறே ஓர் இறை நம்பிக்கையாளர் இந்துக் களின் இணைவைத்தலை இனம்காண தவறக்கூடாது! மேலும் குர் ஆன் முஃமின்கள் யூதர்களையும், இணைவைப்பவர்களையும் தங்கள் விரோதிகளாகவும் வெறுப்பிற்குரியவர்களாகவும் காண்பார்கள் என தெளிவாக எச்சரித்திருக்கிறது.

لِلَّذِينَ آمَنُوا الْيَهُودَ وَالَّذِينَ أَشْرَكُوا

(நபியே) யூதர்களும், இணைவைத்து வணங்குவோரும், விசுவாசிகளுக்கு மனிதர்கள் யாவரிலும் கொடிய விரோதிகளாக இருப்பதை நிச்சயமாக நீர் கா ண்பீர்!

**(அல்குர்ஆன், 5:82)**

இணைவைத்தலின் மற்ற வடிவங்களையும் குர்ஆன் கூறியிருக்கிறது. உதாரணத்திற்கு, பிர்அவ்ன் மூஸா நபியிடம் நான்தான் உயர்ந்த கடவுள் என்று கூறினான், சபையோரிடம் சபையோரே! என்னைத் தவிர வேறு கடவுள்கள் இருப்பதாக நான் கருதவில்லை என்றான். இது ஷிர்க்! எகிப்து மக்களால் பிர்அவ்ன் வணங்கப்படுவது என்பது, அதிகாரம் முழுவதையும் அவனிடத்தில் ஒப்படைத்து, எகிப்து மண்ணில் அவனுடைய சட்டமே உயர் அங்கீகாரம் உடையதாக ஆக்குவதாகும். இதுவும் ஷிர்க் ஆகும்.

பிர்அவ்னைப் போல யாரெல்லாம் சட்டத்தை உருவாக்கி அதை அல்லாஹ்வுடைய சட்டத்திற்கு எதிரானதாக ஆக்குகிறார்களோ அவர்களை குர்ஆன் பல இடங்களில் எச்சரித்துள்ளது. எனினும் இறைவழி காட்டுதல் சில மக்களை (யூதர்கள், கிருஸ்துவர்கள், முஸ்லிம்கள்) அடைந்து, அவர்கள் அதை ஏற்றுக்கொண்ட பிறகு நிலை வேறு. அப்படிப்பட்ட மக்களுக்கு ஒரு நிலப்பரப்பை ஆளுகின்ற வாய்ப்பு கிடைக்கும்போது (பாகிஸ்தான் உருவாக்கப்பட்டபோது இந்திய முஸ்லிம்களைப்போல்) அங்கு இறை சட்டத்தின் அடிப்படையில் நாட்டை கட்டமைக்கத் தவறினால், குர்ஆன் அவர்களை குஃப்ர், (நிராகரிப்பு) துல்ம் (அநியாயம்) ஃபிஸ்க் (பாவம்) புரிந்தவர்களாகக் குற்றம்சாட்டுகிறது.

وَمَنْ لَمْ يَحْكُمْ بِمَا أَنْزَلَ اللَّهُ فَأُولَئِكَ هُمُ الْكَافِرُونَ

وَمَنْ لَمْ يَحْكُمْ بِمَا أَنْزَلَ اللَّهُ فَأُولَئِكَ هُمُ الظَّالِمُونَ

وَمَنْ لَمْ يَحْكُمْ بِمَا أَنْزَلَ اللَّهُ فَأُولَئِكَ هُمُ الْفَاسِقُونَ

எவர்கள் அல்லாஹ் அருளியவற்றைக் கொண்டு தீர்ப்பளிக்கவில்லையோ அவர்கள், நிச்சயமாக நிராகரிப்பவர்களே!

எவர்கள் அல்லாஹ் அருளியவற்றைக் கொண்டு தீர்ப்பளிக்கவில்லையோ அவர்கள், நிச்சயமாக அக்கிரமக்காரர்கள்தாம்!

எவர்கள் அல்லாஹ் அருளியவற்றைக் கொண்டு தீர்ப்பளிக்கவில்லையோ அவர்கள், நிச்சயமாக பாவிகள்தாம்!

**(அல்குர்ஆன், 5: 44 - 47)**

பிர்அவனின் தீர்மானமும், எகிப்து மண்ணில் அவனுடைய சர்வாதிகாரச் சட்டமும் ஷிர்க்கின் செயல்பாடுகள் என்று கருதும்போது, நவீன மதச்சார்பற்ற தேசம் அதைக் கடைப்பிடித்தால் அது ஷிர்க் அல்லாமல் வேறென்ன! அல்லாஹ் அருளியவற்றைக் கொண்டு தீர்ப்புச் செய்யாதவர்களை நிராகரித்தவர்களாகவும், அநியாயம் செய்தவர்களாகவும், பாவிகளாகவும் அல்லாஹ் கூறுவதால் நவீன மதச்சார்பின்மை மிகச் சரியாக அதைத்தான் செய்கின்றது, மேலும் தவ்ராத்தையும், இன்ஜீலையும், குர்ஆனையும் ஏற்றுக்கொண்ட பிறகு, யூதர்களும், கிருஸ்துவர்களும், முஸ்லிம்களும் மதச்சார்பற்ற தேசத்தை நிறுவியிருக்கின்றனர். அவர்கள் குஃப்ர், துல்ம், ஃபிஸ்க் ஆகிவற்றை செய்த பாவத்திற்குரியவர்களே!

ஒரு முஸ்லிமோ, கிருஸ்துவரோ, யூதரோ ஒரு நவீன மதச்சார்பற்ற நாட்டில் தேசியத் தேர்தலில் வாக்களிப்பார் எனில், அவர் வாக்களித்த கட்சிக்கு தன்னை நிர்வாகம் செய்கிற உரிமையை வழங்கியதாகவே ஆகிறது. அரசாங்கத்தை அக்கட்சி ஷிர்க்கிலோ, குஃப்ரிலோ, ஃபிஸ்கிலோ ஈடுபடுத்தினால் வாக்களித்தவர்களும் (முஸ்லிம், கிருஸ்துவர், யூதர்) அந்த ஷிர்க்கை, குஃப்ரை, ஃபிஸ்கைப் பின்பற்றியவர்களாவர். அல்லாஹ் ஹராமாக்கியதை (தடுத்ததை) ஹலால் (அனுமதிக்கப்பட்டது) ஆக்குவதை குர்ஆன் ஷிர்க் என்று குற்றச்சாட்டுகிறது. இவ்வாறே கிருஸ்துவர்களும், யூதர்களும் மிகப்பெரிய பாவம் செய்துவிட்டதாகக் குர்ஆனில் வசனம் இறக்கியருளப்பட்டுள்ளது.

اتَّخَذُوا أَحْبَارَهُمْ وَرُهْبَانَهُمْ أَرْبَابًا مِنْ دُونِ اللَّهِ وَالْمَسِيحَ ابْنَ مَرْيَمَ وَمَا أُمِرُوا إِلَّا لِيَعْبُدُوا إِلَٰهًا وَاحِدًا لَا إِلَٰهَ إِلَّا هُوَ سُبْحَانَهُ عَمَّا يُشْرِكُونَ

இவர்கள் அல்லாஹ்வையன்றித் தங்கள் பாதிரிகளையும் சந்நியாசிகளையும், மர்யமுடைய மகன் மஸீஹையும், (தங்கள்) தெய்வங்களாக எடுத்துக் கொண்டிருக்கின்றனர். எனினும், ஒரே ஆண்டவனைத் தவிர மற்றெவரையும் வணங்கக் கூடாதென்றே, இவர்கள் (யாவரும்) ஏவப்பட்டிருக்கின்றனர் வணக்கத்திற்குரிய நாயன், அவனையன்றி வேறெவனும் இல்லை. அவர்கள் இணைவைக்கும் இவற்றை விட்டு அவன் மிகவும் பரிசுத்தமானவன்.

**(அல்குர்ஆன், 9:31)**

இந்தக் குர்ஆன் வசனம் இறங்கியபோது ஒருவர், கிருஸ்துவர்களும், யூதர்களும், தங்களுடைய பாதிரிகளையும், சந்நியாசிகளையும் வணங்குவதில்லை என்று ஆட்சேபம் தெரிவித்து, எப்படி அல்லாஹ்

இவ்வாறு குற்றம்சாட்டலாம்? என்று கேட்டார். அல்லாஹ் ஹராமாக (தடுக்கப்பட்டது) ஆக்கியிருப்பதை பாதிரிகள் ஹலாலாக (அனுமதிக்கப்பட்டது) ஆக்குவதில்லையா? அப்படியென்றால் அது ஷிர்க்தான் என்று நபி (ஸல்) கூறினார்கள். அப்படிப்பட்ட பாதிரிகளை மக்கள் (யூத கிருஸ்துவர்கள்) பின்பற்றுவதில்லையா? அப்படியென்றால் அதுவும் ஷிர்க் தான் என்றார்கள். சூதாட்டம், லாட்டரி, மது குடிப்பது, விற்பது, வட்டியில் ஈடுபடுவது ஆகியவை ஹராம் ஆக்கப்பட்டவைகளை ஹலால் ஆக்கியதில் அடங்கும். இவற்றை ஹலால் ஆக்குவதற்காகச் சில சமயம் தவ்ராத்கூட மாற்றி எழுதப்பட்டுள்ளது. (இபுராஹீம் நபியின் மார்க்கமும், இஸ்ரேல் தேசமும் என்ற நம்முடைய நூலைக் காண்க)

لُعِنَ الَّذِينَ كَفَرُوا مِنْ بَنِي إِسْرَائِيلَ عَلَى لِسَانِ دَاوُدَ وَعِيسَى ابْنِ مَرْيَمَ ذَلِكَ بِمَا عَصَوْا
وَكَانُوا يَعْتَدُونَ كَانُوا لَا يَتَنَاهَوْنَ عَنْ مُنْكَرٍ فَعَلُوهُ لَبِئْسَ مَا كَانُوا يَفْعَلُونَ

யூதர்கள் இந்நடவடிக்கைகளில் ஈடுபட்டபோது தாவூத் நபியும், ஈஸா நபியும் அவர்களைச் சபித்துள்ளனர்.

இஸ்ராயீலின் சந்ததிகளில் எவர்கள் நிராகரித்தார்களோ அவர்கள் தாவூத் மர்யமுடைய மகன் ஈஸா ஆகிய இவர்கள் நாவாலும் சபிக்கப் பட்டேயிருக்கின்றனர். ஏனென்றால் அவர்கள் (அக்காலத்திலும்) வரம்பு கடந்தும் பாவம் செய்தும் வந்தனர்.

(அன்றி) அவர்கள் செய்து வந்த எந்த விலக்கப்பட்ட காரியத்தையும் ஒருவருக்கொருவர் தடை செய்யவுமில்லை. அவர்கள் செய்து கொண்டிருந்தவையும் நிச்சயமாக மிகத் தீயவை.

**(அல்குர்ஆன், 5:78-79)**

எவர்கள் ஒரு நபியின் சாபத்துடன் மரணித்தார்களோ, நரக நெருப்பிலிருந்து காப்பற்றப்படுவதற்கு எந்த முகாந்திரமும் இல்லை. உண்மையில் ஒரு சமூகம் இபுராஹீம் நபியின் இறைவனை வணங்குவதாக உறுதியளித்து விட்டு அவன் தடுத்திருப்பவற்றை அனுமதிக்கப்பட்டதாக ஆக்கிக் கொள்வதுவதும், அவன் அனுமதியளித்திருப்பவற்றைத் தடை செய்வதும் நயவஞ்சகத்தின் உச்சமாகும்.

الْمُنَافِقُونَ وَالْمُنَافِقَاتُ بَعْضُهُمْ مِنْ بَعْضٍ يَأْمُرُونَ بِالْمُنْكَرِ وَيَنْهَوْنَ عَنِ الْمَعْرُوفِ
وَيَقْبِضُونَ أَيْدِيَهُمْ نَسُوا اللَّهَ فَنَسِيَهُمْ إِنَّ الْمُنَافِقِينَ هُمُ الْفَاسِقُونَ

ஆணாயினும், பெண்ணாயினும் நயவஞ்சகர் ஒரே இனத்தவரே! அவர்கள் (யாவருமே) பாவமான காரியங்கைகச் செய்யும்படித் தூண்டுவார்கள் நன்மையான காரியங்களைத் தடை செய்வார்கள். (செலவு செய்ய அவசியமான சமயங்களில்) தங்கள் கைகளை மூடிக்கொள்வார்கள் இவர்கள் அல்லாஹ்வை மறந்துவிட்டார்கள்; ஆதலால் அல்லாஹ்வும் அவர்களை மறந்துவிட்டான். நிச்சயமாக இந்நயவஞ்சகர்கள் தாம் (சதிசெய்யும் கொடிய) பாவிகள்.

**(அல்குர்ஆன், 9:67)**

அல்லாஹ் ஹராமாக்கி இருப்பதை பாதிரிகள் ஹலால் ஆக்குவது ஷிர்க் என்றால் ஒர் அரசாங்கம் அதைச் செய்தாலும் அதேபோல் ஷிர்குத் தான். அந்தச் சூழலில் அது நயவஞ்சகம் என்றால் இன்றும் அது நயவஞ்சகம் தான். மேலும் அது அன்றைய நாளின் நபிமார்களின் சாபத்திற்குரியது என்றால் இன்றும் அதே போலத்தான்.

நவீன மதச்சார்பற்ற தேசத்தின் அரசியல் தேர்தல்களில் முஸ்லிம்கள் பங்குபெறுவது நன்மை தீமைகளைச் சீர்தூக்கிப் பார்ப்பதுதான், இந்த விஷயத்தை ஆய்வு செய்வதற்கான அளவுகோள். மதச் சார்பற்ற தேசத்தை ஆதரிக்ககூடியவர்கள் அதன் மேலோட்டமான நன்மைகளைக் கண்டு சறுகுகிறார்கள். இதுதான் மனித வரலாற்றில் என்றும் தோன்றியிராத முன்னேற்றமான, வளர்ச்சியடைந்த அரசியல் அமைப்பு என சிலர் வாதிடுகின்றனர். நாம் அரசியல் தேர்தல்களில் பங்கெடுக்கவில்லையெனில் நம் உரிமைகளைப் பெற்றுத் தருகிற அரசியல் பிரதிநிதித்துவம் இல்லாமலாகிவிடும் எனச் சிலர் கூறுகின்றனர் கடவுளில்லா அரசியல் அமைப்பை மாற்றும் போராட்டத்தில் வெற்றி பெறுவதற்காக அரசியல் தேர்தல்களில் பங்கெடுப்பது கட்டாயம் என்று கூறுவது மிகவும் உச்சபட்சமான வாதமாக வடிவம் பெற்றிருக்கிறது. ஷிர்க் இங்குத் தந்திரமான முறையில் போதிக்கப்படுகிறது. பொதுக் கண்ணோட்டத்தில்தான் நாங்கள் அரசியல் தேர்தல்களில் ஈடுபடுகிறோம் அதற்காக மதச்சார்பற்ற அமைப்பையோ, தேசத்தையோ நாங்கள் ஏற்றுக் கொள்ளப்போவதில்லை, இது எங்களை ஷிர்க்கிலிருந்து காப்பாற்றும் என்றும் கூறுகின்றனர்.

அரசியல் தேர்தல்களில் பங்குபெறுவது, உள்ளபடியே அந்த நோக்கங்களுக்காக என்றாலும், மதச்சார்பற்ற தேசத்தின் அம்சங்களை ஏற்றுக்கொண்டதாகவே ஆகும். பிர்அவ்ன் மூஸா நபியிடம் கூறிய அதே கூற்றைத்தான் மதச்சார்பற்ற தேசமும் கூறுகிறது.

தேசம் இறையாண்மை மிக்கது, தேசத்தின் சட்டமே உச்ச அதிகாரம் கொண்டது. அதன் அதிகாரமே ஆதாரமாகும், என்பது தான் அந்தக் கூற்று. அது ஷிர்க்! மதச்சார் பற்ற தேசத்தின் அரசியல் தேர்தல்களில் வாக்களிக்கும் மக்கள் தேசம் இறையாண்மை மிக்கது, அதன் சட்டம் உச்ச அதிகாரம் கொண்டது அதன் அதிகாரமே ஆதாரமானது என்பதை அதன் மூலம் ஏற்றுக்கொள்கின்றனர். இறை நம்பிக்கையாளர்கள் இப்படிப் பட்ட தேர்தல்களில் வாக்களிக்கும் போது ஷிர்க் செய்வதிலிருந்து தப்பமுடியாது.

இரண்டாவது, இறை நம்பிக்கையாளர்கள் மதச்சார்பற்ற தேசத்தின் தேர்தலில் வாக்களித்தால் அவர்கள் ஓர் அரசியல் கட்சிக்கு வாக்களித்ததாக ஆகும். அந்தக் கட்சி அரசாளுகின்ற நிலையில் அல்லாஹ் ஹராமாக்கி இருப்பதை ஹலால் ஆக்கினால் அல்லது இது போன்ற சட்டங்களை நிர்பந்தமாகக் கொண்டுவந்தால் அந்த அரசு ஷிர்க் செய்துவிட்டதாக ஆகிவிடும். இன்று உலகில் அரசுகளும், பாராளுமன்றங்களும் அனேகமாக அல்லாஹ் ஹராமாக்கிய அனைத்து விஷயங்களையும் ஹலால் ஆக்கி விட்டார்கள். இவ்வாறு ஷிர்க்கின் மேல் ஷிர்க் செய்கிற அரசியல் கட்சிகளுக்கு முஸ்லிம்கள் வாக்களித்தால் அப்படிப்பட்ட அரசியல் கட்சிகள் தங்களை ஆள்வதற்குப் பொருத்தமானவைதான் என்று ஏற்றுக்கொண்டது போலாகிவிடும். இவ்வாறு இறை நம்பிக்கையாளர்கள் அவர்களை ஷிர்க், குஃப்ர், ஃபிஸ்க் ஆகியவற்றில் பின்பற்றுகிறார்கள்.

மூன்றாவது, இந்த வழிமுறை நபி (ஸல்) அவர்களின் சுன்னத்தை (நடைமுறை)க் கைவிடுவதாகவும் மீறுவதாகவும் ஆகிவிடுகிறது.

இன்று உலகிலிருக்கிற அரசுகளும், அரசியல் கட்சிகளும் அல்லாஹ் ஹராமாக ஆக்கியிருப்பதை, ஹலால் ஆக ஆக்குவதில் பெருமை கொள்கிறார்கள். இந்த அத்தியாயம் இவ்வாறு பல உதாரணங்களை வழங்கியிருக்கிறது. இப்படிப்பட்ட அரசியல் கட்சிகளுக்கு வாக்களிப்பதற்கு முன் முஸ்லிம்கள் யோசிக்க வேண்டும். ஹராமாக்கப்பட்டதை செய்வதில் பெருமை கொள்கின்ற மக்கள் அதற்கான பாதிப்பை அடைந்தே தீருவார்கள். நவீன மதச்சார்பற்ற தேசம் அதற்கான விலையை கொடுத்துக் கொண்டுதானிருக்கிறது. அதன் விலை என்ன?

فَلَمَّا عَتَوْا عَنْ مَا نُهُوا عَنْهُ قُلْنَا لَهُمْ كُونُوا قِرَدَةً خَاسِئِينَ

ஆகவே தடுக்கப்பட்டிருந்த வரம்பை அவர்கள் மீறவே, அவர்களை நோக்கி, நீங்கள் சிறுமைப்பட்ட குரங்குகளாகிவிடுங்கள் என்று நாம் (சபித்துக்) கூறினோம்.

**(அல்குர்ஆன், 7: 166)**

அவர்கள் மிருகங்களைப்போல் தங்கள் உணர்வுகளையும் இச்சைகளையும் தீர்த்துக்கொள்கிறார்கள். இறுதிக் காலம் வரும்போது, கழுதைகளைப்போல் பொது இடத்தில் உடலுறவு கொள்வார்கள்.

நவீன மதச்சார்பற்ற தேசம் வட்டி அடிப்படையில் கடன் வாங்குவதையும் கொடுப்பதையும் சட்டப்பூர்வமான தாக்கியிருக்கிறது. இன்று உலகம் முழுவதும் மதச்சார்பற்ற தேசங்கள் சூதாட்டம் மது அருந்துவது விற்பனை செய்வது, பன்றி இறைச்சி, ஆகிய வற்றைச் சட்டப்பூர்வமாக்கியிருக்கிறது, மேலும் எப்பொழுதும் தொழிலாளிகளை முதலாளிகளின் அடிமைகளாக வைத்திருக்கச் செய்யும் காகிதப் பணம் மதிப்பை இழக்கச் செய்கிறது. கருக்கலைப்பு ஓரினச் சேர்க்கை, விபச்சாரம், திருமணமாகாமல் உடலுறவு ஆகியவை அனுமதிக்கப்பட்டவையாக மாறியிருக்கின்றன. தங்கள் குழந்தைகளை விற்பனை செய்யும் விளம்பரம் அமெரிக்காவில் வியாபாரமாகியிருக்கிறது. எதிர்பாராமல் வாய்ப்புக் கிடைத்தவர்கள் தங்கள் காம இச்சையைத் தீர்த்துக்கொள்வதற்குப் பயன்படுத்த நடமாடும் ஆணுறை விற்பனைச் சேவையையும் வைத்திருக்கிறார்கள்.

ஒரு மகன், மகளை விட இருமடங்கு சொத்தில் பங்கு பெறுவார் என்ற அல்லாஹ்வின் சட்டத்தை உலகின் அநேக நவீன மதச்சார்பற்ற தேசங்கள் அங்கீகரிக்கவில்லை. அவர்கள் அச்சட்டத்தைப் பெண்ணுக்கு எதிரானதாகக் கருதி அல்லாஹ்வுடைய சட்டத்திற்கு எதிராகத் தங்களுடைய சொந்த சட்டத்தை உருவாக்கியிருக்கிறார்கள். உண்மையில் அது சட்டமே அல்ல. ஒரு மனிதன் தன் முழுச் சொத்தையும் ஏதோ கழுதைக்கு விட்டுச்செல்லலாம், ஆனால் தன் மனைவி மக்களுக்கு விட்டுச்செல்ல முடியாது. ஒரு ஆண்மகன் ஒரே நேரத்தில் ஒன்றுக்கும் அதிகமான திருமணங்களைச் செய்ய முடியாது. ஏனெனில் அது பெண்ணுக்குப் பாராபட்சமானது எனக்கூறி நவீன மதச்சார்பற்ற தேசங்கள் அதைத் தடை செய்திருக்கின்றன. மாறாக ஒரு ஆணுக்கு ஒன்றுக்கு மேல் இருக்கக்கூடாது என்பதைக் கட்டாயமாகவே ஆக்கியிருக்கிறார்கள். இவ்வாறு அல்லாஹ்வுடைய சட்டத்திலிருக்கும் பாரபட்சம் களையப்படுகிறது என்று மார்

தட்டுகிறார்கள். இந்த மாற்றம் திருமணத்தைக் கேலி செய்யும் பாலுணர்வுப் புரட்சியை வரவழைத்திருக்கிறது. மனைவி எந்த விதத்திலும் கணவனுக்குக் கட்டுப்படுவது ஆண் பெண்ணுக்கிடையில் இருக்கின்ற சமவுரிமைக்கு பாதிப்பு ஏற்படுத்துவதால் அது கட்டாயம் இல்லை. இன்றிருக்கிற நவீன மதச்சார்பின்மை கடவுளில்லா கவர்ச்சிகரமான நிலையை உலகம் இதுவரை கண்டதில்லை. இது ஒரு பரிதாபத்திற்குரிய அறிகுறியாகும்.

இபுராஹீம் நபியின் மார்க்கத்தின் வரையறுக்கப்பட்ட கூறுகளில் குஃப்ருக்கோ, ஷிர்க்கிற்கோ, இடமில்லை. என்றாலும் கடவுளில்லாத ஐரோப்பிய கிருஸ்துவ நாகரிகம் என்று அறியப்படுகிற மதச்சார்பற்ற அரசியல் அமைப்பு குஃப்ர், ஷிர்க்கின் அடிப்படையில் கட்டமைக்கப்பட்டது. ஐக்கிய நாடுகள் சபையும் ஷிர்க்கின் அடிப்படையில்தான் நிர்மாணிக்கப் பட்டது. ஐக்கிய நாடுகளின் அதிகாரப்பத்திரம் அல்லாஹ் மிகப் பெரியவன் என்ற அந்தஸ்தை அல்லாஹ்வுக்கு வழங்கவில்லை. அப்பத்திரத்தின் 24, 25-வது விதி, சர்வதேச அமைதி, பாதுகாப்பு குறித்த விஷயத்தில் பாதுகாப்பு கவின்ஸிலின் அதிகாரமே இறுதியானது என்று கூறுகிறது வேறு வார்த்தைகளில் கூறவேண்டுமெனில் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் விடப் பாதுகாப்பு கவுன்ஸிலே அதிக அதிகாரம் மிக்கது. அது ஷிர்க்!

பைத்துல்முகத்தஸில் (இஸ்ரேல் தேசம்) மதச்சார்பற்ற தேசத்தை இஸ்ரவேலர்கள் ஏற்றுக்கொண்டிருப்பதை எப்படி விளக்குவது? உலகம் முழுவதும் முஸ்லிம்கள் மதச்சார்பற்ற தேசங்களை (துருக்கி, சவூதி அரேபியா, பாகிஸ்தான், மலேசியா) கிலாஃபத்திற்கு நிகரானதாக ஏற்றுக் கொண்டிருப்பதை எப்படி விளக்குவது? கிலாஃபத் என்றால் என்ன என்று விளக்கி, அதை நவீன மதச்சார்பற்ற தேசங்களோடு ஒப்பிட்டு பார்ப்பதற்கு இது சரியான தருணம். முஸ்லிம்கள்கூட இதுபற்றி அறியாமல் இருக்கிறார்கள் என்கிற அளவுக்கு உலகம் அறியாமையில் இருக்கிறது.

## கிலாஃபத்தும், நவீன மதச்சார்பின்மையும்

இஸ்லாமிய கிலாஃபத் என்பது, அல்லாஹ்வுடைய வல்லமையறிந்து ஹலால் ஹராமை நிர்ணயம் செய்யும் அதிகாரம் அவனுக்கு மட்டுமே இருக்கிறது என்ற கருத்தியல் கொண்ட அரசியல் அமைப்புத்தான். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும், முஸ்லிம்களில் அதிகார முள்ளவர்களுக்கும் கட்டுப்படுவதில்தான் கிலாஃபத் உருவாகும்.

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا أَطِيعُوا اللَّهَ وَأَطِيعُوا الرَّسُولَ وَأُولِي الْأَمْرِ

விசுவாசிகளே! நீங்கள் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டு நடங்கள். (அவ்வாறே அல்லாஹ்வுடைய) தூதருக்கும், உங்கள் அதிபருக்கும் வழிப்பட்டு நடங்கள்.

**(அல்குர்ஆன், 4:59)**

விசுவாசம் பங்கு வைக்கப்படுவதை இஸ்லாம் விரும்பவில்லை. அதாவது ஒருவர் தன் விசுவாசத்தைத் தன் நாட்டின் மீதும், இன்னொருவர் விசுவாசத்தை அல்லாஹ்வின் வல்லமை மீதும் அவனுடைய அதிகாரமே இறுதியானது என்பதன் மீதும் விசுவாசம் காட்டுவது. (மார்க்க சம்பந்தப்பட்ட உலகம், அரசியல் சம்மந்தப்பட்ட உலகம்) அல்லாஹுத்தஆலா தான், ஆரம்பமானவன், முடிவானவன், வெளிப்படையாவன், மறைவானவன், **(அல்குர்ஆன், 57:3)** என அல்லாஹ் குர்ஆனில் கூறுவதால் இரு உலகமாகப் பிரிக்க முடியாது. கீழ்வருமாறு குர்ஆன் இறைநம்பிக்கையாளர்களிடம் உறுதி மொழி கூறச் சொல்வதால் இறுதி அங்கீகாரமும் அதிகாரமும் அல்லாஹ்வுக்கே வழங்கப்படவேண்டும்.

قُلْ إِنَّ صَلَاتِي وَنُسُكِي وَمَحْيَايَ وَمَمَاتِي لِلَّهِ رَبِّ الْعَالَمِينَ ﴿١٦٢﴾

நீர் கூறும் நிச்சயமாக என்னுடைய தொழுகையும் என்னுடைய தியாகமும் என் வாழ்வும் என் மரணமும் உலகத்தாரைப் படைத்துப் போஷித்துப் பரிபக்குவப்படுத்தும் அல்லாஹ்வுக்கே உரித்தானவை.

**(அல்குர்ஆன், 6 : 162)**

## பைத்துல்முகத்தஸூம், இஸ்ரேல் தேசத்தின் அரசியல் (ஷிர்க்கும்) இணைவைத்தலும்

உஸ்மானிய கிலாஃபத் குறிவைத்துத் தாக்கப்பட்டபோது ஐரோப்பா அந்த இஸ்லாமியமுறை அரசையும், அரசியலையும் அழித்து விட்டது. இஸ்லாமிய கிலாஃபத் இனி எப்பொழுதும் மீண்டெழாதவாறு ஐரோப்பா உறுதி செய்துகொண்டது. ஹிஜாஸில் மதச்சார்பற்ற சவூதி அரேபியா உருவாக்கத்தின் ஒத்துழைப்பின்போதுதான் ஐரோப்பா இதைச் செய்தது, மேலும் அதன் பாதுகாப்பிற்கு உத்திரவாதம் வழங்கியதன் மூலம் அதை மதச்சார்பற்ற தேசமாக உறுதி செய்துகொண்டே இருக்கிறது. (காண்க: நமது நூல், கிலாஃபத், ஹிஜாஸ், சவூதி வஹ்ஹாபி தேசம்)

ஏன் ஐரோப்பா இஸ்லாமிய கிலாஃபத்தை அழித்தது என்பதை விளக்குகின்ற எண்ணற்ற காரணங்கள் இருக்கின்றன. முதலாவது, பைத்துல்முகத்தஸை விடுவிக்கிற லட்சியத்தை அடைவதற்கும், யூதர்கள் பைத்துல்முகத்தஸுக்கு திரும்பி வருவதற்கும் உதவுவதற்காக. ஆனால் இரண்டாவது காரணம், ஐரோப்பிய முறை மதச்சார்பின்மை சர்வதேச மனித குலம் முழுவதும் ஏற்றுக்கொள்ள வகை செய்வதாகும். கிலாஃபத் அழிக்கப்பட்டபோது உடனே அந்த இடத்தில் துருக்கியின் நவீன மதச் சார்பற்ற நாடு அதற்குப் பகரமாக அமைக்கப்பட்டது. பிறகு ஷியா முஸ்லிம்களின் இதயமாகக் கருதப்படுகிற இடத்தில் மதச்சார்பற்ற ஈரான் உருவானது. சன்னி முஸ்லிம்களின் இதயமாக விளங்குகின்ற இடத்தில் சவூதி அரேபிய மதச்சார்பற்ற நாடு உருவானது. இறுதியாக இந்தியர்கள் பாகிஸ்தான் மதச்சார்பற்ற நாட்டை தழுவுவதற்கு மிக நேர்த்தியாக தயாராக்கப்பட்டார்கள். மூன்றாவது கடவுளில்லாத புதிய ஐரோப்பிய செயற்பட்டியலில் இறுதி லட்சியத்தைப் புரிந்து கொள்ளத் தவறியதும் கிலாஃபத் அழிவதற்குக் காரணமாக உள்ளது. ஐரோப்பாவின் லட்சியம் யூத இஸ்ரேல் தேசத்தை நிறுவி அதை ஜெருசலத்திலிருந்து உலகை ஆளும் வல்லரசாக்குவது தான்.

கிலாஃபத் அழிந்து போகும் என நபி (ஸல்) கூறிய முன்னறிவிப்புகள், கீழ்வரும் நபிமொழியில் வருகிறது.

ஈஸா நபி (அலை) இறங்கிவரும்போது, உங்களின் வழிகாட்டியாக இமாம் (அமீருல் முஃமினீன், அல்லது கலீஃபா) உங்களுக்கு மத்தியிலிருக்கும்போது நீங்கள் எப்படி இருப்பீர்கள்?

இந்த நபி மொழி மூன்று விஷயங்களை தெளிவாக்குகின்றன.

முதலாவது, இறுதிக் காலத்தில் கலீஃபா உலகத்தில் இருப்பார் என்று தெரிவிக்கிறது. மேலும் கலீஃபா உலகிலிருந்து அழிக்கப்பட்டு ஒருநாள் மீட்டுக்கொண்டு வரப்படுவார் என்ற முன்னறிவிப்பையும் இது தருகிறது. இரண்டாவது கிலாஃபத் மீட்கப்படுவதற்கு முன் முஸ்லிம்கள், முஸ்லிம் அல்லாதவர்களின் கட்டுப்பாட்டிலும் ஆதிக்கத்திலும் ஆட்சியிலும் வாழ்வார்கள். இது துல்லியமாக இன்று நாம் வாழ்கின்ற காலம் தான். மூன்றாவது கிலாஃபத் மீட்கப்படுவதும் மர்யமின் மகன் ஈஸா நபியின் வருகையும் சமகாலத்திற் குரியவையாக இருக்கும். ஈஸா நபி (அலை) திரும்பி வந்து உலகம் முழுவதையும் ஜெருசலத்திலிருந்து நீதமான அரசராக இருந்து அல்லாஹ்வின் சட்டங்களைச் செயற் படுத்தி ஆட்சி செய்வார்கள் என்று நாம் அறிந்ததிலிருந்து நவீன மதச்சார்பற்ற இஸ்ரேல் தேசம் பைத்துல்முகத்தஸில் அதிகாரப்பூர்வ இஸ்லாமிய அர சாக மதச்சார்பற்ற இஸ்ரேல் என்ற ஷிர்க்கிலிருந்து விடுபட்டதாக மாறும் என்று கணிக்கமுடிகிறது.

மதச்சார்பற்ற இஸ்லாமிய தேசங்களை இன்னும் காப்பாற்று கின்ற நோக்கில் பிடிவாதமாக இருப்பார்களேயானால் கிலாஃபத் மீட்டெடுக் கப்படுவது சம்பந்தமாக நபி (ஸல்) அவர்களின் முன்னறிவிப் புக்காக காத்திருக்கட்டும். நமது கணிப்பின்படி அந்த முன்னறிவிப்பு இன்னும் ஐம்பது ஆண்டுகளில் நடைபெறலாம்.

## நவீன மதச்சார்பின்மையின் நன்மைகள்

பகிரங்கமாக தென்படும் சில நன்மைகளும், அதன் குஃப்ர், ஷிர்க் என்னும் தன்மையை மறைத்தலும் இல்லாமலிருந்தால் மதச் சார்பின்மை, ஐரோப்பிய கிருஸ்துவர்கள் ஐரோப்பிய யூதர்கள், அல்லது முஸ்லிம்களால் ஏற்றுக்கொள்ளத்தக்கதாக ஆகமுடியாது. அந்த நன் மைகள் என்ன? ஐரோப்பிய அடக்குமுறை செலுத்தும் கிருஸ்துவ மத ஆட்சிக்கு பதிலடி கொடுக்கும் விதமாகவும், ஐரோப்பிய சர்ச்சின் ஆதிக்கத்தை எதிர்க்கிற நோக்கத்திலும்தான் நவீன மதச்சார்பின்மை உருவானது. நவீன மதச் சார்பின்மை ஒரு புதிய, முழுமையான, அறிவுக்கு தடைவிதிக்காத, எல்லா மனிதர்களுக்கும் மத உரிமையும், மத சகிப்புத்தன்மையும் வழங்குகிற பைபிளை அறிமுகம் செய்து சர்ச்சுக்கு சவால்விட்டது. அன்றிருந்த மதங்களுக்கு மத்தியில் அமைதியை ஏற்படுத்தும் ஒரு அரசியல் அமைப்பையும் அது

நிறுவியது. இவ்வாறு பல நூற்றாண்டுகளாக ஐரோப்பா முழுவதையும் பிடித்துக்கொண்டிருந்த ரத்தவெறி பிடித்த மதத்திற்கு ஒரு முடிவு வந்தது.

மேலும் தன்னுடைய புதிய கண்டுபிடிப்பால் மனிதர்களின் மனங்களையும் எண்ணங்களையும் கவர்ந்தது. அவை கண்டுபிடித்ததில் அதிகமானது மனிதர்களால் மதத்தின் எந்த நம்பிக்கைகளைப் பற்றியும் கவலைப்படாமல் நவீன காலத்திற்கு இன்றியமையாதது என்று ஏற்றுக் கொள்ளப்பட்டது. உதாரணம், மின்சாரம், வானொலி, தொலைபேசி, தொலை நகல், பிரதி எடுக்கும் தொழில்நுட்பம், தொலைக்காட்சி, கணினி, விமானம், மோட்டார் வாகனம். யார் இந்த நவீன சாதனங்களை ஆதரிக்கிறார்களோ அவர்கள் நவீன மதச்சார்பின்மையையும் தழுவுவார்கள். அது சாதனை அல்ல.

## நவீன மதச்சார்பின்மையின் உண்மை நிலை

ஆனால் கண்ணுக்குப் புலப்படுகிற மதச்சார்பின்மையின் நன்மைகள் (அதில் சில நபி (ஸல்) உருவாக்கிய மதீனாவிலேயே இருக்கின்றன) குஃப்ர், ஷிர்க்கின் அடிப்படையை மாற்றவில்லை. உண்மையில், நவீன மதச்சார்பின்மை மெதுவாக மத வாழ்க்கை மீது தான் மறைத்து வைத்திருந்த விரோத நோக்கத்தை வெளியிட்டு, இரக்கமற்ற போரை தொடங்கியிருக்கிறது. ஒரு சமூகம் மதச்சார்பினையை ஏற்றுக்கொண்டதால் மிகக்குறைவான மக்களே சர்ச்சுகள் செல்கின்றனர். காலி சர்ச்சுகளும், மண்டபமாக ஆகியிருக் கின்றன. உண்மையில் மதம் மெதுவாக அடிப்படையிலேயே கடவு ளில்லாத மதச்சார்பின்மைக்கு நழுவிச்செல்லும்.

நவீன மதச்சார்பற்ற ஜனநாயகம் விஷ மாத்திரை மீது தேன் தடவப்பட்டதாக மாறியிருக்கிறது. மக்களைச் சுரண்டுகிற அடக்கி ஆள்கிற வட்டிப் பொருளாதாரத்தை நிலைநிறுத்தும்படியான ஒரு அரசியல் அமைப்பை அந்த அரசியல் ஜனநாயகம் மேற்கொண் டது பொருளாத அடக்குமுறை அடிக்கடி இன அடக்குமுறையை இலவச இணைப்பாக தந்துகொண்டிருந்தது. தேவைப்படும் நிலையி லுள்ள பொதுஜனம் வேட்டையாடும் பண முதலைகளிடமிருந்து அதிகாரத்தைக் கைப்பற்ற முடியாததால், இந்தப் பொருளாதார அடக்குமுறையிலிருந்து விடுபட முடியவே இல்லை, ஏனென்றால்

இந்த வேட்டையாடும் கூட்டத்தின் பொருளாதாரம் விலைமதிப்பற்ற தேர்தல்களின் வெற்றி தோல்வியில் இருக்கின்றது. இறுதியில் வசதி படைத்தவன் பூமிக்கு வாரிசாவான் என்பது நவீன மதச்சார்பின்மையின் புதிய வேதமாகியிருக்கிறது. அதுதான் இப்பொழுது நடந்து கொண்டிருக்கிறது.

ஐரோப்பியரல்லாத மனிதர்களை மூளைச் சலவை செய்வதற்கும், ஏமாற்றுவதற்கும் தன் கண்ணுக்குப் புலப்படாத ராணுவ பலத்தை பயன்படுத்த நவீன ஐரோப்பா முன் வந்திருக்கிறது. தேசிய இறையாண்மைச் சிந்தனையுடனும்,சுரண்டல் பொருளாதார அமைப்புடனும் சீரழிந்த கலாச் சாரத்துடனும் நவீன கடவுளில்லாத அரசியல் தத்துவம் இறுதியாக உலகம் முழுவதையும் பிடித்துக்கொண்டது அது சாதனை அல்ல.

முஸ்லிம்கள் உட்பட மனிதர்கள் மீது மேற்கத்திய காலனிய ஆட்சி திணிக்கப்படுகிறது இதன் வழியாக குஃப்ர், ஷிர்க்கின் மீது கட்ட மைக்கப்பட்ட கடவுளில்லா அரசியல் அமைப்பு தந்திரமாக அறிமுகப் படுத்தப்படுகிறது. உஸ்மானிய இஸ்லாமிய கிலாஃபத் அழிக்கப்பட்டு அதன் சாம்பலில் உதித்தது தான் நவீன கடவுளில்லா மதச்சார்பற்ற துருக்கி தேசம். நபி (ஸல்) அவர்களால் கட்டமைக்கப்பட்ட தாருல்இஸ்லாம் இஸ் லாமிய வீடு அரேபிய தீபகற்பத்தில் அழிக்கப்பட்டு அதன் சாம்பலில் நவீன மதச்சார்பற்ற சவூதி அரேபியா உருவானது (நிலப்பரப்பு, குடியுரிமையின் இறையாண்மையின் முழுமையான கட்டுப்பாட்டில்) கடவுளில்லா மேற்கின் நேச நாடாக இருக்கிறது. இவ்வாறு நபி (ஸல்) அவர்களின் துக்ககரமான முன்னறிவிப்பு நிறைவேற்றப்படுகிறது! என் சமூகம் எந்த அளவுக்கு யூத, கிருஸ்துவர்களைப் பின்பற்றுவார்கள் என்றால் அவர்கள் பல்லியின் பொந்துக்குள் சென்றாலும் இவர்களும் செல்வார்கள் என நபி (ஸல்) முன்னறிவிப்பு செய்துள்ளார்கள்.

இறுதியில் யூத கிருஸ்துவ முஸ்லிம்கள் ஒட்டு மொத்த குழப்பங் களின் உலகத்தில் நுழைந்து கைசேதமான முறையில் அல்லாஹ்வுக்கு கட்டுப்படுவதை தவறவிட்டுவிட்டார்கள்.

அல்லாஹ் கட்டளையிடுகிறான்

اتَّبِعُوا مَا أُنْزِلَ إِلَيْكُمْ مِنْ رَبِّكُمْ وَلَا تَتَّبِعُوا مِنْ دُونِهِ أَوْلِيَاءَ قَلِيلًا مَا تَذَكَّرُونَ

(மனிதர்களே!) உங்களுக்காக உங்கள் இறைவனால் அருளப்பட்டதைப் பின்பற்றுங்கள். அவனையன்றி (மற்றெவரையும் உங்களுக்கு)ப் பாதுகாப்பாளர்களாக ஆக்கி, அவர்களை நீங்கள் பின்பற்றாதீர்கள். (எனினும் இதனைக்கொண்டு) நீங்கள் நல்லுணர்ச்சி பெறுவது வெகு சொற்பமே!

**(அல்குர்ஆன், 7:3)**

நவீன மதச்சார்பற்ற தேசம் பாராளுமன்றத்தையும் அரசாங்கத்தையும் அமைப்பதற்காகத் தேர்தல் முறையை ஏற்படுத்தியிருக்கிறது சில சமயத்தில் நீதிபதிகளைக்கூட தேர்ந்தெடுக்கிறார்கள். மதச்சார்பற்ற தேசத்தின் குடிமக்கள் அவர்கள் எந்த மதத்தைச் சார்ந்தவர்கள் என்பதைப் பொருட்படுத்தாது ஜனநாயகத் தேர்தலில் வாக்களிக்கிறார்கள்.

தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கம் ஷைத்தானைத் தலைவனாகக் கொண்டு அவனை வழிபடுகிறவர்களாக இருந்தாலும், தேர்தலில் வாக்களித்த முஸ்லிம்கள் யூதர்கள் கிருஸ்துவர்கள் ஆகியோர் அந்த அரசாங்கத்தைச் சட்டப்பூர்வமானதாகவும் அவர்களை ஆள்வதற்கு அதிகாரமுள்ளதாகவும் ஏற்றுக்கொள்வது கட்டாயமாகிறது. மேலும் அவர்கள் அதன் அதிகாரத்திற்குத் தங்களைச் சமர்ப்பித்து அதற்குக் கீழ்ப்படிவதும் கட்டாயமாகிறது. தேர்தல் அல்லாஹ்வை வணங்குபவர்கள் மீது வெளிப்படையாகவே விரோதம் காட்டுகிற சிலை வணங்குபவர்களை அரசாக தேர்ந்தெடுத்தாலும் அல்லது அல்லாஹ் ஹராமாக்கியிருக்கிற அனைத்தையும் ஹலால் ஆக்குகிற ஒரு அரசாங்கமாகவும் இருந்தாலும் அப்பொழுதும் வாக்களித்த முஸ்லிம்கள் யூதர்கள் கிருஸ்துவர்கள் அனை வரும் அவ்வரசாங்கத்தை முழு அதிகாரமுள்ளதாகவும் ஏற்று தங்களை அதற்குச் சமர்ப்பித்துக் கட்டுப்பட்டு இருப்பது கடமையாகிறது.

குர்ஆன் தவ்ராத் பைபிள் ஆகிய எதிலும் சுதந்திரமாக ஒரு அரசாங்கத்தை மக்களை ஆள்வதற்கு முழு அதிகாரமுள்ளதாக ஆக்க இப்படி ஒரு தேர்தலில் பங்கெடுக்க வேண்டும் என்று கூறப்படவில்லை இதற்கு எதிராக இப்படிப்பட்ட செயலில் ஈடுபடுவதற்கான கண்டனம் இருக்கிறது! இருப்பினும், 2000ம் ஆண்டு அமெரிக்க அதிபர் தேர்தலில் வாக்களிப்பது முஸ்லிம்கள் மீதுவாஜிப் கடமை என்று பிரபல மார்க்க அறிஞர் டாக்டர், தாஹா ஜாபிர் அல் அல்வானி மார்க்கத் தீர்ப்பு வழங்கியிருக்கிறார். (ஒற்றைக் கண்ணுள்ள முஸ்லிம்களால் அது

வரவேற்கப்பட்டுள்ளது.) அவர்களில் அனேகர் ஜார்ஜ் புஷ்ஷுக்கு வாக்களித்தார்கள் இன்று அவர்கள் முகத்தில் கரியைப் பூசியிருக்கிறது. அவரை எதிர்த்து நின்ற ஆல்பெர்ட் கோருக்கு வாக்களித்திருந்தாலும் நிலைமையில் எந்த வித்தியாசமும் இருந்திருக்காது. அன்று அவர்கள் புஷ்ஷுக்கு வாக்களித்தார்கள், பைத்துல்முகத்தஸில் இரக்கமில்லாமல் சித்ரவதை செய்யும் இஸ்ரேலுக்கு உறுதியாக புஷ்ஷுடைய அரசாங்கம் உதவி செய்வதைப் பார்த்து இன்று அழுகிறார்கள். ஆப்கானிஸ்தானிலும் புஷ்ஷுடைய அரசு கொடூரமாக முஸ்லிம்களைக் கொன்றதற்காகவும் அழுகிறார்கள். (அமெரிக்கத் தாக்குதலுக்கு ஒரு முஸ்லிமுடைய பதில் பிற்சேர்க்கை 2 காண்க.)

நவீன மதச்சார்பின்மைக்குப் பகரமாக இறைநம்பிக்கையாளர் களுக்கான மாற்று வழிமுறை முஸ்லிம்கள், யூதர்கள், கிருஸ்துவர்கள் ஆகியோர், நவீன மதச்சார்பின்மைக்குப் பகரமாக மாற்றுவழி ஏதும் இருக்கிறதா என்று கேட்கலாம் ஆம்! இருக்கிறது என்பதே பதில். அல்லாஹ்வின் இறையாண்மையையும், அல்லாஹ்வின் சட்டமே உச்சபட்ச அதிகாரமுள்ளது என்பதையும்,அல்லாஹ்வுடைய சட்டமே இறுதியானது என்பதையும் மீட்டெடுப்பதற்காகப் போராடுவதுதான் அந்த வழி. இப்போ ராட்டமே அனைத்தையும்விட புனிதமானது இப்போராட்டம் இறுதிக் காலம்வரை தொடர வேண்டும். வெற்றி, தோல்வி இப்போராட்டத்தின் நோக்கமல்ல. இப்போராட்டம் இறுதியாக வெற்றியடையாத வரை இறுதி நாள் ஏற்படாது என்று அல்லாஹ் வாக்குறுதியளித்திருக்கிறான்.

அல்லாஹ் ஹராமாக்கியிருப்பதை ஹராமாகவும், ஹலாலாக்கி யிருப்பதை ஹலாலாகவும் இறை நம்பிக்கையாளர்கள் கடைப்பிடிக்க வேண்டும் அதற்காக எவ்வளவு இழப்புகளைச் சந்தித்தாலும் பரவா யில்லை என்று கருதுவதும் மாற்று வழிமுறைகளில் ஒன்றாகும். மேலும் மக்கள் குஃப்ர், ஷிர்க், ஃபிஸ்க், ளுல்ம் ஆகியவற்றைச் செய்யும்போது இறை நம்பிக்கையாளர்கள், அதைக் கண்டித்து அதை எதிர்த்து போராட வேண்டும் அவர்களை விட்டும் தங்களைத் தனியாக்கிவிட அல்லாஹ்விடம் துஆ செய்யவேண்டும்.

فَافْرُقْ بَيْنَنَا وَبَيْنَ الْقَوْمِ الْفَاسِقِينَ

பாவிகளாகிய இந்த மக்களிலிருந்து நீ எங்களைப் பிரித்து விடு வாயாக!

**(அல்குர் ஆன், 5:25)**

நம்பிக்கையாளர்களின் இந்தப் பிரச்சாரத்தை குர்ஆன் அம்ரும் பில் மஃரூஃப் நன்மையை ஏவுவது, நஹியுன் அனில் முன்கர் தீமையை விலக்குவது என்று குறிப்பிடுகிறது.

அல்லாஹ்வின் இறையாண்மையையும், அல்லாஹ்வின் சட்டமே உச்சபட்ச அதிகாரமுள்ளது என்பதையும் நிலைநாட்டும் போராட்டத்தில் வெற்றி கிடைத்தால் அப்போது அந்த நிலப்பரப்பு தாருல் இஸ்லாம் இஸ்லாமிய நாடு என்று அறியப்படும். முஸ்லிம்கள் அந்நிலப்பரப்பை ஆள்வார்கள் ஆனால் முஸ்லிம் அல்லாதவர்களும் வாழும் பல்லின பூமியில் கூட்டமைப்பு அடிப்படை பின்பற்றப்படும் அதாவது அவர்களுக்கு அரசியல் சமவுரிமையின் அடிப்படையிலும் அல்லாஹ்வின் இறையாண்மையையும், அவனுடைய சட்டமே உச்சபட்ச அதிகாரமுள்ளது என்பதை நிரூபிக்கும் அரசியல் ஒப்பந்தத்தின் அடிப்படையிலும் ஆட்சி நடைபெறும். முஸ்லிம்கள் யூதர்கள் இணைவைக்கிற அரபிகள் ஆகியோர் வாழ்ந்த மதீனாவில் அரசியல் சமவுரிமை, நிலப்பரப்பின் அதிகாரப் பகிர்வு ஆகியவற்றின் அடிப் படையில் நபி (ஸல்) ஆட்சியை நிறுவினார்கள்.

மனிதனுக்கு இபுராஹீம் நபியின் மார்க்கத்தை ஏற்றுக்கொள் வதற்கும் நிராகரிப்பதற்கும் உரிமை இருக்கிறது. இபுராஹீம் நபியின் மார்க்கத்தை ஏற்றுக்கொண்டபின் முஸ்லிம்களுக்கு முஸ்லிம் அல்லாத வர்களை அரசாங்கமாகத் தேர்வு செய்யும் சுதந்திரம் கிடையாது. தேர்ந்தெடுக்கும் சுதந்திரம் இருக்கும் காலமெல்லாம் முஸ்லிம்களையே தங்களுடைய ஆட்சியாளர்களாகத் தேர்வு செய்யவேண்டும் எந்த நிலப் பரப்பில் தேர்ந்தெடுக்கும் அவ்வுரிமை மறுக்கப்படுகிறதோ அந்த உரிமை கிடைக்கிற வேறு இடத்தைத் தேர்வு செய்து முஸ்லிம்கள் அங்குச் சென்றுவிட வேண்டும். இவ்வாறே அல்லாஹுதஆலா கூறுகிறான்.

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا أَطِيعُوا اللَّهَ وَأَطِيعُوا الرَّسُولَ وَأُولِي الْأَمْرِ

விசுவாசிகளே! நீங்கள் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டு நடங்கள். (அவ்வாறே அல்லாஹ்வுடைய) தூதருக்கும், உங்கள் அதிபருக்கும் வழிப்பட்டு நடங்கள்.

**(அல்குர்ஆன், 4:59)**

பூமியில் எங்குமே அப்படிப்பட்ட அரசை நிறுவ முடியாமல் முஸ்லிம் அல்லாதவர்களின் கீழேதான் வாழ வேண்டும் என்ற நிலை வந்தால்

குறைந்தபட்சம் முஸ்லிம்கள் அவர்களை ஆட்சி செய்வதற்கு தேர்வு செய்யும் வரை முஸ்லிம்கள் அதற்கு தங்களை சமர்ப்பிக்க வேண்டும். அந்த சம்மதம் முஸ்லிம் அல்லாத ஆட்சி நிறுவுவதற்குப் பங்களிப்புச் செய்ததாகி விடக்கூடாது. முஸ்லிம்களின் சம்மதம், தங்கள் மார்க்க சுதந்திரத்தின் நிபந்தனையின் அடிப்படையில் இருக்க வேண்டும். அல்லாஹ்வின் சட்டத்தை மீறுவதற்கு நிர்பந்தம் செய்யப்படக்கூடாது. (உ-ம்) கிதால் சண்டையிடுவதற்கான மார்க்கக் கடமை அதற்கான ராணுவ பயிற்சி பெறுதல் (இந்த நம்பிக்கையுடன் அமெரிக்காவில் ஒரு முஸ்லிம் வாழ்வது இயலாததாகும், அதனால் இந்நூலாசிரியர் புதிய தங்குமிடம் தேடிக்கொண்டிருக்கிறார்) இப்படிப்பட்ட ஒரு அரசாங்கம் முஸ்லிம்களுடையதாக இல்லாவிட்டாலும், அவர்கள் உபதேசம் செய்து நல்ல விஷயங்களில் ஒத்துழைத்து தீமையான காரியங்களை எச்சரித்து, அதை விட்டும் தடுக்க முடியும்.

நவீன மதச்சார்பின்மையின் யதார்த்தம் என்னவென்றால் ஒரு போதும் தேர்தல் மூலம் அல்லாஹ்வின் இறையாண்மை, அவனுடைய சட்டம் உச்சபட்ச அங்கீகாரம் உள்ளது என்ற அமைப்பாக மாறுவதை அனுமதிக்கவே செய்யாது. தேர்தல் அரசியல் என்பது கடவுளில்லா மதச் சார்பின்மைக்கு உதவி செய்யும் ஒன்றாகவே கருதப்படுகிறது.

நிராகரிப்பின் உலகம் ஒரு அடிப்படையான ஒற்றுமையைக் கடை பிடிப்பார்கள் (அல்குஃப்ரு மில்லதன் வாஹிததன்) என்று நபி (ஸல்) கூறினார்கள். அதுதான் இன்றைக்கு உலகில் நடந்து கொண்டிருக்கிறது அல்ஜீரியாவில் 85% தேர்தலில் முஸ்லிம்கள் வெற்றி பெற்று இபுராஹீம் நபியின் மார்க்கத்தை நிலைநாட்ட முற்பட்டபோது, ஒட்டுமொத்த கடவு ளில்லா மதச்சார்பற்ற உலகம் ஒன்று திரண்டு வந்து 85% வெற்றி பெற்ற அல்ஜீரியாவை ஈவு இரக்கமற்ற முறையில் தண்டித்ததை யூதர்களும், கிருஸ்துவர்களும் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.அந்த துக்ககரமான தேர்தலுக்கு பல ஆண்டுகளுக்குப் பிறகும் அல்ஜீரியா கடவுளில்லாத மதச்சார்பற்ற உலகத்தால் கொடூரமாக தாக்கப்படுவது நின்றபாடில்லை.

தேர்தல்களில் வாக்களித்து ஷிர்க்கின் மீது அமைந்த நவீன மதச்சார்பற்ற தேசத்தை அங்கீகரிப்பதற்குப் பகரமாக முஸ்லிம்கள் மதச்சார்பற்ற தேசங்களை துண்டித்துக்கொண்டு தங்களை ஷிர்க்கி லிருந்து காப்பற்றிக் கொள்ளவேண்டும் மதச்சார்பற்ற கடவுளில்லா தேசங்களோடு ஒப்பிடும்போது, முஹம்மது நபி (ஸல்) அவர்களால்

உருவாக்கப்பட்ட குடி மக்களின் கூட்டமைப்பு முறை சிறந்த முறையாகும்.

## நவீன மதச்சார்பற்ற தேசம் சர்வதேச ஷிர்க் என்பதன் குர்ஆன் விளக்கம்

ஐரோப்பிய கிருஸ்துவம், ஐரோப்பிய யூத உலகத்தை அடியோடு மாற்றி மற்ற உலகத்தையும் கைப்பற்றிக்கொண்ட இந்த முக்கியமான அரசியல் மாற்றத்தைப்பற்றி குர்ஆன்தான் விளக்க வேண்டும், குர்ஆன் விளக்கியிருக்கிறது. இறுதிநாள் வருவதற்கான கட்டளையை அல்லாஹ் பிறப்பித்த உடனே வரலாற்று நிகழ்வுகள் ஒரு முடிவுக்கு வரும் என குர்ஆன் நமக்குக் கற்பிக்கிறது. இறுதி நாள் ஏற்படுவதற்குமுன் எப்படியும் இறுதிக் காலகட்டம் என்று ஒன்று வரும். அதில் அல்லாஹ் இது கடைசிக் கால கட்டம்தான் என்பதை நிருபிக்கின்ற எண்ணற்ற அடையாளங்களை நிகழ்த்திக் காட்டுவான் அந்த அடையாளங்களில் போலி மஸீஹ் - தஜ்ஜால் வெளியாவதும் யஃஜூஜ், மஃஜூஜ் வெளியாவதும் உள்ளவையாகும். அவர்கள் வெளியாகும்போது அவர்கள்தான் உலக நாடக அரங்கில் முக்கிய கதாபாத்திரங்களாகவும், இந்த உலகிலும் மனிதர்களிலும் ஏற்பட்டிருக்கின்ற தனித்துவமான மாற்றத்தின் காரணகர்த்தாக்களாகவும் இருப்பார்கள். தஜ்ஜாலுடைய காலத்தில் ரிபாவுடைய சர்வதேச தோற்றத்தை பயங்கரமான பொருளாதார அடக்குமுறையாக (வட்டி எங்கும் பரவியிருக்கும்) தஜ்ஜால் காண்பான் என நபி (ஸல்) கூறினார்கள். மேலும் தஜ்ஜாலுடைய கண்களுக்கிடையில் காஃபிர் என்று எழுதப்பட்டிருப்பதால் அது குஃப்ருடைய காலமாகவும் இருக்கும் தஜ்ஜால் கடவுளாகத் தன்னைச் சித்திரித்துக் கொண்டு மக்களை ஏமாற்றுவதால் அது ஷிர்க் உடைய காலமாகவும் இருக்கும் நவீன மதச்சார்பற்ற தேசமும் தேர்தல்முறை அரசியலும் உருவாவதற்கும் தஜ்ஜாலுடைய மூளைதான் பிரதானமாக இருந்தது என்பது இந்நூலாசிரியருக்கு உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தெளிவாகத் தெரிகிறது.

நவீன மதச்சார்பற்ற தேசத்தின் தேர்தல் அரசியலில் பங்கேற்பது ஷிர்க் என்று குர்ஆன், ஹதீஸ் அடிப்படையில் இந்நூலாசிரியர் தன் வாதங்களை நிறுவுகிறார் இந்நூலிலிருக்கும் கருத்துக்களோடு உடன்பாடு இல்லாத அறிஞர்கள் குர்ஆன், ஹதீஸ் ஆகியவற்றின் வாதங்களுடன் இதற்கு மறுப்புக் கூற வேண்டும் தேசியத் தேர்தல்

களில் பங்கேற்பது முஸ்லிம்களுக்கு எந்த அடிப்படையில் ஹலால் (அனுமதிக்கப்பட்டது) என்பதைத் தெளிவுபடுத்த வேண்டும். உதாரண மாக ஒரு இறைநம்பிக்கையாளர் சிலை வணங்குபவர் இஸ்லாத்தின் எதிரி பொய்யர் மது அருந்துபவர் வட்டி வாங்குபவர் விபச்சாரி ஆகி யோருக்கு ஓட்டுப்போடுவாரா? இன ஒற்றுமையின் அடிப்படையில் ஓட்டுப்போடுவாரா? அல்லது உமக்கு வாக்களித்தால் எங்களுக்கு இன்ன பயன் வரவேண்டும் என்ற வியாரபார ஒப்பந்தத்தின் அடிப்படையில் வாக்களிப்பாரா? பைத்துல்முகத்தஸில் அடக்குமுறையையும் ஆதிக் கத்தையும் மேற்கொண்டு வரும் சியோனிஸ இஸ்ரேலை ஆதரிக்கும் ஓர் அரசியல் கட்சிக்கு ஒரு முஸ்லிம் வாக்களிக்கலாமா? ஓரினச் சேர்க்கையையும் கருக்கலைப்பையும் ஆதரிக்கும் ஒரு கட்சிக்கு முஸ்லிம்கள் வாக்களிக்கலாமா?

ஹலால் (அனுபதிக்கப்பட்டது) என்பது தெளிவாகி விட்டது, ஹராம் (தடுக்கப்பட்டது) என்பதும் தெளிவாகிவிட்டது சந்தேகமான விஷயங்களிலிருந்து தவிர்ந்து கொள்ளுங்கள். என நபி (ஸல்) கூறினார்கள். முஸ்லிம்களுக்கு வழிகாட்டிகளான மார்க்க அறிஞர்கள் மதச்சார்பற்ற தேசத்தின் தேர்தலில் பங்கெடுப்பது ஹலால் ஆனதா எனத் தெளிவுபடுத்துவதுதான் அவர்களின் வேலை. மார்க்க அறிஞர்கள் ஒரு திருப்திகரமான அனுமதி தரும் பதில் தருவதற்காக வேண்டி முதலில் இதில் பங்கெடுப்பது ஹராம் அல்ல. என்பதை நிறுவவேண்டும். இரண்டாவது சந்தேகத்திற்கு உரியதும் அல்ல என்பதையும் நிறுவவேண்டும். குர்ஆன் ஹதீஸின் ஆதாரப்பூர்வமான பின்னணியில்தான் அவர்கள் பதிலளிக்க வேண்டும்.

## பைத்துல் முகத்தஸில் மதச்சார்பற்ற தேசம்

பைத்துல்முத்தஸில் மீட்டெடுக்கப்பட்டிருக்கின்ற மதச்சார்பற்ற இஸ்ரேல் தேசத்தின் சட்டப்பூர்வ அங்கீகாரம் சம்பந்தமாக ஒரு முடி வுக்கு வரும் தருணம் இது சியோனிஸ அமைப்பு இஸ்ரேல் தேசத்தை மீட்டெடுத்திருப்பது யூத மார்க்கம் உண்மையானது என்பதை நிரூபிக் கிறதா? இது இறைவனின் அருள்பாலிப்பா?

எல்லா மதச்சார்பற்ற தேசங்களைப் போல் இஸ்ரேல் மதச்சார்பற்ற தேசமும் ஷிர்க்கின் அடிப்படையில் அமைக்கப்பட்டிருப்பதால் வெறுப்

ரிற்குரியது தான். இபுராஹீம் நபியின் மார்க்கத்தின் மிக முக்கிய பண்பே ஷிர்க்கிலிருந்து விலகியிருப்பதாகும். பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாவதற்கான நிபந்தனைகளை மதச்சார்பற்ற இஸ்ரேல் மிக உறுதியாக மீறியிருக்கிறது. இந்நிலையில் இது பைத்துல்முகத்தஸில் பிழைக்கமுடியாது. இது அழிக்கப்படும். குராசானிலிருந்து வெளியாகும் ஒரு முஸ்லிம் படை இஸ்ரேல் தேசத்தை அழிக்கும் என நபி (ஸல்) கூறினார்கள். இமாமுல் மஹ்தீ வெளியான பிறகுதான் அந்தப்படை வெளியாகும் அவர் மூலமாக இஸ்லாமிய கிலாஃபத் மீட்டெடுக்கப்படும்.

**அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்,**

கறுப்புப் பதாகைகள் குராசானிலிருந்து எழுந்து வரும் (இன்று ஆப்கானிஸ்தான், பாகிஸ்தான், ஈரானில் சிறு பகுதி, மத்திய ஆசியா ஆகிய நாடுகளை உள்ளடக்கிய பகுதி) எந்த சக்தியாலும் அவர்கள் ஜெருசலத்தில் நுழைவதைத் தடுக்க முடியாது.

**(சுனன் திர்மிதி)**

இஸ்லாமிய கிலாஃபத்தின் மீட்டெடுப்பு இஸ்ரேல் தேசத்தின் அழிவாக இருக்கும். இது மூன்றாவதும் கடைசி நிகழ்ச்சியாகும். முதலில் பாபிலோனிய படை இஸ்ரேலை அழிக்கப் பயன்படுத்தப்பட்டது. இரண்டாவது ரோமானியப்படை, இப்பொழுது இறுதியாக அது முஸ்லிம் படையாக இருக்கும்.

ஆனால் பைத்துல்முகத்தஸை மீட்டெடுத்தது இறை அருளும் யூத மதம் உண்மை என்பதையும் நிரூபிக்கிறது என்ற வாதத்தை மறுக்கின்ற பல அரசியல் காரணங்கள் இருக்கின்றன. முதலில் கீழ்த் தரமான வாழ்க்கை வாழ்கின்ற, அடக்குமுறை செய்கின்ற கடவுளில்லா நவீன ஐரோப்பியர்கள் மூலம்தான் இறைஅருள் கிடைத்தது என்று கூறுவது அடிப்படையில் முரணானது. அவர்கள் மூலம் தான் இவர்கள் மார்க்கம் உண்மை என நிரூபிக்கப்பட்டது என்பதும் அவ்வாறானதே அவர்கள் மூலம் அழிவு வந்தது என்பது மட்டுமே உறுதியானது.

இரண்டாவது, இபுராஹீம் நபியின் அல்லாஹ்வை வணங்கி கொண்டிருந்த மக்களை வெளியேற்றிதன் மூலம்தான் இஸ்ரேல் தேசம் மீட்டெடுக்கப்பட்டது. அவர்கள் யூதர்கள் அல்லர் என்பதைத் தவிர அவர்கள் வெளியேற்றப்பட்டதற்கு எந்தக் காரணமும் இல்லை. அவர்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றியபின் ஐம்பது ஆண்டுகளாக

அகதி முகாம்களில் வாழ்கிறார்கள். இது அடக்குமுறை. மேலும் இஸ்ரேல் உருவானதிலிருந்து பைத்துல்முகத்தஸைச் சுற்றிலும் வாழ்கிற முஸ்லிம்கள், அரபிகள் கிருஸ்துவர்கள் என பலரும் அடக்குமுறைக்குள்ளாவது தொடர்ந்து கொண்டேயிருக்கிறது. ஓர் அருளுக்குரிய செயல் அடக்குமுறையுடன் இருப்பது பொருத்தமில்லாததாகும்.

மூன்றாவது இஸ்ரேல் தேசம் உருவாக்கப்படும்போது அதை உருவாக்கியவர்களின் மனதில் அதைப்பற்றிய எந்தப் புனிதமும் இருக்கவில்லை. கடவுளில்லாச் சிந்தனை, ஊழல், ஒழுக்கங்கெட்ட பாலுணர்வு இவ்விஷயங்களில் கீழ்த்தரமான இஸ்ரேல் கடவுளில்லா ஐரோப்பிய கலாச்சாரத்திருந்து எவ்விதத்திலும் மாறுபட்டிருக்கவில்லை. இது இறைஅருள் என்று கருதுவதற்கு ஒன்றுமில்லை. உண்மையில் மதச்சார்பற்ற இஸ்ரேல் பைத்துல்முகத்தஸில் ஈடு இணையற்ற ஊழலையும் தரங்கெட்ட வாழ்க்கையையும் பாலியல் ஒழுங்கீனத்தையும் கொண்டு வந்திருக்கிறது. அடிமைத்தனம் செழித்து வளர்ந்திருக்கிறது. இது நேர்வழிக்கு எதிரானது உண்மையில் இன்று பைத்துல்முகத்தஸில் நிராகரிக்கின்ற சமூகம்தான் இருக்கிறது.

## பைத்துல் முகத்தஸில் மதமில்லாதவர்களின் தேசம்

இஸ்ரேலிய யூத தேசம், உண்மையில் மதமில்லாதவர்களின் அனைத்துத் தன்மைகளும் கொண்ட நிராகரிக்கும் தேசமாகத்தானிருக்கிறது. எந்த யூதரும் பைத்துல்முகத்தஸுக்கு யூதர்கள் திரும்பக் கொண்டுவரப்பட்டதையும் புனித பூமியில் இஸ்ரேல் தேசம் அமைக்கப்பட்டதையும் அவர்கள் பொற்காலம் திரும்பியதாகக் கருதுவாரெனில் கீழ்வரும் ஜெருசம் ஃபோஸ்ட் தரும் செய்திகளால் அவர் அதிர்ச்சியடைய வேண்டும். அந்தச் செய்திகள் பைத்துல்முகத்தஸில் மதமில்லாதவர்களின் ஆட்சி செழித்துக்கொண்டிருப்பதை உறுதிப்படுத்துகிறது.

போலீஸ் புள்ளி விபரப்படி அங்கே 200க்கும் அதிகமான விபச்சாரிகள் 200 பாலின்ப கிளப்கள் நாடு முழுவதும் எண்ணிக்கையில்லாத அளவு வாடிக்கையாளர்களுக்குப் பெண்களை விநியோகம் செய்யும் அலுவலகங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு மாதமும் விபச்சாரியிடம் செல்கின்றவர்களின் எண்ணிக்கை பத்து லட்சம் என்று கென்னத்

கமிட்டியின் பெண்கள் அமைப்பின் தலைவி யால்தயான் கணக்கிடு கிறார் டெல் அவிவ் பழைய சென்ட்ரல் பேருந்து அருகில் மட்டும் 50,60 ஆரோக்கிய கிளப்கள் இருக்கின்றன. மற்றபடி ஹைஃபா ஜெரூசலம், நெதன்யா பீர்ஷீபா, ஏஷ்கெலான் ஏஷ்டாட் ஐலாட் போன்ற இடங்களிலும் இருக்கின்றன. உள்ளூர் தினசரியின் கடைசிப் பக்கங்கள் விபச்சார விளம்பரங்களால் நிறைந்திருக்கும், உதவிதேவை சூசக வாசகங்கள் மூலம் பெண்கள் விற்பனைக்கு ஆளெடுக்கிற விளம்பரங்களும் உண்டு.

**(ஜெரூசலம்போஸ்ட், 28ஆகஸ்டு, 2000)**

துப்பறியும் காவலர்கள் ஒரு பேட் யாம் விபச்சார விடுதியைச் சோதனை செய்யும்போது அதன் மேலாளர் மற்றொரு விடுதி மேலா ளருக்கு 4 வெளிநாட்டு பெண்களை விற்பனை செய்ய இருந்தது தெரியவந்தது என டெல் அவிவ் போலீஸ் செய்தித் தொடர்பாளர் கூறினார். அந்த விடுதியின் வேலையாள் இஸ்ரேலுக்குள் விபச்சா ரத்திற்காகப் பெண்களைக் கடத்தும் ஒரு மால்டேவியா கும்பலோடு தன் உரிமையாளருக்கு தொடர்பு ஏற்படுத்தியது சம்மந்தமாகக் குற்றம் சாட்டப்பட்டார் போலீஸ் அம்மூவரையும் அவ்விடுதியி லிருந்து எழுவரையும் கைது செய்துள்ளது. எழுவரில் நால்வர் மால்டேவியாவைச் சேர்ந்தவர்கள். சட்டத்திற்குப் புறம்பாக இஸ்ரேலில் பணியாற்றுகிறார்கள். விசாரணைக்குப்பின் விடுதலை செய்யப்பட்டார்கள். மற்றவர்கள் டெல் அவிவ் நீதிமன்றத்திற்கு விசாரணைக்காக நேற்று அழைத்துச் செல்லப்பட்டார்கள். அவர்கள் 4 பெண்களை அனுப்புவதற்காக அந்தக் கும்பலுக்கு 7000 யு.எஸ் டாலர் கொடுத்ததாகக் குற்றம் சாட்டப்பட்டுள்ளனர். அந்தப் பெண்கள் ஒவ்வொருவரையும் 5000 முதல் 10000 டாலர் வரை விற்கத் திட்ட மிட்டிருந்ததும் தெரியவருகிறது.

**(ஜெரூசலம் போஸ்ட், 14பிப்ரவரி, 2000)**

சமீப காலங்களில் பெண்களை உடைமைப் பொருட்களைப் போல் ஒரு விடுதியிலிருந்து மற்ற விடுதிக்கு விற்கப்படுகிற செய்தி கள் தான் ஊடகத்தில் இடம்பிடிக்கின்றன. தினமும் சுமார் 25,000 விபச்சார பண பரிவர்த்தனைகள் செய்யப்படுகின்றன. பாதுகாப்பு அமைச்சரின் பாலியல் விவகாரம் தொடர்பாகப் பேசப்பட்ட பேரங் களின் அடிப்படையில் இஸ்ரேலில் பெண் உடம்புக்கு என்ன மதிப்பு இருக்கிறது என்பது தெரியவந்தது. இஸ்ரேல் சமூகம் புரட்சியின் தொடக்க காலத்தில் பின்தங்கித்தானிருந்தார்கள் என்றாலும் இன்று

விபச்சாரத்தில் கிட்டதட்ட மேற்கத்திய நாட்டு மக்களிடமிருந்து எந்த வித்தியாசமுமில்லாதவர்களாக இருக்கிறார்கள். தினமும் நடக்கிற பாலியல் பிரச்சனைகளைவிட அந்த மந்திரியின் விவகாரம் மிகவும் கண்டிக்கத்தக்கதாகும். அவர்களின் செயல்பாடுகள் மக்களுடைய பார்வைக்கு முன்னால் பொது இடத்தில் நடைபெறுகிறது.

இஸ்ரேல் சமூகத்தில் உயர்ந்த அந்தஸ்தையுடைய ஒருவருடைய செய்தியைப் படித்தால் இஸ்ரேல் நாட்டின் அடக்குமுறையின் எதார்த்தத்தையும் அளவையும் தெரிந்துகொள்ளலாம்.

இஸ்ரேல் உள்நாட்டு பாதுகாப்புச் சேவையில் பணியாற்றிய ஒரு இஸ்ரேல் அதிகாரியே அரசின் கொள்கைகள் பாலஸ்தீனர்களிடம் புரட்சியைத் தூண்டக் கூடியதாகத்தானிருக்கிறது என்று கூறியிருக்கிறார்.

இஸ்ரேல் இன ஒழிப்பு செய்த குற்றத்திற்கு உள்ளாகியிருக்கிறது அது யூத மதத்தின் அறங்களுக்கு எதிரானதாகும் என அந்தப் பாதுகாப்புச் சேவையில் பணியாற்றிய அதிகாரி அமி ஏய்லோன் கூறியிருக்கிறார். பாலஸ்தீனர்கள் வன்முறையைப் பின்பற்றியிருக்க வேண்டும் என்று ஆலோசனை கூறுவதோடு இஸ்ரேலுக்குள் பணிபுரிந்து கொண்டிருக்கும் பாலஸ்தீனர்களை இழிவுபடுத்துவதை மிகவும் கடிந்து பேசியுள்ளார். இப்படிப்பட்ட விமர்சனங்களைப் பொதுவாக பாலஸ்தீனர்களோ, அல்லது மற்ற நாட்டு மக்களோ செய்ய நாம் கேட்டிருப்போம் ஆனால் இஸ்ரேல் உயர்மட்டப் பொறுப்பிலிருந்த ஒருவரிடமிருந்து கேட்பது மிக அரிதாகும்.

**(ஜெருசலம் போஸ்ட், செவ்வாய் டிசம்பர் 4, 2000)**

உண்மையில் இஸ்ரேல் பிரதமர் அறியாமலேயே நிர்க்கதியான பாலஸ்தீனர்கள் மீது கட்டவிழ்த்து விடப்படும் அடக்குமுறையை உறுதி செய்கிறார்.

பாலஸ்தீனர்கள் வழிநடத்தப்படுகிற பாதையைப் பற்றி அவர்கள் யோசித்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். கட்டுப்பாட்டுக்குப் பிறகும் நூற்றுக்கணக்கான உயிரிழப்புகள் ஆயிரக்கணக்கான காயங்கள். கட்டுப்பாடு, வறுமை வேலையில்லாத் திண்டாட்டம், நிவர்த்தி செய்யமுடியாத பொருளாதாரம் சிதைந்து போன தகவல் தொடர்பு மேலும் எந்த முன்னேற்றமுமில்லாத அரசியல் இவைகளை வைத்துக்

கொண்டுதான் இந்த மக்கள் போராடுகிறார்கள்.

**(இஸ்ரேல் பிரதமர் கட்சாவ், ஜெரூசலம் போஸ்ட், 16 பிப்ரவரி, 2001)**

கடவுளில்லாத தேசம் உருவாக்கிய வழியில் பிரதமர் அரபிகளுக்கு தன் வெறுப்பை உமிழ்ந்திருக்கிறார்.

அவர்கள் நமது அண்டை வீட்டார்கள். ஆனால் பல நூறு மைல்களுக்கு அப்பால் இருப்பதைப் போன்று தோன்றுகிறது, அங்கு மக்கள் இருக்கிறார்கள் அவர்கள் நமது பூமியைச்சேர்ந்தவர்கள் அல்லர், மாறாக வேற்று கிரகவாசிகள்.

**(பிரதமர் மோஷே கட்சாவ், ஜெரூசலம் போஸ்ட், மே 11, 2001)**

டெல்அவிவ் பல்கலைக் கழகத்தின் பேராசியர் டான் ஜேகப்சன் இஸ்ரேலின் நீதி நேர்மை பற்றி இவ்வாறு கூறுகிறார்:

52 ஆண்டுகளாக வெட்கித் தலைகுனியும் வகையில் அரபி சிறுபான்மையினர் இனப்பாகுபாடு காட்டப்பட்டு வருகின்றனர். தொடர்ச்சியாக நிலத்தைப் பறிப்பது அப்படிப்பட்ட கடுமையான அடக்குமுறைகளில் ஒன்று. அரபு மக்களுக்காக அற்பமான கல்வியையும் மருத்துவத்தையும்தான் அரசாங்க நிறுவனங்களும், தனியார் நிறுவனங்களும் வழங்குகினறன. நாட்டின் பொது பட்ஜெட்டில் மிகவும் பாகுபாடான அளவு தான் அரபிகள் தொகுதிக்கு வழங்கப்படும். மேலும் இஸ்ரேல் அரபு குடிமக்கள் இரண்டாம் தர நிலையில் தான் இருக்கின்றனர் என பொதுத்துறை அலுவலர் டேனியல் ஜாப் கூறுகிறார். இந்த உண்மைகள் மனித உரிமை ஆணயம் உள்ளடக்கிய அந்த அரசாங்கத்தால் இனம் காணப்படுகின்றன என்றாலும் ஐம்பது ஆண்டுகளாக இப் பிரச்சனையைத் தீர்ப்பதற்கு மிகக் குறைவாகவே செய்யப்பட்டிருக்கின்றன.

**(ஜெரூசலம் போஸ்ட், ஏப்ரல் 3, 2001)**

அவர்கள் கண்களுக்கு முன்னாலே நிகழும் என கூறப்பட்ட குர்ஆனுடைய எச்சரிக்கை நிறைவேறுவதை மேற்கண்ட செய்திகள் உண்மைப்படுத்துகின்றன.

وَعَرَضْنَا جَهَنَّمَ يَوْمَئِذٍ لِلْكَافِرِينَ عَرْضًا ﴿١٠٠﴾ الَّذِينَ كَانَتْ أَعْيُنُهُمْ فِي غِطَاءٍ عَنْ ذِكْرِي وَكَانُوا لَا يَسْتَطِيعُونَ سَمْعًا ﴿١٠١﴾

நிராகரிப்போருக்கு, அந்நாளில் நரகத்தையே நாம் (நிச்சயமாக) அவர்கள் முன்பாக்குவோம்.

(அவர்கள் எத்தகையோரென்றால் நம்முடைய) நல்லுபதேசங்களைப் பார்க்காது அவர்களுடைய கண்களுக்குத் திரையிடப்பட்டுவிட்டது ஆகவே அவர்கள் (நல்லுபதேசங்களைச்) செவியுறவும் சக்தியற்றுவிட்டனர்.

**(அல்குர்ஆன் 18:100-101)**

நவீன மதச்சார்பற்ற மேற்கத்திய நாகரிகத்தின் விளைவாக எழுந்த இந்த உலக அமைப்பை இனம்காண வேண்டிய அவசரத்தில் நாம் இருக்கிறோம். அந்த மேற்கத்திய நாகரீகத்தில்தான் மக்கள் கடவுளில்லாத நிலை, இனவாத பொருளாதார மத அடக்கு முறை, ஒழுக்கக்கேடு, தகாத பாலின்பம் ஆகியவற்றை இன்று தழுவிக் கொண்டார்கள். முஸ்லிம் உலகம் உட்பட ஆனால் பைத்துல்முகத்தஸ் ஒரு சிறப்பான பூமி; மேலும் யார் இபுராஹீம் நபியின் இறைவனை நம்பிக்கை கொண்டு நல்லறங்கள் புரிகிறார்களோ அவர்கள்தான் புனிதபூமிக்கு வாரிசாக அனுமதிக்கப்படுவார்கள் குர்ஆன் தீர்மானித்திருக்கிறது. **(21:105)** இன்றைய நவீன இஸ்ரேலும், மதச் சார்பற்ற தேசியவாத பாலஸ்தீன விடுதலை இயக்கமும் இந்த நிபந்தனைகளை நிறைவேற்றும் நிலையை அடைவதற்கு மிகத் தொலைவில் இருக்கின்றனர்; யாசிர் அரஃபாத்தின் பாலஸ்தீன விடுதலை இயக்கமோ; மதச்சார்பற்ற இஸ்ரேல் தேசமோ அங்கு இருக்கப்போவதில்லை என்பது தான் ஜெருசலத்தின் தலைவிதி, குர்ஆனின் கண்ணோட்டம். இருவரும் அழிவார்கள்.

பைத்துல்முகத்தஸுக்கு வாரிசாவதன் அங்கீகாரத்திற்காக இதுவரை முன்வைத்த இஸ்ரேலின் அரசியல் உரிமை மேற்கூறிய வாதங்களின் மூலம் செல்லாததாகி விட்டது. உண்மையான நம்பிக்கை கொண்ட யூதருக்கோ; கிருஸ்துவருக்கோ; இதை இனம் கண்டு ஏற்றுக்கொள்வது அவ்வளவு சிரமமல்ல.

## அத்தியாயம் 2

# பைத்துல்முகத்தஸும், இஸ்ரேலின் வட்டி அடிப்படையிலான பொருளாதாரமும்

فَبِظُلْمٍ مِنَ الَّذِينَ هَادُوا حَرَّمْنَا عَلَيْهِمْ طَيِّبَاتٍ أُحِلَّتْ لَهُمْ وَبِصَدِّهِمْ عَنْ سَبِيلِ اللَّهِ كَثِيرًا وَأَخْذِهِمُ الرِّبَا وَقَدْ نُهُوا عَنْهُ وَأَكْلِهِمْ أَمْوَالَ النَّاسِ بِالْبَاطِلِ وَأَعْتَدْنَا لِلْكَافِرِينَ مِنْهُمْ عَذَابًا أَلِيمًا

யூதர்களின் (இத்தகைய) அக்கிரமங்களின் காரணமாக அவர்களுக்கு (முன்னர்) அனுமதிக்கப்பட்டவைகளில் நல்லவைகளை நாம் அவர்களுக்குத் தடுத்து விட்டோம். (அவ்வாறே) அல்லாஹ்வின் பாதையில் (செல்லமுடியாதவாறு) அநேகரை அவர்கள் தடுத்துக்கொண்டதன் காரணமாகவும் - (அவர்களுக்குத் தடுத்து விட்டோம்.)

அவர்களுக்கு வட்டி விலக்கப்பட்டிருந்தும் அதனை வாங்கி வந்ததன் காரணமாகவும் மனிதர்களின் பொருட்களை அவர்கள் நியாயமின்றி விழுங்கி வந்ததன் காரணமாகவும்- (நாம் அவர்களைச் சபித்தோம்; மறுமையிலோ,) அவர்களில் (இத்தகைய) நிராகரிப்போருக்குத் துன்புறுத்தும் வேதனையையே நாம் சித்தப்படுத்தி வைத்திருக்கிறோம்.

**(அல்குர்ஆன், 4:160-161)**

## அறிமுகம்

பைத்துல்முகத்தஸில் அமைந்துள்ள இஸ்ரேல் மதச்சார்பற்ற தேசம் உலகில் மற்ற மதச்சார்பற்ற தேசங்களைப்போல அதன் பொருளாதாரமும் வட்டி (ரிபா) அடிப்படையிலானது. ரிபா என்பது பொதுவாகக் கடன் கொடுத்து திரும்பப் பெறும்போது அதிகமாகப் பெற்றுக்கொள்கின்ற வட்டிக்குச் சொல்லப்படுகிறது; ஆனால் இஸ்லாத்தில் ரிபா என்பதற்கான விளக்கம் ஏமாற்றுகின்ற பரிமாற்றங்கள் அதன் மூலம் ஏமாற்றியவர் நீதமில்லாத முறையில் அடைந்த பயன் ஆகியவற்றிற்கும் கூறப்படும். (குர்ஆன் ஹதீஸில் ரிபாவின் தடை என்ற நமது நூலைக் காண்க) அமெரிக்க அகராதியில் இப்படிப்பட்ட பரிமாற்றங்களுக்கு சாமார்த்தியம் என்று பெயர்; இபுராஹீம் நபியின் மார்க்கத்தின் அடிப்படையில் தீர்ப்புக் கூறுவோமென்றால் கீழ்வரும் கேள்விகளை நாம் தொடுக்க வேண்டியிருக்கும் வட்டி அடிப்படையிலான பொருளாதாரத்தின் அடிப்படையில் இருக்கும் இஸ்ரேலுக்கு மார்க்க அங்கீகாரம் என்ன இருக்கும்? பைத்துல்முகத்தஸைப் பெறுவதற்கான நிபந்தனைகளை அது நிறைவேற்றியதா? அல்லது மீறியதா? என்பதை உறுதி செய்யவேண்டும். இவ்வத்தியாயம் இக்கேள்விகளுக்கு விடை காண முயல்கிறது.

## இன்றைய உலக பொருளாதாரம்

இன்று உலகம் முழுவதுமுள்ள பொருளாதாரத்தின் அடிப்படைக்கூறு என்னவென்றால் செல்வம் பொருளாதாரத்திற்குள்ளேயே சுற்றாது; மாறாக செல்வம் இப்பொழுது செல்வத்திற்குள்தான் சுழலுகிறது; இதன் விளைவாக உலகம் முழுவதும் பணக்காரன் எப்பொழுதும் பணக்காரனாகத்தான் இருப்பான்; ஏழை எப்பொழுதும் ஏழ்மையில் பீடிக்கப்பட்டிருப்பான். இரண்டாவது பொது மக்களின் ரத்தத்தை உறிஞ்சுவதால் பணக்காரன் மேலும் பணக்காரனாகிக்கொண்டே இருக்கிறான். அதே நேரம் ஏழ்மை வன்முறை துன்பம் துயரம் நம்பிக்கைகள் இழப்பு கோட்பாடுகளின் அழிவு ஆகியவற்றின் அளவுக்கு ஏழையை இறங்கச் செய்துவிடுகிறது; அனைத்து மனித குலமும் ஒரு கப்பலில் இருப்பதாகக் கற்பனை செய்துகொள்ளுங்கள்; நிரந்தரமாகச் செல்வந்தர்களாக இருக்கும்

சிறு கூட்டத்தினர் முதல் வகுப்பில் அளவு கடந்த ஆடம்பரத்திலும் பாதுகாப்பிலும் பயணம் செய்கிறார்கள்; செல்வந்தர்கள்தான் கப்பலை கட்டுப்படுத்துகிறார்கள்; அரசியலைக் கட்டுப்படுத்தத் தங்கள் செல்வத்தை பயன்படுத்துகிறார்கள்; கப்பலில் ஜனநாயகம் என்பது செல்வந்தர்களின் ஆட்சி செல்வந்தர்களுக்காக என்பதாக இருக்கும்; ஆனால் செல்வந்தர்கள் தாங்களாகவே ஆட்சி செய்வதில்லை. பினாமிகள் முகவர்கள் மூலமும், தங்கள் கட்டுப்பாட்டுக்குள் இயங்கும் அரசியல் கட்சிகளுக்கு ஆதரவு என்ற பெயரிலும் கட்டுப்படுத்துகிறார்கள். இது இன்றைய அரசியல் பொருளாதாரத்தின் மிகச் சரியான விளக்கமாகும்; பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் இருக்கும் ஐரோப்பிய யூதர்கள்தான் மக்களைக் கட்டுப்படுத்தி ஆதிக்கம் பெறுகிற இந்த முறையை வகுத்தார்கள். இந்த விதத்தில் ஹென்றி ஃபோர்ட் மனித வரலாற்றில் இந்த மோசமான வளர்ச்சிக்கு இனம் காணப்பட வேண்டியவர்.

மனிதர்களில் அதிகமானோர் கப்பலின் அடித்தளத்தில் வசிப்பதைப்போல நிரந்தர வறுமை அழுக்கு துன்பம் துயரம் ஆகியவற்றில் வாழ்கின்றனர்; அவர்கள் அடிமைகளைப்போல உழைக்கவும் அவர்கள் வேர்வையில் செல்வந்தர்கள் சுகம் அனுபவிக்கிற நிலையும் இருக்கிறது; மேலும் திருட்டு வன்முறை துப்பாக்கிச்சூடு கொலை தங்கள் பெண்க ளுக்கு அண்டை வீட்டு தொந்தரவு ஆகியவற்றிலிருந்து எந்தப் பாதுகாப்புமின்றி வாழ்கின்றனர்.

கப்பலில் முதல் வகுப்பில் பயணம் செய்பவர்களுக்குச் சுத்தமான குடிநீரும் மருத்துவ வசதியும் கிடைக்கிறது; அவர்களின் பணம் அதைப் பெற வழிவகுக்கிறது; மேலும் நவீன மருத்துவம் மரணித்தவர்களை உயிர்ப்பிப்பது போன்ற அதிசயத்தை நிகழ்த்திக்காட்டுகிறது; கப்பலின் கீழ்த் தளத்திலிருப்பவர்கள் மாசுபடுத்தப்பட்ட நுண்கிருமிகள் நிறைந்த நீரைத்தான் பருக வேண்டியிருக்கிறார்கள்; இரசாயணம் கலந்த உணவை உட்கொள்கின்ற நிலையில் இருக்கிறார்கள்; தொடர்ச்சியாக மரபணு மாற்றம் செய்யப்பட்ட உணவுகளையே அவர்கள் உண்ண நேரிடுகிறது. அவர்கள் நோயுறுகிறார்கள் அதற்கான மருத்துவ சிகிச்சைகளைப் பெறமுடிவதில்லை; அவர்கள் பரிதாபமான நிலையில் வாழ்ந்து பரிதாபமான நிலையிலேயே மரணிக்கிறார்கள்; உண்மையில் உலகப்பொருளாதாரம் என்பது ஒரு நவீன மேம்படுத்தப்பட்ட அடிமைப் பொருளாதாரம்தான். ஆனால் பயங்கரமான ஏமாற்றும் வழிமுறைகளால் நடத்தப்படுகிறது.

முதலில் உலகம் முழுவதும் பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்து பவர்கள் அழகிய சுதந்திர சந்தையை உருவாக்கியதாகப் பெருமைப் பட்டுக்கொண்டாலும் அவர்களை ஏமாற்றக்கூடிய செயற்கையான காகித பணத்தை மக்களை ஏற்றுக்கொள்ளச் செய்ததன் மூலம் அந்த அழகிய சந்தையை பாழ்படுத்திவிட்டனர்; மேலும் காகிதப்பணம் தொடர்ச்சியாக விழுமியங்களைக் கொல்கிறது; வறுமை அதிகரித்தால் அவர்கள் உணவு போன்ற அத்தியாவசிப் பொருள்களின் விலைக் கட்டுப்பாட்டை விதித்து, தொழிலாளர் சந்தையில் குறைந்தபட்ச சம்பளத்தை நடைமுறைப்படுத்தக் கட்டளையிடுவார்கள்; இந்த ஏழைகள் அரசுக்கும் நிரந்தர செல்வத்தில் இருக்கும் மேல்தட்டு மக்களுக்கும் எதிராகப் புரட்சி செய்து விடக்கூடாது என்பதற்காக; மேலும் அந்தப் பொதுசனம் தங்களின் தொழிலாளர் அடிமைத்தனத்தை இனம் காணாமல் இருப்பதற்காகவும்தான்.

ஏமாற்று மேற்கண்ட நிலையைத் தாண்டி சென்றுவிட்டது; ஏழை மக்களில் பலர் முதல் வகுப்பில் பயணம் செய்யும் அவர்களைப் பார்த்து அவர்கள் சொர்க்க வாழ்க்கை வாழ்வதாக தங்களுக்குத் தாங்களே சமாதானம் செய்து கொள்கிறார்கள்; மேலும் அந்தச் சொர்க்க வாழ்க்கைக்காக ஏங்குகிறார்கள்; அடக்குமுறையின் அமைப்பையும் அது எவ்வாறு செயல்படுகிறது என்று புரிந்துகொள்ள முடியாமலும் இருக்கிறார்கள்; ஏழைகளில் சிலர் தங்கள் பொருளாதார அடக்குமுறையை கண்டு கண்மூடித்தனமான கோபத்தை செல்வந்தர் கள் மீதும் அதிகார வர்க்கத்தின் மீதும் வன்முறையாக வெடிக் கச்செய்கின்றனர்; ஏழைகள் அனைவரும் தாங்கள் நரகத்தில் வாழ்வ தாகக் கருதியவர்களாக, தாங்களும் சொர்க்க வாழ்க்கையை அனுப விப்பதாக நம்பிக்கொண்டு முதல் வகுப்பு பயணிகளைப் போன்ற வாழ்க்கை முறையைப் போலியாகப் பின்பற்றுகின்றனர்; அப்படிப்பட்ட கப்பல் தன் அனைத்து பயணிகளோடும் மூழ்குவதற்கு தகுதியானது.

இவான் இல்லிச்சைப்போல கியூபா அதிபர் ஃபிடரல் கேஸ்ட்ரோ வும் உலகப் பொருளாதாரத்தை இது போன்ற வார்த்தைகளில் விவரிக் கிறார்.

இதற்குமுன் எப்போதும் இவ்வளவு வலிமையான அறிவியல் தொழில்நுட்பத்திறன் செல்வந்தர்களையும் பணக்காரர்களையும் உரு வாக்கும் அசாதரணமான ஆற்றலை மனிதகுலம் கண்டதில்லை,

அதே போல் இவ்வளவு ஏற்றத்தாழ்வுகளையும் வித்தியாசங்களையும் கண்டதில்லை; இந்தப் பொருளாதார அடக்குமுறைக்கு பதிலளிக்கும் விதத்தில் அவர் கூறினார்.

இந்த நீதமற்ற பொருளாதார அமைப்பை விசாரிப்பதற்கு இன்னொரு நூரம்பர்க் விசாரணை தேவை. (அதிபர் உரை, உச்சி மாநாடு, ஹவானா, செப்டம்பர் 2000)

நபி (ஸல்) அவர்கள் உலகிற்கு பொருளாதார அநீதமும் அடக்கு முறையுமில்லாத ஒரு பொருளாதார அமைப்பை வழங்கினார்கள்; யாரும் அடிமைக் கூலியாக வேலை செய்ய வேண்டியதில்லை; செல்வம் செல்வந்தர்களுக்குள்ளேயே சுற்றாது, மாறாகப் பொருளாதாரத்திற்குள் சுற்றும்; பணக்காரன் நிரந்தர பணக்காரனாகவும் ஏழை நிரந்தர ஏழையாகவும் இருக்கமுடியாது; எனவே குறைந்த சம்பள வரம்புக்கு வேலை இருக்காது; விதைக்காத யாரும் அறுவடை செய்ய முடியாது; பணம் தனக்குள்ளேயே மதிப்பு வைத்திருக்கும். வங்கிகளாலும் மேல்தட்டு வர்க்கத்தாலும் அதன் மதிப்பைக் குறைக்க முடியாது;அதன் விளைவாக அப்படிப்பட்ட பொருளாதாரமும் சந்தையும் விலைவாசி உயர்வை ஒருபோதும் காணாது; தொழிலாளர் கூலி உட்பட எந்த பொருட்களின் விலையும் ஒரே விலையாக இருக்காது. பொருளாதாரத்திற்குக் கட்டாய வரிவிதிப்பு மூலம் சமூக பொதுநலம் காக்கப்படும்; அந்த வரியிலிருந்து வாழ்க்கையில் அத்தியாவசியங்களைப் பெற முடியாதவர்களுக்கு வழங்கப்படும்; ஆனால் சமூக விழுமியம் ஒருவரை தர்மத்தின் மூலம் வாழ்வதை விரும்பாத நிலையில் வைத்திருந்தது.

ஒவ்வொரு அரசும் இன்று தோற்றுப்போகும் இடத்தில் நபி (ஸல்) வெற்றிபெற்றார்கள். ஏனென்றால் ரிபா (வட்டி)வை இறைத் தடை மூலம் விலக்கினார்கள்; ஆயுள் காப்பீட்டு (வட்டியால் உருவாக்கப்பட்டது) நிறுவனங்கள் இருக்கவில்லை. செயற்கை பணத்தை (காகிதம் பிளாஸ்டிக் மின்னணு பணம்) பயன்படுத்துவதற்குப் பகரமாக உண்மைப் பணத்தின் உள்ளமையை பராமரித்தார்கள்; மேலும் திருட்டுக்குற்றம் புரிந்தவர்களுக்கு வித்தியாசமான தண்டனை வழங்குவதற்காகத் தண்டனைச் சட்டங்களை செயல்படுத்தினார்கள்; ஆனால் உலகம் அவரை புறக்கணித்துவிட்டது; முஸ்லிம்கள் அவருடைய பொருளாதார (சுன்னத்தை) வழிமுறையைக் கைவிட்டுவிட்டார்கள். இவ்வாறு உலகம் இன்றைய ளுல்ம் (அடக்குமுறை) ஃபஸாத் ஊழலும், அழகிய

சுதந்திர சந்தையின் அழிவு ஆகியவற்றால் சபிக்கப்பட்டிருக்கிறது. இது வியாபாரத்தின் அழிவாகும்.

உலகம் முழுவதும் பொருளாதார அடக்குமுறை அதிகரித்துக்கொண்டே இருக்கிறது - பணக்காரன் மேலும் பணக்காரனாகிக்கொண்டே இருக்கிறான், ஏழை மேலும் வறுமையில் உழலுகிறான். உதாரணத்திற்கு அமெரிக்காவில் கறுப்பர்கள் பரிதாபமாகத் தொடர்ந்து ஏழையாகவே இருக்கிறார்கள், வெள்ளையர்கள் தொடர்ந்து பணக்காரர்களாகவே இருக்கிறார்கள். கறுப்பிற்கும் வெள்ளைக்குமிடையில் இடை வெளி இருப்பதால் அடக்குமுறை அதிகமாகிக்கொண்ட இருக்கிறது. பணக்காரர்களும், ஏழைகளும் அமெரிக்காவில் அதிகரித்துக் கொண்டே இருக்கிறார்கள். அமெரிக்கப் பொருளாதாரம் வெள்ளையர் அல்லாதவர்களைக் குழப்பத்தில் ஆழ்த்தியிருக்கிறது, வெள்ளையர்கள் இதை விடச் சிறந்ததை அவர்கள் முன்னெப்போதும் கண்டதில்லை. ஆனால் இந்நாட்டில் செல்வம் செல்வந்தர்களுக்குள் மட்டும் சுற்றுகிறது, அதே சமயம் சமூக மேம்பாட்டுத் திட்டத்தில் (பொது தர்மத்தில்) வாழ்பவர்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே இருக்கிறது. வெள்ளை மேற்கத்திய நாகரிகம் அவர்களுடைய பொருளாதாரம் மிகவும் சிறப்பு வாய்ந்ததாகவும், முன்னேற்ற மடைந்ததாகவும், இதற்குமுன் மனிதகுலம் இது போன்றதை அனுபவித்ததே இல்லை என்றும் நாம் நம்ப வேண்டும் என எதிர்பார்க்கிறது. ஒருகண் பார்வை கொண்டவர்களால் மூளைச் சலவை செய்யப்பட்ட முஸ்லிம்கள் மேற்கத்தியவர்களைப் பின்பற்றுவதில் முனைப்பாக இருக்கிறார்கள். உண்மையில் உலகம் முழுவதுமுள்ள பெருமக்களின் ரத்தத்தாலும், சந்தேகம் கொள்ளாத பாரம மக்களிடம் உறிஞ்சப்பட்ட பொருளாதாரத்தாலும் உரமிடப்பட்டதுதான் அமெரிக்க வெள்ளை மேற்கத்திய கனவு. இது எவ்வாறு நடந்தது என்பதை விளக்குவதுதான் நமது நோக்கமாகும். மேற்கத்திய நாகரிகமும், உலகம் முழுவதுமுள்ள வெள்ளையரல்லாத தொழிலாளர் கூட்டமும், ஐரோப்பியரல்லாத யூதர்களும் இங்கு வழங்கப்படுகிற விளக்கங்களின் பால் கவனம் செலுத்தி, குர்ஆனை அல்லாஹ்வின் வேதமாகவும், நபி (ஸல்) அவர்களை அல்லாஹ்வின் தூதராகவும் ஏற்றுக்கொண்டால் தவிர எந்த பயனையும் அடைய முடியாது.

ஐரோப்பிய நாகரிகத்தின் அரசியலை கடவுளில்லாததாக உருமாற்றம் செய்த (அதை உலகம் முழுவதும் காப்பியடித்துக் கொண்டது) அதே மக்கள்தான் ஐரோப்பியரல்லாத யூதர்களை,

யூத இஸ்ரேல் தேசத்தை மீட்டெடுப்பதற்கு ஆதரவளிக்கத் தூண்டினார்கள் என்பதுதான் நமது ஆய்வாகும். இதே மக்கள்தான் போலியான சர்வதேச பண அமைப்பு, உலகம் முழுவதுமுள்ள வட்டி அடிப்படையிலான வங்கி அமைப்பு, ஆயுள் காப்பீட்டு அமைப்பு ஆகியவற்றைக் கட்டுப்படுத்துவதில் தங்கள் தீயசக்தி மூலம் உலகப் பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்துகிறார்கள். இவர்கள் ரிபாவின் விளையாட்டு மூலம் மரபான யூதர்களை (இம் மக்கள் ஈஸா நபியை சிலுவையில் கொல்ல முயன்றவர்கள்) விஞ்சிவிட்டார்கள். இந்த அனைத்து நடவடிக்கைகளிலிமிருக்கும் தீயசக்தி என்பது வினோத ஐரோப்பியர்கள், முதலில் யூதர்களாக மாறி பிறகு யூத மதத்தைக் கடத்த முன்னேறியிருக்கிறார்கள் என்பது நமது கண்ணோட்டம்.

பரிசுத்த குர்ஆன் இன்றைய உலகச் சூழலை மட்டுமல்லாது, அதன் பொருளாதார அடக்குமுறையையும் விளக்கியிருக்கிறது. நுண்ணறிவுப் பெட்டகம் திருக்குர்ஆன் பொருளாதாரம் செல்வந்தர்களுக்கு மத்தியிலேயே சுற்றக்கூடாது என்பதற்கான சட்டங்களை வகுத்திருக்கிறது.

مَا أَفَاءَ اللَّهُ عَلَى رَسُولِهِ مِنْ أَهْلِ الْقُرَى فَلِلَّهِ وَلِلرَّسُولِ وَلِذِي الْقُرْبَى وَالْيَتَامَى
وَالْمَسَاكِينِ وَابْنِ السَّبِيلِ كَيْ لَا يَكُونَ دُولَةً بَيْنَ الْأَغْنِيَاءِ مِنْكُمْ وَمَا آتَاكُمُ الرَّسُولُ
فَخُذُوهُ وَمَا نَهَاكُمْ عَنْهُ فَانْتَهُوا وَاتَّقُوا اللَّهَ إِنَّ اللَّهَ شَدِيدُ الْعِقَابِ

அவ்வூராரிடமிருந்தவைகளில் அல்லாஹ் தன்னுடைய தூதருக்குக் கொடுத்தவைகள், அல்லாஹ்வுக்கும், (அவனுடைய) தூதருக்கும், (அவனுடைய) பந்துக்களுக்கும், அனாதைகளுக்கும், ஏழைகளுக்கும், வழிப்போக்கர்களுக்கும், உரித்தானவையாகும். செல்வம் உங்களிலுள்ள பணக்காரர்களுக்கிடையில் மட்டுமே சுற்றிக் கொண்டிருக்காமல் - (மற்றவர்களுக்கும் கிடைக்கும் பொருட்டு, இவ்வாறு பொருட்களைப் பங்கிடும்படி கட்டளையிடுகிறான்) ஆகவே (நம்முடைய) தூதர் உங்களுக்குக் கொடுத்ததை நீங்கள் (மனமொப்பி) எடுத்துக்கொள்ளுங்கள். அவர் எதனை உங்களுக்குத் தடுத்துக்கொண்டாரோ அதிலிருந்து நீங்கள் விலகிக்கொள்ளுங்கள். (இவ்விஷயத்தில்) நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் வேதனை செய்வதில் மிகக் கடுமையானவன்.

**(அல்குர்ஆன், 59 : 7)**

## குர்ஆனில் ஜெருசலம்

முஸ்லிம்கள் குர்ஆன் சட்டங்களைக் கை விட்டுவிட்டார்கள், விளைவாக குர்ஆனை ஏமாற்றியதற்கும், தங்களின் மடமைக்கும் மோசமான விலையை இன்று கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஒரு புதிய கவர்ச்சிகரமான ஏமாற்றுகின்ற பொருளாதார அடி மைத்தனம் அவர்கள் மீதும் மற்ற மக்கள் மீதும் கட்டவிழ்த்து விடப்பட்டிருக்கிறது. இஸ்லாத்தின் அடிப்படை நடவடிக்கைகளில் ஒன்றான அடிமைத் தளையிலிப்பவர்களை மீட்டெடுப்பதை நினைவுகூர்கிறபோது (முஸ்லிம் களை மீட்டெடுக்க வேண்டியிருப்பது) நகைமுரணாக இருக்கிறது.

இந்த உலகப் பொருளாதார அடக்குமுறைக்குக் காரணம் என்ன? இது வட்டி வேட்டையாடுகிற சர்வதேச மேல்தட்டு வர்க்கம் யூதக்கட்டுப்பாட்டு வங்கிகளை மேற்கில் அமைத்திருக்கிறார்கள், என்றாலும் உலகம் முழுவதும் வியாபித்திருக்கிறது. வட்டி மூலம் மக்க ளின் பொருளாதாரத்தையும், ரத்தத்தையும் உறிஞ்சி, உழைக்கும் வர்க்கத்தை ஏழையாக்கி கொண்டிருப்பது அந்த மேல்தட்டு வர்க்கம் தான். அந்த அடக்குமுறைதான் அரசியல், சட்டமன்றம், நீதி அமைப்பு ஆகியவற்றை உருவாக்குகிறது. மேற்கூறப்பட்டவைகள் பொருளாதார அடக்குமுறையைப் பேணுவதன் மூலம்தான் நிறைவேற்றப்படும். சினிமா துறை, தொலைக்காட்சி, இணையத்தளம், இசை, ஆடை வடிவமைப்பு ஆகியவை பொதுஜனங்களை கற்பனை உலகத்தில் மாற்றி மிகமகிழ்ச்சியான வாழ்க்கையில் ஆக்குகின்றன. அந்தச் சமயத்தில் ரிபா அவர்களைக் கட்டுப்படுத்தி அடிமைகளாகிவிட்டது. அவர்கள் செயல்திட்டத்திற்கு மூளையாக விளங்குகிற போலி மஸீஹ் தஜ்ஜாலின் இறுதி நோக்கம், வறுமை, ஊழலில் திளைத்த பொருளாதாரம் ஆகியவை மூலம் மனிதகுலத்தை அடிமையாக்கி, அல்லாஹ்வின் மீது மக்கள் கொண்டிருக்கும் நம்பிக்கையையும், மார்க்கத்தின் வழிமுறைகளையும் குறிவைத்து இறுதி குழப்பத்திற்கும், சோதனைக்கும் தள்ளுவதுதான். அநேக முஸ்லிம்கள், வேட்டையாடும் செல்வந்தர்கள், வறுமையில் உழலும் ஏழைகள், ஆகிய அனைவரும் ஈமானுடைய சோதனையில் தோல்வி அடைந்துவிட்டார்கள். தஜ்ஜாலு டைய இரண்டாவது இலக்கு, யூதர்களை ஏமாற்றி அவர்களிய இறுதி அழிவுக்குக் கொண்டு செல்வது. ஒரு வெளித்தோற்ற மதிப்பீடு, குறிப்பாக நோக்கம் ஏற்கனவே நிறைவேற்றப்பட்டு விட்டதாக பைத்துல்முகத்தஸ் முடிவு தெரிவிக்க வேண்டும். உலகின் முழு அதி காரத்தையும் யூதர்களுக்கு வழங்குவதாக அளித்த வாக்குறுதியை தஜ்ஜால் முழுமையாக நிறைவேற்றும் பாதையில்தான் இருக்கிறான். இஸ்ரேல் உலகின் வல்லரசு பதவிக்கு வந்து ஒரு நாள் என்பது

ஒரு வாரமாக இருக்கும் என்ற கால கட்டத்தை நிறைவேற்றும்போது தஜ்ஜால் தன் உடலுடன் தோன்றி உலகை ஆள்வான். அவன் உண்மை மஸீஹைப் போல் தோற்றமளிக்கும் தன் பணியை நிறைவேற்றுவான்.

இது ஆழ்ந்த கவலைக்குக் காரணமாக அமையும். எச்சரிக்கை செய்யப்படவில்லையெனில், ஆயிரம் ஆண்டுகள் புராதனமான நாகரிகங்களை உள்ளடக்கிய இந்த உலகம், ஷிர்கின் அடிப்படையில் கட்டமைக்கப்பட்ட மதச்சார்பற்ற அரசியல், வட்டியின் அடிப்படையிலான அதே மதச் சார்பற்ற பொருளாதார அமைப்பு ஆகியவற்றைத் தழுவ வேண்டி வரும். வட்டியின் பொருளாதார ஆயுததை,நவீன மதச்சார்பற்ற அரசியல் ஆயுதம், ஐக்கிய நாடுகள் சபையையும், முழுமையாக்குகிறது. ஐ.நா.வின் மூலம் தான் தஜ்ஜால் உலகம் முழுவதையும் தன் அரசியல், பொருளாதாரம் ஆகியவற்றின் கட்டுப்பாட்டில் கொண்டுவரும் பணியை வெற்றிகரமாக நிறைவேற்றுகிறான்.

இந்த விஷயத்தின் முக்கியத்துவத்தை முதலில் விளக்குவது நமது பணி, பிறகு வட்டியைப்பற்றிக் கூறுகிற குர்ஆன் வசனங்களை விளக்குவது, குர்ஆனின் உறுதியான வழிகாட்டுதலின் அடிப்படையில் நபி (ஸல்) அவர்களின் பொன்மொழிகளை விளக்குவது. இறுதியாக, நவீன பொருளாதாரத்தில் வட்டி செய்யும் வேலைகளை விளக்க முயல்வோம். இது பைத்துல்முகத்தஸில் இஸ்ரேல் தேசத்தின் மதிப்பைக் கணக்கிட்ட பிறகுதான் நடைபெறும். அதன் பொருளாதாரமே வட்டி அடிப்படையிலானதுதான்.

## ரிபா என்றால் என்ன?

ரிபா என்றால் வட்டி. வட்டி என்பது இப்பொழுது பரவலாகக் கூறப்படுவது போலக் கடன் கொடுத்துவிட்டுத் திரும்பப் பெறும்போது அதிகமாக வசூல் செய்வது. இந்த வார்த்தை, ஐரோப்பாவில் கிருஸ்துவ சபையால் அங்கீகரிக்கப்பட்ட வார்த்தையாகவே மாறி விட்டது. அடிப்படையில் கிருஸ்தவ சபை வட்டிக்கு எதிரானது என்பது குறிப்பிடத்தக்கதாகும். 1935ல் R.W. தானீ (மார்க்கமும், முதலாளித்துவத்தின் எழுச்சியும்) எழுதிய நூலில் நீண்ட காலமாக ஐரோப்பிய கிருஸ்துவர்கள் வட்டிக்கு எதிராக இருந்தார்கள் எனக் குறிப்பிட்டுள்ளார். வில்லியம்ஸ் ஷேக்ஸ்பியரும் தன் புராதன மெர்செண்ட் ஆஃப் வெனிஸ்நாடகத்தில் அதேபோன்று கூறியுள்ளார்.

இஸ்லாத்தில் ரிபா என்பது வட்டி அடிப்படையில் கடன் கொடுப்பது, ஒருவர் வட்டி அடிப்படையில் கடன் கொடுத்தால் அந்தப் பணம் தானாகவே எந்த உழைப்பும், சிரமமுமின்றி நாட்கள் செல்லச் செல்லப் பெருகிக் கொண்டே இருக்கும். இந்தப் பெருக்கம் எப்படி நடைபெறுகிறது. உழைப்பையும், பொருளையும் சுரண்டுவதன் வழி ஏமாற்றுவதால் இந்த பெருக்கம் ஏற்படுவதாக உணரப்படுகிறது. அல்லாஹ் குர்ஆனில் தெள்ளத் தெளிவாகக் கூறுவதிலிருந்து இது விளங்குகிறது.

وَأَنْ لَيْسَ لِلْإِنْسَانِ إِلَّا مَا سَعَي

மனிதனுக்கு அவன் செய்த செயல்களின் கூலியன்று வேறெதுவும் கிடைக்காது.

**(அல்குர்ஆன், 53 : 39)**

நேரம் எப்பொழுதும் பணத்திற்கு ஈடாகாது எனவும், காலம் தாமதிப்பதால் பணம் பெருகும் என்பதையும் குர்ஆன் புறக்கணித்து விட்டது. இந்த ஊழல் எப்படிச் செயல்வடிவம் கொடுக்கப்படுகிறது என்றால் உழைப்பாளிகளின் கூலியின் மதிப்பைக் குறைத்துவிடுவதாகும். ஷுஐப் நபி (அலை) அவர்கள் (பைபிளில் அவருடைய பெயர் முழுமையாக நீக்கப்பட்டுவிட்டது) அந்த மக்களின் கெட்ட பொருளாதார வாழ்க்கையை எச்சரித்துக்கொண்டே இருந்தார்கள்.

மனிதர்களுடைய பொருட்களில் யாதொன்றையும் அவர்களுக்குக் குறைத்துவிடாதீர்கள்.

**(அல்குர்ஆன் 7 : 85; 11 : 85; 26 : 183)**

மதச்சார்பின்மையின் தொழிலாளிகள் குர்ஆனை அவர்களின் வழிகாட்டியாக ஏற்றுக்கொள்ளச் சில சமயம் மறுத்தாலும், இப்பொழுது ஏன் தொழிலாளர் வளம் நாள்தோறும் முட்டாளாக்கப்பட்டுக் கொண்டே இருக்கின்றது என்பதை விளங்க ஆரம்பித்திருப்பார்கள். சட்டப்பூர்வமாக்கப்பட்ட ஏமாற்று, செயற்கைப் பணம், காகிதப்பணம் மூலமாகத்தான் பெருவாரியான பொதுஜனத்தின் உழைப்பு சுரண்டப்படுகிறது என்பதை முஸ்லிகள் முதலில் புரிந்துகொள்ள வேண்டும். ஒவ்வொரு தூதருடைய காலத்திலும் பணமாகப் பாவிக்கப்பட்ட தங்கம், வெள்ளி, மற்றும் விலைமதிப்பற்ற உலோகங்களுக்குப் பகரமாகத்தான் இந்த காகிதப்பணம் மாற்றப்பட்டிருக்கிறது. செயற்கையான காகிதம், பிளாஸ்

டிக், மின்னணு ஆகிய பணத்தில் தன்னுள்ளேயே அதன் மதிப்பு இல்லை. மாறாக, பணத்தின் மதிப்பு அதற்குள் நிர்ணயிக்கப்படுகிறது, காலம் செல்லச்செல்ல அதன் மதிப்பு தொடர்ச்சியாக குறைந்துகொண்டே வருகிறது. இவ்வாறு நடைபெறும் விதத்தில் அந்த அமைப்பு வடிவமைக் கப்பட்டிருக்கிறது. பணம் மதிப்பை இழக்கும் விஷயத்தில் வங்கிகளே முக்கியப் பங்காற்றுகின்றன. அப்படி இழப்பு ஏற்படும்போது அதிக லாபம் அடைவதும் இவ்வங்கிகளேதான். பணம் மதிப்பை இழந்தால் அனைத்துப் பொருட்களில் மதிப்பும் குறையும். விலைவாசி உயரும், கூலியின் மதிப்புக்குறையும். பிறகு தொழிலாளி அடிமை வாழ்க்கை வாழவேண்டியது வரும்.

## குர்ஆனின் கடைசி வசனம்

அல்லாஹுத்தஆலா குர்ஆனின் கடைசி வசனத்தை அருள் வதற்காக, குர்ஆன், தவ்ராத், இன்ஜீல் ஆகியவற்றில் ஏற்கெனவே கூறப்பட்ட ஒரு விஷயத்தைத் தேர்ந்தெடுத்தான், அது தான் வட்டியைத் தடை செய்த விஷயம். இப்னு அப்பாஸ் (ரலி), உமர்(ரலி) ஆகியோர் மூலம் அறிவிக்கப்பட்ட ஆதாரப்பூர்வமான செய்தி மூலம், நபி (ஸல்) அவர்கள் மரணிப்பதற்கு முன்னால் இறுதியாக இறக்கியருளப்பட்ட வசனம், வட்டியைப் பற்றிக் கூறிய சூரத்துல் பகராவின் அந்த குறிப் பிட்ட பகுதிதான் என்று தெரிய வருகிறது.

**(அல்குர்ஆன் 2 : 279- 281)**

உமர்(ரலி) கூறினார்கள். கடைசியாக இறக்கியருளப்பட்ட வசனம் வட்டியைப் பற்றியதுதான், ஆனால் அதைப்பற்றி ஆழமாக நமக்கு விளக்குவதற்கு முன் நபி (ஸல்) மரணித்துவிட்டார்கள். எனவே ரிபா (வட்டி)வை மட்டுமல்ல, ரீபா (நேர்வழிக்கெதிராக எந்த விதமான சந்தேகத்திற் குரியவையையும்)வையும் விட்டு விடுங்கள் என்று கூறினார்கள்.

**(சுனன், இப்னு மாஜா, தாரமி)**

**இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்கள்**

நம்பிக்கை கொண்டவர்களே! அல்லாஹ்வை அஞ்சுங்கள், வட்டியில் மீதமுள்ளதை விட்டுவிடுங்கள். உண்மையில் நீங்கள் நம்பிக் கையாளர்களாக இருந்தால்... நீங்கள் அநியாயம் செய்யப்பட

மாட்டீர்கள். **(அல்பகரா, 2:279-281)** இவைதான் நபி (ஸல்) அவர்களுக்கு இறக்கியருளப்பட்ட இறுதி வசனங்களாகும் என இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்கள்.

**(ஸஹீஹ், புகாரி)**

அரஃபா மைதானத்தில் இறுதிப் பேருரையில் நபி (ஸல்) வட்டியைத் தடைசெய்யும் சட்டத்தை செயல்முறைப்படுத்தியதை இறுதி வசனம் உறுதிப்படுத்துகிறது.

கடைசியாக இறக்கியளப்பட்ட குர்ஆன் வசனங்களை நம்முடைய சிறு விளக்கங்களுடன் கீழே தருகிறோம்.

**الَّذِينَ يُنفِقُونَ أَمْوَالَهُمْ بِاللَّيْلِ وَالنَّهَارِ سِرًّا وَعَلَانِيَةً فَلَهُمْ أَجْرُهُمْ عِنْدَ رَبِّهِمْ وَلَا خَوْفٌ
عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُونَ الَّذِينَ يَأْكُلُونَ الرِّبَا لَا يَقُومُونَ إِلَّا كَمَا يَقُومُ الَّذِي يَتَخَبَّطُهُ
الشَّيْطَانُ مِنَ الْمَسِّ ذَلِكَ بِأَنَّهُمْ قَالُوا إِنَّمَا الْبَيْعُ مِثْلُ الرِّبَا وَأَحَلَّ اللَّهُ الْبَيْعَ وَحَرَّمَ الرِّبَا
فَمَنْ جَاءَهُ مَوْعِظَةٌ مِنْ رَبِّهِ فَانْتَهَى فَلَهُ مَا سَلَفَ وَأَمْرُهُ إِلَى اللَّهِ وَمَنْ عَادَ فَأُولَئِكَ
أَصْحَابُ النَّارِ هُمْ فِيهَا خَالِدُون يَمْحَقُ اللَّهُ الرِّبَا وَيُرْبِي الصَّدَقَاتِ وَاللَّهُ لَا يُحِبُّ كُلَّ
كَفَّارٍ أَثِيمٍ إِنَّ الَّذِينَ آمَنُوا وَعَمِلُوا الصَّالِحَاتِ وَأَقَامُوا الصَّلَاةَ وَآتَوُا الزَّكَاةَ لَهُمْ أَجْرُهُمْ
عِنْدَ رَبِّهِمْ وَلَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُونَ يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا اتَّقُوا اللَّهَ وَذَرُوا مَا بَقِيَ
مِنَ الرِّبَا إِنْ كُنْتُمْ مُؤْمِنِينَ فَإِنْ لَمْ تَفْعَلُوا فَأْذَنُوا بِحَرْبٍ مِنَ اللَّهِ وَرَسُولِهِ وَإِنْ تُبْتُمْ فَلَكُمْ
رُءُوسُ أَمْوَالِكُمْ لَا تَظْلِمُونَ وَلَا تُظْلَمُونَ وَإِنْ كَانَ ذُو عُسْرَةٍ فَنَظِرَةٌ إِلَى مَيْسَرَةٍ وَأَنْ
تَصَدَّقُوا خَيْرٌ لَكُمْ إِنْ كُنْتُمْ تَعْلَمُونَ وَاتَّقُوا يَوْمًا تُرْجَعُونَ فِيهِ إِلَى اللَّهِ ثُمَّ تُوَفَّى كُلُّ نَفْسٍ
مَا كَسَبَتْ وَهُمْ لَا يُظْلَمُونَ**

(விசுவாசிகளே!) எவர்கள் தங்கள் பொருட்களை (தர்மத்திற்காக) இரவிலும், பகலிலும், இரகசியமாகவும், பகிரங்கமாகவும் செலவு செய்கின்றார்களோ அவர்களுக்கு அவர்களுடைய கூலி அவர்களுடைய இறைவனிடத்தில் உண்டு. தவிர, அவர்களுக்கு (மறுமையில்) யாதொரு பயமுமில்லை. அவர்கள் துக்கிக்கவும் மாட்டார்கள். (அந்தப் பொருள் ஹலாலான வழியில் செலவு செய்யப்பட்டிருக்க வேண்டும், அப்படிப்பட்ட செலவு பொருளாதாரத்தை வளர்த்தும், மேலும் பொருளாதாரத்தை சுழலச்செய்யும்)

வட்டியை (வாங்கி) விழுங்குகின்றவர்கள், ஷைத்தான் பிடித்துப் பித்தங்கொண்டவர்கள் எழும்புவது போலன்றி, (வேறு விதமாக, மறுமையில்) எழும்பமாட்டார்கள். ஏனென்றால், வணிகமும் வட்டியைப்

போன்றதுதான் (எனவே, வட்டி வாங்குவதில் தவறில்லை) என இவர்கள் கூறுகிறார்கள். (வியாபாரத்திற்காக வட்டிக்கு வாங்குவது அனுமதிக்கப்பட்டது). ஆனால், அல்லாஹ் வணிகத்தை ஆகுமாக்கி வைத்து, வட்டியைத் தடுத்து விட்டான். ஆதலால், (உங்களில்) எவரேனும் தன் இறைவனிடமிருந்து வந்த (வட்டி வாங்கக் கூடாதென்ற) எச்சரிக்கைப்படி (அதைவிட்டு) விலகிக்கொண்டால், (அதற்கு) முன் (அவன் வாங்கிச்) சென்றுபோனது அவனுக்குரியதே (இதற்குமுன் வட்டி வாங்கிய) அவனுடைய விஷயம் அல்லாஹ்விடமிருக்கிறது. (அல்லாஹ்வின் உத்தரவு வந்தபின் வட்டியை விட்டு விட்டதனால், அல்லாஹ் அவனை மன்னித்து விடலாம்) தவிர, (இவ்வுத்தரவு கிடைத்த பின்) எவரேனும் பின்னும் (வட்டி வாங்க) முற்பட்டால், அவர்கள் நரகவாசிகளே. அதில் அவர்கள் என்றென்றும் தங்கிவிடுவார்கள்.

அல்லாஹ் வட்டியை ஒழித்துக்கட்டித் தானங்களைப் பெருக்குகிறான். மேலும், (தன் கட்டளையை) நிராகரித்துக்கொண்டே இருக்கும் பாவிகள் எவரையும் அல்லாஹ் உவப்பதில்லை.

எவர்கள் விசுவாங்கொண்டு, நற்கருமங்கள் செய்து தொழுகையைக் கடைபிடித்தும், ஜக்காத்தும் கொடுத்து வருகின்றார்களோ அவர்களுக்கு, அவர்களுடைய கூலி, நிச்சயமாக அவர்கள் இறைவனிடத்தில் உண்டு. அன்றி, அவர்களுக்கு (மறுமையில்) எவ்விதப் பயமுமில்லை; அவர்கள் துக்கிக்கவுமாட்டார்கள்.

விசுவாசிகளே நீங்கள் (உண்மையாகவே) விசுவாசிகளாக இருந்தால், அல்லாஹ்வுக்குப் பயந்து வட்டியில் (இதுவரை வாங்கியது போக) மீதமிருப்பதை (வாங்காமல்) விட்டு விடுங்கள்.

இவ்வாறு நீங்கள் நடந்து கொள்ளாவிடில் அல்லாஹ்வுடனும், அவனுடைய தூதருடனும் யுத்தம் செய்யத் தயாராகிவிடுங்கள். ஆயினும், நீங்கள் (வட்டி வாங்கியது பற்றி மனம் வருந்தி) மீண்டு விட்டால், உங்கள் பொருளின் அசல் தொகை உங்களுக்குண்டு. நீங்கள் அநியாயம் செய்யப்படமாட்டீர்கள்.

அன்றி, (கடன் வாங்கியவன் அதனைத்தவணைப்படி தீர்க்க முடியாமல்) அவன் கஷ்டத்திலிருந்தால், (அவனுக்கு) வசதி ஏற்படும் வரையில் எதிர்பார்த்திருங்கள். மேலும் (இதிலுள்ள நன்மைகளை) நீங்கள் அறிந்தவர்களாக இருந்தால், (அதை அவனுக்கே) நீங்கள்

தானம் செய்துவிடுவது, (பிறருக்குத் தானம் செய்வதைவிட) உங்களுக்கு மிகவும் நன்மை (பயக்கும்)

தவிர, ஒரு நாளைப்பற்றிப் பயப்படுங்கள். அந்நாளில் (கடன் வாங்கியவர்களும் கொடுத்தவர்களும் ஆகிய) நீங்கள் (அனைவரும்) அல்லாஹ்விடம் கொண்டு வரப்படுவீர்கள். ஒவ்வோர் ஆத்மாவுக்கும், அது செய்த வினைக்குப் பூரணமாகக் (கூலி) கொடுக்கப்பெறும். அன்றி, அவை அநியாயம் செய்யப்படமாட்டா.

**(அல்குர்ஆன், 2:274-281)**

ஏன் அல்லாஹ் நபி (ஸல்) அவர்களின் மரணத்திற்கு முன்னால் இப்படி ஒரு செய்தியை அருளினான்? இப்படிப்பட்ட வசனங்களை அருள்வதற்கு அல்லாஹ் ஏன் கடைசிக் காலகட்டத்தைத் தேர்ந்தெடுத்தான்? மார்க்கத்தை பூர்த்திசெய்து என் அருளை அடியார்கள் மீது முழுமையாக்கி விட்டேன் என்று கூறியபின் இந்த வசனங்களை ஏன் அருளினான்? இறுதியாக, குர்ஆனில் முன்பே குறிப்பட்டுள்ள இந்த வட்டி சம்பந்தமான விஷயத்தை மீண்டும் ஏன் நினைவுபடுத்தினான்?

இந்த எல்லா வினாக்களுக்கும் மிக முக்கியமான பதில்கள் இருக்கின்றன. மார்க்க வழிகாட்டுதல்களின் மிக முக்கிய இடத்தைப் பெறும் ஒன்றை மீட்டுக்கொண்டு வருவதுதான் இறுதி காலகட்டத்தில் இறக்கியருளப்படுகிற அந்தஸ்தைப் பெற்றதாக இருக்க வேண்டும் என நமக்குத் தோன்றுகிறது. இஸ்லாத்தின் எதிரிகளால் தாக்கப்படும்போது இறை நம்பிக்கையாளர்களின் மார்க்கச்சிந்தனை பலவீனமாகி விடக்கூடாது என்பதைச் சுட்டிக்காட்டுவதற்காகவும் இறுதிக் காலகட்டத்தில் இவ்விஷயம் இறக்கியருளப்பட்டிருக்கலாம். இறுதியாக, இறுதிக்கால கட்டத்தில் இது ராஜதந்திர முக்கியத்துவம் பெறும் என்பதாலும் இருக்கலாம். அல்லாஹ்வே மிக அறிந்தவன்.

இறை நம்பிக்கையாளர்களின் பலம், சுதந்திரம், நம்பிக்கை ஆகியவற்றை அச்சுறுத்துகின்ற மிகப்பெரிய எச்சரிக்கைகளில் ஒன்றாக இது விளங்குவதால் வட்டி பற்றிய செய்தி இறுதி வசனமாக இறக்கியருளப்பட்டது. நபி (ஸல்) அவர்களின் சமுதாயத்திற்கு அபாயமும், அழிவும் இருப்பதால் இந்தச் செய்தி இங்கு முக்கியத்துவம் பெறுகிறது. இதுதான் நம்முடைய பதில். மீண்டும் அல்லாஹ்வே மிக அறிந்தவன்.

வட்டியின் மிகப்பெரும் அபாயத்தை நபி (ஸல்) உறுதிப்படுத்தினார்கள்

மேற்கூறப்பட்ட நம்முடைய பதில், அபூஹுரைரா (ரலி) அவர்கள் மூலம் அறிவிக்கப்படுகின்ற நபி (ஸல்) அவர்களின் பொன்மொழியிலிருந்து பெறப்பட்டதுதான். (முஸ்லிம்கள் மீது) தாக்குதல்களில் இறுதியாக மிகப்பெரிய வெற்றி பெறுவது வட்டிமூலம் நடத்தப்படும் தாக்குதல்தான். இந்தத் தாக்குதல் இஸ்லாமிய எதிரிகளால் நடத்தப்படுவது, இது மனிதகுலம் முழுவதிலும் பரவும்.

ஒரு காலம் வரும் அதில் வட்டியில் சம்பந்தப்படாத ஒரு தனி மனிதனைக்கூட நீங்கள் காண முடியாது, யாராவது தான் வட்டியில் சம்பந்தப்படவில்லை எனக் கூறினாலும் வட்டியின் தூசு அவரை அடைந்துவிடும். மற்றொரு அறிவிப்பில் வட்டியின் தூசு அவரை அடைந்துவிடும் என நபி (ஸல்) கூறினார்கள்.

**(சுனன் அபீ தாவூத்)**

சமுதாயத்தின் இணக்கத்திற்கும், நம்பிக்கைக்கும் மிக அபாயமாக இருக்கப்போவது வட்டிதான் என்பது நபி (ஸல்) அவர்களின் பொன்மொழியின் மூலம் தெளிவாகிறது. வட்டியின் விஷயத்தை அல்லாஹ்வால் இறுதியாக அருளப்பட்டதால் இது அல்லாஹ்விடமிருந்தே வந்த எச்சரிக்கையாகவே இருக்கிறது.

வட்டி சர்வதேச நோய் என நபி (ஸல்) அவர்கள் கூறிய முன்னறிவிப்பு இன்று நிறைவேறியிருக்கிறது. உண்மையில் அது நாம் வாழும் பரிதாபமான காலத்திலேயே நிகழ்ந்திருக்கிறது. குறிப்பாக 1924ல் உஸ்மானிய கிலாஃபத் முடிவுற்ற காலகட்டத்திலேயே இது நிறைவேறிவிட்டது. 1924 வரை வட்டி அடிப்படையிலான முதலாளித்துவ ஐரோப்பிய பொருளாதாரம் முஸ்லிம் சந்தை உலகத்தில் நுழைய முடியவில்லை. ஆனால் முஸ்லிம்கள் விவகாரங்களில் கவனம் செலுத்திக்கொண்டிருந்த அரசாங்கங்களைக் கடன் வாங்குவதன்பால் ஐரோப்பா தூண்டியது. உதாரணத்திற்கு, உஸ்மானிய கலீஃபா ஐரோப்பாவிடமிருந்து ஒரு கணிசமான தொகையை வட்டி அடிப்படையில் கடனாக வாங்கினார். அவருடைய பொருளாதார நெருக்கடி எந்த அளவுக்கு சென்றது என்றால், அவருடைய அரசு கவிழாமலிருக்க, நிர்பந்தமாக புதிய ஐரோப்பிய மதச்சார்பற்ற தேசத்தில் உறுப்பியம்

கோருகின்ற அளவுக்கு அவரைத் தள்ளியது. 1856 ஃபிரான்ஸ் அமைதி உடன்பாட்டில் அவர் இதைப்பெற்றார். ஆனால் இதற்கு அவர் கொடுத்த விலை, உஸ்மானிய கிலாஃபத்திற்குக் கட்டுப்பட்ட நிலப் பகுதிகளில் ஜிஸ்யா வரியை நீக்க வேண்டும் என்ற ஐரோப்பிய/ யூத நிர்பந்தத்தை ஏற்றுக்கொண்டார். இது அவர் வாங்கிய கடன், வட்டி ஆகியவற்றிற்கு பிரதிபலனாக இருந்தது.

இவ்வாறு செய்ததில் அல்லாஹ்வே விதித்த ஜிஸ்யா **(9:29)** வரியை நீக்கிய குற்றத்திற்கு ஆளானார். உண்மையில் ஈஸா (அலை) அவர்கள் திரும்ப வந்து தான் ஜிஸ்யா வரியை அழிப்பார்கள்.

**அபூஹுரைரா (ரலி) நபி (ஸல்) கூறியதாக அறிவிக்கிறார்கள்**

எனக்கும் அவருக்கும் (ஈஸா நபி) இடையில் எந்தத் தூதரும் இல்லை. அவர் பூமியில் இறங்குவார். நீங்கள் அவரைக் கண்டால், நடுத்தர உயரம், சிவந்த தலைமயிர், இளமஞ்சள் நிறத்தில் இரு உடைகளில் அவர் இருப்பதை நீங்கள் காண்பீர், தலையிலிருந்து நீர் சொட்டுவதுபோலிருக்கும் ஆனால் அவர் தலையில் ஈரமிருக்காது. இஸ்லாத்திற்காக ஒரு மக்களோடு அவர் சண்டையிடுவார். சிலுவையை உடைப்பார், பன்றியைக் கொல்வார், ஜிஸ்யா வரியை ஒழிப்பார். அல்லாஹ் இஸ்லாத்தைத் தவிர மற்ற எல்லா மதங்களையும் அழிப்பான். அவர் தஜ்ஜாலை (போலி மஸீஹ்)க் கொல்வார். பூமியில் 40 ஆண்டுகள் வாழ்ந்து மரணிப்பார். முஸ்லிம்கள் அவருக்குத் தொழவைப்பார்கள்.

**(சுனன் அபீ தாவூத்)**

உஸ்மானிய கலீஃபாவைக் குறிவைத்ததில் ஐரோப்பிய யூத வங்கிகளின் வெற்றி வட்டியின் மூலம்தான் சாத்தியப்பட்டிருக்கிறது. இந்த தந்திரத்தின் மூலகர்த்தாவாக ஹென்ரி கிஸ்ஸிங்கர் இருந்தார், இறுதியில் அன்று வல்லரசாக இருந்த சோவியத் யூனியன் இவ்விதம்தான் வீழ்த்தப்பட்டது. இது இஸ்லாமிய அறிஞர்களின் கண்களைத் திறந்திருக்க வேண்டும். ஆனால் இல்லை. விளைவாக இதே தந்திரம் சர்வதேச பண அமைப்பிலும், உலக வங்கியிலும் இருந்தது, மற்றவர்கள் மிக எளிதாக இதற்குள் வந்துவிட்டார்கள். வறுமை, இழப்பு, பொருளாதார அடிமைத்தனம் ஆகியவற்றை தழுவச் செய்யும் வட்டி, இஸ்ரேலுடைய பொருளாதாரம் மட்டுமல்ல, மாறாக பாலஸ்தீன விடுதலை அமைப்பு, மற்ற அரபு நாடுகள் ஆகியற்றின் பொருளாதாரங்களும் வட்டிதான். ஐரோப்பிய யூத பொருளாதாரத்தின்

அச்சுறுத்துதலின் வெற்றி முதலில், இஸ்லாமிய உலகின் புனித முன்மாதிரி தேசத்தின் அழிவின் ஆரம்பமும் அதற்குப் பகரமாக மதச் சார்பற்ற ஐரோப்பிய முன்மாதிரியை ஆக்கியதாகும். அந்த ஆட்சியில் இறையாண்மை என்பது அல்லாஹ்வுடையதாக இருக்காது, மாறாக தேசத்தினுடையதாக இருக்கும், அது ஷிர்க்கின் வேலையாகும்.

உண்மையில் 1924ம் ஆண்டு முதல் வட்டி உலகம் முழுவதிலும் முஸ்லிம்களின் முழுப் பொருளாதார வாழ்க்கையில் நுழைந்துவிட்டது. வட்டியின் இயல்பாகவுள்ள பொருளாதார ஏகாதிபத்தியம் மொத்த இஸ்லாமிய உலகத்தையும், மிகக்கூரான ஆயுதங்களோடு அமர்ந்தி ருக்கும் எதிரிகளின் கரங்களில் ஒப்படைத்திருக்கிறது. உண்மையில் மனிதகுலம் முழுவதும் வட்டி, ஷிர்க் ஆகியவற்றின் சதியில் மாட்டிக் கொண்டிருக்கிறது. உலகம் முழுவதும் வட்டி அடிப்படையிலான வங்கி அமைப்பு, செயற்கை காகிதப் பணம் ஆகியவற்றியின் வெற்றியின் மூலம் நபி (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பு மட்டும் நிறைவேறவில்லை, மாறாக அழகிய சுதந்திர சந்தையின் மொத்த அழிவையும் உறுதி செய்திருக்கிறது. இன்று சுதந்திரச் சந்தை என்று சொல்லிக்கொள்ளப்படுகிறது பலமானவன் பலவீனனைச் சுரண்டுகிற திருடர்களின் கூடாரமாக இருக்கிறது. அலீ (ரலி) அவர்களின் கூற்றுத் தான் உண்மையாகிக்கொண்டிருக்கிறது.

மனிதர்கள் ஒருவருக்கொருவர் கடித்து(ச் சாப்பிடுகிற)க் கொள்கிற ஒரு காலம் வரும் என்று அலீ (ரலி) கூறினார்கள்.

**(சுனன், அபீ தாவூத்)**

இறுதியாகக் குர்ஆனில் (ரிபா) வட்டி சம்பந்தமாகக் கூறப் பட்டிருக்கிற கடுமையைப் பிரதிபலித்து நபி (ஸல்) அவர்களே மிகக் கடுமையான வார்த்தைளை பிரயோகம் செய்திருக்கிறார்கள்.

**நபி (ஸல்) கூறியதாக அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்:**

ரிபா என்பது எழுபது வகைகளைக் கொண்டது, அதில் மிகக் கீழ் நிலையில் இருப்பது, ஒருவர் தன் தாயைத் திருமணம் செய்து கொள்வதற்கு ஒப்பானது.

**(சுனன், இப்னு மாஜா, பைஹகீ)**

நபி (ஸல்) கூறியதாக அப்துல்லாஹிப்னு ஹன்ளலா (ரலி) அறிவிக்கிறார்கள். ஒரு திர்ஹாம் (வெள்ளி நாணயம்) தெரிந்து கொண்டே வட்டி வாங்குவது 36 தடவை விபச்சாரம் செய்வதற்குச் சமம்.

(அஹ்மது)

பைஹகீ இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் ஆதாரத்துடன் நபி (ஸல்) கீழ்வருமாறு கூறியதாக அறிவிக்கிறார்கள், யாருடைய சதை ஹராமான முறையில் வளர்க்கப் படுகிறதோ அது நரகத்திற்குப் பொருத்தமானதாகும்

**அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்.**

வானத்திற்கு அழைத்துச் செல்லப்பட்ட அந்த இரவில் ஒரு விதமான மக்களைக் கண்டேன், அவர்களின் வயிறுகள் வீடுகளைப் போன்றிருக்கின்றன, அதனுள் பாம்புகள் இருக்கின்றன, வெளியிலி ருந்தே தென்படுகின்றபடி இருக்கின்றன. இவர்கள் யார் என்று ஜிப்ரீல் (அலை) அவர்களிடம் கேட்டேன், இவர்கள் தான் வட்டியை (ரிபா) உண்டவர்கள் என்று பதிலளித்தார். என நபி (ஸல்) கூறினார்கள்.

**(சுனன், அஹ்மது; சுனன், இப்னுமாஜா)**

**அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்.**

அல்லாஹ் நான்கு நபர்களை சொர்க்கத்தில் நுழையவும், அதன் சுகங்களை அனுபவிக்கவும் விடுவதில்லை என தீர்ப்புச் செய்வான்: தொடர்ந்து மதுக் குடிப்பவர், வட்டி வாங்குபவர், அனாதையின் பொருளை உரிமையின்றி பயன்படுத்துபவர், பெற்றோரைப் பேணாதவர். என நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்தத்ரக், அல்ஹாகிம், 234கிதாபுல் பைஉ)**

**சமுரா பின் ஜுன்துப் (ரலி) அறிவிக்கிறார்கள்.**

இன்று இரவு இரண்டு நபர்கள் வந்து என்னை அழைத்துக் கொண்டு சென்றார்கள், நாங்கள் ஒரு ரத்த ஆற்றின் பக்கம் சென்றோம், அங்கு ஒரு மனிதன் நின்றுகொண்டிருந்தான், அதன் கரையில் வேறொரு மனிதன் கையில் கற்களுடன் நின்றுகொண்டிருந்தான். ஆற் றின் நடுவிலிருந்தவன் கரையேறுவதற்கு முயற்சிக்கிறான், ஆனால் மற்ற

வன் அவன் வாயில் கற்களை வீசி அவனை அவனுடைய இடத்திற்கே போகும்படி நிர்பந்திக்கிறான். யார் இவர்? என்று நான் கேட்டேன், வட்டி வாங்கியவர்தான் ஆற்றில் இருப்பவர் என்று எனக்குக் கூறப்பட்டது என நபி (ஸல்) கூறினார்கள்.

**(ஸஹீஹ், புகாரி)**

பின்வரும் ஹதீஸில் நபி (ஸல்) வட்டி தடை செய்யப்பட்டிருப்பது தொடர்பில், அது அல்லாஹ்வோடும் அவனது தூதரோடும் போர் செய்வதற்குச் சமமானது என்று கூறுகிறார்கள்.

**ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவிக்கிறார்கள்.**

உங்களில் யார் முகாபராவை விடவில்லையோ அவர் அல்லாஹ்வோடும், அவனுடைய தூதரோடும் போரிடுவதாக அறிவித்து விட்டார், என்று நபி (ஸல்) கூறினார்கள், முகாபரா என்றால் என என்று ஹதீஸை அறிவிக்கிற ஜாபிர் (ரலி) கேட்டார்கள். உனக்கு ஒரு விவசாய நிலத்தில் பாதி, மூன்றில் ஒரு பங்கு, அல்லது நான்கில் ஒரு பங்கு ஆகிய லாபத்தின் அடிப்படையில் விவசாயம் செய்வது, (இதில் தொழிலாளர் அடிமை முறைக்கு வழிவகுத்துவிடும் அபாயம் இருக்கிறது) என்று பதிலளித்தார்கள்.

**(சுனன், அபூதாவூத்)**

மேலே கூறப்பட்ட தகவல்களிலிருந்து வட்டியின் அடிப்படை யில் பொருளாதாரத்தை அமைப்பது உண்மையில் பெரும் பாவம் என்பது தெளிவாகிறது. ஷிர்க் உடன் ஒப்பிடும்போது மற்ற பாவங்கள் அனைத்தும் முக்கியமில்லாததாகின்றன. எனவே தான் இது பைத்துல்முகத்தஸூக்கு வாரிசாகிற நிபந்தனைகளை மீறியதில் மிக முக்கியமானதாக இருக்கிறது.

## காகிதப் பணத்தின் வீழ்ச்சியும், நபி (ஸல்) அவர்களும்

செயற்கையான மதச்சார்பற்ற பணத்தின் (காகிதம், பிலாஸ் டிக், மின்னணு பணம்) வீழ்ச்சி குறித்து நபி (ஸல்) அவர்கள் கூறிய முன்னறிவிப்பை முஸ்லிம்கள் கவனமாக சிந்திப்பார்கள் எனில் இது உள்ளபடியே மிக நெருக்கடியான விஷயம் தான்.

**நபி (ஸல்) அவர்கள் கூறத்தான் செவியுற்றதாக அபூபக்கர் இப்னு அபீ மர்யம் அறிவிக்கிறார்கள்.**

மனிதர்களிடம் ஒரு காலம் வரும், அதில் தீனார் (தங்க நாணயம்) திர்ஹம் (வெள்ளி நாணயம்) ஆகியவற்றைத் தவிர வேறெதுவும் மனிதனுக்குப் பலனளிக்காது.

**(முஸ்னத், அஹ்மது)**

நபி (ஸல்) அவர்களின் அந்த முன்னறிவிப்பு இன்று நிறை வேறியுள்ளது. இன்றைய பண அமைப்பு காகிதத்தை பணமாக பயன்படுத்துகிறது. அது திட்டமிட்ட ஏமாற்று! செயற்கைப் பணம் இயற்கைப் பணத்தைவிட முற்றிலும் வித்தியாசமானது. இயற்கைப் பணத்திற்குள்ளேயே அதன் மதிப்பு இருக்கும், ஆனால் செயற்கைப் பணத்தில் அது இருக்காது. சந்தைப் பலம் எதை நிர்ணயிக்கிறதோ அதுதான் அதன் மதிப்பு அதன் மீது மக்களின் நம்பிக்கையும், சந்தையில் அதன் தேவையும் இருக்கும் வரைதான் மதிப்பு. தேவை என்பதே நம்பிக்கையைப் பொருத்துதான் இருக்கிறது. நம்பிக்கை என்பது திறமையாகக் கையாளப்படுவது. (மலேசியா பிரதமர் இறுதியாக அதைக் கண்டுகொண்டார், இந்தோனேசியா பிரதமர் பிறகு கண்டுகொள்வார்) அரசாங்கங்கள் பணச் சந்தையைக் கட்டுப்படுத்த முடியும் வரைதான் பொதுமக்களின் நம்பிக்கையில் தலையிட்டு அதன் மதிப்பைக் காப்பாற்ற முடியும். ஆனால் இன்று பணச்சந்தையின் கட்டுப்பாடு அரசாங்கங்களிடமில்லை. பணச்சந்தை மிகக்கெட்ட ஒரு அரூப சக்தியிடமிருக்கிறது, அது எந்த தேசப்பற்று, விசுவாசமுமில்லாமல் வெறுமனே, பேராசையை தூண்டக்கூடியது. சந்தை நம்பிக் கையை எந்த விஷயம் தீவிரமாக பாதித்தாலும் நபி (ஸல்) முன்னறிவித்த நெருக்கடி வந்துவிடும்.

பணம் உருகுதல் என்று கூறப்படுகிற பணவீழ்ச்சி, இறுதியில் யூதர்கள் உலகை ஆள்வதற்கான ஐரோப்பியர்களின் (பிறகு யூதர்களாக மாறியவர்கள்) ஆயிரம் ஆண்டுகால போராட்டத்தின் வெற்றியாக அமையும். யார் உண்மையில் பணம் வைத்திருப்பார்களோ அவர்கள் வீழ்ச்சியால் பாதிக்கப்படுவார்கள். ஆனால் இந்தத் சதித்திட்டத்தை வெற்றிகரமாக முடித்து பார்வையாளர்களாக இருப்பவர்கள் முன் எப்போதும் இல்லாத அளவு லாபத்தை அடைவார்கள். பொதுமக்கள் தங்கள் செல்வத்தை இழந்து அடிமைகளாவர். அவர்கள் மதிப்பில்லாத காகிதப் பணக்கட்டுகளால் பீடிக்கப்பட்டிருப்பார்கள். அதுதான் பொருளாதாரப் பேரழிவு அது நடக்கப்போகிறது.

